# சங்க இலக்கியத்தில் போர் - உளவியல் அணுகுமுறை

**முனைவர் (Ph.D.) பட்டத்திற்காகத்**
**தமிழ்நாடு திறந்தநிலைப் பல்கலைக்கழகத்திற்கு**
**அளிக்கப்பெறும் ஆய்வேடு**


ஆய்வாளர்
**வா.க.கவிதா**
எம்.ஏ., எம்ஃபில்., எம்.எட்.,

**(Enrolment No : 13140850008/PhD/Tamil)**

ஆய்வு நெறியாளர்
**முனைவர் சு.பாலசுப்பிரமணியன்**
எம்.ஏ.(தமிழ்), எம்.ஏ.(இதழியல்), பி.எட்., பிஎச்.டி.,
பேராசிரியர் மற்றும் இயக்குநர்
தமிழியல் மற்றும் பண்பாட்டுப் புலம்
தமிழ்நாடு திறந்தநிலைப் பல்கலைக்கழகம்
சென்னை – 600015






**தமிழியல் மற்றும் பண்பாட்டுப் புலம்**
தமிழ்நாடு திறந்தநிலைப் பல்கலைக்கழகம்
எண் 577, அண்ணாசாலை, சைதாப்பேட்டை
சென்னை – 600015

திருவள்ளுவர் ஆண்டு 2052 – நவம்பர் – 2021

**வா.க. கவிதா,**
முனைவர் பட்ட ஆய்வாளர்,
தமிழியல் மற்றும் பண்பாட்டுப் புலம்,
தமிழ்நாடு திறந்தநிலைப் பல்கலைக்கழகம்,
சென்னை – 600015.

# ஆய்வாளர் உறுதிமொழி

சங்க இலக்கியத்தில் போர் - உளவியல் அணுகுமுறை என்னும் தலைப்பில் அமைந்த முனைவர் (Ph.D.) பட்டத்திற்கான இந்த ஆய்வேடு தமிழ்நாடு திறந்தநிலைப் பல்கலைக்கழகத் தமிழியல் மற்றும் பண்பாட்டுப் புலத்தில், பேராசிரியர் மற்றும் இயக்குநர், முனைவர் சு. பாலசுப்பிரமணியன் அவர்களின் நெறிப்படுத்தலின் கீழ் என் சொந்த முயற்சியில் உருவாக்கப்பட்டது என்றும், இதற்கு முன் வேறு எந்தப் பட்டத்திற்கும் அளிக்கப்படவில்லை என்றும் உறுதி அளிக்கின்றேன்.

(வா.க. கவிதா)
ஆய்வாளர்

இடம் : சென்னை
நாள் :

# நன்றியுரை

தமிழ்நாடு திறந்தநிலைப் பல்கலைக்கழகத்தில் முனைவர் பட்டம் மேற்கொள்ள எனக்கு வாய்ப்பு வழங்கிய மாண்பமை துணைவேந்தர் அவர்களுக்கும், பதிவாளர் உள்ளிட்ட நிர்வாகிகளுக்கும் முதற்கண் என் நன்றியைப் பதிவுசெய்கிறேன்.

தமிழ்நாடு திறந்தநிலைப் பல்கலைக்கழகத்தின் தமிழியல் மற்றும் பண்பாட்டுப் புலப் பேராசிரியர் மற்றும் இயக்குநர் **முனைவர் சு.பாலசுப்பிரமணியன்** அவர்கள் என் ஆய்வு நெறியாளராக இருந்து இந்த ஆய்வினை நான் சிறப்பாக மேற்கொள்ள என்னை ஊக்கப்படுத்தி, நெறிப்படுத்தித் தொடர்ந்து வழிகாட்டினார். அவருக்கு என் நெஞ்சார்ந்த நன்றியைப் பதிவுசெய்கிறேன்.

ஆய்வேடு சிறப்பாக அமைய வழிகாட்டி ஊக்குவித்த தமிழ்நாடு திறந்தநிலைப் பல்கலைக்கழகத்தின் தமிழியல் மற்றும் பண்பாட்டுப் புல உதவிப் பேராசிரியர்கள் **முனைவர் மு. வையாபுரி, முனைவர் சு. அரங்கநாதன்** அவர்களுக்கும் என் நன்றி. மாநிலக் கல்லூரியின் மேனாள் பேராசிரியர் **முனைவர் கோ.வேலு,** சென்னைப் பல்கலைக்கழகப் பேராசிரியர் **முனைவர் அ.ஏகாம்பரம்** அவர்களுக்கு என் நெஞ்சார்ந்த நன்றி!

முனைவர் பட்டம் மேற்கொள்ள அனுமதி வழங்கிய நான் பணி புரியும் ஜி.ஆர்.டி. கல்வியியல் கல்லூரியின் தாளாளர் **திரு. இராஜேந்திரன்** அவர்களுக்கும் மேனாள் முதல்வர் **டாக்டர் பி.எஸ்.பாலாஜி** அவர்களுக்கும் முதல்வர் **டாக்டர் இராதிகா வித்யாசாகர்** அவர்களுக்கும் என் நன்றி!

என் படிப்பிற்குத் தொடர்ந்து ஊக்கமளித்து உறுதுணையாய் நின்று உதவிய என் கணவர் **எ.தா. திருநாவுக்கரசு** அவர்களுக்கும் என் நெஞ்சார்ந்த நன்றி.

இந்த ஆய்வேடு சிறப்பாக அமையத் தேவையான நூல்களை வழங்கி உதவிய தமிழ்நாடு திறந்தநிலைப் பல்கலைக்கழக நூலகர் அவர்களுக்கும் திருத்தணி நூலகர் அவர்களுக்கும் ஜி.ஆர்.டி. கல்லூரி நூலகர் அவர்களுக்கும் என் நன்றி. இந்த ஆய்வேட்டைச் சிறப்பான முறையில் தட்டச்சு செய்த உதயம் கிராபிக்ஸ் நிறுவனத்திற்கு என் நன்றி!

தமிழ்நாடு திறந்தநிலைப் பல்கலைக்கழகத்தின் தமிழியல் மற்றும் பண்பாட்டுப் புலத்தின் ஆய்வாளர்களுக்கும் என் அன்பையும் நன்றியையும் உரித்தாக்குகிறேன். குறிப்பாக இரா.குமரகுருபரன் அர்களுக்கு என் சிறப்பான நன்றி.

ஆய்வேட்டைச் சிறந்த முறையில் வடிவமைப்பு செய்துதந்த **திருமதி கோ.கௌரி கங்காதரன்** (முத்தமிழ் படைப்பகம், சின்னப்பன் - அஞ்சலை நற்றமிழ்ப் பேரவை) அவர்களுக்கும் என் நன்றியைப் பதிவு செய்கிறேன்.

வா.க. கவிதா

# பொருளடக்கம்


| இயல் | தலைப்பு | பக்கங்கள் |
|---|---|---|
| | முன்னுரை | 1 |
| 1 | தமிழ் இலக்கியமும் உளவியலும் | 9 |
| 2 | சங்க இலக்கியம் காட்டும் போர் நெறிமுறைகள் | 50 |
| 3 | சங்க இலக்கியத்தில் போர் | 102 |
| 4 | சங்ககாலப் போர் – உளவியல் நோக்கு | 145 |
| | ஆய்வு முடிவுரை | 239 |
| | துணைநூற்பட்டியல் | 258 |
| | பின்னிணைப்புகள் | 266 |

## இயல் - ஒன்று

# தமிழ் இலக்கியமும் உளவியலும்

## உள்ளடக்கம்


*1.0.* இலக்கியம்
*1.1.* இலக்கியத்தின் வகை
*1.2.* உளவியல் அறிமுகம்
*1.2.1.* சாக்ரடீஸ் (Socrates)
*1.2.2.* பிளாட்டோ (Plato)
*1.2.3.* அரிஸ்டாட்டில் (Aristotle)
*1.3.* உளவியல் - சொற்பொருள்
*1.4.* உளவியல் வளர்ச்சி
*1.4.1.* தெக்கார்த்தே *(1539 - 1630)*
*1.4.2.* தாமஸ் ஹாப்பீஸ் *(1588 - 1679)*
*1.4.3.* பெனடிக் ஸ்பினோசா *(1632 - 1677)*
*1.4.4.* ஜான் லாக் *(1632 - 1704)*
*1.4.5.* வில்ஹெம் லிப்னைஸ் *(1646 - 1716)*
*1.4.6.* ஜார்ஜ் பெர்கிலி *(1685 - 1753)*
*1.4.7.* டேவிட் ஹார்ட்லி *(1705 - 1765)*
*1.4.8.* டேவிட் ஹியூம் *(1711 - 1776)*
*1.4.9.* இமானுவேல் காண்ட் *(1734 - 1804)*
*1.5.* உளவியல் குறித்து அறிஞர்களின் கருத்து
*1.5.1.* இந்திய மெய்ப்பொருளியல்
*1.5.2.* ஹிப்போகிரேட்டீஸ் *(கி.மு.460 - 377)*
*1.5.3.* வில்கெல்ம் உண்ட்டு *(1832 - 1920)*
*1.5.4.* சிக்மண்ட் ஃப்ராய்ட் *(1856 - 1939)*
*1.5.5.* ஆல்பர்ட் C.W. *(1897 - 1968)*
*1.5.6.* எரிக் பிரோம் *(1902 - 1944)*
*1.6.* உளவியல் வரையறைகள்
*1.7.* உளவியல் பிரிவுகள்
*1.7.1.* பொது உளவியல்
*1.7.2.* குழந்தை உளவியல்
*1.7.3.* நெறிபிறழ் உளவியல்
*1.7.4.* உடற்கூறு உளவியல்

*1.7.5.* *ஒப்புமுறை உளவியல்*
*1.7.6.* *சமூக உளவியல்*
*1.7.7.* *நடைமுறை உளவியல்*
*1.8.* *உளவியல் கோட்பாடுகள்*
*1.8.1.* *உளப்பகுப்புக் கோட்பாடு* (Psycho Analysis)
*1.8.1.1.* *ஆழ் நனவு நிலை*
*1.8.1.2.* *நனவிலி நிலை*
*1.8.1.3.* *நனவு நிலை*
*1.8.2.* *இலக்கியத்தில் உளப்பகுப்புத் திறனாய்வு*
*1.8.3.* *ஹார்மிக் கொள்கை* (Harmism)
*1.8.3.1.* *போருக்கம்*
*1.8.4.* *இரக்க உணர்வுக் கோட்பாடு* (Sympathy)
*1.8.5.* *நெறிபிறழ் கோட்பாடு* (Abnormal Psychology)
*1.8.6.* *புதிய ப்ராய்ட் கோட்பாடு* (Neo Fruedian Theories)
*1.8.6.1.* *அட்லரின் தனிநபர் உளவியல்* (Adler’s Individual Psychology)
*1.8.6.2.* *தாழ்வுச்சிக்கல்* (Inferiority Complex)
*1.8.7.* *கார்ல் யூங் பகுப்பாய்வு உளவியல்* (Carl Jung Analytical Psychology)
*1.9.* *இலக்கியமும் உளவியலும்*
*1.10.* *இலக்கியத்தில் உளவியல் அணுகுமுறை*
*1.10.1.* *கால வளர்ச்சியில் சிந்தனை மாற்றம்*
*1.10.2.* *உணர்ச்சிநிலை உளவியல்*
*1.10.3.* *உளத்தில் உண்டாகும் சிக்கல்கள்*
*1.10.4.* *உளவியல் அணுகுமுறையின் பயன்பாடு*
*தொகுப்புரை*

## இயல் - இரண்டு

# சங்க இலக்கியம் காட்டும் போர் நெறிமுறைகள்

## உள்ளடக்கம்


2.0. சங்க இலக்கியம்
2.1.1. எட்டுத்தொகை
2.1.2. பத்துப்பாட்டு
2.2. சங்க இலக்கியத்தில் அகநூல்கள்
2.2.1. நற்றிணை
2.2.2. குறுந்தொகை
2.2.3. ஐங்குறுநூறு
2.2.4. கலித்தொகை
2.2.5. அகநானூறு
2.2.6. முல்லைப்பாட்டு
2.2.6.1. முதல் காட்சி
2.2.6.2. இரண்டாவது காட்சி
2.2.7. குறிஞ்சிப்பாட்டு
2.2.8. பட்டினப்பாலை
2.2.9. நெடுநல்வாடை
2.3. சங்க இலக்கியத்தில் புறநூல்கள்
2.3.1. புறநானூறு
2.3.2. பதிற்றுப்பத்து
2.3.3. ஆற்றுப்படை நூல்கள்
2.3.3.1. திருமுருகாற்றுப்படை
2.3.3.2. பொருநராற்றுப்படை
2.3.3.3. சிறுபாணாற்றப்படை
2.3.3.4. பெரும்பாணாற்றுப்படை
2.3.3.5. மலைபடுகடாம் அல்லது கூத்தராற்றுப்படை
2.3.4. மதுரைக்காஞ்சி
2.4. பண்டைய தமிழ்ப் போர் நெறிகள்
2.4.1. போர் விளக்கம்
2.4.2. போர் குறித்து அறிஞர்களின் கருத்துகள்
2.4.3. போருக்கான காரணங்கள்

2.4.4. போரில் தவிர்க்கப்படுபவர்கள்
2.5. புறத்திணைப் பாகுபாடு
2.5.1. பாகுபாட்டின் அடிப்படை
2.5.1.1. வெட்சித்திணை
2.5.1.1.1. நிமித்தங்கள்
2.5.1.1.2. உன்ன நிலை
2.5.1.2. வஞ்சித்திணை
2.5.1.2.1. காவல் மரத்தினை அழித்தல்
2.5.1.3. உழிஞைத்திணை
2.5.1.3.1. நாள் பார்த்து வாளும் குடையும் புறப்படுதல்
2.5.1.3.2. படைச்செலவு
2.5.1.3.3. அரண் முற்றுகையிடுதல்
2.5.1.4. தும்பைத்திணை
2.5.1.4.1. வீரரைப் போருக்கு அழைத்தல்
2.5.1.4.2. போர் முரசு
2.5.1.5. வாகைத்திணை
2.5.1.5.1. பாசறை நிலை
2.5.1.5.2. மாலை சூட்டிப் புறப்படுதல்
2.5.1.5.3. போர்ப்படைகள்
2.5.1.5.4. போர்க்கருவிகள்
2.5.1.6. காஞ்சித்திணை
2.5.1.6.1. வஞ்சினம்
2.5.1.7. பாடாண் திணை
2.5.1.7.1. போர் அறம்
2.5.1.7.2. போரில் நடுநிலைமை
2.5.1.7.3. போரும் புலவரும்
2.5.2. புறப்பொருள் வெண்பாமாலை - திணைப் பகுப்பு
2.6.1. நடுகல்
தொகுப்புரை

## இயல் - மூன்று

# சங்க இலக்கியத்தில் போர்

## உள்ளடக்கம்


*3.0.* சங்க இலக்கியத்தில் போர்
*3.1* வெட்சித்திணைப் போர்
*3.2.* வஞ்சித்திணைப் போர்
*3.2.1.* காரியாற்றுப் போர் II
*3.2.2.* திருக்கோவலூர்ப் போர் I
*3.2.3.* திருக்கோவலூர்ப் போர் II
*3.3.* உழிஞைத்திணைப் போர்
*3.3.1.* மோகூர்ப் போர்
*3.3.2.* உறையூர்ப் போர்
*3.3.3.* இடும்பில் போர்
*3.3.4.* கொடுகூர்ப் போர்
*3.3.5.* வெண்ணில் போர் அல்லது வாயிற்போர்
*3.3.6.* தகடூர்ப் போர்
*3.3.7.* கூடற்பறந்தலை போர்
*3.4.* தும்பைத்திணைப் போர்
*3.4.1.* சோழன் பெருவிறல்கிள்ளிக்கும் குடக்கோ நெடுஞ்சேரலாதனுக்கும் இடையே நடைபெற்ற போர்
*3.4.2.* வடபுலக் கங்கைப் போர்
*3.4.3.* காரியாற்றுப் போர்
*3.4.4.* கொங்கர் செங்களப் போர்
*3.5.* வாகைத்திணைப் போர்
*3.5.1.* வாகைப் பறந்தலைப் போர்
*3.5.2.* கானப் பேரெயில் போர்
*3.5.3.* வெண்ணிப் போர் III
*3.5.4* கடம்பின் பெருவாயில் போர்
*3.6.* காஞ்சித்திணைப் போர்
*3.6.1.* கங்கைப் போர் II அல்லது குயிலாலயப் போர்
*3.7.* பாடாண் திணைப் போர்
*3.7.1.* குளமுற்றத்துப் போர்
*3.7.2.* தீவுப் போர்

*3.8.* பொதுவியல் திணைப் போர்
*3.8.1.* கழுமலப் போர்
*3.9.* காஞ்சி, உழிஞைத்திணைப் போர்
*3.9.1.* வியலூர்ப் போர்
*3.10.* உழிஞை, வாகைப் போர்
*3.10.1.* நேரிவாயில் போர்
*3.10.2.* ஆவூர்ப் போர்
*3.11.* வஞ்சி, காஞ்சித்திணைப் போர்
*3.11.1* தலையாலங்கானத்துப் போர்
*3.12.* வாகை, பொதுவியல் திணைப் போர்
*3.12.1.* வெண்ணிப் போர் - II அல்லது வெண்ணிப் பறந்தலைப் போர்
தொகுப்புரை

**இயல் - நான்கு**

# சங்ககாலப் போர் - உளவியல் நோக்கு

## உள்ளடக்கம்

*4.0.* சங்ககாலச் சமுதாயப் போர் - உளவியல்
*4.1.* வெட்சித்திணைப் போர் உளவியல்
*4.2.* வஞ்சித்திணைப் போர் உளவியல்
*4.3.* உழிஞைத்திணைப் போர் உளவியல்
*4.4.* தும்பைத்திணைப் போர் உளவியல்
*4.5.* வாகைத்திணைப் போர் உளவியல்
*4.6.* காஞ்சித்திணைப் போர் உளவியல்
*4.7.* பாடாண் திணைப் போர் உளவியல்
*4.8.* சங்ககாலப் போர் உளவியல்
*4.8.1.* திருக்கோவலூர்ப் போர்
*4.8.2.* திருக்கோவலூர்ப் போர் II
*4.8.3.* மோகூர்ப் போர்
*4.8.4.* உறையூர்ப் போர்
*4.8.5.* இடும்பில் போர்
*4.8.6.* கொடுகூர்ப் போர்
*4.8.7.* வெண்ணில் போர் அல்லது வாயிற்போர்
*4.8.8.* தகடூர்ப் போர்
*4.8.9.* கூடற்பறந்தலைப் போர்
*4.8.10.* கங்கைப் போர் II அல்லது குயிலாலயப் போர்
*4.8.11.* சோழன் பெருவிறல்கிள்ளிக்கும் குடக்கோ நெடுஞ்சேரலாதனுக்கும் இடையே நடைபெற்ற போர்
*4.8.12.* வடபுலக் கங்கைப் போர்
*4.8.13.* கொங்கர் செங்களப் போர்
*4.8.14.* வாகைப் பறந்தலைப் போர்
*4.8.15.* கானப் பேரெயில் போர்
*4.8.16.* வெண்ணிப் போர்
*4.8.17.* குளமுற்றத்துப் போர்
*4.8.18.* கழுமலப் போர்
*4.8.19.* வியலூர்ப் போர்
*4.8.20.* நேரிவாயில் போர்
*4.8.21.* ஆவூர்ப் போர்

*4.8.22.* தலையாலங்கானத்துப் போர்
*4.8.23.* கடம்பின் பெருவாயில் போர்
*4.8.24.* தீவுப் போர்
*4.8.25.* காரியாற்றுப் போர்
*4.8.26.* காரியாற்றுப் போர் - II
*4.8.27.* வெண்ணிப் போர் - II
*4.9.* போரினால் ஏற்படும் சமூகப் பின்விளைவுகள்
*4.9.1.* உளநலச் சிக்கல்கள்
*4.9.2.* உள முறிவு
*4.9.3.* சமூகநிலை மனமுறிவு
*4.9.4.* மரணம்
*4.9.5.* உளப் போராட்டம்
*4.9.5.1.* அணுகுதல் - அணுகுதல் போராட்டம்
*4.9.5.2.* அணுகுதல் - விலகுதல் போராட்டம்
*4.9.5.3.* விலகுதல் - விலகுதல் போராட்டம்
*4.9.5.4.* உள இறுக்கம்
*4.10.* உளத் தற்காப்பு இயங்குமுறைகள்
*4.10.1.* ஒடுக்கம்
*4.10.2.* உணர்வொடுக்கம்
*4.10.3.* பின்நோக்கம்
*4.10.4.* பொதுமையாக்கம்
*4.10.4.1.* தற்புனைவுச் சிந்தனை
*4.10.4.2.* சார்பெண்ணச் சிந்தனை
*4.10.5.* துறப்பமைவு
*4.10.6.* ஈடுசெய்தல்
*4.10.7.* தன்முகத் திருப்பம்
*4.10.8.* செயல்படுத்துதல்
*4.10.9.* எதிர் வினையமைப்பு
*4.10.10.* இடமாற்றம்
*4.11.* இரக்க உணர்வு
*4.12.* இயல்பூக்கம்
*4.12.1.* சாகத்தூண்டும் இயல்பூக்கம்
*4.12.2.* போரூக்கம்
*4.13.* பிறழ்நிலை உளவியல்
தொகுப்புரை

**முனைவர் சு.பாலசுப்பிரமணியன்,**
பேராசிரியர் மற்றும் இயக்குநர்,
தமிழியல் மற்றும் பண்பாட்டுப் புலம்,
தமிழ்நாடு திறந்தநிலைப் பல்கலைக்கழகம்,
சென்னை – 600015.

# நெறியாளர் சான்றிதழ்

*திருமதி வா.க. கவிதா என்பவர் தமிழ்நாடு திறந்தநிலைப் பல்கலைக் கழகத்தில், தமிழியல் மற்றும் பண்பாட்டுப் புலத்தில், சங்க இலக்கியத்தில் போர் - உளவியல் அணுகுமுறை என்னும் தலைப்பில் முனைவர் (Ph.D.) பட்டத்திற்கான ஆய்வினை நிகழ்த்தியுள்ளார். இந்த ஆய்வேடு என் நெறிப்படுத்தலின் கீழ் அவரது சொந்த முயற்சியில் உருவாக்கப்பட்டது. இந்த ஆய்வேடு வேறு எந்தப் பட்டத்திற்கும் அளிக்கப்படவில்லை எனச் சான்றளிக்கிறேன்.*

*(முனைவர் சு.பாலசுப்பிரமணியன்)*
*நெறியாளர்*

*இடம் : சென்னை*
*நாள் :*

## 1.0. இலக்கியம்

ஒரு சமூகத்தின் வாழ்வியலை அறிய உதவும் ஆவணமாகவும் வாழ்வியல் களஞ்சியமாகவும் திகழ்வது இலக்கியமாகும். இலக்கியம் என்பது மொழியால் படைக்கப்படும் கலை சமுதாயத்தின் உயர் படைப்பு. அது கவிஞனின் உயர்ந்த கற்பனைகள், உணர்ச்சிகள், கட்டமைப்புகள், மக்கள் வாழ்க்கைக்குப் பயன்படும் நற்கருத்துகள் முதலானவற்றை உள்ளடக்கியது. இலக்கியம் கருத்துகளைக் கற்பனைத் திறத்துடனும் இயல்பாகப் பொருத்திக்காட்டும் தன்மையுடனும் விளக்குவது; மேலும் மக்களின் வாழ்க்கைக்கு வழிகாட்டியாகவும், அவர்தம் உளத்தைச் செம்மைப்படுத்துவதாகவும் அமைகின்றது.

“மனித குலத்தின் ஒப்பற்ற பெரும் படைப்பு இலக்கியம்; இலக்கியங்கள் வாழ்க்கையின் எதிரொலிகள், சமூகத்தின் வளர்ச்சியைக் காட்டும் மைல்கல். மனித இலட்சியத்தின் உயிர் நாடிகள்”[1] என்று புதுமைப் பித்தன் கூறுகிறார்.

“இலக்கியம் வாழ்வின் பிரதிபலிப்பு. மனிதனுக்கும் உலகிற்கும் இடையேயுள்ள உறவுகளின் ஆழ்ந்த வெளிப்பாடாகத் திகழ்கிறது. உலகம் அறிந்தவற்றுள் சிறந்தவற்றின் பதிவேடு இலக்கியம். சிந்தித்தவற்றுள் சிறந்தவற்றின் சாரம் இலக்கியம். தன்னைத்தான் அறிவதற்கும் தன்னுடைய ஆளுமையை வெளிப்படுத்துவதற்கும் ஒரு கருவியாகப் படைப்பாளனுக்கு உதவுவது இலக்கியம். சொற்களின் வழி மனித உளத்தின் உணர்வுகளை, அனுபவங்களை வெளிப்படுத்தும் கலையே இலக்கியம்”[2] என இலக்கியத்திற்கு இலக்கணம் வகுத்துள்ளனர் இலக்கியப் படைப்பாளிகள் என்று ஆய்வாளர் ஆதிபராசக்தி குறிப்பிடுகிறார்.

## 1.1. இலக்கிய வகைகள்

இலக்கியங்கள் காலத்திற்கேற்பவும் பாடுபொருளுக்கு ஏற்பவும் பல வடிவங்களைப் பெற்றுள்ளன. பாட்டும், தொகையும் சங்க இலக்கியங்கள் என்பர். அப்பாடல்கள் ஆசிரியப்பாவால் இயற்றப்பட்டவை. அவற்றின்

பாடுபொருள் இயற்கை மற்றும் மனித உணர்வு பற்றியதாகும். அதற்குப் பின் தோன்றிய இலக்கியமான பதினெண் கீழ்க்கணக்கு நான்கு அடிகளைக் கொண்ட வெண்பா யாப்பால் இயற்றப்பட்டன. அதன் பாடுபொருள் மிகுதியும் அறக்கருத்தாகும். அதற்குப் பின் காப்பிய வடிவம் தோன்றியது.

காப்பியங்களில் ஒரு கருத்தை மையமாகக் கொண்டு பலபாடல்கள் எழுதும் வல்லமை பெற்றவர்களாகப் புலவர்கள் திகழ்ந்தனர். தொடக்கத்தில் காப்பியங்கள் ஆசிரியப்பாவால் இயற்றப்பட்டன. பின் விருத்தம் உள்ளிட்ட பல வகைப் பாக்களாலும் காப்பியங்கள் இயற்றப்பட்டுள்ளன. அதற்குப் பின் தோன்றிய இலக்கிய வடிவமாகச் சமய இலக்கிய வகைகள் தோன்றலாயின. அவற்றின் பாடுபொருள் பக்தியாக அமைந்தது. இறையருளைப் போற்றும் வகையில் பாடப்பட்ட அப்பாடல்களில் இசைக்கு முக்கியத்துவம் கொடுத்துப் பாடப்பட்டிருந்தது.

பதினான்காம் நூற்றாண்டில் இலக்கிய வடிவத்தின் ஒருகூறான உரைநடை தோன்றியது. தொடக்கக்கால உரைநடை ஆசிரியர்களாக, இலக்கண உரையாசிரியர்களே இருந்தனர். ஐரோப்பியர் வருகைக்குப்பின் உரைநடையில் மறுமலர்ச்சி ஏற்பட்டது. அதன் காரணமாக இலக்கிய வடிவங்கள் மாற்றம் பெற்றுக் கடிதம், கட்டுரை, சிறுகதை, புதினம், நாவல் எனப் பல வகைகளில் உரைநடை இலக்கியம் வளர்ச்சியடைந்துள்ளது.

செய்யுள் வடிவத்தில் மாற்றம் பெற்று வசனகவிதை என்கிற படைப்பு வடிவம் பெற்றது. பின்பு வசனகவிதையின் பரிணாமத்தில் புதுக்கவிதை தோற்றம் பெற்றது. அதன் வகைகளாக ஹைக்கூக் கவிதை, படிமக்கவிதை, தொன்மக்கவிதை, குறியீட்டுக் கவிதை போன்றன தோன்றலாயின என்பதை அறியமுடிகிறது.

**1.2. உளவியல் அறிமுகம்**

உளவியல் என்பது உளம், இயல் என்னும் சொற்களை மூலமாகக்கொண்டு உருவாக்கப்பட்டது. எனவே உளத்தைப் பற்றிய இயல்

உளவியல் எனப்படுகிறது. Psychology என்னும் கிரேக்கச் சொல்லுக்கு உளவியல் என்று பொருள் கொள்ளப்படுகிறது.

உளவியலின் தோற்றத்திற்கு முதன் முதலில் அடிகோலியவர் கிரேக்கத் தத்துவவாதியான சாக்ரடீஸ் (Socrates) ஆவார். இவரைத் தொடர்ந்து பிளாட்டோ (Plato), அரிஸ்டாட்டில் (Aristotle) போன்றோர் உளவியல் தொடர்பான தத்துவங்களைக் கூறியுள்ளனர்.

### 1.2.1 சாக்ரடீஸ் (Socrates)

சாக்ரடீஸின் தொடக்கக்காலத் தத்துவச் சிந்தனைகள் உலகம் ஏன்? மனிதப்படைப்பு ஏன்? முதலானவற்றிற்கான விடைகளைக் கண்டறிகின்ற போக்கில்தான் இருந்தன. இந்தத் தத்துவப்போக்கு கி.மு.6 ஆம் நூற்றாண்டின் டெமாக்ரிடஸ் (Democritus) என்பவரிடமிருந்து தொடங்கியது. அதனைத் தொடர்ந்து மனிதன் பற்றியும் அவனின் நடவடிக்கைகள், படைப்புகள் பற்றியும் விசாரணைகள் எழுந்தன.

**“செஞ்ஞாயிற்றுச் செலவும்**
**அஞ் ஞாயிற்றுப் பரிப்பும்**
**பரிப்புச் சூழ்ந்த மண் டிலமும்**
**வளி திரிதரு திசையும்**
**வறிது நிலைஇய காயமும் என்றிவை**
**சென்றளந்து அறிந்தார் போல”[3]**

என்ற புறப்பாடலில் உறையூர் முதுகண்ணன் சாத்தனார் கதிரவனின் பாதையையும் அதன் இயக்கத்தையும் காற்றின் திசையும் முடிவில்லாத வானத்தையும் நேரில் சென்று அறிந்தவர்கள்போல அவற்றின் தன்மைகளைக் கூறும் அறிஞர்கள் உள்ளனர் என்ற கருத்தைப் பதித்துள்ளார். சாக்ரட்டீஸ் கருத்தான உலகம் ஏன்? அதன் தன்மை பற்றிய அறிவு மனிதனுக்கு உண்டு என்பதை இதனால் உணரமுடிகிறது. “சாக்ரடீஸின் மாணவரான பிளாட்டோ(Plato)விடமிருந்து முறையான உளவியல் வரலாறு தொடங்கியது”[4] என்கிறார் தி.கு.இரவிச்சந்திரன்.

### 1.2.2. பிளாட்டோ (Plato)

“பிளாட்டோவின் தத்துவப்படி உடலும் உளமும் வெவ்வேறானவை என்பதாகும். உடலுக்கு எவ்வாறு இயக்கங்கள் இருக்கின்றனவோ அதே போன்று உளத்திற்கும் இருக்கின்றன என்கிறார். உளவியல் வரலாற்றில் உடலையும் உளத்தையும் பிரித்துப் பார்த்தவர் இவரே ஆவார். அதே சமயம் கருத்தையும் (Idea) பொருளையும் (Matter) பிரித்து உணர்த்தியவர் இவரே.”[5]

“ஒரு பொருள் அழகாக இருக்கிறது என்று சொன்னால் பொருளும், அழகும் வெவ்வேறானவை என்பது பிளாட்டோவின் கருத்து. பொருள் என்றைக்கும் பொருள் தான். அது புறவுலகில் இருப்பதாகும். ஆனால், ‘அழகு’ என்பது உளத்தின் எண்ணமாகும். இந்த எண்ணம் அல்லது கருத்து உளத்தில் உதிப்பதாகும். புறப்பொருளுக்கு ஏற்பத்தான் கருத்து உதிக்கிறது”[6] என்பது பிளாட்டோவின் வாதம்.

உளம் (Mind), பொருள் (Matter), ஊடாடல் வைத்துக் கொள்கிறபோது என்றைக்கும் ஒரே மாதிரியாக உறவு வைத்துக் கொள்ளாமல் இடத்திற்கும், பொருளுக்கும் ஏற்ப உறவு கொள்கின்றன. அதனால், இவற்றின் உறவு மாறுதலுக்கு உட்பட்டது. இந்த மாறுதல் பொருளின் தன்மைக்கு ஏற்பவும் மனதின் இயல்புக்கு ஏற்பவும் ஏற்படுகிறது. எனவேதான் அனைவரிடமும் ஒரே மாதிரியான உறவைக் காணமுடிவதில்லை.

உளம் பற்றி பிளாட்டோ கூறியவற்றில் மிகவும் கவனிக்க வேண்டியது ‘உளம் - பொருள்’ இடையே உள்ள உறவாகும். இதனை,

**அண்ணாந்து ஏந்திய வனமுலை தளரினும்**
**பொன்னேர் மேனி மணியின் தாழ்ந்த**
**நன்னெடுங் கூந்தல் நரையொடு முடிப்பினும்**
**நீத்தல் ஓம்புமதி பூக்கேழ் ஊர!**[7]

எனும் சங்கப் பாடல் ஊடாக உணரலாம். தலைவியின் விருப்பத்திற்கு இணங்க அவளைத் தலைவனுடன் சேர்க்கும் தோழி, ‘இன்று இளமையும்

அழகுமாக ஒளிரும் தலைவி முதுமையுறுவாள். அப்பொழுது தலைவியின் தனங்கள் தளர்ந்திடும்; கருநிறக் கூந்தல் நரைமிகும்; பொன்மேனியில் சுருக்கம் விழும்; அப்பொழுதும் இன்றுபோல் என்றும் அன்பு நீங்காமல் நிலையாக இருக்கவேண்டும்' என்று தலைவனை வேண்டுவதில் தலைவியைப் பற்றிய எண்ணம் அவளின் தோற்றத்திற்கு ஏற்ப மாற்றம் பெறும் என்பதையும் ஆனால் தலைவன் தலைவியின் மேல் வைத்த பற்று என்றும் நிலைத்த தன்மையுடன் இருக்க வேண்டும் என்பதையும் தோழியின் கருத்தாக இப்பாடல் படம் பிடித்துக் காட்டுகிறது. இக்கருத்தையே பிளாட்டோ கூறியுள்ளார் என்று அறியமுடிகிறது.

### 1.2.3. அரிஸ்டாட்டில் (Aristotle)

"பிளாட்டோவின் மாணவரான அரிஸ்டாட்டில் (Aristotle) பிளாட்டோ கூறிய உளம் பொருள் இவற்றிற்கு இடையே உள்ள உறவை மறுக்கிறார். உளத்திற்கும் பொருளுக்கும் இடையே எத்தகு தனித்தன்மையும் இல்லை"[8] என்பதே அரிஸ்டாட்டில் வாதமாகும். மேலும், "கி.மு. 384 - 322 இல் வாழ்ந்த கிரேக்கத் தத்துவ அறிஞர் அரிஸ்டாட்டில் எழுதிய ஆன்மாவின் இயல்புகள் என்ற நூலே, உளவியல் பற்றி எழுந்த முதல் நூலாகும்"[9] மேற்கண்ட இம்மூன்று கிரேக்கத் தத்துவவாதிகளின் கருத்துகளை அடிப்படையாகக் கொண்டே உளவியல் தோற்றம் பெற்றதாகக் கருதப்படுகிறது.

மேலும், அரிஸ்டாட்டில் "ஒரு கல்லில் சிலை வடிக்கப்படுகிறது என்றால் அந்தச் சிலைக்குரிய வடிவம் கல்லில் இருக்கிறதா அல்லது உளத்தில் உள்ளதா என்கிற பாகுபாடு எழுகிறது. அரிஸ்டாட்டில் கூற்றுப்படி இரண்டிலும் உள்ளது. இரண்டிலும் இருந்தால்தான் சிலை வடிவம் பெறுகிறது. இவ்வாறு கருத்தோடு தொடர்புடைய வடிவம் (Form) உளத்தின் தனித்தன்மையாக அல்லாமல் பொருளோடு (Matter) இணைந்துள்ள பாங்கை"[10] அரிஸ்டாட்டில் காட்டுகிறார். அதேபோல் பொருளும் கருத்தோடு இணைந்துதான் செயல்படுகிறது என்று கூறுகிறார்.

பிளாட்டோ, அரிஸ்டாட்டில் இருவரின் கருத்தும், ஐரோப்பியத் தத்துவவாதிகளிடம் குறிப்பிடத்தக்க தாக்கத்தை ஏற்படுத்தின. உளமும் பொருளும் தனித்தன்மையோடும் அதே சமயம் மாறும் தன்மையோடும் உறவு கொள்கின்றன என்கிற கருத்து, பிற்காலத்திய தத்துவவாதிகளிடத்திலும் அறிவியல் முறை உளவியலிலும் குறிப்பிடத்தக்க மாற்றத்தை ஏற்படுத்தியது. பின்னர் வந்த காலக்கட்டத்தில் கிரேக்கத் தத்துவவாதிகளிடமிருந்து அமெரிக்க, ஐரோப்பியத் தத்ததுவாதிகள் உளத்தைப் பற்றிய சிந்தனைகளை வெளிப்படுத்தியுள்ளதை அறியமுடிகிறது.

### 1.3. உளவியல் - சொற்பொருள்

Psychology என்னும் சொல்லின் அடிப்படைப் பொருள் ஆன்மா அல்லது மனம் என்பதாகும். ஆரம்பக் காலத்தில் உளவியல் என்பது ஆன்மாவைப் பற்றிக் குறிப்பதாக, அதன் நிலை வகைகளை ஆராய்வதாக அமைந்தது என்று கூறலாம்.

ஆன்மாவின் இருப்பிடம் எது என்பதை அறுதியிட்டுக் கூறமுடியாத நிலையில் இக்கருத்து மாற்றம் பெற்றது. மனம் அல்லது உளம் என்பதன் பண்புகளையும் செயல்களையும் விளக்கும் அறிவுப் பிரிவெனக் கொள்ளத் தொடங்கினர். மன இயக்கச் செயல் - உடலியக்கச் செயலிலிருந்து வேறுபட்டது. எனவே, இக்கருத்தை அனைவரும் ஏற்றுக்கொள்ள மறுத்ததனால் மாற்றம் பெற்று நனவு நிலைச் செயல்களை விளக்கும் அறிவியல் என்று உளவியலார் கருதினர் என்பதும் இங்குச் சுட்டுவதற்குரியது.

உளம் நனவு நிலையை மட்டும் குறிப்பது அன்று; நனவற்ற நிலைக்கும் அது பொருந்தும்; கனவுகள், சித்தம் கலங்கிய உளச்செயல்கள், அறிதுயில் முதலான நனவிலிச் செயல்களுக்கும் உளமே அடிப்படை; எனவே, இக்கருத்தும் கைவிடப்பட்டு உளவியல் என்பது மனிதனது நடத்தை பற்றிய அறிவியலாக இன்று மலர்ந்து நிற்கிறது.

உளவியல் எனப் பொருள்படும் சைக்காலஜி என்ற சொல்லை அமைத்தவர் ‘கோக்கல்’ (Gockel) ஆவார். இவர் 16ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவர். உளத்தின் அமைப்புத் தொழில்கள் முதலானவற்றைப் பற்றி ஓரளவு அறிவியல் முறைப்படி சிந்தித்துத் தமது கருத்துக்களை வெளியிட்டவர் தெக்கார்த்தே (Descartes) என்னும் பிரெஞ்சு நாட்டு அறிஞர் ஆவார்.

மனிதன் தன்னுடைய இயல்புகளையும் நடத்தைகளையும் அவற்றுக்கான காரணங்களையும் புரிந்துகொள்வதற்கும் தன்னை ஒத்த பிறமாந்தரின் போக்கினை அறிந்துகொள்வதற்கும் சமுதாயப் பிரச்சினைகளைப் புரிந்துகொண்டு தீர்வு காண்பதற்கும் உளவியல் பெரிதும் துணை நிற்கிறது. “மனதின் புறச்செயல்களை உற்று நோக்கி முறையாக ஆராய்ந்து அதன்மூலம் அவை எங்ஙனம் அகத்தே நிகழும் சிந்தனை ஓட்டங்களுடன் தொடர்பு கொண்டுள்ளன என்று சுற்றுச்சூழலில் ஏற்படும் நிகழ்ச்சிகளால் எவ்வாறு பாதிக்கப்படுகின்றன என்றும் விளக்குவதே உளவியலாகும்”[11] என்றும் கூறுவர்.

அதாவது மனித நடத்தையை அறிவியல் கண்கொண்டு அணுகி ஆராய்தலே உளவியலாகும். (Psychology is a scientific way of studying human behaviour) நடத்தை என்பது ஓர் உயிரியின் (organism) பலநிலைப்பட்ட ‘துலங்கல்கள்’ (Response - R) என்பதைக் குறிக்கும் சொல். இத்துலங்கல்களைத் தூண்டல்களினால் (Stimulus – S) ஏற்படும் விளைவாகவும் குறிப்பிடுவர். ஆங்கிலத்தில் நடத்தையை ‘S-R’ என்னும் குறிப்பெழுத்தால் சுட்டுகின்றனர். தூண்டல்கள் நமது சுற்றுப்புறத்திலிருந்தோ உடலுக்குள்ளிருந்தோ (அல்லது) உளத்தினின்றோ எழக்கூடும் என்றும் அறியமுடிகிறது.

உளப்பாகுபாடு என்பது முதன்முதலில் ‘ஹிஸ்டீரியா’ போன்ற உளக் கோளாறுகளை நீக்கப் பயன்படுத்தப்பட்ட ஒரு தனிப்பட்ட முறையாகும். நாளடைவில் உளத்தைப் பற்றித் தனிப்பட்ட கருத்துகளைக் கொண்ட உளவியல் பகுதியாக அமைந்துள்ளது.

நனவு, உளத்தைவிட மிகவும் முக்கியமானது. மனிதன் நடத்தையைத் தீர்மானிப்பதுமான ஆழ்ந்த உளத்தைப் பற்றியும் (unconscious) அது இயங்கும் வகைகளையும் விதங்களையும் உளப்பாகுப்பாடு அறிஞர்கள் வெளியிட்டுள்ளார்கள். இவை உளவியல் என்ற சொல்லுக்காக அறிஞர்கள் கூறும் விளக்கங்களாக அமைந்துள்ளன. இவ்வாறு உளவியலின் வளர்ச்சி நிலைகள் அமைந்திருக்கின்றன.

**1.4. உளவியல் வளர்ச்சி**

தொடக்கக் காலத்தில் சாக்ரடீஸ், பிளாட்டோ, அரிஸ்டாட்டில் மூவரும் தத்துவத்தில் உளவியல் என்ற ஒன்றை முதன்முதலில் தோற்றுவித்தாலும் இவர்களைத் தொடர்ந்து பதினேழாம் நூற்றாண்டில் ரெனி தெக்கார்த்தே (Rene Descartes), லிப்னை (Leibniz), ஜான் லாக் (John Locke), ஜார்ஜ் பெர்கிலி (George Berkeley), இமானுவேல் காண்ட் (Immanuel Kant) முதலானோரும் உளவியல் தத்துவங்களை வழங்கியுள்ளனர்"[12] என்று அறியமுடிகிறது.

இவர்கள் அனைவரின் தத்துவங்களிலும் உளத்தின் இயல்புகள் பற்றியும் உளக்கூறுகள் பற்றியும் காணமுடிகிறது. "ஐரோப்பியத் தத்துவங்களைத் தொடர்ந்து ஐசக் நியூட்டன் (Isaac Newton), சார்லஸ் டார்வின் (Charles Darwin), கார்ல் மார்க்ஸ் (Karl Marx), சிக்மண்ட் ஃப்ராய்ட் (Sigmund Freud), ஆல்பர்ட் ஐன்ஸ்டின் (Albert Einstein), போன்றோர் மனிதச் சிந்தனைப் போக்கை முழுமையாகத் திசை திருப்பியவர்கள் எனலாம்."[13]

மேலும் "அறிவியல் முறைப்படி உளத்தை அணுகும் போக்கிற்கு 19 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில்தான் அதிகக் கவனம் செலுத்தப்பட்டது. ஐரோப்பிய நாடுகளைச் சார்ந்த அறிவியலாளர் சிலர் உளவியல் துறையை உருவாக்கி வளர்த்தனர். குறிப்பாக பிச்னர் (Fechner), லிப்பிஸ் (Lipps), ஹெல்மால்ட் (Helmholtz), டார்வின் (Darwin), சார்கோ (Charcot), ஃப்ராய்ட் (Freud) முதலானோர் குறிப்பிடத்தக்கவராவர். இவர்கள் காலத்தில் உளவியல் என்கின்ற தனித்த ஒரு துறை இல்லாதிருந்தது.

இக்காலகட்டத்தில் உளவியல் சிந்தனைகளை வழங்கியவர்கள் பெரும்பாலும் உடலியல் மருத்துவர்களே ஆவர். உடல்போல் உளமும் தனிநிலையாகக் கவனிக்கப்பட வேண்டிய ஒன்று என்பதை உணர்ந்து உளவியலாளர்கள் தனிக்கவனம் செலுத்தத் தொடங்கியதால் உளவியல் தனித்துறையாக வளர்ச்சி பெற்றது”[14] என்கிறார் தி.கு இரவிச்சந்திரன்.

### 1.4.1. தெக்கார்த்தே (1539 - 1630)

ரெனி தெக்கார்த்தே என்பவர் பிரான்ஸ் நாட்டைச் சார்ந்தவர். இடைக்கால உளவியல் வரலாறு இவரிடமிருந்துதான் தொடங்கியது. இவர் மனிதனைச் சிந்திக்கும் விலங்கு என்கிறார். சிந்திப்பதால் மட்டுமே அனைவரும் இயங்குகிறோம். சிந்தனை இல்லை என்றால் இயக்கம் நிகழாது. தன்னைப் பற்றியும், உடலைப் பற்றியும், கடவுளைப் பற்றியும் சிந்திப்பதால் மட்டுமே அறிந்துகொள்ள முடிகிறது. உளத்தின் இயக்கம்கூட சிந்தனையில் உள்ளது. சிந்தனையுள்ள மனிதன் பெறும் அனுபவத்தினை அடிப்படையாகக் கொண்டு எந்தச் செயலையும் தூண்டுகிறது என்பது இவரது கருத்து. மனித இயக்கம் இரண்டு முக்கிய நிலையைக் கொண்டது. அவை :

- உளம் - உளத்தைச் சிந்திக்கும் பொருள் (Thinking Substance)
- பொருள் - விவரிக்கும் பொருள் என்பவையாகும்.

மேற்குறிப்பிட்ட இரண்டு கருத்துகளை அடிப்படையாகக் கொண்டு இவர் உளவியல் குறித்த புதிய சிந்தனையைத் தோற்றுவிக்கிறார். இடைக்கால உளவியல் வரலாறு இவரிடம் தொடங்கினாலும் தொடர்ந்து இவரின் சமகாலத்தவரான தாமஸ் ஹாப்பீஸிடம் வளர்ச்சி நடை அமைந்திருந்தது எனலாம்.

### 1.4.2. தாமஸ் ஹாப்பீஸ் (1588 - 1679)

இங்கிலாந்து நாட்டைச் சார்ந்த தாமஸ் ஹாப்பீஸ் தெக்கார்த்தேயின் காலத்தில் வாழ்ந்தவர். கலிலியோவின் தாக்கத்தால் இயற்கையியலுக்கு

வந்தவர். இயற்கையியலில் உளத்தின் தன்மைகளைச் சுட்டிக் காட்டிய இவர் இயற்கையை ஆய்வு செய்யும் போக்கில் விலங்குகள், மனிதர்களின் இயல்புகளைக் காண விழைந்தவர் என்பதை அறியமுடிகிறது.

அனைவரிடத்திலும் 'இயல்பூக்கம்' உண்டு. தமக்கு எது தேவை? எவற்றைத் தம்மால் பெற முடியும்? ஆகியவை ஊக்கங்கள் தொடர்பாக எழும் ஒவ்வொருவரின் உளத்திலும் இருக்கின்ற பொதுமைப் பண்புகளாகும். இவற்றின் செயல்பாடுகளால் மனிதன் தன்னையும் தன்னுடைய வாழ்க்கையையும் நெறிப்படுத்திக் காத்துக்கொள்கிறான்.

மனிதனுக்கு தற்சார்புத் தேவைகளும் போராட்டமும் முக்கிய கூறுகளாக உள்ளன. அதேபோல் தன்னைக் காத்துக்கொள்வதில் அச்சம் (Fear) பெறும்பங்கு வகிக்கிறது.

வாழ்க்கைப் பாதுகாப்பு (life security), போராட்டம் (conflict), அச்சம் (fear) முதலானவை உளத்தில் செயல்பாடுகளாகின்றன. இவற்றின் செயல்பாடுகளால்தான் மனிதன் தன்னையும் தன்னுடைய வாழ்வையும் நெறிப்படுத்திக் காத்துக் கொள்கிறான் என்பது தாமஸ் ஹாப்பீஸ் கருத்தாகும்.

16 ஆம் நூற்றாண்டில் தெக்கார்த்தே ஏற்படுத்திய தாக்கம் பல நாடுகளிலும் எதிரொலித்தது. தாமஸ் காலத்திலும் காலம் கடந்து இன்றும் தாக்கத்தை ஏற்படுத்தி வருகிறது. இவர்களை அடுத்து வந்தவர் பெனடிக் ஸ்பினோசா ஆவார்.

### 1.4.3. பெனடிக் ஸ்பினோசா (1632-1677)

இவர் இங்கிலாந்து நாட்டைச் சார்ந்தவர். இவரிடம் தெக்கார்த்தேயின் தாக்கம் அதிகம் காணப்படுகிறது. தெக்கார்த்தேயின் உடல் - உளம் உறவுநிலைகளை மேலும் வளர்த்தெடுத்த இவர் உடலுக்கும், உளத்திற்கும் இடையே இணைநிலைகள் (Parallels) இருப்பதாகக் கூறுகிறார். உடலும் உள்ளமும் ஒழுங்கமைந்த உறவை வைத்துக்கொள்கின்றன என்று குறிப்பிடுகிறார்.

இயற்பியலில் அபௌதிகக் (Metaphysics) கொள்கை பிரசித்தி பெற்றது. இதற்கு இரண்டு பொருள் உண்டு என்பர். அவை,

- இருத்தல் (அ) மெய்ம்மை பற்றிப் படிப்பது.
- அனுபவத்திற்கு அப்பால் (அ) உணர்தலுக்கு அப்பால் இருக்கும் நடப்புகளை விளக்குவது என்பதாகும்.

'அபௌதிக இலக்குகள்' பல இருந்தாலும் முதன்மையான கருத்தாக ஒன்றையே கூறுவர். அவை, ஐயமற்ற முதல் அடிப்படைகளை (Basic Principles) உருவாக்குவதையே இத்தத்துவவியல் செய்கிறது என்பதை இங்கு அறியமுடிகிறது.

**1.4.4. ஜான் லாக் (1632-1704)**

இவர் இங்கிலாந்தைச் சார்ந்தவர். லிப்னைசுக்கு அடுத்தவராக வந்து உளவியல் சிந்தனைகளை மேலும் வளர்த்தவர். இவருக்குமுன் இருந்தவர்கள் அனுபவத்தாலும் (experience) கவனிப்பாலும் (observation) கூறப்பட்டு வந்த உளவியல் முறையில் (experiment) உள இயக்கங்களைக் கண்டறியும் புதிய அணுகுமுறையை ஏற்படுத்தியவர். இவரின் ஆய்வு முறை, அனுபவங்களையும், கவனிப்புகளையும் சோதனை செய்து புதிய முடிவுகளை கண்டறிகின்ற முறையாகும். இதன் வழியில் புதிய அணுகுமுறையை உளவியல் வளர்ச்சிக்கு வழங்கினார். இவரது கொள்கைகள் பெர்கிலி (Berkeley), ஹியூம் (Hume), காண்ட் (Kant) முதலானோரிடமும் தாக்கத்தை ஏற்படுத்தின.

ஜான் லாக் 'அனுபவங்களைக் கொண்டுதான் உளம் அறிவைப் பெறுகிறது' என்கிறார். உளத்தின் எந்தக் கருத்தும் தான்தோன்றியாகத் தோன்றுவது இல்லை. புற உலகின் பதிவுகளே கருத்துகளாக வெளிப்படுகின்றன என ஆய்ந்தவர்; இவரைப் 'பட்டறிவு உளவியலின் தந்தை' என்று அழைப்பர்.

### 1.4.5. வில்ஹெம் லிப்னைஸ் (1646 - 1716)

தெக்கார்த்தே, ஸ்பினோசாவின் தத்துவங்களை அடிப்படையாகக் கொண்டு உளத்தின் மீது புதிய விசாரணையை ஏற்படுத்தி நனவிலி மனம் தொடர்பான சிந்தனைக்கு வித்திட்டவர் இவர். ஆகவே உளவியல் வரலாற்றில் மிக முக்கியமாகக் கருதப்படுபவர்களில் இவரும் ஒருவர்; லிப்னைசுக்கு முன் வந்தவர்கள் உடலுக்கும் உளத்திற்கும் உள்ள உறவு நிலைகளில் புலப்படக் கூடிய இயக்கங்களை மட்டும் விவரித்தனர். ஆனால், இவரோ அதையும் தாண்டிப் 'புலப்படா மனம்' என்ற ஒன்று உண்டு என்றும் அது வலிமை மிக்கது என்றும் கூறுகிறார். புலனறிவின் பதிவுகளுக்கு ஏற்ப நடத்தைகள் (behaviour) நிகழ்கின்றன என்கிறார். இக்கொள்கையே நடத்தையியல் கோட்பாட்டிற்கு அடிகோலுவதாக அமைகிறது.

### 1.4.6. ஜார்ஜ் பெர்கிலி (1685 - 1753)

இவர் அயர்லாந்து நாட்டைச் சார்ந்தவர். ஜான் லாக் கருத்தின் தாக்கம் பெற்று ஆனால், அதிலிருந்து மாறுபட்டுக் காணப்படுகிறார். கருத்தாக்கத்தில் இரண்டு வகைகள் உள்ளன.

- முன்னவரின் கருத்துக்களால் தாக்கம் கொண்டு அக்கருத்துக்களை ஏற்று அவற்றை வளர்த்து வெளிப்படுத்துகின்ற போக்கு நேர் தாக்கம் என்பர்.
- முன்னவரின் கருத்துக்களை மறுத்து புதிதாக சிந்தித்து புதிய கருத்தைக் கூறுகின்ற போக்கு எதிர் தாக்கம் என்பர்.

நேர் தாக்கத்தில் வெளிப்படையாகத் தாக்கம் இருக்கும். ஆனால், எதிர் தாக்கத்தில் வெளிப்படையாகத் தெரியாது. ஆனால் எதிர்மறையான கருத்துக்களை பின்னவர் கூறுவதற்குச் சிந்திக்க தூண்டியவர் முன்னவரே ஆவார்.

இவரின் கொள்கை நடைமுறைக்கு ஏற்றதன்று என்று கருதுவோரும் உண்டு. இந்த அபௌதிகக் கொள்கையைத்தான் பிற்காலத்தில் வந்த

ஃப்ராய்ட் முழுமையாக நம்பித் தம் ஆய்வுக்களத்தை விரிவுபடுத்திக் கொண்டார் என அறியமுடிகிறது.

### 1.4.7. டேவிட் ஹார்ட்லி (1705 - 1765)

இவர் இங்கிலாந்து தத்துவவாதியாவார். உளம்சார் தத்துவ வளர்ச்சியில் ஒரு திருப்புமுனையானவர். "இருமை வாதத்தை தெக்கார்த்தே தத்துவத்திலிருந்து பெற்று அதற்கு புதிய முலாம் பூசியவர். உடலும் உளமும் இணைந்தே இயங்குகின்றன. இவ்விரண்டையும் இருநிலை முறைமைகளாக ஹார்ட்லி காண்கிறார். உடலும் உளமும் தனித்தனி நிலைகளாக இருந்தாலும் ஒன்றுக்கொன்று இணைநிலையாக இயங்குகின்றன என்றும் ஒன்றை மற்றொன்று பிரியாமல் இயங்குகின்றன என்றும் ஹார்ட்லி கூறுகிறார். உணர்தல், கருத்தல், எண்ணுதல் போன்றவை உளம் தொடர்புடைய இயக்கங்கள் என்றும், அதிர்வுகள், நரம்புகளின் செயல்பாடுகள் போன்றவை உடல் தொடர்புடைய இயக்கங்கள் என்றும் சுட்டிக்காட்டுகிறார். இவர் இவ்விரண்டும் பின்னிப் பிணைந்து செயல்படுவதால் உடலியக்கமும், உளவியக்கமும் நிகழ்கின்றன. இதை இயைபு வாதம் (Associationism) என்று அறிவியல் உலகம் காண்கிறது".[15]

### 1.4.8. டேவிட் ஹியூம் (1711 - 1776)

இவர் ஸ்காட்லாந்து தத்துவ அறிஞர் பெர்கிலியைத் தொடர்ந்து 'அனுபவம்' என்பதை ஏற்றுக்கொள்கிறார். "ஒரு மனிதனுக்குப் பல அனுபவங்கள் ஏற்படுகின்றன. அவை, ஒன்றோடொன்று தொடர்பில்லாமல் நடந்து வருகின்றன. அவற்றுக்கென்று வரிசையோ சட்டத்திட்டங்களோ இல்லை. காரணம், மனித எண்ணங்களின் போக்கு அவ்வாறு அமைந்துள்ளது. அனுபவங்களைப் பெறுகின்ற உளம், அவற்றில் வேண்டியவை - வேண்டாதவை எனப் பகுத்துத் தன்னுள் தக்க வைத்துக் கொள்கிறது. இடம், காலம், சூழல் ஆகியவற்றிற்கு ஏற்ப அந்த அனுபவங்களை இயக்கத்திற்கு உட்படுத்திக் கொள்கிறது"[16] என்கிறார். இவர்

அக மாறாட்டத்திற்கு (disorder) புறவுலக மாறாட்டமே (out world - disorder) காரணமாகும் என்கிறார்.

### 1.4.9. இமானுவேல் காண்ட் (1724 - 1804)

இவர் ஜெர்மானிய நாட்டைச் சார்ந்தவர். ஹியூம் கூறும் கருத்தை மறுக்கிறார். காண்ட் சுட்டிக்காட்டுவது பொதுவான உணர்வுகள்தாம் அனுபவத்தை நிர்ணயிக்கின்றன என்பதாகும். புலனுணர்வுகள் (sensations) பொருள் மீது வைத்துக் கொள்கிற உறவே அனுபவமாகிறது. அவை இரண்டு வகைப்படும்.

- உணர்தல் இல்லாத நிலையில் தற்செயலாக ஏற்படுதல். அதாவது உளம் எதிர்பாராத நிலையில் ஏற்படும் அனுபவம்.
- தன்னிச்சையாகக் குறிப்பிட்ட செயலை உளம் செய்து பெறுகின்ற அனுபவம் என்பனவாகும். இவை இரண்டிற்கும் பொதுமைக் காரணி உணர்தல் அல்லது புலன் உணர்தல் ஆகும். இதன் வழியில் காண்ட் தன்னுடைய பட்டறிவுக் கண்ணோட்டத்தில் உளவியலைத் தெளிவுபடுத்த முயல்கிறார்.

## 1.5. உளவியல் குறித்து அறிஞர்களின் கருத்து

### 1.5.1. இந்திய மெய்ப்பொருளியல் அறிஞர்கள்

இந்திய மெய்ப்பொருளியல் வல்லுநர்கள் உளவியல் குறித்துக் கூறும்போது தனிமனிதனுடைய நடத்தை எந்தத் தனித்த பண்பினால் மிகுந்த அளவில் ஆதிக்கம் செலுத்துகிறதோ அதனைப் பொறுத்து அவரவர் இயல்பு அமையும்.

சத்துவ குணம் - சாந்தமான இயல்பு உடையவர் (மென்மையான குணம்)

ராஜஸகுணம் - செயலாற்றலும் அமைதியும் உடையவர் (போர், தீவிரமாகச் செயலாற்றும் குணம்)

| | |
|---|---|
| தாமசகுணம் | - செயலின் விளைவு பற்றிக் கவலைப்படாதவர் (சோம்பல் மற்றும் தாழ்வு மனப்பான்மை போன்ற குணம்) |

என உளவியல் குறித்து விளக்கம் கொடுக்கின்றனர் இந்திய மெய்ப்பொருள் வல்லுநர்கள்.

### 1.5.2. ஹிப்போகிரேட்டீஸ் (கி.மு. 460 - 377)

இவர் கிரேக்க நாட்டைச் சார்ந்தவர். தனி மனிதனின் உடலில் உள்ள நீங்கள்தான் உங்களுடைய உளப்போக்கில் காணப்படும் தனித்த வகைகளுக்கும் காரணம் என்கிறார்.

### 1.5.3. வில்கெல்ம் உண்ட்டு (1832 - 1920)

இவர் செருமானிய உளவியல் அறிஞர். மனித மனத்தை மூன்று கூறுகளாகப் பகுக்கின்றார். அவை, வலித்தூண்டுதல்களினால் ஏற்படும் புலன் உணர்வுகள், உளத்தில் ஏற்படும் உணர்வுகளை ஒத்த பட்டறிவுகள், பட்டறிவுகளின் மனவெழுச்சிக் கூறுகள் என்பனவாகும்.

இவர் உலகப் புகழ்பெற்ற உளவியல் அறிஞரான ஃப்ராய்டுக்கு முன் தோன்றியவர். இவர்களின் பெரும்பாலான கருத்துகளை அடிப்படையாகக் கொண்டுதான் ஃப்ராய்ட் உளவியல் துறையை வளர்த்தார். இவரின் வழித் தோன்றலாக யூங், ஆட்லர் முதலானோரைக் குறிப்பிடலாம்.

### 1.5.4. சிக்மெண்ட் ஃப்ராய்ட் (1856 - 1939)

இவர் புரூக்கின் மாணவர் ஆவார். இவர் செக்கோஸ்லோவேகியா நாட்டின் மொராவாவில் உள்ள பிரைபர்க் என்னும் ஊரில் 1856ஆம் ஆண்டு மே மாதம் 6ஆம் தேதி பிறந்தார். இவரின் இயற்பெயர் சிக்மெண்ட் ஆகும். ஃப்ராய்ட் என்பது பரம்பரைப் பெயர். நான்கு வயதில் ஆஸ்திரியாவின் தலைநகர் வியன்னாவிற்குச் சென்று தங்கினார்; அங்குதான் கல்வி கற்றார்.

மருத்துவம் படிக்க அவ்வளவாக விரும்பவில்லை. மாறாக மனிதர்கள் உளத்தில் புதைந்துள்ள இரகசியத்தைத் தெரிந்து கொள்வதிலேயே அவருடைய விருப்பம் சென்று கொண்டிருந்தது. அவ்விருப்பத்தை நிறைவேற்றிக் கொள்வதற்தாக ஆராய்ச்சிகளை அடிக்கடி நடத்தி வந்தார். 15 ஆண்டுகளில் மனித மனத்தின் அடியில் புதைந்துள்ள உண்மைகளைக் கண்டறிய முற்பட்டார். ஃப்ராய்டின் இந்த வளர்ச்சிக்கு கெதெ (Goethe), காரல் புளுக், குஸ்தாவ் வெச்னர் (Gustay Fechner) முதலான உளவியல் அறிஞர்களின் கருத்துகள் அடிப்படையாக அமைந்தன.

19 ஆம் நூற்றாண்டின் இறுதியில் உடற்கூறு அறிவியலும் (Biological science) உளவியலும் ஒன்றோடொன்று தொடர்பு கொண்டு வேகமாக வளர்ந்தன. ஃப்ராய்டைக் கவர்ந்த அறிவியல் பல. அவை, பௌதீக (Physics) இயலை அடிப்படையாகக் கொண்டிருந்தன. இச்சூழ்நிலையில் ஹேம் ஹொல்டஸ் (Helmholtz) புது பௌதீக விதியைக் கண்டுபிடித்தார். இந்த விதி ஃப்ராய்டை மருத்துவக் கல்லூரியில் சேர ஊக்குவித்தது.

எர்னால்டு புளுக்கின் கருத்தை ஏற்றுக் கொண்டதன் விளைவால் 20 ஆண்டுகள் கடந்து இயங்கும் ஆளுமையை (Dynamic personality) ஃப்ராய்ட் கண்டறிய முடிந்தது.

பைபிள் படிக்கும் தன் விருப்பம் ஃப்ராய்ட்டை ஈர்த்தது. அவ்விருப்பம் இறுதியில் அவரை இத்துறையில் ஈடுபடச் செய்தது. ஆனால் வயது முதிர்ந்த காலத்தில் பைபிளுக்கு முரணான கருத்தைச் சொன்னார் என்ற நிலையும் காணப்படுகிறது.

'இயங்கும் ஆளுமை என்பது ஆளுமை(Personality)க்குள் காணப்படும் சக்தியின் மாற்றங்களும் மாறுதல்களுமாகும்' என்பது, ஃப்ராய்ட் கண்டுபிடித்த வரலாற்றில் சிக்கலானதும் உண்மையான உண்மையுமாகும். மனக்கோளாறுகளைப் போக்க, ஃப்ராய்ட் இரண்டு வழிகளைக் கண்டுபிடித்தார். அவை மின்சார முறை, உறங்க வைக்கும் முறை ஆகும்.

உறங்க வைக்கும் முறையிலும் உறங்க வைக்காமலேயே நினைப்பூட்டும் முறையிலும் (suggestion), வெற்றிகரமாக நோய் தீர்க்கப்பட்டது. உறங்கச் செய்யும் முறைகளில் நோய்களைக் குணப்படுத்துவது சில சமயம் நெறி தவறாக இருந்தது. இதிலும் சிக்கல்கள் இருப்பதாக ஃப்ராய்ட் உணர்ந்தார். அதன்படி, எல்லா நோயாளிகளையும் உறங்கவைக்க முடியவில்லை என்றும் தாம் விரும்பிய அளவுக்கு நோயாளிகளை ஆழமாக உறங்கவைக்க இயலவில்லை என்றும் உணர்ந்தார்.

இவை முதலான கருத்துகளை அடிப்படையாகக் கொண்டு பின்னர் வந்த உளவியல் அறிஞர்கள் கோட்பாடுகளை வகுத்தனர்.

### 1.5.5. ஆல்பர்ட் C.W. (1897 - 1968)

இவர் பல புதிய கருத்துகளைக் கூறி ஆளுமைக் கோட்பாட்டிற்கு வலுச்சேர்த்த உளவியல் அறிஞராவார். தனிமனிதனின் சூழ்நிலைகளுடன் பொருத்தப்பாடுகளை நிர்ணயிக்கும் உள, உடல் அமைப்புகள் தனிமனிதனிடம் ஒருங்கிணைந்து இருக்கும் நிலையை 'ஆளுமை' என்று வரையறுக்கிறார்.

இவரின் கருத்துகளின்படி மனிதாபிமான உளவியலில், மனித மனநல இருத்தல் நிலைசார் உளவியலில் அடங்கும். தற்கருத்து (self-concept) தன் முனைப்பு (proprium) என்னும் சொற்களை இவர் பயன்படுத்தினார். மேலும்,

- அடிப்படைப் பண்புகள் (Cardinal traits)
- வழிநிலைப் பண்புகள் (Secondary traits)

என்று இருவகைப் பண்புகள் காணப்படுகின்றன என்கிறார். இயல்புநிலை மனிதர்களின் பண்புகளுக்கும் உளக்கோளாறு நோயாளிகளின் பண்புகளுக்கும் இடையே சில வேறுபாடுகள் உள்ளன என்றும் கூறுகிறார்.

'இயல்பு நிலை' மனிதனிடத்தில், எதிர்த்து நிற்றல், மெய்நிலை உணர்தல், ஒருமைப்பாடு, சுயஅறிவு, வயதுக்கேற்ற சமாளிக்கும் திறன், கட்டுப்பாடு, பரந்த நோக்கு ஆகிய பண்புகள் காணப்படுகின்றன.

'உளக்கோளாறு' மனிதரிடத்தில், தவிர்த்தல், உண்மை மறுத்தல், பிளவுபட்ட ஆளுமை, உள்நோக்கு இல்லாமை, நிலைத்தல், உட்துடிப்பு, தடை செய்யப்பட்ட புலன்காட்சி ஆகிய பண்புகள் காணப்படுகின்றன என்கிறார்.

### 1.5.6 எரிக் பிரோம் (1900 - 1980)

மனிதவியலாரும் சமூக அறிவியலாரும் பண்பாட்டுச் சூழ்நிலை, மரபு நிலை ஆகிய காரணிகள் தனிமனிதனின் நடத்தையைப் பெருமளவு முடிவு செய்கின்றன என்கின்றனர். இவர் தம்முடைய உளப்பகுப்புக் கொள்கையில் சமூக - காரணிக்கு முதலிடம் கொடுத்தார். பிரோமின் ஆளுமைக் கோட்பாடு, ஃப்ராய்டின் கொள்கைகளை ஒத்திருந்தாலும் சில கருத்துகளில் பிரோம் வேறுபடுகிறார்.

மனிதன் இயற்கையில் பண்படா இயல்பு கொண்டவன் என்று ஃப்ராய்ட் கூறியதை, பிரோம் இயற்கைத் தேவைகளை எந்த அளவுக்கு நிறைவேற்றிக்கொள்ள மனிதனுக்குச் சமூகம் உதவுகிறதோ, அந்த அளவுக்கு அவன் நல்லவனாக இருக்கிறான் என்கிறார். பாலுந்துதல் பற்றி ஃப்ராய்ட் கூறுவதைப் பிரோம் முழுமையாக ஏற்றுக் கொள்ளவில்லை.

### 1.6. உளவியல் - வரையறைகள்

'உளவியல் என்பது நடத்தையின் காரணங்கள், நிபந்தனைகள், நடக்கும் முறைகள் ஆகியவை பற்றிப் படிப்பதாகும்' (வில்லியம் மக்டுகல்).

'உளவியல் என்பது மனித நடத்தைகள் மற்றும் மனித உறவுகள் பற்றி படிப்பதாகும்' (குரோ மற்றும் குரோ).

'ஓர் உயிரி சுற்றுப்புறத்துடன் கொண்டு வெளியிடும் நடத்தைகள் பற்றி படிப்பது உளவியல்' (கோஃப்கா).

'உளவியல் என்பது நடத்தை மற்றும் மனித செயல் முறை பற்றிய அறிவுசார் படிப்பு' (பெல்டுமேன்).

இவர்களின் விளக்கங்களையும் வரையறைகளையும் கொண்டு தெளியும்போது உளவியல் என்பது உயிரினங்களின் நடத்தையை, அனுபவங்களை விவரிக்கும் அறிவியல்; நடத்தை என்பது உடலில் உளச் செயல்களின் ஒருங்கிணைந்த அனுபவங்கள் என வரையறுக்கமுடிகிறது.

**1.7. உளவியல் பிரிவுகள்**

உளவியல் துறையைப் பல வகைகளாகப் பிரித்து ஆராய்வது என்பது கற்பதற்கும் பயன்படுத்துவதற்கும் ஏற்படுத்தப்பட்ட ஒரு எளிமையான, தற்காலிக ஏற்பாடுதான். அவற்றுள் சில உளவியல் பிரிவுகள்.

"பொது உளவியல், குழந்தை உளவியல், நெறிபிறழ் உளவியல், உடற்கூறு உளவியல், ஒப்புமுறை உளவியல், சமூக உளவியல், நடைமுறை உளவியல், மருத்துவ உளவியல், ஆற்றுப்படுத்தும் உளவியல், கல்வி உளவியல், பள்ளி உளவியல், தொழிற்சாலை உளவியல், சுற்றுச்சூழல் உளவியல், பரிசோதனை உளவியல், நல்வழி உளவியல், ஆளுமை உளவியல், வளர்ச்சி உளவியல், உயிரி உளவியல், இளையோர் உளவியல், கெஸ்டால்ட் உளவியல்"[17] என வகைப்படுத்தப்படுகின்றன.

**1.7.1. பொது உளவியல்**

இது எல்லா உளவியல் பிரிவுகளுக்கும் அடிப்படையான, பொதுவான கருத்துகள் பற்றியது. சாதாரண மனிதர்களின் முதிர்ச்சியடைந்த நடத்தையைப் பொது உளவியல் விவரிக்கிறது. இப்பிரிவில் புலன்காட்சி, மனவளர்ச்சி, மனஎழுச்சி, ஊக்குவித்தல், கற்றல், சிந்தித்தல் முதலானவையும் அடங்கும். தனியாள் வேற்றுமைகளின் தன்மை, அவற்றின் அளவு, அவை தோன்றக் காரணங்கள் முதலானவற்றையும் இப்பிரிவு ஆராய்கிறது.

### 1.7.2 குழந்தை உளவியல்

குழந்தையின் வளர்ச்சி, அவ்வளர்ச்சியில் மரபுநிலை, சூழ்நிலை ஆகியவற்றின் பங்கு, குழந்தைகளிடம் காணப்படும் திறன்கள், அவற்றை அளவிடும் முறைகள், குழந்தை தனது சூழ்நிலையுடன் இணைத்துப் பொருத்தப்பாட்டை அடையும் வகைகள் முதலானவற்றை ஆராயும் மனவியல் பிரிவு குழந்தை உளவியல் ஆகும். குழவி மனவியல், குமரப்பருவ மனவியல் ஆகியனவும் இன்று பிரிந்து வளர்ந்துள்ளன.

### 1.7.3. நெறிபிறழ் உளவியல்

சமநிலையினின்று பிறழ்ந்து நரம்பு நோய்கள், உளத்தடுமாற்றங்கள் போன்ற கோளாறுகளால் பீடிக்கப்பட்ட மனிதர்களின் அசாதாரண நடத்தைகளை விவரிக்கும் பிரிவு, நெறிபிறழ் உளவியலாகும். இப்பிரிவு மனமாற்றத்துடன் இணைந்ததாகும். ஃப்ராய்ட் உளப்பகுப்பாய்வு இதன் வளர்ச்சிக்குப் பெரிதும் உதவுகிறது.

### 1.7.4. உடற்கூறு உளவியல்

இப்பிரிவில் மனச்செயல்முறைகள் உடலியல் அடிப்படைகளில் ஆராயப்படுகின்றன. நரம்புமண்டலம், புலன்கள், சுரப்பிகள் முதலானவற்றின் அமைப்பு - செயல்பாடு ஆகியன இப்பிரிவில் இடம்பெறும்.

### 1.7.5. ஒப்புமுறை உளவியல்

மனிதனின் நடத்தையுடன் பிற விலங்கினங்களின் நடத்தைகளை ஒப்பிட்டு அவற்றினுள் காணப்படும் தொடர்புகளையும் வேறுபாடுகளையும் அறியும் பிரிவே ஒப்பீட்டு உளவியலாகும். மனிதர்களைக் கொண்டு நடத்த முடியாத அல்லது நடத்தக் கூடாத சோதனைகளை, விலங்குகளைக் கொண்டு நடத்திட இப்பிரிவு வழிகாட்டுகிறது.

### 1.7.6. சமூக உளவியல்

ஒரு குழுவில் உறுப்பினராக உள்ள தனி மனிதனின் நடத்தை பற்றியும் குழுக்களில் காணப்படும் தொடர்புகள் பற்றியும் இப்பிரிவு விவரிக்கிறது. குழுக்களில் பரவியுள்ள மனப்பான்மைகள், சார்பெண்ணங்கள் போன்றவையும் சமூக மனவியல் ஆய்வுக்குரியனவாகும்.

### 1.7.7. நடைமுறை உளவியல்

இப்பிரிவில் தொழில் துறை உளவியல், விளம்பரம் பற்றிய உளவியல், கல்வி உளவியல் போன்றவை அடங்கியுள்ளன. இதன் பயனாக வாழ்க்கைத் துறைகள் பெரும் பயன் பெற்றுள்ளன. மையர்ஸ் போன்றோர் தொழில் உளவியல் வளர்ச்சிக்கு உதவியுள்ளனர். அது மேலும் பரந்து விரிந்து தனித்த துறையாக உருப்பெற்று வருகிறது.

### 1.8. உளவியல் கோட்பாடுகள்

மனிதனின் இயல்பும் நடத்தை முறைகளும் உளவியல் அறிஞர்களால் பல கோணங்களிலிருந்து ஆராயப்படுகின்றன. அதனால் அறிஞர்களுக்கிடையே அடிப்படைக் கருத்து வேற்றுமைகள் தோன்றுகின்றன. அவற்றின் விளைவாகப் பல மனவியல் கோட்பாடுகள் தோன்றின. அவற்றுள் சில கோட்பாடுகள் இலக்கியத் திறனாய்வில் பயன்படுத்தப்படுகின்றன. அவை, உளப்பகுப்புக் கோட்பாடு (Psycho analysis), ஹார்மிகக் கொள்கை (Harmism), இரக்க உணர்வுக் கோட்பாடு (Sympathy), நெறிபிறழ்க் கோட்பாடு (Abnormal psychology), புதிய ப்ராய்ட் கோட்பாடு (Neo Fruedian theories) என்பனவாகும்.

### 1.8.1. உளப்பகுப்புக் கோட்பாடு (Psycho analysis)

இது மனத்திற்குள் உறைந்திருக்கும் உண்மையைக் கண்டறிவது. நீரில் மிதக்கும் ஒரு பனிக்கட்டியைப்போல மனித உளத்தின் கனமும் அடர்த்தியும் அதன் வெளிப்பரப்பிற்கு அடிக்கடி எழும் சூழ்நிலைகளாக மாற்றக் கூடிய

வகையில் அனைத்தும் பாலுணர்வினாலேயே உந்தப்படுகின்றன. மனிதனின் உணர்வு உந்துதல்கள் அனைத்திற்கும் அடிப்படையாய் விளங்குவன. அவற்றுள், இன்ப விழைவுணர்வும் பிறரைத் தாங்கும் உணர்வும் முதலானவை ஆகும்.

உணர்வு நாட்டங்கள் முனைப்பான நிலைக்குச் செல்லும் பொழுது நெகிழ்ச்சியுடையனவாக மாறுகின்றன. மனித நடத்தையைக் குறித்து மனிதனின் கண்ணோட்டத்தை அறிந்துகொள்ள இரண்டு வினாவினை எழுப்பி அதைத் தன் கொள்கையாகக் கொண்டார் ஃப்ராய்ட். மனித நடத்தையில் இயங்கும் சக்தி எது? அவ்வியக்கத்தைக் கட்டுப்படுத்தும் விதிகள் எவை? என்பன அவ்வினாக்கள் ஆகும்.

இதனை அடிப்படையாகக் கொண்டு மனித நடவடிக்கைளைப் பற்றிய ஆராய்ச்சியில் மனிதனின் சுயவுணர்வு கடந்த நிலையை (unconscious) நுணுக்கமாக ஆராயும் முறையைக் கண்டறிந்தார். இம்முறையை உளநிலைப் பகுப்பாய்வு (Psychoanalysis) என்று ஃப்ராய்ட் குறிப்பிடுகிறார்.

லிபிடோ (libido) சக்திப் பிரவாகத்தை, உளவியல், குறிப்பாக மன அலசல், குழந்தை வளர்ச்சியின் மூன்று பருவங்கள் என்று குறிப்பிடுகின்றது. அண்மைக்கால ஆய்வுகள் லிபிடோ வளர்ச்சியின் ஒரு பருவத்தின் மீது கவனத்தை ஈர்க்கிறது. அது சுய எழுச்சி(பருவம்)யினூடாகப் பொருள் விருப்பம் (object love) வகைப்பட்ட விருப்பத்திற்குச் செல்கிறது. இந்த நிலைக்குக் (stage) கொடுக்கப்பட்ட பெயர் சுயமோகம் (அல்லது) தற்காத்தல் என்பதாகும்.

மனித நடத்தையில் அடிப்படையான இரு ஊக்குவிக்கும் திறன்கள் உண்டு என ஃப்ராய்ட் கருதுகிறார். அவற்றை ஆக்கச் செயல்களில் ஈடுபடத் தூண்டும் ‘வாழ்வுத் தூண்டல்கள்’ (life urges) எனவும் அழிவுச் செயல்களில் ஈடுபடத் தூண்டும் ‘இறப்புத் தூண்டல்கள்’ (death urges) எனவும் பிரித்துக்காட்டினார். வாழ்வுத் திறனுக்கு இராஸ் (Eros) எனவும்,

இறப்புத்திறனுக்குத் தானாடொஸ் (Thanatos) எனவும் கிரேக்கக் காப்பியத்தைத் தழுவிப் பெயரிட்டார் என்பதை அறியலாம்.

ஃப்ராய்டின் உளப்பகுப்பியல் கொள்கைகளில் தன்முனைப்பு உள்துடிப்புகள் (Ego impulses) சிறப்புற்ற பாங்கினையே கொள்கின்றன. பால் உந்துதல்களும் (Sex Drives) ஆணை உந்துதல்களும் ‘பெருமளவில்’ சிறப்பிடம் பெறுகின்றன. உளப்பகுப்பியலாளர்களின் கண்ணோட்டத்தில் அன்பும், வெறுப்பும் ஒன்றோடு மற்றொன்று மாறுபட்டிருக்க வேண்டுவதன்று.

சான்றாக ஒரு செய்தியை உற்றுநோக்கலாம். காதல் புரிதலில் அடிக்கடிப் பிணக்குகள் நேர்தல் உண்டு. காதலிக்கப்படும் ஆண், பெண் பன்முறை துன்புறுதலும் உண்டு. இத்தகைய முறையில் தம்முன் போரிடும் ஊக்கிகளும் மனப்பான்மைகளும் உடனுறைந்து உளப்பகுப்பியலில் மிகுந்து காணப்படும். உடலில் தோற்றுவிக்கப்படும் திறன் பல்வேறு வாழ்க்கைத் தூண்டல்களில் செயல்படுகின்றன என ஊக்குவித்தல் பற்றி ஃப்ராய்டின் விளக்கம் துணிவு கொள்கிறது. திறன் மிக்க இவ்வுந்துதல்கள் விறைப்பினைத் தோற்றுவிக்கின்றன. பால் திறனால் தோற்றுவிக்கப்படும் விறைப்பு, காதற்செயல்களில் ஈடுபடுவதில் சமூகம் பல முட்டுக்கட்டைகளை இடுவதால் இயல்பாக நேரடி முறையில் பாலுந்துதிறன் வெளியிடப்பெறுவது தடை செய்யப்படுகிறது. இதனால் பால் திறன் பெருமளவில் தேக்கி நிறுத்தப்படுகிறது.

குவித்துள்ள விறைப்பை வெளியிடுதல், விறைப்பைக் குறைக்கும் நரம்பு நோய் அறிகுறிகள், பிறவழிகளால் மாற்றிக்கொள்ளப்படலாம். கவிதை, சமயம், இசை, கலை, பணி, கடுமையான உடற்பயிற்சி ஆகியவற்றில் ஈடுபடுதல் பாற்புடமிடுதலுக்குப் பயன்படும் சில எளிய முறைகள் ஆகும். இவற்றைப் போன்றே அடைப்பட்டுள்ள எதிர்ப்புத் திறனும் ஆணைத்திறனும் வெளியிடப்படுகின்றன. தம் பகைவரிடம் இயல்பாகக் கொள்ளும் ஆணை, தோட்டப்பணி செய்தல், விறகு வெட்டுதல், வேட்டையாடுதல் என்பவற்றில் அவர் ஈடுபடுவதன் மூலம் அது புடமிடப்படுகிறது எனலாம்.

மனிதனிடத்தில் மூன்றுவகைப் பசிகள் - உந்துதல்கள் உள்ளன. அவை வயிற்றுப் பசி, பாலியல் பசி, பணப்பசி என்பன. இவற்றை அடைய முயலும்பொழுது உண்டாகும் வெற்றி தோல்விகளும் எதிர்பார்ப்புகளும் ஏமாற்றங்களும் மனிதனுடைய மனதைப் பெரிதும் பாதிக்கின்றன. போட்டி, பூசல், போர் முதலியன சாவியல் இயல்பூக்கத்தால் உந்தப்படுகின்றன.

தான் இன்பம் எனக் கருதுவதை அடைய மனிதன் கொள்ளும் ஆசையின் பெருக்கமும் அம்முயற்சியில் உண்டாகும் தோல்வியும் மனமுறிவை (frustration) உண்டாக்குகின்றன. இதனை ஈடு செய்யுமுகமாக, தன் ஆற்றல் அனைத்தையும் வேறு திசைகளில் மனிதன் திருப்பிவிடுகிறான். திசை திருப்பலின் - மடைமாற்றலின் - ஒருவகை வெளிப்பாடே கலையாக முகிழ்க்கிறது. தன் மனமுறிவைக் கலையாக வெளிப்படுத்த இயலாதபொழுது, அம்மனிதன் மனக் கோளாறினால் பாதிக்கப்படுகிறான்; பித்தனாகிறான்.

உலகில் சிறப்புமிக்கனவாகப் போற்றப்படும் கவிதை (இலக்கியம்), இசை, நாட்டியம், ஓவியம், சிற்பம் முதலிய அழகுக் கலைகள் யாவுமே, மனமுறிவின் வேற்றுருவங்களாகும் என்பது ஃபிராய்டின் சித்தாந்தமாகும்.

ஃப்ராய்டின் கருத்துப்படி உளம் மூன்று நிலைகளைக் கொண்டது என்கிறார். இதனை நனவு உணர்வின் நிலைகள் (Level of consciousness) என்றும் கூறுவர்.

- ஆழ் நனவு நிலை (subconscious)
- நனவிலி நிலை (unconscious)
- நனவு நிலை (conscious)

என்று மூன்று நிலைகளாக அவர் வகுக்கின்றார்.

#### 1.8.1.1. ஆழ் நனவு நிலை

இது நினைவுகளையும் விருப்பங்களையும் கொண்டு அமையும் பகுதியாகும். இந்நிலையில் மனதின் நினைவுகளும் விருப்பங்களும் அவ்வேளையில் நனவு நிலையில் இல்லாதிருப்பினும் அவற்றை எளிதில் நினைவுகூர இயலும்.

#### 1.8.1.2. நனவிலி நிலை

தனி மனிதனின் கட்டுப்பாட்டிற்கு உட்படாதனவாய் அடியில் சென்ற எண்ணங்கள், மனவெழுச்சிகள், உள்துடிப்புகள் என்பன தேக்கி வைக்கப்பட்டிருக்கும் உட்பகுதி நனவிலி நிலையாகும்.

#### 1.8.1.3. நனவு நிலை

ஒரு குறிப்பிட்ட சூழலில் (நேரத்தில்) ஒரு மனிதன் உணரும் உள நிகழ்வுகளும் நினைவுகளும் நனவுநிலை ஆகும். நனவிலி உளம் உறங்குவது இல்லை. அவை பிற நிலைகளில் உள்ள தெளிவான பொருட்களின் சேர்க்கையையும் ஓட்டத்தையும் பெருமளவில் தாக்குகின்றன.

### 1.8.2. இலக்கியத்தில் உளப்பகுப்புத் திறனாய்வு

இதை உளவியல் திறனாய்வின் ஒரு பகுதியாகக் கருதலாம். இலக்கியத்தில் உளப்பகுப்புத் திறனாய்வு நான்கு முறைகளை உள்ளடக்கியது. அவை :

- படைப்பாளியைத் திறனாய்வு செய்தல்,
- படைப்புப் படிமுறையை ஆய்வு செய்தல்,
- பாத்திரங்களைப் பகுப்பாய்வு செய்தல்,
- வாசகர்களைப் பகுப்பாய்வு செய்தல்

என வகைப்படுத்தலாம்.

இந்நான்கையும் உளப்பகுப்பாய்வு தகவமைத்துக் கொள்கிறது. படைப்பாளியைத் திறனாய்வு செய்வதில் நரம்பு நோயாளிக்கு

இணையாகப் படைப்பாளி வைக்கப்படுகிறான். நோயாளி பேச்சைக் கொண்டு நோய்க்குறி மூலம் காண்பதுபோலப் படைப்புகள் அணுகப்படுகின்றன. கனவு உருவாக்கமும் படைப்புத் தொழிலும் இணைநிலையானவை என்கிற கருத்தாக்கம் மையமாக உள்ளது. படைப்புப் படிமுறையை ஆய்வு செய்தல் என்பது கனவுப் பகுப்பாய்வுக்கு இணையானதாகும். இந்த அணுகுமுறையில் காட்சிப் படிமங்கள் முதலிடம் வகுக்கின்றன. மூன்று கனவுத் தொழில்களான உறைவு, இடப்பெயர்வு, குறியீட்டாக்கம் அடிப்படையில் படைப்புகளை ஆய்கின்ற முறை இதற்கு அடிப்படை. மூன்றாவதான பாத்திரப் படைப்புத் திறனாய்வு என்பது படைப்பில் உள்ள பாத்திரப் படைப்பை ஒரு தனி மனிதன் ஆய்வது போல் அணுகி, உளப் பண்புகளை வெளிக்கொணர்கின்ற முறையாகும். மேற்கூறியவற்றில் முதல் வகையான படைப்பாளியைப் படைப்புக் கொண்டு ஆய்வதும் ஆளுமைப் பண்பை நோக்கமாகக் கொண்டுள்ளது. இந்த வகையில் பாத்திரங்கள் முதன்மை வகிக்கின்றன. கடைசியாக, வாசகர் பற்றிய ஆய்வு. இது வாசகன் மீது படைப்புப் பாத்திரத்தை மையப்படுத்துகின்றது. இதில் படைப்பாளி வழி மற்றும் படைப்புவழி திறனாய்வு அணுகுமுறைகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

### 1.8.3. ஹார்மிக் கொள்கை (Harmism)

ஹார்மிக் கொள்கையைத் தோற்றுவித்தவர் வில்லியம் மக்டுகல் என்னும் ஆங்கிலேயர் ஆவார். “ஹார்மிக்கின் அடிப்படைக் கருத்து மனிதனிடம் ஓர் உளச்சக்தி உண்டு. அச்சக்தி தனிப்பட்ட இயக்கங்கள் கொண்ட இயல்பூக்கங்களின் வழியாக நிறைவு பெறுகின்றது என்பதாகும். இக்கருத்து உளப்பகுபாட்டின் கருத்துக்கு ஒத்துள்ளது. இச்சக்திக்கு ஃப்ராய்ட் ‘லிபிடோ’ என்று பெயரிட்டார். மக்டுகலோ ‘ஹார்ம்’ என்று பெயரிட்டார். அதன் காரணமாக அவருடைய உளவியல் அமைப்பு ஹார்மீகம் என்று அழைக்கப்பட்டது. மனிதனின் எல்லா நடத்தைகளையும் இயல்பூக்கங்களே ஆக்குவிக்கின்றன என்று மக்டுகல் குறித்தார். ஃபிராய்ட் குறித்தது போன்று

மனிதன் தனது நடத்தையை ஒரு தேவையை(விடாய்)க்கொண்டோ ஒரே ஒரு இயல்பூக்கத்தைக் கொண்டோ மக்டுகல் விளக்கவில்லை. ஒரு மனிதனிடம் அடிப்படையாக அச்சம், சினம், பால், அன்பு, ஒன்றுபட்டு வாழ்தல் முதலான உணர்வுகளின் அடிப்படையில் மூன்று பிரிவாகப் பிரித்துப் பின் பதினேழு இயல்பூக்கங்கள் உள்ளன எனக் குறித்துள்ளார்”[18]. அவற்றை,

- புலவுணர்வு - Perception
- நடத்தை - Behaviour
- உணர்ச்சி - Emotion

என அடிப்படையில் மூன்றாகப் பிரித்துள்ளார். மேலும், பதினேழு இயல்பூக்கங்களைப் பின்வருமாறு தொகுத்தார். அவை,

- பசி (பசிவூக்கம்) - Hunger
- குறிப்பிட்ட பொருளினை நிராகரித்தல் (நிராகரிப்பூக்கம்) - Rejection of particular substance
- ஆர்வம் (ஆய்வூக்கம்) - Curiosity
- தப்பித்தல் (ஒதுக்கூக்கம்) - Escape
- சினம் (போரூக்கம்) - Pugnacity
- காமம் (பாலூக்கம்) - Sex
- தாய் தந்தை உள்ளுணர்வு (மகவூக்கம்) - Maternal / paternal instinct
- கூடி வாழ்தல் (கூட்டூக்கம்) - Gregariousness
- சுயதேவை (தன்னெடுப்பு) - Self – assertion
- சமர்ப்பிப்பு - Submission
- கட்டூக்கம் - Construction
- திரட்டூக்கம் - Acquisition
- அழுதல் - Crying out / Appeal

- *சிரித்தல் (மகிழ்ச்சி)* - Laugh
- *பாதுகாத்தல்* - Conform
- *ஓய்வு (ஓய்வூக்கம்)* - Rest / sleep
- *இடம் பெயர்தல்* - Migration

*என்பனவாகும்.*

*தற்காலத்தில் உளவியலாளர்களில் பெரும்பாலோர் கீழ்த்தர, உயர்வானவையிலிருப்பது போன்று ஊக்கம்* (Motivation), *அச்சம், சினம் போன்ற மெய்ப்பாடுகளும் மனிதனிடத்து உள்ளன என்று கருதுகிறார்கள். ஊக்கிக்கு அடிப்படையாகப் பல தேவைகள் உள்ளன. அவை பசி, தாகம், தூக்கம், கழிவு, பால் எனப்படும். இவை எல்லாம் உயிர்வாழ உதவும் உடல்சார் தேவைகள் ஆகும்.*

*பால் தேவை, மனிதனின் இனவிருத்திக்காக அமைந்துள்ளது. இந்த உடல்சார் தேவைகளைப்* (Physiological needs) *பூர்த்தி செய்வது மிகவும் அவசியம். இவை பிறப்பால் அமைகின்றன. இவை சூழ்நிலையின் உதவியால் பல்வேறு வகையில் பூர்த்தி செய்யப்படுகின்றன. குழந்தை வளர வளரச் சூழ்நிலைத் தொடர்பு வளர வளர, உடல்சார் விடாய்கள் பூர்த்தி செய்வதற்குத்தக உளசார் விடாய்கள்* (Physiological needs) *ஒருவரிடம் தோன்றுகின்றன. இவை முடிவில் மனிதரிடத்து உடல்சார் தேவைகளைவிட முக்கியமாக அமைகின்றன.*

*மதிப்புப்பெறல்* (Recognition), *கூடிவாழ்தல்* (Belongings), *அன்பு* (Affection), *வெற்றிபெறல்* (Achievement) *முதலான உளச்சார் விடாய்கள் மனிதனிடத்து மிகவும் முக்கியமாக அமைகின்றன. உடல்சார் விடாய்கள் பூர்த்தி அடையாத நிலையில் ஒருவருக்கு உடல் சேதம் ஏற்பட்டு முடிவில் மரணம் ஏற்படுகிறது. உளச்சார் விடாய்கள் பூர்த்தி அடையாத நிலையில் உடல் உளக் கோளாறுகள்* (Psychosomatic Disorders) *ஏற்படுகின்றன. உளக்கோளாறுகளினால் தோன்றும் உள நோய்களில் சமூக விரோதச் செயல்களில் ஈடுபடும் போக்கும் உண்டாகிறது.*

#### 1.8.3.1. போரூக்கம்

மனித இனம் வளர்ச்சி பெறவும் தன்னைத் தற்காத்துக்கொள்ளவும் மேற்கொள்ளும் முயற்சியாகத் தோன்றுவது போரூக்கமாகும். இது காடுகளில் விலங்குகளுடன் விலங்காக இருந்த ஆதிகால மக்களிடமிருந்து தோற்றம் பெற்றது. பண்டைய காலம் தொட்டு நடைபெற்ற பல போர்கள் போரூக்கத்தால் ஏற்படுபவை. பணம், பெண், நிலம் தொடர்பான உரிமை மற்றும் வேட்கைக்கு இடையூறு - நாட்டத்திற்கு இடையூறு ஏற்பட்டால் இவ்வூக்கம் தூண்டப்படுகிறது என்று உளவியலாளர் கூறுகின்றனர். மக்டுகலின் இயல்பூக்கத்தில் போரூக்கமும் ஒன்று. இவ்வூக்கம் சங்கப் பாடலில் இடம் பெற்றுள்ளது.

> ஒருவனை ஒருவன் அடுதலும் தொலைதலும்
> புதுவது அன்று; இவ் வுலகத்து இயற்கை[19]

எனும் இடைக்குன்றூர் கிழார் பாடிய பாடலின் வரிகளே அதற்குச் சான்றாக அமைகின்றது.

### 1.8.4. இரக்கவுணர்வுக் கோட்பாடு (Sympathy)

இரக்கம் என்பது இயல்பான மனிதமன உணர்வாகும். சமூகச் சூழ்நிலையால் துன்பங்களை அனுபவித்த மனிதனின் மறுவினைச் செயலாகவும் இவ்விரக்கவுணர்வு காணப்படுகின்றது. தனது கடந்த அனுபவங்களும் துன்பங்களும் ஒருவரிடம் தோன்ற அவர் தன்னை விடுவித்துக் கொள்ள விரும்புகிறார். இந்நிலையில் அவரை எதிர்ப்படும் மற்றவரும் அவரை ஒத்த சூழ்நிலையில் இருப்பதை அறியும்போது அவர்பால் இவருக்கு இரக்கவுணர்வு தோன்றுகிறது. இவ்விரக்கவுணர்வே பிறருக்காக எதையும் செய்யும் அன்பினைத் தோற்றுவிக்கின்றது.

சுமித் (Smith) என்பவர் தனது நூலில் “மனிதன் எவ்வளவுதான் தன்னலம் கருதுபவனாக வாழ்ந்தாலும் அவனிடமும் சில கொள்கைகள் காணப்படுகின்றன. பிறவியிலேயே உதவுதல் - பிறரை மகிழ்வித்தல்

முதலானவற்றிற்கு வித்துக்கள் இயற்கையாகக் காணப்படுகின்றன எனக் கூறுகின்றார். இவர் இரக்க உணர்வினை இரு தன்மையான அமைப்புகளாகப் பிரிக்கின்றார். முதலாவது உடனடி மறிவினையாகத் (Reflex) துலங்க வழி உண்டாக்கும் இரக்க உணர்வாகும். நம் எதிரே ஒருவர் துன்பப்படும்போது நாமும் நம் உடலை நெளிக்கின்றோம். இது பிறப்பால் வந்த மறிவினைச் செயலாக அமைகின்றது"[20] என உளவியலாளர் கூறுகின்றனர்.

### 1.8.5. நெறிபிறழ்க் கோட்பாடு (Abnormal Psychology)

நெறிபிறழ் உளவியல் குறித்துச் "சமநிலையினின்றும் பிறழ்ந்து நரம்பு நோய்கள் (Neuroses), உளத்தடுமாற்றங்கள் (Psychosis) போன்ற கோளாறுகளால் பிடிபட்ட மனிதர்களின் அசாதாரணமான நடத்தைகளை விவரிக்கும் பிரிவு, நெறிபிறழ் மனவியலாகும். இப்பிரிவு மனமருத்துவ இயலுடன் இணைந்ததாகும்"[21] என்று கி.நாகராஜன் கூறுகிறார்.

இவ்வகையான உளவியல் கோட்பாடுகள் இலக்கியத் திறனாய்வில் பயன்படுத்தப்படுகின்றன. இலக்கியங்களில் கூறப்படும் வாழ்வியல் உண்மைகளை அறிய இத்தகைய உளவியல் கருத்துகள் பயன்படுகின்றன. இதனால் மனித மனதில் ஏற்படும் சிக்கல்களையும் குழப்பங்களையும் அறிய வாய்ப்புகள் கிடைக்கின்றன. இதன் மூலம் நாம் வாழ்க்கைத் துன்பங்களுக்குரிய காரணங்களை அறிந்து, அவற்றைத் தீர்க்க முற்படலாம்.

### 1.8.6. புதிய ப்ராய்ட் கோட்பாடுகள் (Neo Freudian Theories)

உளப்பகுப்புக் கொள்கைக்கு ஓரளவு உட்பட்டும் அதேபோன்று ஃப்ராய்டின் கருத்துக்களை முழுமையாக ஏற்காதவர் பலரும் தங்களது ஆளுமைக் கொள்கைகளைக் குறிப்பிட்டுள்ளனர். இவர்களில் யூங் (Carl Jung) ஆட்லர் (Alfred Adler) இருவரும் மிக முக்கியமானவர்கள். இவர்களது கோட்பாடுகள் புதிய ப்ராய்ட் கோட்பாடுகள் என்றழைக்கப்படுகின்றன.

#### 1.8.6.1. ஆட்லரின் தனிநபர் உளவியல் (Adler's Individual Psychology)

*ஃப்ராய்டின் தொடக்ககால நண்பராயிருந்து பின் அவரோடு கருத்து வேறுபாடு கொண்டு பிரிந்தவர் ஆட்லர் ஆவார். ஒருவனது ஆளுமைத் தன்மையில் பாலுக்கத்தை விட ஆக்கிரமிப்பு அல்லது வலுவந்த ஊக்கத்தின்* (Aggression) *சக்தி, ஆளுமை வளர்ச்சியில் அடிப்படை இயல்பூக்கங்களை விடச் சமூகச் சக்திகளின் மிகுதியான செல்வாக்கு போன்றவற்றை ஆட்லர் வலியுறுத்துகிறார்.*

#### 1.8.6.2. தாழ்வுச் சிக்கல் (Inferiority Complex)

*தாழ்வுச் சிக்கல் என்ற கருத்தைத் தோற்றுவித்தவரும் இவரே. இவரது கருத்துப்படி ஒவ்வொருவரும் குழந்தையாக இருக்கும்போது, பிறரைச் சார்ந்தே இருக்க வேண்டிய தாழ்வுநிலையில் வாழ்க்கையைத் தொடங்குகின்றோம். அதாவது உண்ணல், உடுத்தல், உடல் இயக்கம் என அனைத்து வேலைகளுக்கும் சிறு குழந்தை பிறரை - குறிப்பாகத் தாயைச் சார்ந்திருக்கிறது. இவ்வாறு தான் தாழ்நிலையில் இருக்கின்றோம் என்று உணர்தலே ஒருவரை உயர்நிலையடைய முயல வைக்கிறது. இவ்வாறு முயலும்போது உண்ணல், உடுத்தல், உடல் இயக்கம் என அனைத்துச் செயல்களையும் தானே செய்யக் கற்கிறார். இது குடும்பத்தில் தொடங்கிப்பின் வெளியுலகச் சமூக வாழ்விலும் தொடர்கிறது. இவ்வாறு தனக்குத் தகுந்தவாறு தனித்தன்மையுடன் உயர்நிலையடைய முயலுதலையே ஒருவரது வாழ்க்கை முறை* (Lifestyle) *அல்லது பாணி என்று அழைக்கிறோம். இவ்வாறு உருவாகும் வாழ்க்கை முறை பொருத்தப்பாடு உடையதாகவோ, பொருத்தப்பாடற்றதாகவோ அமையலாம். வாழ்க்கை முறையை உருவாக்கிக் கொள்ளும்போது உலகைப் பற்றித் தான் ஏற்றுக்கொள்ளும் தவறான அல்லது சிதைவுற்ற பொய்யான எண்ணங்கள்தாம், பொருத்தப்பாடற்ற நடத்தைக்கு* (Maladaptive behaviour) *அடிப்படைக் காரணமாகும்.*

### 1.8.7.கார்ல் யூங் பகுப்பாய்வு உளவியல் (Carl Jung Analytical Psychology)

யூங் என்பவர் ஃப்ராய்டின் கருத்துக்களினின்று இரு முக்கிய நிலைகளில் வேறுபடுகிறார். ஃப்ராய்ட் போன்றே மனிதனது தன்மை பற்றி யூங் சிறப்பான கருத்தைக் கொண்டிருந்தார். மனிதனது நடத்தை அவனது இயல்பூக்கங்களை நிறைவு செய்வதற்கு மட்டும் எழுந்தது இல்லை எனவும், தன்னுள் காணப்படும் பல்வேறு ஆக்கச்சக்திகளை வளர்க்கவும் மனிதன் முயல்கிறான் எனவும் யூங் கருதினார்.

ஒவ்வொருவரது நடத்தைக்குப் பின்னும் அவனது தனிப்பட்ட நனவிலி மனம் (Personal unconscious) இருத்தலுடன் மனித இனத்துக்குப் பொதுவான தொகுப்பு நனவிலி உள்ளத்தின் (Collective unconscious) செல்வாக்கும் இருத்தலை யூங் சுட்டிக் காட்டுகின்றார். இதில் மனித இனத்தின் பண்டைய நினைவுகளும் நடத்தை முறைகளும் உள் ஒடுங்கியுள்ளன. மனித மனத்தின் நான்கு செயல்களான சிந்தித்தல் (Thinking), உணர்தல் (Sensing), உணர்ச்சி கொள்ளுதல் (Feeling) மற்றும் உள்ளுணர்வு (Intuition) ஆகியவை பற்றியும் அவை எவ்வாறு நடைபெறுகின்றன என்பதைப் பொறுத்தும் மனித ஆளுமை வளர்ச்சி தீர்மானிக்கப்படுகிறது என்று யூங் விளக்கியுள்ளார். மனித ஆளுமை வகைப்பாடுகளான அகமுகத்தான் புறமுகத்தான் குறித்து விளக்கியவரும் இவரே ஆவார்.

### 1.9. இலக்கியமும் உளவியலும்

இலக்கியம், படைப்பாளர்களின் உளத்தில் தோன்றும் கருத்துகளின் உருவாக்கம். எனவே படைப்பாளரின் உளவியலும், அவரால் படைக்கப்பெறும் கதை மாந்தர்களின் உளவியலும் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டிய தேவை கற்பவருக்கு ஏற்படுகிறது.

வாழ்க்கை நடப்புகளை அடிப்படையாகக் கொண்டு இலக்கியம் படைக்கப்படுகிறது. ஆகையினால் வாழ்க்கையின் அமைப்புக் கூறான

உளவியல் சிந்தனை இலக்கிய உருவாக்கத்துக்கு உறுதுணையாக அமைகிறது.

மனவோட்டத்தின் பல்வேறு போக்குகளைச் சுற்றுச்சூழல் சிந்தனையுடன் பொருத்திக் கொண்டு இலக்கியத்தை உணர்த்திக் காட்ட விரும்பும் சிந்தனைக் கருத்துகளுடன் இணைத்து விளக்கம் காண முயன்றால் அரிய உண்மைகளை அறியமுடியும். அவ்வகையில் இலக்கிய ஆய்வுக்கு உளவியல் அறிவு நல்ல துணையாக அமைகிறது.

“உளவியல் வகுத்துக் காட்டும் மனித மனப்போக்குக்குப் பொருந்தாத இலக்கியப் படைப்புகள் உலக இயல்புக்கு மாறுபட்டதாகக் கருதப்படும். உண்மையான வாழ்வை உலக இயல்புக்குத் தக்கவாறு உருவாக்கிக் காட்டும் இலக்கியமே சிறந்ததாக மதிக்கப்படும். இத்தகைய இலக்கியங்களை உளவியல் அறிவுடன் சிந்திப்பது பயனுள்ள அணுகுமுறை”[22] என்பது ஆய்வாளர் அ.நா. பெருமாள் அவர்களின் கருத்தாகும்.

அனைத்து மொழிகளின் இலக்கியங்களும் உளவியல் சிந்தனைக்கு இடம் வகுத்துத் தருகின்றன. அதுபோல் சங்க இலக்கியத்திலும் முழுமையான அளவுக்கு உளவியல் சிந்தனைக் கூறுகள் காணப்படுகின்றன.

“சங்க இலக்கியத்திற்குப் பிறிதொரு பெயர் சூட்டுக என்று கேட்டால் தயங்காமல் உளவியல் இலக்கியம் எனக் குறிப்பிடலாம். அக இலக்கியங்களில் நூறு விழுக்காடும் புற இலக்கியங்களில் எழுபத்தைந்து விழுக்காடும் உளவியல் அடிப்படையில் உருக்கொண்டவையே ஆகும். ஏதேனும் ஒரு மனநிலைமையை மட்டுமோ அல்லது அம்மனநிலை விளைவுக்குரிய சூழலை மட்டுமோ அவை பாடுபொருளாகக் கொண்டவை”[23] என்று கூறப்படுகின்றது.

இலக்கியத்தில் கற்பனைக்கு இடம் உண்டு. அவை உளவியல் போக்குக்குப் பொருந்தும் பாங்கில் அமைவது சிறப்பாகும். அன்றேல் வெறும் கற்பனையாகிச் சிறப்பிழந்து விடுகிறது.

மேலும் உளவியல் என்பது ஒரு தனித்துறையாகவும், இலக்கியம் என்பது ஒரு தனித்துறையாகவும் உள்ளன. எனவே உளவியல் அறிவினை அடிப்படையாகக் கொண்டு இலக்கியத்தினை ஆராயலாம். அத்தகைய ஆராய்ச்சிக்கு மேலைநாட்டு அறிஞர்களின் உளவியல் கருத்துகள் வழிவகுக்கின்றன. எனவே நம் இலக்கிய மரபுக்கு ஏற்றாற் போல உளவியலைப் பின்பற்றி ஆய்வு மேற்கொள்ள வேண்டியது அவசியமாகும்.

### 1.10. இலக்கியத்தில் உளவியல் அணுகுமுறை

இலக்கியத்தைச் சரியாக விளங்கிக் கொள்வதற்கு உளவியல் அணுகுமுறை தேவைப்படுகிறது. மொழியில்லாமல் இலக்கியம் இல்லை. ஆகவே, மொழியியல் நோக்கில் இலக்கியத்தை ஆய்வது என்பது இன்றியமையாத ஓர் ஆய்வாக வளர்ந்து விட்டது. அதைப் போல மனித மனம் என்ற ஒன்று இல்லாமல் இலக்கியம் இல்லை. மனித மனத்தின் இயல்புகளைப் புரிந்து கொண்டால்தான் இலக்கியத்தை விளங்கிக் கொள்வதிலும் ஒரு முழுமை கிடைக்கும். மனித உளத்தின் வாழ்க்கை முறையைப் பகுத்துக் கூறும் ஓர் அறிவியலே உளவியல். ஒருவனது உளம் அவனுடைய செயல்களின் மூலம் உணர்ச்சிகளை வெளிப்படுத்துகிறது. எனவே செயலை அறிந்து ஆராய்வதன் வழி உளத்தை நேரடியாக அறியமுடியும். “உளத்தை நேரடியாக அறிவதற்கு உபகரணங்கள் மூலம் கணிக்கமுடியும். இங்ஙனமே இலக்கியங்கள் கவிஞனின் உளத்துள் சென்று உணர்வாக்கப்பட்டு, பின்னர் உணர்ச்சியாக மாற்றம் செய்யப்படுகிறது”[24] என்று வீ. ஆதிபராசக்தி கூறியுள்ள கருத்தும் உளவியல் அணுகுமுறை குறித்து விளக்குகின்றது.

இலக்கியங்களைப் பலவாறு அணுகலாம். அவற்றுள் உளவியல் முறையும் ஒன்று. எனவே, உளவியல் நோக்கில் இலக்கியத்தை “இயல்புநிலை, உணர்ச்சிநிலை, மயக்கநிலை, ஐயநிலை, கூட்டுநிலை, காலவளர்ச்சி நிலை, சமூக நிலை, சுற்றுச் சார்பு நிலை, உறவு நிலை போன்ற பலவித நிலைகளை அடிப்படையாகக் கொண்டு உளவியல் சிந்தனையில் இலக்கியத்தை அணுகலாம்”[25] என்கின்றார் அ. நா. பெருமாள்.

எனவே, இலக்கியத்தில் காட்டப்படும் வாழ்வியலின் உண்மைகளை அறியவும் இலக்கிய மாந்தர் மனதில் ஏற்படும் சிக்கல்களையும், குழப்பங்களையும் அறியவும் உளவியல் அணுகுமுறை இலக்கியத்தில் கையாளப்படுகிறது.

இலக்கிய மாந்தர், படைப்போர், படிப்போர் ஆகியோருக்கிடையில் உள்ள உளவியல் தொடர்பினை அறிதல் வேண்டும். பல்வேறு சூழ்நிலையில் பல்வேறு இயல்புடைய மாந்தர் இடம்பெற்று, செயல்படுவதில் உளவியல் எந்த அளவுக்கு இயல்பாகவும் இயல்பு மீறியும் அமைகிறது என்பதைக் கண்டறிய வேண்டும். முரண்பட்டு, மாந்தர் பொருந்தாச் செயல்களில் ஈடுபடலாம்; அதன் காரணத்தை அறிய உளவியல் உத்தி தேவைப்படுகின்றது.

படைப்போரின் நோக்கும் போக்கும் படிப்போரின் எண்ணப் போக்கிற்கு ஒத்தும் ஒவ்வாமலும் இருக்கலாம். இலக்கியம் எழுந்த காலவுணர்வு காலப்போக்கில் மாறுவது இயல்பு. இயற்கைத் தன்மையைத் தவிர மற்றவை கால வளர்ச்சியில் மாறி அமையலாம். இதை நன்கு அறிய உளவியலுடன் சமூகச் சிந்தனையும் இணைந்து இடம்பெற வேண்டும்.

திட்டவட்டமாக உளவியலின் போக்கை உறுதிப்படுத்திக்காண இயலாது. மனித மனத்தின் போக்கு, வரம்புக்கு உட்படும் தன்மையுடையது அன்று. முற்றிலும் உணர முடியாத இயல்புகளுடன் கற்றறிய முடியாத புதிராக மனிதனின் மனம் சிந்திக்கிறது. ஆகையால் முடிந்த அளவிற்கு முயன்று இலக்கிய உண்மைகளை உளவியல் அணுகுமுறைகளைக் கொண்டு அறிய வேண்டும்.

### 1.10.1. கால வளர்ச்சியில் சிந்தனை மாற்றம்

கால வளர்ச்சியில் அறிவு வளர்கிறது. அதனால் சிந்தனை மாறுகிறது. குறிப்பிட்ட ஒரு காலக்கட்டத்தில் சரியாகக் கருதப்பட்ட ஒன்று, இன்னொரு காலத்தில் நேர்மாறாகக் கருதப்படலாம். சங்க காலத்தில் ‘மன்னன் உயிர்த்தே

மலர்தலை உலகம்' என்ற உணர்வு நிலவியது. கம்பர் காலத்தில் "மன்னன் உயிரெலாம் உறையுமோர் உடம்பினான்" என்றும், பாரதியார் காலத்தில், 'எல்லாரும் இந்நாட்டு மன்னர்கள்' என்றும் இலக்கியப் பதிவுகளின்வழி கால இடைவெளியில் மக்களின் எண்ணப் போக்கில் ஏற்பட்டுள்ள மாற்றத்தை நன்கு உணரலாம். அறிவு வளர்ச்சி உளவியல் போக்கை மாற்றும் தன்மை கொண்டதை இதன்வழி அறிந்துகொள்ள முடிகின்றது.

### 1.10.2. உணர்ச்சி நிலை உளவியல்

உணர்ச்சிப் பெருக்கில் உளவியலின் போக்கு இயல்புக்கு ஏற்ப மாறுபடும். நலங்கிள்ளிக்கும் நெடுங்கிள்ளிக்கும் இடையில் அண்ணன் தம்பி உறவுமுறை; ஆனால் அரசுரிமை யாருக்கு என்ற போட்டியின் காரணத்தால் பகைத்து, கொல்லும் அளவுக்கு மனமாற்றம் அடைந்ததைப் புறநானூற்றுப் பாடல் புலப்படுத்தும். உணர்ச்சிநிலை உளவியலை நன்கு அறிந்தவர்கள்தாம் இச்சூழலைச் சரியான கோணத்தில் புரிந்து கொள்ளமுடியும். இதைப் போன்று பல பாடல்கள் உணர்ச்சி நிலை உந்துதலால் பாடப்பட்ட பாடல்களாக இருப்பதைக் காணமுடிகிறது; அவ்வழி உளவியல் தொடர்பின் பயன்பாடும் புலப்படுகிறது.

### 1.10.3. உளத்தில் உண்டாகும் சிக்கல்கள்

தனி மனிதர்களுக்கிடையே உள்ள சில பல இயல்புகள் சமூகத்தின் நெறிமுறைகளுக்கும் பழக்க வழக்கங்களுக்கும் முரண்பட்டனவாகவே உள்ளன. அவற்றுள் பெரும்பாலானவை அவர்கள் வாழும் சமூகத்தால் ஏற்கப்படுவது இல்லை. இத்தகைய சமூக ஏற்பினைப் பெறாத, விருப்பங்களை அடைய விரும்புதல் மனித இயல்பு. இதனால், சமூக வாழ்வில் தனிமனிதர்களுக்குத் தோல்விகள் உண்டாகின்றன. தோல்விகளால் மனிதமனம் பாதிக்கப்படுகிறது. இதன் விளைவாக மனமுறிவோ, தாழ்வு மனப்பான்மையாகிய மனக் கோட்டமோ, அடக்கியாளத் துடிக்கும் ஆதிக்க மனப்பான்மையோ ஒருவருக்கு உண்டாகலாம் என்கின்றனர் உளவியலாளர்கள்.

"நெடுங்கிள்ளியும் நலங்கிள்ளியும் அண்ணன் தம்பிகள்; இளந்தத்தன் என்ற புலவர் நலங்கிள்ளியைப் பாடிவிட்டு, நெடுங்கிள்ளியையும் பாட ஆவூர் வந்தார். அவரை நலங்கிள்ளியின் ஒற்றன் என்றெண்ணி நெடுங்கிள்ளி கொல்ல முற்பட்டான். கோவூர்கிழார் ஓடோடிச் சென்று புலவர்களுக்கே உரிய நடுநிலையுரிமையை எடுத்துரைத்து இளந்தத்தனைக் காத்தார் என்று புறநானூற்றுப் பாடல் 46 வழியாக அறிகிறோம்"[26] இது அரசவுரிமையால் இருவரிடையே உண்டான உள்ளச் சிக்கலைப் படம்பிடித்துக் காட்டுகிறது.

### 1.10.4. உளவியல் அணுகுமுறையின் பயன்பாடு

இலக்கியத்தில் காட்டப்படும் வாழ்க்கை இயல்புகளின் உண்மைகளைச் சரியாக அறியவும் மனித மனதில் ஏற்படும் சிக்கல்களையும் குழப்பங்களையும் அறியவும் உளவியல் அணுகுமுறை உதவுகிறது. வாழ்க்கைத் துன்பங்களுக்கு உரிய காரணத்தைத் தெரிந்து அவை தீர வழிகாட்டவும் இத்தகைய அணுகுமுறையிலான ஆய்வு உதவும். சமுதாயத்தை நல்ல முறையில் மாற்றி அமைக்க உளவியல் சிந்தனை பயன்படும்.

உளவியல் சிந்தனையின் பல கூறுகளையும் நன்குணர்ந்து இலக்கியத்தில் இணைத்து ஆய்வு மேற்கொள்ளவேண்டும். நுட்பமான சிந்தனை உளவியல் அணுகுமுறைக்கு மிகவும் தேவைப்படுகின்றது. மேலும் இலக்கியச் சிந்தனையில் உளவியல் அணுகுமுறையால் பயன்மிக்க பல கருத்துகள் கிடைக்கும் என அறிய முடிகிறது.

### தொகுப்புரை

'தமிழ் இலக்கியமும் உளவியலும்' எனும் தலைப்பில் அமைந்த இந்த இயலின் ஆய்வு முடிவுகள் தொகுப்புரையாக இடம்பெறுகின்றன.

- இலக்கியம் என்பது மனித உணர்வுகளின் பிரதிபலிப்பு; அவை மனித மனத்தில் தோன்றுபவை. ஆனால், உளவியல் என்பது மனித இயல்பினையும் நடத்தையில் ஏற்படும் மாற்றத்தையும் அறிய உதவுகிறது.

- *உளவியல் அறிவியல் கிரேக்கர்களின் காலத்தில் தோன்றியது. முதல் உளவியல் நூல் ஆன்மாவின் இயல்புகள் என்பதாகும். உளவியல் வளர்ச்சி நிலையில் ஏற்பட்ட மாற்றங்கள் மற்றும் உளவியல் வரையறைகள் காலத்திற்கேற்ப மாறுபட்டதை இந்த இயல் கருத்துகள் வழி அறிந்துகொள்ள முடிகின்றது.*

- *உலகில் சிறப்புமிக்கனவாகப் போற்றப்படும் கவிதை (இலக்கியம்), இசை, நாட்டியம், ஓவியம், சிற்பம் முதலிய அழகுக் கலைகள் யாவுமே, மனமுறிவின் வேற்றுருவங்களாகும் என்பது ஃபிராய்டின் சித்தாந்தமாகும்.*

- *மனிதனிடம் தனிப்பட்ட ஒரு சக்தி உண்டு. மனிதனின் அனைத்து நடத்தைகளையும் இயல்பூக்கங்களே ஊக்குவிக்கின்றன என்று மக்டுகல் குறித்தார். இக்கொள்கை ஹார்மிகக் கொள்கை* (Harmism) *எனப்பட்டது. மனிதனிடம் பதினேழு வகை இயல்பூக்கங்கள் உள்ளன. அவை புலனுணர்வு, நடத்தை, உணர்வு என அடிப்படையில் மூன்றாகப் பிரிக்கப்பட்டுள்ளன.*

- *மனிதன் எவ்வளவுதான் தன்னலம் கருதுபவனாக வாழ்ந்தாலும் அவனிடமும் பிறவியிலேயே இயற்கையாக உதவுதல், பிறரை மகிழ்வித்தல் போன்றவற்றிற்குச் சில கொள்கை வித்துக்கள் காணப்படுகின்றன. இவற்றைச் சுமித்தின்* (Smith) *இரக்க உணர்வுக் கோட்பாடு* (Sympathy) *வெளிப்படுத்துகின்றது.*

- *மனித மனதில் ஏற்படும் சிக்கல்களையும் குழப்பங்களையும் அறிய உளவியலில் வாய்ப்புகள் கிடைக்கின்றன. அதன் மூலம் நம் வாழ்க்கைத் துன்பங்களுக்குரிய காரணங்களை அறிந்து, அவற்றைத் தீர்க்க நெறிபிறழ்க் கோட்பாடு* (Abnormal psychology) *உதவுகிறது.*

- *ஃப்ராய்டின் கருத்துப்படி உண்மைக் கொள்கை, இன்பக் கொள்கை ஆகியவற்றின் இடையே ஏற்படும் போராட்டங்கள் அடிப்படையில் ஆளுமையை உணர்தல் வேண்டும் என அறியமுடிகிறது.*

- புலவனின் கற்பனையில் தோன்றிய இலக்கியம் உளவியல் உத்தியுடன் ஒன்றிப்போகும்போது என்றும் வெற்றிபெறும்; அவ்வாறு வெற்றிபெற்ற இலக்கியங்களில் உளவியல் கூறுகள் பலவும் உள்ளன என இந்த இயல் கருத்துகள் வழி தெரிந்துகொள்ள முடிகின்றது.

**இயல் - ஒன்று**

**சான்றெண் விளக்கம்**

1. *சிற்பி பாலசுப்பிரமணியம், தமிழ் இலக்கிய வரலாறு, ப.1.*
2. *வீ. ஆதிபராசக்தி, இலக்கியமும் உளவியலும், ப.1.*
3. *புறம்.30:1-6*
4. *தி.கு. இரவிச்சந்திரன், சிக்மண்ட் ஃப்ராய்ட் உளப்பகுப்பாய்வு அறிவியல், ப.20.*
5. *மேலது, ப.21.*
6. *மேலது, ப.21.*
7. *நற்றிணை, பா.10:1-4.*
8. *தி.கு. இரவிச்சந்திரன், சிக்மண்ட் ஃப்ராய்ட் உளப்பகுப்பாய்வு அறிவியல், ப.21.*
9. *அ.அ. ஞானசுந்தரத்தரசு, கம்பனும் உளவியலும், ப.18.*
10. *தி.கு. இரவிச்சந்திரன், சிக்மண்ட் ஃப்ராய்ட் உளப்பகுப்பாய்வு அறிவியல், ப.21.*
11. *கி. நாகராஜன், கல்வி உளவியல், ப.3.*
12. *தி.கு. இரவிச்சந்திரன், சிக்மண்ட் ஃப்ராய்ட் உளப்பகுப்பாய்வு அறிவியல், ப.19.*
13. *மேலது, ப.19.*
14. *மேலது, ப.19.*
15. *மேலது, பக்.28-29.*
16. *மேலது, ப.27.*
17. *இலக்குவன், உளவியல் நிபுணர் கையேடு, ப.17.*
18. *நா. வேதமணி மானுவேல், சமக உளவியல், பக். 74 - 75.*
19. *புறம், 76:1-2.*
20. *கி. விஜயலட்சுமி, புதுக்கவிதையில் உளவியல், ப.14*
21. *கி.நாகராஜன், கல்வி உளவியல்,ப.15.*

22. அ.நா.பெருமாள், இலக்கியத் திறனாய்வில் உளவியல் அணுகுமுறைகள், ப.101.

23. தமிழண்ணல், சங்க இலக்கிய ஒப்பீடு, ப.138.

24. வீ. ஆதிபராசக்தி, இலக்கியமும் உளவியலும், ப.1.

25. அ.நா.பெருமாள், இலக்கியத் திறனாய்வில் உளவியல் அணுகுமுறைகள், ப.101.

26. தமிழண்ணல், புறநானூறு, ப.149.

## 2.0. சங்க இலக்கியம்

*இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட காலம் சங்க காலமாகும். அக்காலத்தில் தமிழில் தோன்றிய பாடல்களின் தொகுப்பினைச் சங்க இலக்கியம் என்பர். அவை 'பாட்டும் தொகையும்' ஆகும். பாட்டு என்பது பத்துப்பாட்டு; தொகை என்பது எட்டுத்தொகை. இவற்றைப் 'பதினெண் மேற்கணக்கு' என்றும் கூறுவர். எட்டுத்தொகையின் பாடல்கள் ஒவ்வொன்றும் பல பாடல்களின் தொகுப்பாகும். பத்துப்பாட்டானது பத்துத் தனித்தனி நீண்ட நெடிய பாடல்களின் தொகுப்பு எனக் கூறலாம்.*

*சங்க இலக்கியப் பாடல்கள் அகம், புறம் என்னும் இருபொருட்களை அடிப்படையாகக் கொண்டு இயற்றப்பட்டன. காதல் தொடர்பானவை அகம் என்றும் வீரம், கொடை, புகழ் முதலானவை புறம் என்றும் கூறப்படுகின்றன. "சங்க இலக்கியப் பாடல்கள் மொத்தம் 2381. இவற்றைப் பாடிய புலவர்களுள் பெயர் தெரிந்த புலவர்கள் 473 பேர். பெயர் தெரியாத புலவர்கள் 102 பேர்"[1] சங்க இலக்கியத்துள் பெரும்பான்மையான பாடல்கள் அகவல்பாக்களால் ஆனவை. ஏனைய பாடல்கள் கலிப்பா, வஞ்சிப்பா, பரிபாட்டு என்னும் செய்யுள் வகைகளால் இயற்றப்பட்டுள்ளன.*

### 2.1.1. எட்டுத்தொகை

*அடிவரையறையில் தொகுக்கப்பட்டதால் இவற்றைத் தொகை என்றும் கூறுவர். இவற்றுள் நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, அகநானூறு, கலித்தொகை, பதிற்றுப்பத்து, புறநானூறு, பரிபாடல் எனும் எட்டும் அடங்கும். இதனை,*

**நற்றிணை நல்ல குறுந்தொகை ஐங்குறுநூறு**
**ஒத்த பதிற்றுப்பத்து ஓங்கு பரிபாடல்**
**கற்றறிந்தார் ஏத்தும் கலியொடு அகம், புறம் என்னும்**
**இத்திறத்த எட்டுத் தொகை**[2]

என்னும் பழம்பாடலால் அறியலாம். இந்நூலில் உள்ள பாடல்கள் ஒவ்வொன்றும் பல்வேறு காலத்தில் வாழ்ந்த புலவர்களால் பாடப்பட்டவை. எட்டுத்தொகை நூல்களுள் பதிற்றுப்பத்தும் புறநானூறும் புறப்பொருள் இலக்கியங்கள். பரிபாடல் அகம் புறம் சார்ந்தது. ஏனைய ஐந்தும் அகப்பொருள் இலக்கியங்களாகக் கருதப்படுகின்றன. பழம்பெரும் இலக்கண நூலாகிய தொல்காப்பியம் கூறும் அகப்பொருள், புறப்பொருள் இலக்கணங்களுக்கு எட்டுத்தொகை நூல்கள் இலக்கியங்களாகத் திகழ்கின்றன.

### 2.1.2. பத்துப்பாட்டு

பத்துப்பாட்டு என்பது ஒரு கலைச் சுரங்கம், பண்பாட்டுச் சுரங்கம் மற்றும் வரலாற்றுப் பெட்டகமாகத் திகழ்கிறது. தமிழர் வாழ்க்கையைக் காட்டும் ஓவியமாகவும் விளங்குகிறது. உலகளாவிய தமிழரின் வணிகத்தை உணர்த்தும் இலக்கியமாகத் திகழ்கிறது. இது நெடும் பாடல்களின் தொகுப்பு. இவற்றைத் தொகுத்தவரும், தொகுப்பித்தவரும் யாரெனத் தெரியவில்லை. இவற்றுள் திருமுருகாற்றுப்படை, பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, முல்லைப்பாட்டு, மதுரைக்காஞ்சி, நெடுநல்வாடை, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை, மலைபடுகடாம் முதலானவை இடம் பெறுகின்றன. இதனை,

**முருகு பொருநாறு பாணிரண்டு முல்லை**
**பெருகு வளமதுரைக் காஞ்சி – மருவினிய**
**கோலநெடு நல்வாடை கோல் குறிஞ்சி பட்டினப்**
**பாலை கடாத்தொடும் பத்தே**[3]

என்னும் பழம்பாடலால் அறியலாம். இவற்றுள் ஆற்றுப்படை நூல்கள் ஐந்தும் மதுரைக்காஞ்சியும் புறம் சார்ந்தவை, நெடுநல்வாடை என்பது அகமா, புறமா என்ற கருத்து வேறுபாடு உண்டு. எஞ்சிய மூன்றும் அகம்

சார்ந்த நூல்கள். இப்பாடல்களில் மிகச்சிறியது 103 அடியுள்ள முல்லைப்பாட்டு. மிகப்பெரியது 782 அடியுள்ள மதுரைக்காஞ்சி ஆகும்.

### 2.2 சங்க இலக்கியத்தில் அகநூல்கள்

அகம் என்பது ஒத்த தலைவனும் தலைவியும் தமக்குள் நுகரும் இன்ப நுகர்ச்சியாகும். இது இத்தன்மையானது என்று எடுத்துக்கூற இயலாத தன்மை கொண்டது அகம் எனப்படும். சங்க இலக்கியத்தில் உள்ள எட்டுத்தொகையில் ஐந்தும், பத்துப்பாட்டில் மூன்றும் அகஇலக்கியமாகும்.

#### 2.2.1. நற்றிணை

எட்டுத்தொகையில் சிறப்பிடம் பெறும் நூல் நற்றிணையாகும். இது ‘நல்’ என்ற அடைமொழி பெற்றது. அகப்பொருள் கூறும் நூலுக்கு அமைந்த திணை என்னும் பெயரும் சேர்ந்து நற்றிணை என்று வழங்கலாயிற்று. இப்பாடல் அளவால் குறுகியும் மிக நீண்டும் அமையாத இடைநிலைப்பட்ட பாடல்களைக் கொண்டது. மொத்தம் நானூறு பாடலைக் கொண்டமையால் நற்றிணை நானூறு என்று இந்நூல் வழங்கப்படுகிறது.

அகச்சுவை நிரம்பிய பாடல்களில் மக்களின் அறவாழ்வு, மன்னர் கொடை, ஆட்சித்திறம், ஒருமைப்பாடு, உள்ளுறை, பழக்க வழக்கங்கள், வரலாற்றுச் செய்திகளும் நற்றிணையில் இடம்பெற்றுள்ளன. ‘வல்வில் ஓரி’, கொற்றச் சோழர், கொங்கர், பழையன் ஆகியவர்களின் குறிப்புகள் காணப்படுகின்றன. சிலப்பதிகாரத்துக் கண்ணகியை நினைவுபடுத்தும் விதமாக ‘ஒரு முலையிழந்த திருமாவுண்ணி’ குறித்து 216 ஆவது பாடல் கூறுகிறது.

#### 2.2.2. குறுந்தொகை

‘நல்ல குறுந்தொகை’ என்று பாராட்டப்படுகிறது. பெயருக்கு ஏற்பக் குறுகிய அடியான நான்கு முதல் எட்டு அடிகளைக் கொண்ட நானூறு

பாடல்களின் தொகுப்பாகும். எனவே குறுந்தொகை நானூறு என்ற பெயர் பெற்றது. இந்நூலுக்குப் பாரதம் பாடிய பெருந்தேவனார் முருகனைப் பற்றிப் பாடிய பாடல் கடவுள் வாழ்த்தாக அமைந்துள்ளது. இதன் தனிச் சிறப்பு உரையாசிரியர்கள் பலரால் மிகுதியான பாடல்கள் மேற்கோளாக எடுத்தாளப்பட்ட பெருமை பெற்ற நூலாகும். இவற்றுள் பரணர் பாடிய பாடல்களில் வரலாற்றுக் குறிப்புகள் காணப்படுகின்றன.

### 2.2.3. ஐங்குறுநூறு

மூன்றடி முதல் ஐந்தடி வரை அடிகளைக் கொண்ட பாடல்களின் தொகுப்பு ஐங்குறுநூறு. ஒவ்வொரு திணைக்கும் நூறு பாடல்கள் வீதம் ஐந்நூறு பாடல்களைக் கொண்டது. அவை முறையே பாடியவர், பாடலின் திணை விளக்கும் விதமாகப் பழம் பாடல் ஒன்று உள்ளது.

**மருதம் ஓரம்போகி நெய்தல் அம்மூவன்**
**கருதுங் குறிஞ்சி கபிலர் – கருதிய**
**பாலை ஓதலாந்தை பனிமுல்லை பேயனே**
**நூலை ஓது ஐங்குறு நூறு**[4]

### 2.2.4. கலித்தொகை

ஓசை நயமும் கவிதை அழகும் செறிந்த நூறு பாடல்கள் கொண்டது இந்நூல். மற்றத் தொகை நூல்கள் அகவற்பாவால் இயற்றப்பட்ட பாட்டுகளின் தொகுப்பாக விளங்க, கலித்தொகை ஓசை இனிமையும் தரவு, தாழிசை, தனிச்சொல், சுரிதகம் என்ற சிறப்பான அமைப்பையும் கொண்ட கலிப்பாக்களின் தொகுப்பாகத் திகழ்கிறது. அன்பின் ஐந்திணையுடன் கைக்கிளையும் பெருந்திணையும் காட்டுவது கலித்தொகையாகும். இதன் திணை வைப்புமுறை பாலைக்கலி, குறிஞ்சிக்கலி, மருதக்கலி, முல்லைக்கலி, நெய்தல்கலி என்ற முறையில் அமைந்துள்ளது.

சங்ககால மக்களது வாழ்க்கையின் போக்கும் நோக்கும் சிந்தனை நலங்களும் உலகியல் பார்வையும் இந்நூலால் தெளிவாகக் காட்டப்

பெற்றுள்ளன. மேலும் இந்நூல் நாடகப்பாங்கு அமைப்பைக் கொண்டுள்ளது.

### 2.2.5. அகநானூறு

இத்தொகை நூல் பதின்மூன்றடி முதல் முப்பத்தோர் அடி வரை கொண்ட நீண்ட பாடல்கள் கொண்டதால் நெடுந்தொகை எனப் பெயர் பெற்றது. இதில் முதல், கரு, உரிப்பொருள் மூன்றும் நிறைவுற அமைந்த பாங்கினைக் காணமுடிகிறது. வரலாற்றுச் செய்திகளாகிய புறச் செய்திகளும் மிகுதியாகக் கிடைக்கின்றன. இந்நூல் மூன்று பகுப்புடையது. அவை : களிற்றியானைநிரை, மணிமிடைப்பவளம், நித்திலக்கோவை என்பனவாகும்.

"இந்நூலில் வரலாற்றுச் செய்திகள் பல காணப்படுகின்றன. மாமூலர் பாடிய பாடல்களில் பாடலிப்புத்திரத்தைக் குறித்தும் அங்கு நந்தர்கள் (கி.மு.425 - 323) கங்கையில் மறைத்த நிதியம் குறித்தும் அறிகின்றோம். மோரியர் படையெடுப்பு (69, 281, 375) பல பாடல்களில் குறிப்பிடப்பட்டுள்ளது. பல பேரரசர், சிற்றரசர்கள் பற்றியும் கோசகர் பற்றியும் அறிகின்றோம். அன்னிமிஞிலி, ஆதிமந்தி கதையும் எடுத்துரைக்கப்பட்டுள்ளன."[5]

### 2.2.6. முல்லைப்பாட்டு

தலைவனைப் பிரிந்த தலைவி வினை முடிந்து தலைவன் திரும்பும் வரை ஆற்றியிருத்தல் முல்லை. அகப்பாட்டில் தலைவன் தலைவியர் பெயர் சுட்டப்படுவதில்லை இம்முறையைத் தழுவிய முதல் நூல்தான் முல்லைப்பாட்டு. இதன் ஆசிரியர் நப்பூதனார்.

#### 2.2.6.1. முதல் காட்சி

போர்க் காரணத்தால் பிரிந்த தலைவன் வரவை எண்ணி தலைவி காத்திருத்தல், அவன் வாராததனால் தலைவி கண்களில் வழியும் நீரும்

மேகங்கள் கூடியதனால் உண்டான மழை பொழிவதால் வடியும் நீரும் ஒப்பிடப்பட்டுள்ளன.

### 2.2.6.2. இரண்டாவது காட்சி

தலைவன் இருக்கும் பாசறை கடல்போல் பரந்த பாடிவீடு, அரசனின் தனியறை திரைச்சீலைகளுடன் காட்சி தருகின்றது. வில்நட்ட அம்புக்கூடு தொங்கவும் வேல்நட்டுக் கேடயம் சாத்தியும் அரண் நின்றன காவல் யானைகள். நெற்கதிரும் அதிமதுரத் தழையும் கரும்பும் கலந்த உணவை உண்ணாது நிற்கப் பாகர் வடமொழியில் அதட்டி உண்பித்தனர். இடைக் கச்சில் வாள் செருகிய மங்கையர் விளக்கினைத் தூண்டி நின்றனர். நாழிகை வட்டிலின் துணையால் பொழுதளந்தறிந்து காவலர் கூறினர். ஊமையரான மிலேச்சர் காவல் புரிந்தனர். மன்னனோ மாண்ட வீரரையும் மயங்கும் விலங்குகளையும் எண்ணி, பாசறையில் இருந்தான்.

### 2.2.7. குறிஞ்சிப்பாட்டு

ஆரிய அரசன் பிரகதத்தனுக்குத் தமிழ்ச்சுவை உணர்த்த கபிலரால் பாடப்பட்டது குறிஞ்சிப்பாட்டாகும். இந்நூல் அகப்பொருள் பற்றியது. குறிஞ்சி நிலத்தின் களஒழுக்கமான அறத்தொடு நிற்றல் துறை சார்ந்த பாடலாகும். இது சிறுகதை போன்ற ஆற்றொழுக்க வருணனை உடைய பாடல். தலைவியின் தாயார் தலைவிக்கு ஏற்பட்ட நோய்க்கு மருந்தாக வேலனைத் தேடி வெறியாட்டு நிகழ்த்த ஏற்பாடு செய்கிறாள். அதற்குத் தோழி கூறுகையில், நானும் தலைவியும் தினைப்புலத்தைக் காவல் காக்கச் சென்றபோது யானையைக் கண்டு அஞ்சினோம். அப்போது அங்கு வந்த தலைவன் தன் அம்பால் யானையை நிலைகுலையச் செய்தான். அன்று முதல் தலைவியைப் பின் தொடர்ந்தான். அவன் மீது கொண்ட காதலால் தலைவி அறத்தொடு நிற்க நானும் தலைவிக்கு அறத்தொடு நின்றேன் எனத் தலைவியின் தாயிடம் எடுத்துரைப்பதாக அமைந்துள்ளது. இதில் 99 மலர்களின் பெயர்களைத் தொகுத்துக் கூறியுள்ளதால் இதனைப் பெருங்குறிஞ்சி எனக் கூறியுள்ளதை அறியமுடிகிறது.

### 2.2.8. பட்டினப்பாலை

*பாலை நிலத்தின் உரிப்பொருள் பிரிதலும் பிரிதல் நிமித்தமுமாகும். காவிரிப்பூம்பட்டினத்தின் பெருவளத்தை விவரிப்பதால் பட்டினப்பாலை எனப்பட்டது. இதில் புகழப்படும் தலைவன் கரிகாலன். பாடியவர் கடியலூர் உருத்திரங்கண்ணனார். இப்பாடல் பாடியதற்காகப் பதினாறு நூறாயிரம் பொற்காசு பரிசு பெற்றதைக் கலிங்கத்துப்பரணி தெரிவிக்கின்றது. இதில் கரிகாலனின் பகைவர் அஞ்சினர் என்பதை,*

**பல்லொளியர் பணியொடுங்கத்**
**தொல்லருவாளர் தொழில்கேட்ப**
**வடவர் வாடக் குடவர் கூம்பத் தென்னவன் திறல் கெட**[6]

*எனும் வரிகளின் வழி அறியமுடிகிறது. வணிக நேர்மையும் போற்றப்பட்டதை அறியமுடிகிறது. காவிரிப்பூம்பட்டினம் இயற்கை வளம் செழித்ததையும் மக்கள் சிறப்புடன் வாழ்ந்ததையும் இப்பாடல் புலப்படுத்துகிறது.*

### 2.2.9. நெடுநல்வாடை

*தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனைப் பிரிந்து அரசமாதேவி துன்புறுகின்றாள். அவள் வருத்தம் நீங்குமாறு கொற்றவையைப் பரவுகின்றனர். இது இப்பாடலின் பொருள். அகத்திணை சார்ந்ததாக இருந்தாலும் பாடலில் 'சுட்டி ஒருவர் பெயர் கொளப் பெறாஅர்' என்ற தொல்காப்பிய விதி தவறி 'வேம்பு தலை யாத்த நோன்காழ் எஃகம்' எனக் கூறப்பட்டதால் சான்றோர் இதனைப் புறத்திணைப் பாடலாய் அமைத்தனர். பாடியவர் மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார் ஆவார்.*

*தலைவனைப் பிரிந்த தலைவிக்கு ஒரு பொழுது ஒரு யுகமாகத் தோன்றுகிறதாம். அதனால் தலைவிக்கு நெடுவாடையாயிற்று. போர் இயற்றும் தலைவனுக்கோ வினை முற்றும் நற்காலமாதலின் நல்வாடையாயிற்று. எனவே இப்பெயர் பெற்றது இதன் சிறப்பாகும்.*

## 2.3. சங்க இலக்கியத்தில் புறநூல்கள்

சங்க இலக்கியங்கள் பண்டைத் தமிழரின் அரசியல், சமூகம், வீரம், கொடை, புகழ், நாகரிகம், பண்பாடு, பழக்கவழக்கங்கள் ஆகியவற்றைத் தெளிவாகக் காட்டும் காலக்கண்ணாடியாகும். அவற்றுள் எட்டுத்தொகையில் புறநானூறும் பதிற்றுப்பத்தும் புறப்பொருள் பற்றிய முழுமையான நூல்களாகும். பத்துப்பாட்டில் ஆற்றுப்படை நூல்களில் ஐந்தும் மதுரைக்காஞ்சியும் புறம் பற்றிய நூல்களாகும். புறம் என்ற சொல்லுக்குச் சென்னைப் பல்கலைக்கழகப் பேரகராதி வெளியிடம், அன்னியம், புறத்திணை, புறநானூறு, வீரம், பக்கம், முதுகு, புறக்கொடை, பின்புறம், புறங்கூற்று, அலர்மொழி, பட்சபாதம், இடம், இறையிலி நிலம் (வரி விதிக்கப்படாத நிலம்), ஏழாம் வேற்றுமை உருபுகளில் ஒன்று, திசை, காலம் என்ற பொருள்களைத் தந்துள்ளது. சங்க இலக்கியத்தில் புறப்பொருள் நானூற்றுத் தொண்ணூற்றெட்டுப் பாடல்களாகும்.

### 2.3.1. புறநானூறு

இந்நூல் புறப்பொருள் பற்றிய நானூறு பாடல்களைக் கொண்டுள்ளதால் புறநானூறு எனப் பெயர் பெற்றது. புறம், புறப்பாட்டு, புறம்பு நானூறு எனவும் அழைக்கப்படுகிறது. இந்நூல் 400 அகவற்பாக்களைக் கொண்டது. இந்நூலிற்குக் கடவுள் வாழ்த்துப் பாடியவர் பாரதம் பாடிய பெருந்தேவனார். இதில் உள்ள பாடல்கள் “சேர, சோழ, பாண்டியராகிய முடியுடை வேந்தர்கள், சிற்றரசர்கள், அமைச்சர்கள், சேனைத்தலைவர்கள், வீரர்கள், கடையெழு வள்ளல்கள், ஆண்பாற்புலவர், பெண்பாற்புலவர், மறக்குடி மகளிர் எனப் பலருடைய வரலாற்றுக் குறிப்பினையும் எடுத்தியம்புகின்றன”[7] என்கிறார் சி. செல்வத்தாண்டவர்.

புறநானூறு வெட்சி, கரந்தை, வஞ்சி, காஞ்சி, நொச்சி, தும்பை, பாடாண், வாகை, பொதுவியல், கைக்கிளை, பெருந்திணை எனும் பதினொரு திணைகளை உள்ளீடாகக் கொண்ட புறவிலக்கியமாகும்.

உழிஞைத் திணைப்பாடல் மட்டும் புறநானூற்றில் இடம் பெறவில்லை. இந்நூலில் உள்ள பாடல்களால், அக்கால மக்களுடைய பழக்க வழக்கங்கள், மொழிநடை, நாகரிகக் கருத்துகள், சமய வாழ்க்கை, கலை வளர்ச்சி, மன்னர்களின் கொடை, வீரம், புகழ் முதலியவற்றை நன்கு அறியலாம். தொகை நூல்களுள் தமிழர்களின் வாழ்க்கை, வரலாற்றை அறியப் பேருதவி செய்யும் நூலாக இதனைக் கூறலாம்.

**2.3.2. பதிற்றுப்பத்து**

சேரமன்னர்களைப் பற்றிப் புகழ்ந்து பாடிய தொகை நூல் இது. ஒவ்வொரு மன்னனைப் பற்றியும் பத்துப்பாடல்கள் வீதம் பத்துச் சேர மன்னர்களைப் பற்றி வெவ்வேறு புலவர்கள் பாடியிருப்பது தனிச் சிறப்பாகும். முதற்பத்தும் இறுதிப்பத்தும் கிடைக்கப்பெறவில்லை. இதற்கும் பழைய உரை ஒன்று உண்டு. பாடல்களின் முடிவில் துறை, வண்ணம், தூக்கு (இசை), பாடலின் பெயர் ஆகியவை குறிக்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு பாடலுக்கும் அதில் வரும் சிறப்புடைய தொடரொன்றால் பெயர் இடுவது குறிப்பிடத்தக்கது ஆகும்.

பதிற்றுப்பத்து அந்தாதித் தொடையால் ஆகியுள்ளது ஒருதனிச்சிறப்பாகும். ஒவ்வொரு பத்தின் இறுதியிலும் பதிகம் ஒன்றுண்டு. பத்தின் வரலாற்றைக் கூறுவது பதிகம் ஆயிற்று. அது பாடினோர் பெயர், பத்துச்செய்யுட்களின் பெயர், பாடிய புலவர், பெற்ற பரிசில், அரசர் பெயர், அவர் ஆண்ட கால அளவு முதலானவற்றைத் தெரிவிக்கிறது. பிற்காலத்தில் கல்வெட்டுக்களில் இடம் பெறும் மெய்க்கீர்த்திகளின் போக்கில் இது அமைந்துள்ளது.

பதிற்றுப்பத்துப் பாடல் மன்னர்களைத் தனித்தனிப் பாடலாகப் பாடி மகிழ்விக்காமல், பத்துப்பத்தாகப் பாடும் மரபு தோன்றிய போதே இலக்கிய வகையாக்கம் கிளைக்கத் தொடங்கியது. இப்பாடலில் சேர நாட்டு வருணனை மிகுதி; இவை சேரமன்னர்களின் ஆற்றலையும் வீரத்தையும் இன்பச் சிறப்பையும் புகழ்ந்து வாழ்த்துவதை நோக்கமாகக்

*கொண்டெழுந்தவையே. வெவ்வேறு புலவர்களால் பாடப்பட்டவையே ஆனாலும் இவை அனைத்துப் பாடல்களும் ஒரு நோக்கும் போக்கும் உடையவையாகக் காணப்படுகின்றன. இந்த உத்தி பின்னாளில் காப்பியம் தோன்றக் காரணமாயிற்று என்பதை அறியலாம்.*

### 2.3.3. ஆற்றுப்படை நூல்கள்

*பரிசில் பெற்ற ஓர் இரவலன் தன் எதிரே வரும் வறுமைப்பட்ட இரவலனை அழைத்துத்தான் பரிசில் பெற்று வந்த வள்ளலின் சிறப்பையும் வீரத்தையும் கொடைப் பண்பையும் விளக்கி, நீயும் சென்று பரிசில் பெறலாம் எனக்கூறி அங்குச் செல்வதற்குரிய வழிவகைகளைக் கூறி ஆற்றுப்படுத்துவதே ஆற்றுப்படையாகும். ஆற்றுப்படைக்கான தோற்றுவாய் தொல்காப்பியத்தில் காணப்படுகிறது. இதனை,*

**கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்**
**ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றிப்**
**பெற்ற பெருவளம் பெறாஅர்க்கு அறிவுறீஇச்**
**சென்று பயனெதிரச் சொன்ன பக்கமும்**[8]

*என்று வெளிப்படுத்துகிறது.*

#### 2.3.3.1. திருமுருகாற்றுப்படை

*திருமுருகாற்றுப்படை என்பது முருகக்கடவுளின் அருளைப் பெற்றவர் ஒருவர் அந்த அருளை நாடும் மற்றவர்க்கு வழிகாட்டுவதாக அமைந்தபாடல். இது 317 அடிகளைக் கொண்ட நெடும்பாட்டாகும். இது ஏனைய ஆற்றுப்படைகளிலிருந்து சில கூறுகளில் வேறுபட்டுள்ளது. அவற்றுள் முதன்மையானது பிற ஆற்றுப்படைகள் எல்லாம் ஆற்றுப்படுத்தப்படுபவர் பெயரால் அமைந்திருக்க, இது மட்டும் பாட்டுடைத்தலைவர் பெயரால் அமைந்துள்ளது. "சங்ககாலத்தில் ஒரு சமுதாய வழக்கு உண்டு. வெறியாட்டெடுப்போர் 'முருகாற்றுப்படுத்தல்*

உண்டு. ‘முருகாற்றுப் படுத்த உருகெழு நடுநாள்’ (அகம்.22) என இது கூறப்படும். முருகனைத் துன்பப்படுவோரிடத்தே ஆற்றுப்படுத்தி அவரைக் காக்குமாறு வேண்டுதல் அதன் பொருளாகும். அதன் அடிப்படையில் முகிழ்த்ததே இத்திருமுருகாற்றுப்படை என்ற நெடும்பாட்டு; பெயரளவில் தான் முருகனிடம் ஆற்றுப்படுத்துகின்றன”[9] என்று தமிழண்ணல் கூறுகிறார். அக்காலத்தில் இருந்த முருகன் கோயில்களைப் பற்றியும் வழிபாட்டு முறைகளைப் பற்றியும் அறிவிக்கும் குறிப்புகள் இதில் உள்ளன. இதில் அமைந்துள்ள இயற்கை வருணனைகளும் சிறப்பானவை.

முதல் பகுதியில் திருப்பரங்குன்றம் மலைக்கோயில் பற்றியும் அதைச் சூழ்ந்த இயற்கை வளம்பற்றியும் முருகன் திருக்கோலம் பற்றியும் சூரனுடன் செய்த போர் பற்றியும் விளக்கங்கள் உள்ளன.

இரண்டாம் பகுதியில் முருகனுடைய ஆறு திருமுகங்களின் குறிப்புகளும் பன்னிரண்டு கைகளின் செயல்களும் திருச்செந்தூர் என்னும் தலத்தின் சிறப்பும் விளக்கப்படுகின்றன.

மூன்றாம் பகுதியில் முருகனை வழிபடும் முனிவர்களின் பெருமையும் பழனியின் வழிபாட்டுக்கு வரும் மகளிரின் இயல்பும் கூறப்பட்டுள்ளன.

நான்காம் பகுதியில் திருவேரகம் என்னும் தலத்தில் வழிபடுவோரைப் பற்றிக் கூறப்பட்டுள்ளது.

ஐந்தாம் பகுதியில் மலைநாட்டு மக்கள் குரவைக் கூத்து ஆடிச் சேவிக்கும் முறைகள் முதலியன எடுத்துரைக்கப்படுகின்றன. இத்தலம் திருத்தணியாகவும் கொள்வோர் உண்டு.

இறுதியில் ஆறாம் பகுதியில் முருகன் எழுந்தருளும் இடங்களும் அவனிடம் சென்று அருள் பெறும் முறையும் பழமுதிர்ச்சோலையில் அருவியின் சிறப்பும் விளக்கப்படுகின்றன.

### 2.3.3.2. பொருநராற்றுப்படை

பொருநராற்றுப்படை என்பது சோழன் கரிகாற் பெருவளத்தானை முடத்தாமக்கண்ணியார் பாடிய பாட்டு. இது 248 அடிகளைக் கொண்டது. பரிசில் பெற விழைந்த பொருநன் ஒருவனைப் பரிசில் பெற்று வந்த பொருநன் ஆற்றுப்படுத்துவதாக இதன் பொருள் அமைந்துள்ளது. பொருநரில் ஏர்க்களம் பாடுவோர், போர்க்களம் பாடுவோர், பரணி பாடுவோர் எனப் பலர் உண்டு. இது போர்க்களம் பாடும் பொருநரால் பாடப்பட்டதாகும்.

"வறுமையால் வாடிய அந்தக் கலைஞர்களின் இன்னலைப் போக்கிச் சோழ அரசன் உயர்ந்த ஆடைகளைத் தருவானாம். நூல் இழை சென்ற வழியைக் கண்ணின் பார்வை பின்பற்ற முடியாத அவ்வளவு நுண்மையானது என்றும், அரசனால் தரப்படும் பட்டாடை புகழப்படுகிறது"[10] என்று கூறுகிறார்.

பொருநன் விழா முடிந்ததும் அவ்வூரை விட்டு நீங்கி வேற்று ஊர் செல்வான். செல்லும்போது வழிப்பறிக் கொள்ளையர்கள் - கொள்ளையில் ஈடுபட்டவர்களைப் பொருநன் யாழை எடுத்து இனிய இசை எழுப்பினால் அந்தக் கொடியவர்களின் மனமும் மாறிவிடும் என்றும் அவர்கள் தம் கையில் எடுத்து வந்த கொலைக் கருவிகளையும் விலக்குமாறு இசையில் மயங்குவர் என்றும் சிறப்பாகப் பாடப்பெற்றுள்ளது. பாலையாழின் ஒன்பது உறுப்புகள் சித்திரம்போல் காட்டப்பட்டுள்ளன. பொருநனுடன் வரும் பாடினியின் அழகு தலைமுடி முதல் பாதம் வரை கேசாதி பாதமாக வருணிக்கப்பட்டுள்ளது. அரசனின் விருந்தோம்பும் பண்பு இந்நூலில் மிகவும் சிறப்பாகக் கூறப்படுகிறது.

### 2.3.3.3. சிறுபாணாற்றுப்படை

ஒய்மாநாட்டு நல்லியக் கோடனை இடைக்கழிநாட்டு நல்லூர் நத்தத்தனார் பாடியது. 269 அடிகளைக் கொண்ட ஆசிரியப்பாவால்

அமைந்தது. பாணர்களில் யாழ்ப்பாணர், இசைப்பாணர், மண்டைப்பாணர் எனப் பல பிரிவுகளுண்டு. யாழ் கொண்டு பாடும் யாழ்ப்பாணனையே இந்நூல் குறிக்கின்றது. யாழ்ப்பாணரில் சிறுபாணரை ஆற்றுப்படுத்தியமையால் சிறுபாணாற்றுப்படை என்று பெயர் பெற்றது. கடையெழு வள்ளல்களான பேகன், பாரி, காரி, ஆய், அதியன், நள்ளி, ஓரி என எழுவர் பூண்ட ஈகையைச் சிறப்பாகக் கூறுகிறது.

### 2.3.3.4. பெரும்பாணாற்றுப்படை

இந்நூல் 500 அடிகளைக் கொண்டது; பெரிய யாழை வாசிக்கும் பாணர்களைப் பற்றிக் கூறப்படுவதனாலும் இந்நூல் இப்பெயர் பெற்றது. காஞ்சியில் ஆண்டு வந்த இளந்திரையன் என்னும் அரசனுடைய ஆட்சிச் சிறப்பினைப் பற்றியும் அவனுடைய நாட்டின் இயல்பு பற்றியும் கடற்கரையைப் பற்றியும் இந்தப் பாட்டு விளக்குகிறது. இதில் கூறப்படும் இளந்திரையன் "வென்வேற்கிள்ளி என்னும் சோழ மன்னனுக்கும் பீலிவளை என்னும் நாகக்கன்னிக்கும் பிறந்த இளந்திரையன் என்று மணிமேகலை முழங்குகிறது"[11] என்று சி. பாலசுப்பிரமணியன் கூறுகிறார்.

உருத்திரன் மகன் கண்ணனார் ஐந்து நில மக்களின் வாழ்வையும் இதில் நன்கு புனைந்துள்ளார். மோர் விற்கும் ஆய்ச்சி, நெய்க்குக் கிடைக்கும் விலையைப் பொன்னாகப் பெறவும் விரும்பமாட்டாளாம்; எருமைக் கன்றுகளை வாங்கவே விரும்புவாள். மன்னனுக்குச் சிறிதளவு இடமும் மக்களுக்குப் பேரிடமும் தருவதால் பெரும்பாணற்றுப்படையைச் 'சமுதாயப் பாட்டு' மற்றும் பாணர்களின் வரலாற்றை உரைப்பதால் 'பாணாறு' எனவும் பெயர் பெற்றது என்றும் கூறப்படுகிறது.

### 2.3.3.5. மலைபடுகடாம் அல்லது கூத்தராற்றுப்படை

பல்குன்றக் கோட்டத்துச் செங்கண் மாத்துவேல் நன்னன்சேய் நன்னனை இரணியமுட்டத்துப் பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனார் 583 அடிகளாகிய ஆசிரியப்பாவில் பாடியுள்ளார். இதற்குக் 'கூத்தராற்றுப்படை'

என்ற பெயரும் உண்டு. பரிசில் பெற்ற கூத்தன் ஒருவன் எதிர்ப்பட்ட இரவலனாம் மற்றொரு கூத்தனை ஆற்றுப்படுத்துவதாய் அமைந்த பாடல் இது. ஆற்றுப்படைப் பாடல்களிலேயே அடி எண்ணிக்கையில் மிகப் பெரியது. இந்நூல் 'மலைபடுகடாம்' எனக் காரணக்குறியும் பெற்று மதங்கொண்ட யானை முழங்குவது போல், மலையில் கேட்கும் ஓசைகளை எல்லாம் 56 அடிகளில் தொகுத்துக் கூறி 'மலைபடு கடாஅம் மாதிரத்து இயம்ப' (348) என வருவதால் இப்பாட்டு மலைபடுகடாம் என்று பெயர் பெற்றது எனலாம்.

இந்நூலில் நன்னன் நாட்டிற்குச் செல்லும் வழியின் தன்மை, இடைவழியில் உண்ணக்கிடைக்கும் உணவுப்பொருள்கள், மன்னன் கொடை, நாட்டின் பெருமை, மலை வளம், சோலையின் அழகு முதலியன சிறப்புறக் கூறப்படுகின்றன. நன்னன் முன்னோர் பெருமை, சிவன் அருள், நன்னனின் நவிரமலை, சேயாறு அவனது நாளோலக்கப் பொலிவு முதலியனவும் விளக்கமாக இப்பாட்டில் கூறப்பட்டுள்ளன. இசை வாத்தியமான பேரியாழின் வருணனை கூறப்பட்டுள்ளது. இதன் சிறப்புக் காட்சிகளைத் தொகுத்துச் சொல்லிப் பின்னர் ஒவ்வொன்றாக விரித்துக் கூறும் திறன் இவ்வாற்றுப்படைக்கே உரிய அரிய செய்தியாகத் தெரிகிறது. இந்த நூல் சொல்லாட்சிச் சிறப்பிலும் சிறந்து விளங்குகிறது.

### 2.3.4. மதுரைக்காஞ்சி

பத்துப்பாட்டில் மிகப்பெரியது 782 அடிகள் கொண்டது மதுரைக்காஞ்சியாகும். இது பெயருக்கேற்றாற்போல் மதுரை நகரை 354 அடிகளால் வருணித்துள்ளது. ஒருவர் ஒருநாள் காலையில் தொடங்கி மறுநாள் விடியல் வரையில் நகரத்தைச் சுற்றிவந்து தான் கண்டவற்றை முறைப்படக் கூறுவதுபோல் அமைக்கப்பட்டது. 'காஞ்சி' என்பது உலகின் நிலையாமையை வலியுறுத்துகிறது. தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனை வழிப்படுத்துவதாய் மாங்குடி மருதனாரால் பாடப்பட்ட பாடல் இது. 'பெருகு வளமதுரைக்காஞ்சி' எனப்

புகழப்படுகிறது. மதுரை நகரினை விளக்குவதால் 'கூடற்றமிழ்' என்று பெயர் பெற்றது.

### 2.4. பண்டைய தமிழ்ப் போர் நெறிகள்

பண்டைய தமிழரின் புறத்திணை ஒழுக்கத்தை இலக்கியங்களில் கூறிச்சென்றார்கள் புலவர்கள். அதன் திறத்தை இலக்கியங்களில் ஆய்ந்து, திணை, துறை பகுத்துத் தெளிவு படுத்தினர். அவ்விலக்கண அறிஞர் வரிசையிலேயே நமக்குத் தெரிந்த முதல் அறிஞராய்த் தொல்காப்பியர் திகழ்கின்றார்.

அடுத்து, பன்னிரு படலமும் புறப்பொருள் வெண்பாமாலையும் படைத்திட்ட அறிஞர்கள் ஆவர். வீரசோழியம், இலக்கண விளக்கம், தொன்னூல் விளக்கம் ஆகிய நூல்களை யாத்த வித்தகர்களும் உள்ளனர்.

இவற்றுள் பன்னிருபடலம் மறைந்திட்டதால் புறப்பொருள் வெண்பாமாலை பாடிய ஐயனாரிதனாரே புறப்பொருளுக்கென்று தனி இலக்கண நூல் செய்த பெருமை பெறுகிறார்.

தொல்காப்பியர் புறத்திணையியல் எனப் பெயரிட்ட புறப்பொருளைத் தொல்காப்பியத்தில் மூன்றாம் அதிகாரமான பொருளதிகாரத்தில் புறத்திணை என்ற இயலில் விளக்கியதை ஒப்ப, வீரசோழியப் புத்தமித்திரனார் பொருட்படலத்திலும் இலக்கண விளக்கத்து வைத்தியநாததேசிகர் தொன்னூல் விளக்கத்திலும் வீரமாமுனிவர் ஆகியோர் பொருளதிகாரத்திலும் புறப்பொருளைத் தத்தம் நூலின் ஒரு பகுதியாகவே விளக்கினர் என்பதை அறியமுடிகிறது.

#### 2.4.1. போர் விளக்கம்

மனிதனின் அடிப்படை உணர்வாக சண்டை அமைந்திருந்தது. மனிதன் தொடக்க காலத்தில் தன்னைத் தற்காத்துக்கொள்ள முற்பட்டபோதே சண்டை புரியத் தொடங்கினான். அவன் செய்த முதல்

சண்டை விலங்குகளோடும் பின்பு மனிதர்களோடும் அமைந்தது. பின்பு இதுவே நாளடைவில் போராக மாற்றம் பெற்றது. போர் என்பதன் பொருள் குறிக்கும் சொற்களாக "அமர், ஆகவம், ஆயோதனம், ஆர்ப்பு, இகல், இரணம், சமீகம், வெஞ்சமம், உடன்றல், உறழ்வு, எதிர், கணையம், கதனம், கலகம், காளையங்கம், குறும்பு, கூட்டம், சங்கரம், சங்கிராமம், சமம், சமரம், சமர், செறு, ஞாட்பு, தாக்கு, திறல் எனப் பல சொற்களால் குறிக்கப்பட்டுள்ளது"[12] என்று கூறுகிறது மதுரைத் தமிழ்ப் பேரகராதி. போர் என்பது மனித நேயமற்ற செயல்; உலகம் தோன்றிய காலம் முதலே மக்களிடையே போர்கள் இருந்து வருகின்றன. போர் அனைவருக்கும் பொது என்பதால் ஒரு சமுதாய நிகழ்ச்சியாகக் கருதப்படுகிறது. எனவே காலத்திற்கும் சூழ்நிலைக்கும் ஏற்பப் போரின் தன்மையும் மாறுபடுகிறது எனலாம். அப்போரானது "இரண்டு அல்லது இரண்டுக்கும் மேற்பட்ட நாடுகளிடையே வெளிப்படையாக பகைமையைத் தோற்றுவிக்கும் ஓர் அமைதிகெட்ட நிலையே போர்"[13] என்றும் கூறுவர்.

"போர் என்பது தவிர்க்க முடியாத ஒரு நிகழ்ச்சி என்றும் 'ஒருவனை ஒருவன் அடுதலும் தொலைதலும் உலகத்து இயற்கை' (புறம்.76) என்றும் கருதினர். போரின்றேல் வீரர்களின் சீர் வாடிவிடும் என்றும் படையின்றேல் மன்னன் சீர் வாடிவிடும் என்றும் கருதுவர் (நான்மணி.42), மன்னனுக்குரிய இன்றியமையாச் சின்னங்களில் படையும் வாளும் யானையும் குதிரையும் போருக்குரியன. முன்னோர்கள் போரில் ஈடுபட்டதை சில அறிஞர் பெருமக்கள் வெறுக்கவில்லை. 'மாறாகப் பிறன் ஆளும் நாடுகோள் மன்னர் தொழில்' (நான்மணி.83) என்று கருதிப் பாராட்டினர். 'பிறன் மண் உண்ணும் செம்மல்' (புறம்.20) என்றும் 'கொண்டி யுண்டித் தொண்டையோர் மருக' (பெரும்.31) என்றும் பாராட்டிக் கூறியுள்ளார்."[14]

### 2.4.2. போர் குறித்து அறிஞர்களின் கருத்துகள்

- பாசியலாளர் (Fascists) தவிர்க்க முடியாதது போர் என்றனர்.
- மார்க்சியலாளர் (Marxists) வருக்கப் போர் என்றும் உரைப்பர்.

- ஆர்னால்டு டாயின்பீ (Arnold Toynbee) போன்ற வரலாற்றாசிரியர்கள் போர் தவிர்க்க முடியாதது என்றும், பிறப்போடு தொடர்புடையது என்றும் கூறி, இந்துக்களின் ஊழ்வினைக் கருத்தோடு (Karma theory) தொடர்புபடுத்தி உரைப்பர்.

- டார்வின் (Darwin) முதலான கூர்தலறக் கோட்பாட்டினர் போரானது, தன்னை நிலைநிறுத்திக் கொள்ளும் உணர்வு (The instinct of self - preservation) தகுதியுடையவை நிலைபெறுதல் (Survival of the fittest) ஆகிய இரண்டு காரணங்களின் அடிப்படையில் நிகழும் என்பர்.

- சிக்மண்ட் பிராய்ட் (Sigmund Freud) முதலான உளவியலாளர் தன்னைத்தானே காத்துக்கொள்ள வேண்டும் (Instinct of self perservation) என்ற மன இயல்பே போருக்குக் காரணம் என்று கூறுவர்.

- அண்ணல் காந்தியடிகள், "போரும் அமைதியும்" புகழ் உருசிய எழுத்தாளர் டால்ஸ்டாய் (Tolstoy) முதலானோர் போர்ச்செயல் குற்றமுடையது; பாவகரமானது என்று கருதுகின்றனர்.

- ஐக்கிய நாடுகள் அவை என்னும் அமைப்பு, போர்கள் வீண் செலவினை ஏற்படுத்துவன எனக் கருதி, போரினைத் தவிர்க்க முனைகின்றது.

- கவிஞரும் பேராசிரியருமான இன்குலாப் எழுதிய "குறிஞ்சிப் பாட்டு" நவீன நாடகப்பனுவலில் கபிலர் பாரிமகளிருக்கு இரங்கிய உருக்கமான தகவல்களை இக்கால உலக நடப்புக்கேற்ப உணர வைத்திருப்பார். போர் ஏற்படுத்தும் கடுமையான விளைவுகளைச் சாடும் உரையாகும் இது.

- *அமெரிக்க ஆவணப்பட இயக்குநர் மைக்கேல் மூர், வளைகுடாப் போர் உள்ளிட்ட சமகாலப் போர்களை எதிர்த்துப் போராடியவர்களில் முக்கியமானவர். அண்மைய அமெரிக்கக் குடியரசுத் தலைவர் தேர்தல்களில் இவருடைய ஆதரவு காத்திரமானது.*

- *எம்ஐடி (மசாசூஸெட்ஸ் இன்ஸ்டிடியூட் ஆஃப் டெக்னாலஜி) மொழியியல் பேராசிரியர் நோம் சாம்ஸ்கி அக்டோபர் 1967 ஆம் ஆண்டு அமெரிக்க அரசின் பெண்டகன், நீதித்துறை முன்பாக வியட்நாம் போருக்கு எதிரான ஆர்ப்பாட்டத்தில் ஈடுபட்டதால் சிறையில் அடைக்கப்பட்டார். அவருடன் சிறையறையில் கழித்த நார்மன் மெய்லர் கூறுவது : "ஒல்லியான - ஆனால், திறன்வாய்ந்த மனிதரான சாம்ஸ்கியின் பார்வை முழுதாக உறுதியானது; ஆளுமை நெறி பிறழாதவர்" என்ற தமது நூலில்* (The Armies of the Night) *குறிப்பிட்டுள்ளார்.*

### 2.4.3. போருக்கான காரணங்கள்

*தொல்காப்பியர் கருத்துப்படி ஆநிரை கவர்தலும் மீட்டலும் போருக்கான ஆயத்தமாகக் கருதப்பட்டன. பழங்காலத்தில் போர் தவிர்க்க முடியாததாகவும் காலத்தின் தேவையாகவும் அமைந்தது. போரின்போது மீட்ட ஆநிரைகளைத் தமக்கென வைத்திராது பிறருக்கு வழங்கியதை அறியமுடிகிறது. எனவே, மூவேந்தர்களான சேர, சோழ, பாண்டியர்களும் வள்ளல்களும் குறுநில மன்னர்களும் தமக்குள் பல போர்கள் செய்தனர்.*

*உணவு, உறையுள் என்பன மனிதனின் அடிப்படைத் தேவைகள். இத்தேவைகளை நிறைவேற்றுவதன் பொருட்டுப் போர்புரிந்தனர்.*

*தன்னாட்டில் வாழும் குடிகள் வளத்துடன் வாழ்வதற்குப் போதிய இடமின்மையாலும் இடம் சிறிதென்னும் ஊக்க மேலீட்டினாலும் வேந்தர் போர் தொடுப்பர் என்பதை,*

**வையங் காவலர் வழிமொழிந் தொழுகப்**

**போகம் வேண்டிப் பொதுச்சொல் பொறாஅது**

**இடஞ்சிறிது என்னும் ஊக்கந் துரப்ப**[15]

*என்ற பாடாண் திணைப் பாடலடிகள் உணர்த்துகின்றன.*

*தன்னுடைய நாட்டு எல்லையை விரிவு படுத்தவும் நாடுகளின் எல்லைகள் சரியாக வரையறுக்கப்படாமையால் நாடுகளுக்கு இடைப்பட்ட பகுதிகள் தொடர்பான எல்லைப் போர்கள் தோன்றக் காரணமாயிற்று என்றும் கூறப்படுகிறது. மேலும்,*

- *தலைமைப்பண்பு காரணத்திற்காகப் போர்புரிந்தனர்.*
- *அரசுரிமை யார்க்கெனும் சிக்கலுக்காகப் போர் புரிந்துள்ளனர்.*

*அரசுரிமைக்குத் தடை ஏற்படும் பொழுதும் போர் நிகழ்வதுண்டு. உருவப்பஃறேர் இளஞ்சேட்சென்னியின் மகன் கரிகாற்பெருவளத்தான் பகைவரின் காவலினின்று தப்பிச் சென்று அரசுரிமையைப் பெறுவதற்காகப் போர் புரிந்தான் எனப் பட்டினப்பாலை (220 - 227) மற்றும் பொருநராற்றுப்படை (130 - 138) வாயிலாக அறியலாம்.*

*இளவரசர் தமக்கு முறையாக வரும் அரசுரிமையை வேந்தர் தருமுன்னரே, ஆட்சியுரிமை பெறுவதற்குப் போர் மேற்கொண்டனர் என்பதை,*

**தொன்றுஉறை துப்பின் நின் பகைஞரும் அல்லர்**

**அமர்வெம் காட்சியொடு மாறுஎதிர் எழுந்தவர்**

**நினையும் காலை நீயும் மற்றவர்க்கு**

**அனையை அல்லை அடுமான் தோன்றல்**

**பரந்துபடு நல்லிசை எய்தி மற்றுநீ**

**உயர்ந்தோர் உலகம் எய்திப் பின்னும்**

**ஒழிந்த தாயம் அவர்க்குரித் தன்றே**[16]

எனவரும் புறநானூற்று வஞ்சித் திணைப் பாடல் வரிகளால் புல்லாற்றூர் எயிற்றியனார் தெளிவுபடுத்துகிறார்.

மண்ணாசை காரணத்திற்காகப் போர்புரிந்தனர் என்பதை,

**எஞ்சா மண்நசை வேந்தனை வேந்தன்**
**அஞ்சுதகத் தலைச்சென்று அடல்குறித் தன்றே**[17]

எனத் தொல்காப்பிய நூற்பா உணர்த்துகின்றது. மேலும், மறப்பண்பு காரணத்திற்காகவும் பிறர் மீது ஆதிக்கம் செலுத்த வேண்டும் என்ற நோக்கத்திற்காகவும் தற்காப்பு எண்ணத்திற்காகவும் கோபம், பொறாமை முதலான காரணங்களுக்காகவும் போர் புரிந்துள்ளனர். போரில் இறந்தவர்க்கு வீர சுவர்க்கமுண்டு என்ற நம்பிக்கைக்காகவும் புகழ் பெறவேண்டும் என்ற காரணத்திற்காகவும் போர்புரிந்தனர் என்பதை அறியமுடிகிறது.

### 2.4.4. போரில் தவிர்க்கப்படுபவர்கள்

போரின் தொடக்கத்தில் பகைவர் நாட்டிற் புகுந்து அவர்க்குரிய ஆக்களைக் கவர்ந்து வருதல் அக்கால மரபு என்கின்றனர். ஆனால் போரும் ஆக்களைக் கவர்வதிலேயே தொடங்கியது என்று கருத முடியவில்லை. மாடு என்றாலே செல்வம், பொன் என்ற பொருள்படுதல் காணலாம். மேலும், சமயச் சின்னமாகவும் அவை விளங்கின. இதனால் அவற்றுக்கு ஊறு விளைவித்தலாகாது என்று கருதி அவற்றைக் கவர்ந்து வந்ததாகப் பண்டுதொட்டுக் கூறி வருகின்றனர். பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப்பெருவழுதி என்பானை நெட்டிமையார் பாடாண் திணையில் பாடும் பொழுது,

**ஆவும் ஆனியற் பார்ப்பன மாக்களும்**
**பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்**
**தென்புல வாழ்நர்க் கருங்கடன் இறுக்கும்**
**பொன்போற் புதல்வர்ப் பெறாஅ தீரும்**
**எம்அம்பு கடிவிடுதும் நும்அரண் சேர்மினென**[18]

எனப் பகைநாட்டில் பறையறைவித்துப் பின் போர் தொடுத்ததாகப் பாராட்டிக் கூறியுள்ளார். "நச்சினார்க்கினியர் தமிழர் போர் முறையில் கடைப்பிடித்த வேறு சில முறைகளாகச் சிலவற்றைக் குறிக்கின்றார், கோழைகளையும் மயிர்குலைந்தோரையும் பெண் பெயர் கொண்டோரையும் படைக்கருவிகளைக் கை நழுவ விட்டவரையும் ஒத்த படை இடாதோரையும் தமிழர் வீரர் கொல்லார் என்கின்றார்."[19]

"தமிழ் வீரர்கள் சமயத் துறையிலும் கலைத் துறையிலும் ஈடுபட்டவர்க்கு ஊறு செய்யாப் பண்பாட்டினர் என்பது செங்குட்டுவன் கங்கைக் கரையில் கனகவிசயரை வென்றபோது அஞ்சியோடிய வடபுலத்து வீரர் பலர் சடையுடையவராகவும் காவியுடை உடையவராகவும் சாம்பல் பூசிய உடம்பினராகவும் கையில் மயிற்பீலி ஏந்தியோராகவும் பாடும் பாணர்களாகவும் பல வாத்தியக் கருவிகளைத் தோளில் சுமந்தவராகவும் ஆடுகின்ற கூத்தர்களாகவும் வேடம் தரித்து ஓடியதாகச் சிலப்பதிகாரத்தில் இளங்கோவடிகளின் கூற்றில் உணரலாம்."[20]

மேலும், கடுஞ்சினங் கொண்டு மதுரையைச் சீறியழித்த கண்ணகியும் தீக்கடவுளை ஏவும்போது பசு, பத்தினிப்பெண்டிர், மூத்தோர், குழவி என இவர்களைக் கைவிட்டுத் தீயோரை மட்டும் அழிக்குமாறு பணித்ததாக அடிகள் கூறுவார். எனவே, போரில் நல்லவர்கள் அழியலாகாதென்பது அறியப்படும்.

வீரர் அல்லாரையும் அடிபிறக்கிட்டவரையும் புண்பட்டோரையும் முதியவரையும் இளையோரையும் கொல்வது படை மடமாகக் கருதப்பட்டது. மன்னர்கள் இறந்தால் தோல்வியை ஒப்புக்கொண்டு போரை நிறுத்துதலும் இரவில் பொருதலைத் தவிர்த்தலும் மரபு. அஞ்சியொளிந்தவனைத் தாக்குதலும் முற்றுகையிட்டபோது வெளியே வராது நெடுங்காலம் மக்கள் துயருறுமாறு உள்ளே கிடத்தலும் அறமற்ற செயல்களாகக் கருதப்பட்டுள்ளன.

## 2.5. புறத்திணைப் பாகுபாடு

இயற்கையிலேயே மிக்க வலிமை பெற்ற ஒருவன் குறைந்த வலிமை பெற்ற தன்னோடு வாழும் பிறரைப் பாதுகாத்தல் தன் கடன் என்று கொள்வதற்கு மாறாக அவர்தம் வலியற்ற நிலையையும் தன் வன்மையையும் பயன் கொண்டு அம்மிகப்பலரை அத்தனியொருவன் ஆட்டிப்படைக்கத் தொடங்கிய அத்தொல்லுலகக் காலத்தில் தோற்றம் கொண்டதே இப்போர் என்று சான்றோர் கூறியுள்ளனர்.

தொடக்கத்தில் இவ்வாறு தோற்றங்கொண்ட போரை போர்க்கள அடிப்படைக்காரணம் கருதி ஏழாக வகைப்படுத்தி விளக்கியுள்ளனர். அவை, வெட்சிப்போர், வஞ்சிப்போர், உழிஞைப்போர், தும்பைப்போர், வாகைப்போர், காஞ்சிப்போர், பாடாண்போர் என்று ஏழாகக் கூறுகின்றனர்.

பன்னிரு படலமும் அதனைத் தழுவிய புறப்பொருள் வெண்பாமாலையும் தொல்காப்பியரினின்றும் வேறுபட்டுத் திணைப்பகுப்பை வெட்சி, கரந்தை, வஞ்சி, காஞ்சி, நொச்சி, உழிஞை, தும்பை, வாகை, பாடாண், கைக்கிளை, பெருந்திணை, பொதுவியல் எனப் பன்னிரண்டாக மொழிகின்றன.

வீரசோழியமோ, பன்னிரண்டு திணைகளில் கைக்கிளை, பெருந்திணை என்ற இரண்டொழித்துப் பத்தே எனப்பகுக்கிறது. தொல்காப்பியத்தை ஒப்பித் திணை வகுத்த இலக்கண விளக்கம், திணைகள் ஏழே என்று சுட்டினும் ஒழிபியலுள் பன்னிருபடலம் கூறிய பொதுவியல், கைக்கிளை, பெருந்திணை என்ற திணைகளையும் அடக்கிக் கூறுகின்றது.

இவ்வாறு புறத்திணைப் பாகுபாடுகள் பலபட மொழியப் பெறுவதால் புறத்திணை பாகுபாடு இலக்கணநூலுக்கு ஏற்ப மாறுபடுவதை அறியலாம்.

### 2.5.1 பாகுபாட்டின் அடிப்படை

"அகத்திணைப் பாகுபாட்டிற்கு அடிப்படை காதலே ஆகும். ஆண், பெண் நெஞ்சங்களிடையே நிகழ்கின்ற ஒழுக்க வீறுகளே காதற்கிளைகளாக, திணைகளாக விளக்கப் பெற்றன. அதுபோலப் புறத்திணைப் பகுப்பிற்கு அடிப்படையானது வீரமே என்று தமிழ்க் காதல் ஆசிரியர் வ.சுப.மாணிக்கனார் கூறுகிறார்."[21]

புறத்திணைகளுள் வெட்சி, கரந்தை, வஞ்சி, காஞ்சி, நொச்சி, உழிஞை, தும்பை என்பவை முழுக்க முழுக்க வீரந்தெறிக்கும் போர்த்திணைகளாம். வாகைத்திணையும் வீரத்தை ஒரு கூறாக வீறுடன் கொண்டுள்ளது. பாடாண் திணையும் அத்தகைய பேறு உடையதேயாகும். எனவே, இத்திணைகள் இரண்டும் போர்த்திணைகள் என்று கூறப்படுகின்றன.

மேலும், ஐயனாரிதனார் பொதுவியல் திணையிலும் வீரக்குறிப்புத் துறைகள் வகுத்துள்ளார். இங்ஙனமாகப் புறத்திணையின் அடிச்சுவடாக வீரம் பொலிவதால் வீரமே புறத்திணைக்கு அடிப்படை எனலாம்.

அப்படியாயின், புறத்திணை என்ற பெயருக்கு மாறாக வீரத்திணை அல்லது போர்த்திணை என்றல்லவோ பெயர் சூட்டியிருப்பர் பெரியோர். மேலும், "புறத்திணை புறம், புறப்புறம், அகப்புறம் எனும் மூன்று பிரிவுகளை உள்ளடக்கியதாகும். இதில் புறம், புறப்புறம் என்ற இரு பிரிவுகளை வெண்பா மாலையார் குறிப்பிடுகின்றார். அகப்புறம் என்ற பிரிவை அறிஞர் உ.வே.சா. குறிப்பிடுகின்றார்."[22] எனவே, புறத்திணை வீரத்தோடு தொடர்புடைய அகப்புறப் பிரிவையும் கொண்டமையால் புறத்திணைப் பாகுபாட்டிற்கு வீரம் மட்டும் அடிப்படையன்று என்பது புலனாகின்றது.

தொல்காப்பியரும் ஏழு அகத்திணைகள் ஏழு புறத்திணைகள் எனப் பகுத்து விளக்கியுள்ளார். எனவே, அகத்திணைப் பாகுபாடே புறத்திணைப் பாகுபாட்டிற்கு அடிப்படையாயிற்று என்று இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும் கருதுகின்றனர்.

அகத்திணையும் புறத்திணையும் ஒப்புமை உடையன என்ற கருத்தினராய் அகத்திணையியலின் இறுதியில் புறத்திணை பற்றியும் புறத்திணையியலின் தொடக்கத்தில் அகத்திணை குறித்தும் நூற்பாக்களில் கூறியுள்ளார் தொல்காப்பியர். அவை,

**புறத்திணை மருங்கின் பொருந்தின் அல்லது**
**அகத்திணை மருங்கின் அளவுதல் இலவே**
**அகத்திணை மருங்கின் அரில்தப உணர்ந்தோர்**
**புறத்திணை இலக்கணம் திறப்படக் கிளப்பின்**[23]

என்பனவாம். தொல்காப்பிய நூற்பாக்கள் வைப்பு முறையும் இயல்களின் அமைப்பு முறையும் அகத்திணை, புறத்திணை இவற்றின் தொடர்பை வலியுறுத்துகின்றன. மேலும், 'வெட்சி தானே குறிஞ்சியது புறனே' என்ற தொல்காப்பியத் திணை விளக்கங்கள் வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி, பாடாண் என்ற ஏழு புறத்திணைகள் நிரலே முற்படக் கிளைத்த குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை, பெருந்திணை, கைக்கிளை என்ற ஏழு அகத்திணைகளுக்குப் புறனாம் என்பதைத் தெளிவுறுத்துகின்றன.

### 2.5.1.1. வெட்சித்திணை

வெட்சி என்பது நிரைகவர்தலாகும். யாரும் அறியாது எதிர்நாட்டவரின் பசுக்கூட்டத்தைக் கொண்டுவருவது. இது அகத்துறையான குறிஞ்சிக்குப் புறனானது. வெட்சிக்கான இலக்கணத்தைத் தொல்காப்பியம் கூறுவது,

**வேந்து விடுமுனைஞர் வேற்றுப்புலக் களவின்**
**ஆதந்து ஓம்பல் மேவற்றாகும்**[24]

என்பது குறிஞ்சிப் புறத்து வெட்சித்திணை விளக்கமாகும். குறிஞ்சிக்களவு போன்று வெட்சியிலும் யாமத்தில் யாரும் அறியாது ஆநிரைக் களவு போற்றப்படுகின்றது. வெட்சித் திணையைப் போர் தொடக்கத் திணையாக

அறிஞர்கள் கருதினர். மேலும், ஒரொப்புமை கிட்டும். குறிஞ்சிக்களவு ஏனைய முல்லை இரங்கற்கும் அடிப்படையானதோர் அன்புணர்ச்சியை அழகுற நெஞ்சில் பதித்தல்போல, வெட்சியின் போர்த்தொடக்கம் பிற திணைகளுக்குரிய நாட்டுக் காவலுக்கும் மதிற்காவலுக்கும் மறக்காவலுக்கும் வெற்றி மேவலுக்கும் உரிய மற உணர்ச்சியை எழுப்பக் கால்கோள் விழா நடத்துகின்றது எனலாம். எனவே போருக்கான தொடக்கமாகத்தான் கருதப்பட்டிருக்க வேண்டும். வெட்சித் துறைகள் 14 ஆகும். ஆநிரை கவர்வதால் எழும் துறைகளைக் கூறி மீட்பதால் நிகழ்கின்ற 21 துறைகளாக வகுத்துக் கூறியுள்ளார். அவற்றுள் ஒன்றான பாக்கத்து விரிச்சி என்பது நற்சொல் கேட்டலைக் குறிக்கும். இதனை நிமித்தம் பார்த்தல் என்பர்.

### 2.5.1.1.1. நிமித்தங்கள்

பண்டைக் காலத்தில் வேந்தர்களும் மறவர்களும் போருக்குப் புறப்படுமுன் விரிச்சி கேட்டல் மரபு. விரிச்சி என்பது நற்சொல் எனப்படும். போருக்குச் செல்லும் முன் தூய மலர்களை நெல்லுடன் தூவிக் கைதொழுது வணங்கி விரிச்சி கேட்டு நிற்பர் என்பதை,

**நெல்நீர் எறிந்து விரிச்சி ஓர்க்கும்**
**செம்முது பெண்டின் சொல்**[25]

என்ற புறப்பாட்டு விளக்குகிறது.

**படையியங்கு அரவம், பாக்கத்து விரிச்சி**[26]

என்ற தொல்காப்பிய வெட்சித் திணை அடிகளும் எடுத்தியம்புகின்றன.

### 2.5.1.1.2 உன்ன நிலை

பண்டைய வேந்தர்கள் விரிச்சி கேட்பதோடு மட்டுமில்லாமல், உன்ன மரத்தைக் காண்பது வழக்கம். நிமித்தம் பார்க்கும் மரங்களுள் உன்ன மரமும் ஒன்று.

**உடல் வேந்து அடுக்கிய உன்ன நிலையும்**[27]

*காண்பவர்க்கு வெற்றி கிடைக்குமாயின் தழைத்தும், தோல்வி நேருமாயின் வாடியும் காணப்படும். எனவே, வேந்தரும் மறவரும் நிமித்தம் பார்த்துப் போருக்குச் சென்றுள்ளனர் என்பதை அறிய முடிகிறது. சில வேளைகளில் வீரர்கள் உன்ன மரம் கரித்துக் காட்டிய வழியும் போருக்குச் சென்றனர் என்பது அம்மறவர்களின் மறமேம்பாடே காரணம். அவ்வாறு உன்னத்துப் பகைவனாக செல்வக் கடுங்கோ வாழியாதன் திகழ்ந்தான் என்று பதிற்றுப்பத்தின் வாயிலாக அறியமுடிகின்றது.*

### 2.5.1.2. வஞ்சித்திணை

*வஞ்சி என்பது மண்ணாசைக்காக நடக்கும் போராகும். இது அகத்திணையான முல்லையது புறமானது. இதனை,*

**வஞ்சி தானே முல்லையது புறனே**
**எஞ்சா மண்நசை வேந்தனை வேந்தன்**
**அஞ்சு தகத்தலைச் சென்று அடல்குறித் தன்றே**[28]

*என்கிறது தொல்காப்பியம். முல்லைப் புறத்திற்கு வஞ்சியின் விளக்கம் இது. முல்லைத்திணை கற்பின் சிறப்பைப் பாடுவதாம். களவினையே காலமெல்லாம் விரும்பும் தலைவனின் போக்கைத் தலைவி எதிர்த்துக் கற்பு நெறிகாட்டி வெற்றி கொண்டதன் விளக்கமே முல்லைத் திணை; அதன் மறுதலைத் திணையாம் வஞ்சி. மாற்றானின் மண் வெளவி இன்பம் பெற விரும்புந் தலைவனை எதிர்த்தலை உரிப்பொருளாகக் கொண்டுள்ளது.*

*வஞ்சிப்போர், மண் ஆசை காரணமாக நிகழும் போராம். ஆகவே அப்போர் இருநாடு எல்லைப் படைகளுக்கு இடையே நடைபெறுவதாகும். இதன் துறைகள் பதிமூன்றாகும்.*

#### 2.5.1.2.1. காவல் மரத்தினை அழித்தல்

*பண்டைத் தமிழர்கள் காவல் மரம் நாட்டையும் மக்களையும் காப்பாற்றும் என நம்பினர். அதனால், அம்மரத்தைக் காவல் மரம் என*

அழைத்தனர். பழந்தமிழ் வேந்தர்கள் ஒவ்வொருவரும் தம் நாட்டின் எல்லைப் பகுதியில் ஒரு குறிப்பிட்ட மரத்தைக் காவல் மரமாக வளர்த்துப் பாதுகாத்தனர். "வேங்கை, புன்னை, வேம்பு முதலிய மரங்களைத் தமிழ் வேந்தர் வெற்றியைக் குறிக்கும் மரங்களாக வைத்துப் போற்றி வந்தனர். இம்மரம் வழிபடுவதற்கு உரிய மரமாகக் கருதப்பட்டது. இம்மரத்தினை வீரர் இரவு பகலாகக் காத்து வந்தனர். இதனால் இம்மரம் 'கடிமரம்' எனப்பட்டது. கடிமரம் சில அரசரால் தலைநகரில் மட்டும் தனிமரமாகவும் சிலரால் சோலைதோறும் தனிமரமாகவும் வளர்க்கப்பட்டதாகத் தெரிகிறது"[29] என்கிறார் அரங்க.இராமலிங்கம்.

வேந்தர் தம் பகைவர்களின் காவல் மரத்தை வெட்டுவது வீரமாகவும் கொள்ளப்பட்டது. அதே போல் பகைவரின் வெட்டுதலுக்கு ஆட்படாமல் காவல் மரத்தைக் காப்பது மானமுடைய வேந்தர்களின் கடமையாகவும் கருதப்பட்டது. தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் தன் பகைவரின் காவல் மரத்தை உணர்த்தும் பாடல்,

**கூர்நல் அம்பின் கொடுவில் கூளியர்**
**கொள்வது கொண்டு, கொள்ளா மிச்சில்**
**கொள்பதம் ஒழிய வீசிய புலனும்;**
**வடிநவில் நவியம் பாய்தலின், ஊர்தொறும்**
**கடிமரம் துளங்கிய காவும் நெடுநகர்**
**வினைபுனை நல்இல் வெவ்எரி இனைப்ப**[30]

என வடித்துக் கூராக்கப் பெற்ற கோடாரி பாய்வதால் ஊர்தோறும் சோலைகளில் அமைந்த காவல் மரங்கள் நிலைகுலைந்தன என்று கல்லாடர் எடுத்துரைக்கிறார்.

காவல் மரத்தில் விளைந்த கனியினை உண்டதற்காக ஒரு பெண் கொலைத்தண்டம் பெற்றதைப் பரணர் பாடலில் நன்னன் வரலாறு உணர்த்தும். இவற்றிலிருந்து காவல்மரம் வேந்தரின் அடையாளமாகும். இருந்தும் குடை, மாலை, படை முதலியவற்றைச் சுட்டும்

தொல்காப்பியனார் காவல் மரத்தைச் சுட்டாமல் சென்றது எண்ணத்தக்கது எனலாம்.

### 2.5.1.3. உழிஞைத்திணை

உழிஞை என்பது மாற்றான் மதிலை வளைத்தலைக் குறிக்கும். இது அகத்திணையான மருதத்திற்குப் புறம்பானது. இதனை,

**உழிஞை தானே மருதத்துப் புறனே**
**முழுமுதல் அரணம் முற்றலும் கோடலும்**
**அனைநெறி மரபிற்று ஆகும் என்ப[31]**

எனத் தொல்காப்பியம் விளக்கம் தருகிறது. மாற்றான் அரணை முற்றுகையிட்டு முடிவில் கைக்கொள்ளல் இத்திணையின் குறிக்கோள் என்று கூறுகிறது.

“கோடல் என்பதை அகத்தோன் செயலாக்கி முற்றுதலைப் புறத்தோன் செயலாகக் கூறி இரண்டு ஒழுக்கங்களை இத்திணைக்கு உரியன என உரையாசிரியர் கூறுகின்றார்”[32] என்பதை அறியலாம்.

அகத்திணை மருதத்தில் தலைவன் வாயில் வேண்டத் தலைவி மறுத்தல்போல, உழிஞையில் புறத்தோன் வாயிற் கதவு திறக்குமாறு வேண்ட அகத்தோன் கதவடைத்து வாயில் மறுக்கின்றான். மருதத்தின் உரிப்பொருளில் ஊடலும் தொக்கி நின்றது. வள்ளுவர், ஊடல் கூடலின் முன் நடக்கின்ற விளையாட்டு என்பதை,

**ஊடுதல் காமத்திற் கின்பம் அதற்கின்பம்**
**கூடி முயங்கப் பெறின்[33]**

என வரும் பாடல் வரிகள் தெளிவுபடுத்துகின்றன. இவ்வகைக் கருத்தும் மதிலை முற்றல் மட்டும் உழிஞையன்று வெற்றி கொள்ளலுமே என்பதை விளக்குகிறது. இதன் துறைகள் எட்டாகும். இதன் எதிர் செயலாக 12 துறைகளையும் குறிப்பிடுகிறார்.

#### 2.5.1.3.1. நாள் பார்த்து வாளும் குடையும் புறப்படுதல்

போர் மேற்செல்லும் வேந்தன் கொற்றக் குடையையும் வாளையும் முறையே நல்ல நாளில் புறத்தே அனுப்புவது மரபு. இதனை,

**குடையும் வாளும் நாள் கோள் அன்றி**[34]

எனும் தொல்காப்பிய உழிஞைத் திணை அடிகள் எடுத்தியம்புகின்றன. வாள் முதலான படைக் கருவிகளைப் போரற்ற காலத்தில் மாலையிட்டு அலங்கரித்தலும் உண்டு.

**இவ்வே, பீலி அணிந்து, மாலைசூட்டிக்**
**கண்திரள் நோன்காழ் திருத்தி, நெய் அணிந்து**
**கடியுடை வியள்நக ரவ்வே; அவ்வே**[35]

என்னும் புறநானூற்றுப் பாடல் வரிகள் எடுத்துரைக்கின்றன.

நன்னாளில் வேந்தர் போர் தொடங்குவர். திருமாவளவன் நல்ல நாளில் வாளையும் குடையையும் முரசையும் போக்கியதை,

**செருவெங் காதலிற் றிருமா வளவன்**
**வாளுங்குடையு மயிர்க்கண் முரசும்**
**நாளொடு பெயர்ந்து நண்ணார்ப் பெறுகவிம்**
**மண்ணக மருங்கினென் வலிகெழு தோள்**[36]

என்றும், வடநாட்டு மன்னரை வெல்லும் பொருட்டு நல்ல நாளில் சேரன் செங்குட்டுவன் வாளையும், குடையையும் வெளிப்போக்கியதை,

**மறமிகு வாளு மாலைவெண் குடையும்**
**புறநிலைக் கோட்டப் புரிசையிற் புகுத்திப்**
**புரைதீர் வஞ்சி போந்தையிற் றொடுப்போன்**[37]

என்றும் இளங்கோவடிகள் உரைப்பர். பண்டைய வேந்தரிடம் நாள் பார்க்கும் பழக்கம் இருந்ததை அறியமுடிகிறது.

### 2.5.1.3.2. படைச்செலவு

*பகைவர் நாட்டின் மீது படையெடுத்துச் செல்லும் வேந்தன் தன் அடையாளப்பூவைச் சூடிப் படையை அழைத்துச் செல்வான். அவ்வாறு சென்ற படையினைப் புறநானூற்றுப் பாடல் காட்டுகிறது. இதனை,*

**தலையோர் நுங்கின் தீஞ்சேறு மிசைய,**
**இடையோர் பழத்தின் பைங்கனி மாந்தக்,**
**கடையோர், விடுவாய்ப் பிசிரொடு சுடுகிழங்குநுகர,**
**நிலமலர் வையத்து வலமுறை வளை,**
**வேந்துபீ டழித்த ஏந்து வேல் தானையொடு[38]**

*வேந்தனின் படைகள் தலை, இடை, கடை, என வரிசை முறைப்படிச் சென்றதையும் முன்னால் சென்ற படைவீரர்கள் பனம் நுங்கினை உண்டனர் என்றும் இடைச் சென்றவர்கள் பனம்பழத்தை உண்டதையும் இறுதியில் சென்றவர் கிழங்கினைச் சுட்டுத் தின்றனர் என்றும் ஆலத்தூர் கிழார் எனும் புலவர் எடுத்துரைக்கிறார்.*

### 2.5.1.3.3. அரண் முற்றுகையிடுதல்

*பழந்தமிழ் வேந்தர்கள் மேற்கொள்ளும் போர் இருநிலைகளில் நடைபெற்றது. அவை பரந்த இடத்தில் இரு பகை வேந்தர்களும் நேருக்கு நேர் நின்று போர் புரிவது ஒரு நிலை. மற்றொன்று கோட்டைக்குள்ளே பாதுகாப்பாக இருந்து கொண்டு போரிடுவது. இதன் காரணமாக எதிர்த்து வந்த வேந்தர் அரணை அழித்துக் கோட்டையைக் கைப்பற்றுவர். அதனால் பழந்தமிழ் வேந்தர் மதிலை, வலிமையுடனும் அரணைப் பாதுகாப்புடனும் அமைத்தனர் என்பதை,*

**நிலவரை இறந்த குண்டு கண் அகழி,**
**வான்தோய்வு அன்ன புரிசை, விசும்பின்**
**மீன் பூத்தன்ன உருவ ஞாயில்**

**கதிர்நுழை கல்லா மரம்பயில் கடிமிளை**

**அருங்குறும்பு உடைத்த கானப்பேர் எயில்**[39]

எனும் பாடல் வரிகள் எடுத்துரைக்கின்றன. “வேந்தன் தங்கியிருக்கும் கோட்டையைச் சுற்றிப் பல அரண்கள் அமைந்திருக்கும். அவை முறையே மதிலரண், நிலவரண், நீரரண், காட்டரண், மலையரண் என ஐவகைப்படும்”[40] என்கிறார் அரங்க.இராமலிங்கம்.

## 2.5.1.4. தும்பைத்திணை

தும்பை என்பது அதிரப்போர் புரிதலைக் குறிக்கும். இது அகத்திணையான நெய்தலது புறம்பானது. இதனை,

**தும்பை தானே நெய்தலது புறனே**

**மைந்துபொருளாக வந்த வேந்தனைச்**

**சென்றுதலை யழிக்கும் சிறப்பிற் றென்ப**[41]

எனத் தொல்காப்பிய நூற்பா வரிகள் விளக்கம் தருகின்றன. தும்பை என்னும் திணை நெய்தல் என்னும் அகத்திணைக்குப் புறனாம். மைந்துபொருளாக வந்த வேந்தனைச் சென்று தலையழிக்கும் சிறப்பிற்று. எனவே, அழித்தலைக் குறிக்கோளாகக் கொண்டதாம்.

இருபெருவேந்தரும் ஒருகளத்துப் பொருதலின் அதற்கு இடம் காடும் மலையும் கழனியும் ஆகாமையானும், களம் மணலும் பரந்த வெளிநிலத்துப் பொருதல் வேண்டுதலானும் அந்நிலம் கடல்சார்ந்த வழியல்லது இன்மையானும் நெய்தற்கு ஓதிய எற்பாடு போர்த்தொழிற்கு முடிவாதலாலும் நெய்தற்குப் புறனாயிற்று எனலாம். இதன் துறைகள் பன்னிரெண்டாகும்.

### 2.5.1.4.1. வீரரைப் போருக்கு அழைத்தல்

போர்க்காலத்தில் முரசு அறிவித்தோ அல்லது தூதுவரை அனுப்பியோ தன் நாட்டிலுள்ள வீரர்களைப் போருக்கு அழைத்ததை,

**வருகதில் வல்லே; வருகதில் வல்லென**

**வேந்துவிடு விழுத்தூ தாங்காங் கிசைப்ப,**

**நூலரி மாலை சூடிக் காலிற்**

**றமியன் வந்த மூதி லாளன்[42]**

*எனப் புறநானூறு தும்பைத் திணைப் பாடல் குறிப்பிடுகிறது. போருக்குப் புறப்படும் மறவன் நூலரிமாலையைச் சூடிக் காலால் நடந்து சென்று வேந்தனிடம் அடையாளப் பூக்களைச் சூடுவான். இவ்வாறு ஒவ்வொரு வீரனையும் போருக்கு அழைப்பது பண்டைய மரபாகும். மேலும், போருக்கு வருமாறு தண்ணுமையை முழங்கி வீரரை அழைப்பர்.*

**போர்ப்புறு தண்ணுமை யார்ப்பெழுந்து நுவல[43]**

*என்று பதிற்றுப்பத்து வரி குறிப்பிடுகிறது.*

**2.5.1.4.2. போர் முரசு**

*போர் முரசு அழிக்கப்படுமானால், அம்முரசுக்குரிய வேந்தன் தோற்றவனாகக் கருதப்படுவான். அதனால் பகைவரின் முரசைக் கைப்பற்றுவது வெற்றிக்கு அடையாளமாகக் கருதப்பட்டது. முரசின் சிறப்பைச் சான்றோர்கள் "போர் செய்து வருத்தாமல் தன் அச்சந் தரத்தக்க ஒலியினாலேயே பகைவரை வெருவியோட வைத்து வேந்தனுக்கு வெற்றியைத் தேடித்தந்த முரசு என்று குறிக்கப்பட்டது"[44] என அரங்க.இராமலிங்கம் கூறுகிறார்.*

*போரில் முரசு முழங்குவதோடு தடாரிப்பறை, போர்ப்பறை முதலியனவும் முழங்கின என்பதை,*

**வெம்போர் மன்னர் தெண்கிணை கறங்க[45]**

*எனத் தடாரிப்பறை முழங்கியதைப் பதிற்றுப்பத்து குறிப்பிடுகிறது.*

### 2.5.1.5. வாகைத்திணை

வாகை என்பது வென்றவனது சிறப்பினைக் கூறுவது. இது அகத்திணையான பாலைக்குப் புறம்பானது. இதனை,

**வாகை தானே பாலையது புறனே**
**தாவில் கொள்கைத் தத்தம் கூற்றைப்**
**பாகுபட மிகுதிப் படுத்தல் என்ப[46]**

என்ற பாடல் குறிக்கிறது.

பாலையாவது தனக்கென ஒருநிலமின்றி எல்லா நிலத்தினும் காலம் பற்றிப் பிறப்பது போல் இதுவும் எல்லாக் காலத்திலும் காலம் பற்றி நிகழ்வதாலும் ஒத்தார் இருவர் புணர்ச்சியின் நின்றும் புகழ்ச்சி காரணமாகப் பிரியுமாறு போலத் தன்னோடும் ஒத்தாரின் நின்றும் நீக்கிப் புகழப்படுவதாலும் அதற்கு இது புறனாயிற்று என உரையாசிரியர் கூறுகிறார். மேலும் “பாலை அறக்காதலை வளர்த்து மீண்டும் இன்பத்தை மிகுப்பதுபோல, வாகை மறக்காதலை வளர்த்து வெற்றி இன்பம் விளைவிக்கிறது”[47] என்று கூறியுள்ளதை அறிய முடிகிறது. இதன் துறைகள் பதினெட்டாகும்.

#### 2.5.1.5.1. பாசறை நிலை

வேந்தர்கள் போர் மேற்கொண்ட பொழுது பகை நாட்டில் நீண்ட நாள்கள் தங்க நேரிட்டது. வேந்தனும் அவனது படைகளும் தங்கிய இடத்தைப் பாசறை, கட்டூர் என இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. பாசறை என்பது போருக்கு முன்னும் பின்னும் களிறும் மாவும் தேரும் படைவீரரும் தங்கியிருக்கும் பரந்த இடப்பகுதி. இப்பாசறை பெரும்பாலும் ஊர்ப்புறத்தே இயற்கையாக அமைந்திருக்கும் அல்லது செயற்கையாக ஏற்படுத்தப்பட்டிருக்கும். இயற்கைச் சூழலில் மரம், செடி, கொடி, மலை முதலியவை சூழப்பெற்ற பரந்த இடப்பகுதியைப் பாசறையாக ஏற்படுத்திக் கொள்ளுதல் பண்டை வேந்தர் மரபு. இவ்வாறு இயற்கையாக அமைந்த

*பாசறை பகைவர் கண்களுக்கு எளிதில் புலப்படாது. ஆனால் பகைவர் எளிதில் புலனாகும் வண்ணம் அமைந்திருக்கும்”*[48] *என்கிறார் கு.வெ.பாலசுப்பிரமணியன். இதனை, ‘பார்வற் பாசறை’ (84:5) எனப் பதிற்றுப்பத்துக் குறிப்பிடுகிறது. இதனைப் போன்றே ‘பருந்துபறக் கல்லாப் பார்வை பாசறை’ (231) என மதுரைக்காஞ்சி குறிப்பிடுகின்றது. இவற்றில் இருந்து பாசறை என்பது வேந்தனின் ஊர்ப்புறத்தே இயற்கையாய் அமைந்த அரணை உடையது; பகைவரின் கண்ணுக்கு எளிதில் புலப்படாதது; உள்ளிருப்போருக்குப் பகைவரைக் காட்டும் இயல்பினது; களிறும் மாவும் தேரும் படைவீரரும் ஒருங்கே தங்கியிருக்கும் அளவிற்குப் பரந்த இடத்தினையுடையது என அறிந்துகொள்ள முடிகின்றது.*

*இத்தகு பாசறையில் வேந்தனும் வீரரும் தங்கியிருப்பர். பகலில் போரிடுவதும் இரவில் போரை நிறுத்திப் பாசறையில் ஓய்வெடுப்பதும் பண்டையோர் போர் நெறி. இரவில் வேந்தன் துயில் கொள்ளாது, புண்பட்ட வீரர்களுக்கு ஆறுதல் கூறி வரும் பாசறை வாழ்வினை நெடுநல்வாடை கூறுகிறது.*

**நள்ளென் யாமத்துப் பள்ளி கொள்ளான்**
**சிலரொடு திரிதரும் வேந்தன்**
**பலரொடு முரணிய பாசறைத் தொழிலே**[49]

*எனச் சிறப்பித்தார் நக்கீரர். கட்டூர் என்பது பாசறையைக் குறிக்கும். வேற்றுப்புலம் சென்று பகை முடியுமட்டும் படைகள் தங்குவதற்காகப் புதிதாக ஏற்படுத்திய பாசறையைக் கட்டூர் எனப் பழந்தமிழ் இலக்கியங்கள் சுட்டுகின்றன. இது செயற்கையான சூழலில் உருவாக்கப்பட்டது. இதனை,*

**வேறுபுலத் திறுத்த கட்டூர்**[50]

*என்று பதிற்றுப்பத்து குறிப்பிடுகின்றது. பகைவர் நாட்டிடத்தே சென்றமைத்துத் தங்கிய பாசறை என்று ஔவை சு. துரைசாமிப் பிள்ளையும் வேற்று நாட்டிடத்தே சென்று தங்கிய பாசறை எனப் பதிற்றுப்பத்தின் பழைய உரைகாரரும் குறிப்பிடுகின்றனர்.*

### 2.5.1.5.2. மாலை சூட்டிப் புறப்படுதல்

*போருக்கெழும் வேந்தரும் தத்தமக்குரிய மாலையினைச் சூடுதல் மரபு. சேர, சோழ, பாண்டியருக்கு முறையே, பனை, ஆத்தி, வேம்பு ஆகிய மாலைகள் உரியன என்பார் தொல்காப்பியனார். மூவேந்தரும் தத்தமக்குரிய மாலையினை அணிந்து போர்புரிந்ததை,*

**இரும்பனம் போந்தைத் தோடுங் கருஞ்சினை**
**அரவாய் வேம்பின் அங்குழைத் தெரியலும்**
**ஓங்கிருஞ் சென்னி மேம்பட மிலைந்த**
**இருபெரு வேந்தரு மொருகளத் தவிய**
**வெண்ணித் தாக்கிய வெருவரு நோன்றாட்**
**கண்ணார் கண்ணிக் கரிகால் வளவன்**[51]

*எனப் பொருநராற்றுப்படை குறிப்பிடுகிறது. வேம்பின் தளிரைச் சூடிப் போருக்கெழுந்த தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனை இடைக்குன்றூர் கிழார் வாகைத் திணைப் பாடலில்,*

**மூதூர் வாயில் பனிக்கயம் மண்ணி**
**மன்ற வேம்பின் ஒண்குழை மலைந்து**
**தெண்கிணை முன்னர்க் களிற்றின் இயலி**
**வெம்போர்ச் செழியனும் வந்தனன்; எதிர்ந்த**[52]

*எனக் கூறியுள்ளார். மற்றொரு வாகைத் திணைப் பாடலிலும் நூலரி மாலையினைச் சூடித் தனியாய்ப் போருக்கு நடந்து செல்லும் மறவனை ஓரம்போகியார் பாடலில் அறியமுடிகிறது.*

### 2.5.1.5.3. போர்ப்படைகள்

*போர் நடைபெறுவதற்கும் நாட்டைக் காப்பதற்கும் படைகள் பயன்பட்டன. "படையை வேந்தனின் திருமேனி எனச் செப்புகிறது சிலப்பதிகாரம்".*[53] *இக்கூற்றிலிருந்து படைகள் எவ்வளவு முக்கியத்துவம்*

வாய்ந்தவை என உணரலாம். பழந்தமிழ் வேந்தர்கள் நிலப்படை, கடற்படை ஆகிய இருவகைப் படைகளைப் பயன்படுத்தினர்.

நிலப்படை "காலாட்படை, குதிரைப்படை, யானைப்படை, தேர்ப்படை என்ற நான்கு வகையான படைகளை வேந்தர்கள் போரில் பயன்படுத்தினர். படைகளின் வகைகளாக மூலப்படை, கூளிப்படை, நாட்டுப்படை, காட்டுப்படை, துணைப்படை, பகைப்படை என ஆறு பிரிவுகளையுடையது"[54] என்கிறார் அரங்க.இராமலிங்கம்.

நால்வகைப் படைத்தலைவரும் சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியைச் சூழ்ந்திருப்பதை,

**புகர் நுதலவிர் பொற்கோட் டியானையர்**
**கவர் பரிக் கச்சை நன்மா வினர்**
**வடிமணி வாங்குருள**
**கொடிமிசை நற்றேர்க் குழுவினர்**
**கதழிசை வன் கணினர்**
**வாளின் வாழ்நரார்வமொ டீண்டிக்**
**கடலொலி கொண்ட தானை**[55]

என உலோச்சனார் புறநானூற்றில் குறிப்பிடுகிறார்.

### 2.5.1.5.4. போர்க் கருவிகள்

போரில் பயன்படுத்தப்படும் கருவிகள் போர்க்கருவிகள் எனப்படும். முத்தமிழ் வேந்தர்கள் "பெரிய பாறைகள், கூர்மையான கற்கள், கதை, கம்பு, கத்தி, ஈட்டி, வாள், கோடரி, வில், அம்பு முதலியவற்றைப் போர்க் கருவிகளாகப் பயன்படுத்தினர். தமிழகத்தின் மதில்களில் விற்பொறி, கருவிரல் ஊகம், கல்லுமிழ் கவண், பரிவுறு வெந்நெய், பாகடு குழிசி, காய் பொன்னுலை, கல்லிடு கூடை, தொடக்கு, ஆண்டலையடுப்பு, கவை, கழு, கைபெருசி, சிரல், பன்றி, பணை, கோல், குந்து, வேல்"[56] முதலிய போர்க் கருவிப் பொறிகள் அமைந்திருந்ததாகக் கலைக்களஞ்சியம் கூறுகிறது.

சங்க காலப் போர்க் கருவிகளுள் சிறப்பாகப் போற்றப்படுவது வேல். போர்க்களத்திலும் பாசறையிலும் வேலைப் புகழ்ந்து பாடும் மரபு உண்டு. போர்க் கருவிகளுள் வில், வாள் இவற்றைவிட வேலுக்கே முதன்மையான இடம் தரப்பட்டுள்ளது. போர் முனைக்கு எடுத்துச் செல்வதற்கு முன்பு வேலுக்கு வழிபாடு நடைபெற்றது என்பதை,

**மங்கல மகளிரொடு மாலை சூட்டி**
**இன்குரல் இரும்பை யாழொடு ததும்பத்**
**தெண்ணீர்ப் படுவினும் தெருவினும் திரிந்து**
**மண்முழு தழுங்கச் செல்லினுமஞ் செல்லும்**[57]

என்று புறநானூற்றுப் பாடல் வரிகள் எடுத்துரைக்கின்றன.

### 2.5.1.6. காஞ்சித்திணை

காஞ்சி என்பது நிலையாமையாகும். இது அகத்திணையான பெருந்திணைக்குப் புறம்பானது. இதனை,

**காஞ்சி தானே பெருந்திணைப் புறனே**
**பாங்கம் சிறப்பின் பல்லாற்றானும்**
**நில்லா உலகம் புல்லிய நெறித்தே**[58]

என்ற தொல்காப்பிய நூற்பா காஞ்சித் திணை நிலையாமை வெற்றியைக் குறிப்பிடுகிறது. இத்திணை அகப்பெருந்திணைக்குப் புறமாகும். "கிடைத்த காமவின்பம் நிலையற்றுப் போனதால் நெஞ்சம் தாங்காது வீங்கிய அயலாரின் பெருந்திணை நிலையாகிய, நிலையாமைக் குறிப்புடைய காஞ்சித் திணைக்கு ஒப்புமை உடையதாம் என்று உரையாசிரியர் குறிப்பிடுகின்றார்."[59] இளம்பூரணர் நிலையாமையினை மூன்றாகக் கூறுகிறார். அவை, இளமை நிலையாமை, செல்வம் நிலையாமை, யாக்கை நிலையாமையாகும். இதன் துறைகள் இருபதாகும்.

### 2.5.1.6.1. வஞ்சினம்

போருக்குச் செல்வதற்கு முன் வேந்தரும் வீரரும் வஞ்சினம் கூறுதல் மரபு. வேந்தர்களும் படைவீரர்களும் உரைக்கும் வஞ்சினம் போரில் வெற்றிபெற அவர்களை ஊக்கப்படுத்துவதற்கும் சிறப்பாகப் போரிடச் செய்வதற்குமாகும். படைவீரர்களின் நம்பிக்கை சிதையாமல் இருப்பதற்கும் வஞ்சினம் கூறப்பட்டது. அரசர்கள் தம் பகைவருக்கு வஞ்சினம் கூறுவதும் உண்டு. படைவீரர்கள் தங்களுக்குள்ளேயும் வஞ்சினம் கூறிக் கொள்ளுதல் உண்டு. இதனை,

**எம்முன் தப்பியோன் தம்பியொடு ஒராங்கு**
**நாளைச் செய்குவென் அமரெனக் கூறி[60]**

என்பதனால் தன் முன்னோனைக் கொன்றவனை அவன் தம்பியோடு சேர்த்துக் கொல்லப் போவதாக மறவன் வஞ்சினம் கூறுவதைப் புறநானூறு எடுத்துரைக்கிறது. இன்று இனிது உண்டு மகிழ்ந்தோம். நாளைப் பகைவர் மதிலைப் பாழ் செய்யாது விருந்துண்ணல் செய்யோம் என வஞ்சினம் உரைக்கும் வீரர் நிலையினை,

**இன்றினிது நுகர்ந்தன மாயி னாளை**
**மண்புனை யிஞ்சி மதில்கடந் தல்ல**
**உண்குவ மல்லேம் புகாவெனக் கூறிக்**
**கண்ணி கண்ணிய வயவர் பெருமகன்[61]**

என்று பதிற்றுப்பத்துப் பாடல் வரிகள் எடுத்துரைக்கின்றன.

### 2.5.1.7. பாடாண்திணை

பாடாண் என்பது பாடப்படும் ஆண் மகனது ஒழுகலாறுகளைக் கூறுவது. இது அகத்திணையான கைக்கிளைக்குப் புறம்பானது. இதனை,

**பாடாண் பகுதி கைக்கிளைப் புறனே**
**நாடுங்காலை நாலிரண் டுடைத்தே[62]**

ஒருதலைக் காமமாகி வருவது கைக்கிளை அகத்திணையாம். அதன் புறமாகிய பாடாண் திணையில் தலைவன் பரவலும் புகழ்ச்சியும் வேண்டப் புலவன் பரிசில் வேண்டுதலின் ஒருதலைக் காமக் கைக்கிளைக்குப் பாடாண் திணை ஒப்புமை உடையதாயிற்று. இதன் துறைகள் இருபத்திநான்காகும்.

ஒரு மன்னனின் இசை, வலிமை, தண்ணொளி, வண்மை முதலியவற்றைப் புகழ்ந்து பாடுதல் பாட்டு ஆகும். பாடாண் என்னும் சொல்லுக்குப் பாடப்படுகின்ற ஆண்மகனுடைய ஒழுகலாறு என்பது பொருள். இது வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை என்றும் கூறுவார் ஆசிரியர் நச்சினார்க்கினியர்.

மேல் சொல்லப்பட்ட போர்களை இரண்டு வகையாகப் பிரிப்பர். அவை நின்று தாக்கும் போர்களை அழிவுப்போர்கள் என்றும் சென்று தாக்கும் போர்களை ஆக்கப்போர்கள் என்றும் கூறுவர். “நிரை கவரவும், நாடு கைப்பற்றவும், அரண் அழிக்கும், ஆற்றல் நிலை நாட்டவும் மேற்கொண்ட போர்கள் அழிவுப் போர்களாகும்”[63] என்று கூறியுள்ளதை அறியமுடிகிறது.

### 2.5.1.7.1 போர் அறம்

போர் தொடங்குவதற்கு முன்னர்ப் போர் பற்றிய செய்தியினை முரசறைந்து தெரிவிப்பர். அப்பொழுது ஆநிரை, பார்ப்பனர், பெண்டிர், பிணியுடையோர், மக்கட் பெற்றோர் முதலானவர்களுக்குப் போரினால் துன்பம் ஏற்படாதவாறு பாதுகாப்பர் எனப் புறநானூறு பாடாண் திணைப் பாடல் (9:1-6) எடுத்தியம்புகிறது. அறப்போர் மேற்கொள்வதைப் பண்டைத் தமிழர் மறமாகப் போற்றினர். மேலும், அறப்போர் என்பது “தமிழ் வேந்தர் கொடைமடம் படுதல் அல்லது படைமடம் படாத தன்மையினர் என்பதைப் புறநானூறு குறிப்பிடுகின்றது. இப்புறப் பாடலுக்கு உரை எழுதிய உ.வே.சாமிநாதையர் படைமடமென்றது, வீரரல்லாதோர் மேலும் புறமுதுகிட்டார் மேலும் புண்பட்டோர் மேலும் மூத்தோர் இளையோர் மேலும் செல்லுதல் இல்லை என்பர். போரில் ஈடுபடும் இருதிறத்து

வீரர்களும் ஓர் இடத்தைத் தேர்ந்தெடுத்து அவ்விடத்தில் நேருக்கு நேர் நின்று போரிடுவர். இக்காலத்தில் நடை பெறுதல் போன்று திடீரென்று தாக்குதல், மறைந்து இருந்து தாக்குதல் போன்ற போர் முறைகள் அக்காலத்தில் இல்லை. பலர் அறிய வஞ்சினம் கூறிப் பொது இடத்தில் தம்மொடு ஒப்பாரிடம் மட்டுமே போரிடும் அறப்பண்பு வாய்ந்தவர்களாகப் பழந்தமிழர்கள் விளங்கினர்.''[64]

**என்னைமுன் நில்லன்மின் தெவ்வீர் பலரென்னை**

**முன்நின்று கல்நின் றவர்**[65]

என்னும் குறள் சங்க கால வீரரின் அறப்பண்பையும் மறப்பண்பையும் ஒருசேர விளக்குவதாக அமைந்துள்ளது.

### 2.5.1.7.2. போரில் நடுநிலைமை

போர்க்களத்தில் நடுநிலைமை என்பது நண்பர்கள், உறவினர்கள் என்று பாராட்டாமல் தம்மை எதிர்த்து வரும் பகை நாட்டு வீரர்களுடன் போர் செய்வதும் படைவீரர் ஒருங்கே கூடித் தங்கியிருந்த கடல் போன்ற பாசறையிலிருந்து நீங்கிச் சென்று வேல் முதலிய படைக் கருவிகளைக் கொண்டு தம்மவர் அயலவர் என்று பாராமல் போர் செய்தனர் என்பதை,

**வெண்குடை மதியம் மேல்நிலாத் திகழ்தரக்**

**கண்கூடு இறுத்த கடல்மருள் பாசறைக்**

**குமரிப்படை தழீஇய கூற்றுவினை ஆடவர்**

**தமர் பிறர் அறியா அமர்மயங்கு அழுவத்து**[66]

எனப் பெருந்தலைச் சாத்தனார் பாடலைப் பாடியுள்ளார். எதிர்த்து வருபவர் உறவினராய் இருப்பினும் தம் நாட்டு நலங்கருதிப் போரிட்டனர் என்பதிலிருந்து போர் வீரர்களின் நடுநிலைமை புலனாகின்றது.

### 2.5.1.7.3. போரும் புலவரும்

பண்டைய தமிழ் வேந்தருக்கு வீர உணர்ச்சியினை ஊட்டிச் சிறப்பாகப் போரிடச்செய்வதற்கும் அறிவுரை கூறியும் தூது சென்றும் போரினைத் தடுத்து நிறுத்தவும் புலவர்கள் துணை நின்றனர்.

வேந்தர்கள் புலவர்களுக்கு உயர்ந்த இடம் தந்து போற்றினர். அதனால் புலவர்கள் வேந்தனின் ஆட்சியிலும் மக்கள் நலனிலும் ஆதரவுடன் செயல்பட்டனர். புலவர் பகைவர் நாடு அழியும் தன்மையை எடுத்துக்கூறி, வேந்தருக்கு வீர உணர்ச்சி ஊட்டினர் என்பதை,

**வாடுக இறைவநின் கண்ணி ஒன்னார்**

**நாடுசுடு கமழ்புகை எறித்த லானே![67]**

என்னும் பாடாண் திணையில் அமைந்த புறப்பாட்டில் உன் தலையில் உள்ள மாலை நீ பகைவர் நாட்டைச் சுடுகின்ற தீயினால் வாடுவதாக எனக் கூறிப் பாண்டியன் பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதியைக் காரிக்கிழார் புகழ்கிறார்.

தன் நாட்டின் மீது மற்றொரு மன்னர் படையெடுக்க முற்படுங்கால் அந்நாட்டரசன் புலவர்களைத் தூது அனுப்புவதும் உண்டு. புறநானூற்றுப் பாடலொன்று ஔவையார் அதியமானுக்காக, தொண்டைமானிடம் தூது செல்வதைத் தெரிவிக்கிறது.

போர் மேற்கொண்டு பாசறையிலேயே தம் வாழ்நாளைக் கழிக்கும் வேந்தருக்கு, இல்லறத்தை நினைவுபடுத்திப் போரை விரைவில் முடிக்கத் தூண்டுவர். இதனை,

**பெருந்தகைக் கமர்ந்த மென்சொற் றிருமுகத்து**

**மணியிழை யரிவை காணிய வொருநாட்**

**பூண்க மாளநின் புரவி நெடுந்தேர்[68]**

எனப் பெருங்குன்றூர்க்கிழார் குடக்கோ இளஞ்சேரல் இரும்பொறைக்கு அறிவுறுத்தியுள்ளதை அறியமுடிகிறது.

## 2.6 புறப்பொருள் வெண்பாமாலை - திணைப்பகுப்பு

அகத்திணைப் பகுப்பைப் புறத்திணைப் பகுப்பிற்கு ஒப்புமை கூறும் தொல்காப்பிய நெறியில் இருந்து பன்னிருபடலநெறி மாறுபடுகிறது. தொல்காப்பியம் வெட்சித் திணையை மன்னுறு தொழிலாகவே கருதப் பன்னிருபடலமோ,

**தன்னுறு தொழிலே வேந்துறு தொழிலென்**
**றன்ன இருவகைத்தே வெட்சி**[69]

என்று இருவகை வெட்சிகளை இசைக்கின்றது.

தொல்காப்பிய நெறி வெட்சி, உழிஞை என்று கூறிய திணைகளுக்கு மறுதலைத் திணைகளாக,

**வெட்சியுங் கரந்தையும் தம்முன் மாறே**[70]
**வஞ்சியுங் காஞ்சியும் தம்முன் மாறே**[71]
**உழிஞையும் நொச்சியும் தம்முன் மாறே**[72]

என்று பன்னிரு படலம், கரந்தை, காஞ்சி, நொச்சி என்ற திணைகளைச் சுட்டுகின்றது. மேலும், அகத்திணைக் காமத்திற்குரிய கைக்கிளை, பெருந்திணைகள் பன்னிருபடலத்தில் புறப்பொருளாகிவிட்டன. இவ்வாறு வேறுபட்ட கொள்கைகளை உடைய தொல்காப்பியரும் பன்னிரு படலமும் திணை மற்றும் துறைகளின் எண்ணிக்கையில் மாறுபடுகின்றன. இக்கருத்தாக்கமே புறப்பொருள் வெண்பாமாலை எழுதிய ஐயனாரிதனார் இடமும் காணப்படுகிறது. இவரும் புறத்திணைகளைப் பன்னிரு படலமாகத் தொகுத்துள்ளார்.

பன்னிரு படலத்தில் குறிப்பிட்டுள்ள வெட்சியைப் போன்று தன்னுறு தொழிலாகவும் மன்னுறு தொழிலாகவும் விளக்குகிறார்.

தொல்காப்பியர் திணை வைப்பு முறைக்கும் புறப்பொருள் வெண்பாமாலையார் திணை வைப்பு முறைக்கும் மாறுபடுகிறது. திணைப்பகுப்பில் தொல்காப்பியர் காஞ்சித் திணையை பாடாண் திணைக்கு முன்வைக்கின்றார். ஆனால், புறப்பொருள் வெண்பாமாலையாரோ நொச்சிப் படலத்திற்கு முன் காஞ்சிப் படலம் வைத்துள்ளார். தொல்காப்பியர் குறிப்பிடும் காஞ்சித்திணை நிலையாமை குறித்தது. புறப்பொருள் வெண்பாமாலையார் வஞ்சிப் படலத்தின் எதிர் செயலாகக் காஞ்சிப் படலத்தைக் குறிப்பிடுகிறார். இவ்வாறே துறையிலும் தொல்காப்பியர் வெட்சியில் கூறிய குடிநிலை, பனம்பூ சூடல், வேப்பம்பூ சூடல், ஆத்திச்சூடல் முதலான துறைகளைப் பொதுவியலில் வைத்துள்ளார் எனச் சில இடங்களில் வேறுபடுகிறார்.

### 2.6.1. நடுகல்

தொல்காப்பியத்தில் திணையில் கூறப்பட்ட செய்தி புறப்பொருள் வெண்பாமாலையில் பொதுவியல் திணையில் நடுகல் அமைப்புப் பற்றிக் கூறுகிறது. போர்க்களத்தில் பகைவர் முன்னின்று விழுப்புண்பட்டு வீர மரணமடைந்த வீரர்களை நினைவுகூர அமைக்கப்பட்டதே நடுகல்லாகும். நடுகல்லில் வீரனின் பெயரும் பெருமையும் பெற்ற சிறப்புகளும் பொறிக்கப்பட்டன. பின்னர் இது வழிபடும் நடுகல்லாகவும் மாறியது. இதன் அமைப்பு முறையை,

**காட்சி கால்கோள் நீர்ப்படை நடுகல்**
**சீர்த்தகு மரபில் பெரும்படை வாழ்த்தலென்று**
**இம்மூன்று மரபில் கல்லொடு**[73]

என்று தொல்காப்பிய நூற்பா கூறுகிறது. நடுகல்லைத் தேர்ந்தெடுத்து நீராட்டுவர். நீராட்டிய கல்லை ஏற்ற இடத்தில் நட்டு வழிபடுவர்.

**புடைநடு கல்லின் நாட்பலி ஊட்டி,**
**நல்நீ ராட்டி, நெய்ந்நறைக் கொளீஇய**[74]

என்றும் போர்க்களத்தில் பொருதுபட்டு வீழ்ந்த வீரர்களின் பெயரும், பீடும் எழுதி மயிற்றோகை சூட்டி வழிபடுவர். இதனை,

**நல்அமர்க் கடந்த நாணுடை மறவர்**
**பெயரும் பீடும் எழுதி, அதர்தொறும்**
**பீலி சூட்டிய நிலை நடுகல்**[75]

என இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. நடுகற்களுக்கு மயிற்றோகை சூட்டி, துடியை அடித்து நெல்லால் ஆகிய கள்ளோடு செம்மறியாட்டுக் குட்டியைப் பலியிடுவர் என்று அகநானூறு கூறுகிறது.

இக்காலத்தில் வழக்கத்திலிருக்கும் மதுரை வீரன், குதிரை வீரன், முனியன், நொண்டி, இருளன், கருப்பன் முதலிய சிறு தெய்வங்கள் நடுகல்லின் உருமாறிய அல்லது வளர்ச்சி பெற்ற நிலைகள் என்றே கூறலாம். ஊர்மன்றங்களில் உள்ள கற்களில் கடவுள் உறைவதாக நம்பினர். அக்கற்களுக்கு வழிபாடுகளும் நடைபெற்றன.

இந்த நம்பிக்கையின் அடிப்படையில் நடுகல்லிலும் வீரனின் ஆவியிருப்பதாக நம்பி வழிபட்டனர். பழந்தமிழ் இலக்கியத்திலிருந்தும் மூன்று நிலையில் இறந்தவர்களுக்கு நடுகல் எடுக்கப்பட்டதைக் காணமுடிகிறது.

**தொகுப்புரை**

'சங்க இலக்கியம் காட்டும் போர் நெறிமுறைகள்' எனும் இந்த இயலின் வழி பெறப்பட்ட ஆய்வுக் கருத்துகள் தொகுப்புரையாக இடம்பெறுகின்றன.

- சங்க இலக்கியம் என்பது பதினெண்மேற்கணக்கு என்று கூறப்படும் பதினெட்டு நூல்களைக் கொண்டது. எட்டுத்தொகையில் ஐந்து நூல்களும் பத்துப்பாட்டில் மூன்று நூல்களும் என எட்டு நூல்கள் அகஇலக்கியங்கள் ஆகும். அவற்றுள் குறுந்தொகை பரணர்

பாடல்களில் வரலாற்றுக் குறிப்புகள் காணப்படுகின்றன. அகநானூற்றில் மிகுதியான வரலாற்றுச் செய்திகள் காணப்படுகின்றன.

- அகமா, புறமா எனும் சிக்கலில் உள்ளவை பரிபாடலும் நெடுநல்வாடையும் ஆகும்.

- புறஇலக்கியங்களான எட்டுத்தொகையில் இரண்டு நூல்களான புறநானூறும், பதிற்றுப்பத்தும், பத்துப்பாட்டில் ஆற்றுப்படை நூல்கள் ஐந்தும், மதுரைக்காஞ்சி ஒன்றுமாக மொத்தம் எட்டு நூல்களாகும். புறநானூற்றிலிருந்து சேர, சோழ, பாண்டியர் பற்றிய வரலாறு மற்றும் புலவர் வாழ்க்கையை அறியமுடிகிறது. மன்னர்களின் கல்வி, கொடை, தருக்கண் மற்றும் மக்களின் புறவாழ்க்கையைப் படம்பிடித்துக் காட்டுவது இவ்விலக்கியமாகும். இதில் புறத்திணைகள் பதினொரு திணை பற்றிய பாடல்கள் இடம்பெற்றுள்ளன. உழிஞைத் திணைப்பாடல் மட்டும் இடம்பெறவில்லை.

- பதிற்றுப்பத்தில் சேரமன்னர்களின் வீரதீரச் செயல்கள் இடம் பெற்றுள்ளன. ஒவ்வொரு பத்தின் இறுதியிலும் பதிகம் ஒன்றுண்டு. பத்தின் வரலாற்றைக் கூறுவது பதிகமாகும். இதற்குப் பழைய உரை ஒன்று உண்டு. பாடல்களின் முடிவில் துறை, வண்ணம், தூக்கு (இசை) பாடலின் பெயர் ஆகியவை குறிப்பிடப்பட்டுள்ளது.

- ஆற்றுப்படை நூல்களின் வழி அரசர்களிடையே நடைபெற்ற போர்கள் மற்றும் பாடல் பாடிய புலவனின் வாழ்க்கை நிலை, ஐவகை நிலங்களில் கிடைக்கும் உணவு வகைகளை அறியலாம். இது பயண இலக்கியமாகவும் திகழ்கிறது.

- புறநானூற்றின் வளர்ச்சியே மதுரைக்காஞ்சியாகும். இது நிலையாமையை உணர்த்தும் இலக்கியமாகத் திகழ்கிறது. உலகில் உள்ள நிலையற்ற பொருள்களைத் தேடுவதைக் காட்டிலும் நிலைத்த மதுரையின் மாண்பினையும் பாண்டியப் படையெடுப்புகளையும் அறியமுடிகிறது.

- புறம் பற்றி எழுந்த தனி இலக்கணமான புறப்பொருள் வெண்பாமாலை புறத்திணைகளைப் பன்னிரண்டாக விரித்துள்ளது.

- மனித நாகரிகத்தின் தொடக்கமே போராகத்தான் அமைகிறது. மனிதன் தொடக்ககாலத்தில் தன்னைத் தற்காத்துக்கொள்ள முற்பட்டபோதே போர்புரியத் தொடங்கினான். அவன் செய்த முதல் போர் விலங்குகளோடும் பின்பு மனிதனுடனும் அமைந்திருக்கிறது.

- அரசுரிமைக்காக உருவப்பஃறேர் இளஞ்சேட்சென்னியின் மகன் கரிகாற்பெருவளத்தான் பகைவரின் காவலினின்று தப்பிச் சென்று அரசுரிமையைப் பெறுவதற்காகப் போர் புரிந்தான் எனப் பட்டினப்பாலை, பொருநராற்றுப்படை மூலம் அறியலாம்.

- பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப்பெருவழுதி என்பானை நெட்டிமையார் பாடிய பாடலில் போரில் தவிர்க்கப்படுபவர்களான பசு, பார்ப்பனர், பெண்டிர், நோய்வாய்ப்பட்டோர், வயது முதிர்ந்தவர் மக்களை பெறாதீர் மீது என் அம்பு செல்லாது எனக் கூறியுள்ளார்.

- வெட்சித்திணை என்பது நிரைகவர்தலாகும். இது குறிஞ்சிக்குப் புறமானது. இதன் துறையான நிமித்தம் பார்க்கும் வழக்கம் உண்டு என்று (புறம்.280:6-7) போருக்குச் செல்லும்முன் தூய மலர்களை நெல்லுடன் தூவிக் கைதொழுது விரிச்சி கேட்டு நிற்பதைக் காணலாம்.

- வஞ்சித்திணை என்பது மண்ணாசைக்காக நடக்கும் போராகும். இது முல்லையது புறனானது இதன் துறையாகக் காவல் மரங்களை அழிப்பர் என்பது கல்லாடர் பாடலில் (புறம்.23:5-11) இடம் பெற்றுள்ளது.

- உழிஞைத்திணை என்பது மாற்றான் மதிலை வளைத்தலைக் குறிக்கும். இது அகத்திணையான மருதத்திற்குப் புறம்பானது. இதன் துறையாக நாள் பார்த்து வாளும் குடையும் புறப்படுதல் தொல்காப்பியப் பொருள் (நூ.69) உணர்த்தும். இது இலக்கியத்தில் திருமாவளவன் நல்ல

*நாளில் வாளையும் குடையையும் முரசையும் போக்கியதைப் புறம், சிலம்பு, வஞ்சிமாநகர் புக்க காதையில் கூறப்பட்டுள்ளது.*

- *படைச்செலவு என்னும் துறை பகைவர் நாட்டின் மீது படையெடுத்துச் செல்லும் வேந்தன் தன் அடையாளப் பூவைச் சூடிப் படையை அழைத்துச் செல்வர். அவ்வாறு சென்ற படையினை (புறம்.228) பாடல் வேந்தனின் படைகள் தலை, இடை, கடை என வரிசை முறைப்படிச் சென்றதையும் முன்னர் சென்ற படைவீரர்கள் பனம் நுங்கினை உண்டனர். இடைச் சென்றவர்கள் பனம் பழத்தை உண்டனர் இறுதியில் சென்றவர் கிழங்கினைச் சுட்டுத் தின்றனர் என்று ஆலத்தூர் கிழார் கூறுகின்றார்.*

- *தும்பைத்திணை என்பது அதிரப்போர் புரிதலைக் குறிக்கும். இது அகத்திணையான நெய்தலுக்குப் புறம்பானது. இதன் துறையாக வீரரைப் போருக்கு அழைத்தமையைப் பதிற்றுப்பத்து (பாடல் -84) வழி அறியலாம்.*

- *வாகைத்திணை என்பது வென்றவனது சிறப்பினைக் கூறுவது; இது அகத்திணையான பாலைக்குப் புறம்பானது. இதன் துறையான பாசறை நிலை என்பது வேந்தர்கள் போர் மேற்கொண்டபொழுது பகை நாட்டில் நீண்ட நாள்கள் தங்க நேரிட்டது. வேந்தனும் அவனது படைகளும் தங்கிய இடத்தைப் பாசறை, கட்டூர் என இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன.*

- *பாசறை என்பது மதுரைக்காஞ்சி 231 ஆவது வரியில் பார்வை பாசறை என்றும், பதிற்றுப்பத்து 84 ஆவது பாடலில் பார்வற் பாசறை என்றும், நெடுநல்வாடை பாசறைத் தொழிலே என்றும் கூறுகிறது. கட்டூர் என்பதைப் பதிற்றுப்பத்து (பாடல் - 68) வேறுபுலத்திறுத்த கட்டூர் என்கிறது.*

- படையை வேந்தனின் திருமேனி எனச் செப்புகிறது சிலப்பதிகாரம். இப்படை இரு வகைப்படும். அவை நிலப்படை, கடற்படை என்பவையாகும்.

- நிலப்படை என்பது காலாட்படை, குதிரைப்படை, யானைப்படை, தேர்ப்படை என்று நான்கு வகையான படைகளை வேந்தர்கள் போரில் பயன்படுத்தினர். இந்நான்கு வகைப் படைகளும் சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியைச் சூழ்ந்ததைப் புறப்பாடலில் உலோச்சனார் குறிப்பிடுகிறார்.

- போர்க்கருவிகளில் வேல் முதன்மை இடம் பெற்றுள்ளது. போர்க்களத்திலும் பாசறையிலும் வேலைப் புகழ்ந்து பாடும் மரபு உண்டு. போர்க் கருவிகளுள் வில், வாள் இவற்றைவிட வேலுக்கு முதன்மையான இடம் தந்தனர். போர் முனைக்கு எடுத்துச் செல்வதற்கு முன்பு வேலுக்கு வழிபாடு நடைபெற்றதைப் புறநானூற்றுப் பாடல் 332 எடுத்துரைக்கிறது.

- காஞ்சித்திணை என்பது நிலையாமையாகும். இது அகத்திணையான பெருந்திணைக்குப் புறம்பானது.

- போருக்குச் செல்வதற்கு முன் வேந்தரும் வீரரும் வஞ்சினம் கூறுதல் மரபு. வேந்தர்களும் படைவீரர்களும் வஞ்சினம் கூறுவர். இதனை புறநானூற்றுப் பாடல் 304 இல் தன் முன்னோனைக் கொன்றவனை அவன் தம்பியோடு சேர்த்துக் கொல்லப் போவதாக மறவன் வஞ்சினம் கூறுவதிலிருந்து அறியலாம்.

- பாடாண்திணை என்பது பாடப்படும் ஆண் மகனது ஒழுகலாறுகளைக் கூறுவது. இது அகத்திணையான கைக்கிளைக்கு புறம்பானது.

- போர்க்களத்தில் நடுநிலைமை என்பது உறவினர்கள் என்று பாராட்டாமல் தம்மை எதிர்த்து வரும் பகை நாட்டு வீரர்களுடன் போர் செய்வதும் படைவீரர் ஒருங்கே கூடித் தங்கியிருந்த கடல் போன்ற

பாசறையிலிருந்து நீங்கிச் சென்று வேல் முதலிய படைக் கருவிகளைக் கொண்டு தம்மவர் அயலவர் என்று பாராமல் போர் செய்ததை புறம் - 294 இல் பெருந்தலைச்சாத்தனார் பாடியுள்ளார்.

- வீரமரணம் அடைந்தவர்களுக்கு நடுகல் வைக்கும் மரபு இருந்தது என்றும், நடுகல்லில் வீரனின் பெயரும், பெருமையும், பெற்ற சிறப்புகளும் பொறிக்கப்பட்டன என்றும் தொல்.பொருள் (நூ.63), அகம் (67), புறம் (329) உரைக்கிறது. தொல்காப்பியர் வெட்சித்திணையில் குறிப்பிடும் செய்தி புறப்பொருள் வெண்பாமாலையில் பொதுவியலில் இடம் பெற்றுள்ளது என்பது இந்த இயலில் எடுத்துக் கூறப்பட்டுள்ளது.

**இயல் - இரண்டு**

**சான்றெண் விளக்கம்**

1. மு.வரதராசன், தமிழ் இலக்கிய வரலாறு, ப.42
2. தமிழண்ணல், புதிய நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு, ப.99
3. மேலது, ப.104
4. மேலது, ப.111.
5. ஜெயம் அ, தமிழ் இலக்கிய வரலாறு, ப.25.
6. பட்.பாலை, பா.274-276.
7. சி.செல்வத்தாண்டவர், புறநானூற்றுக் காட்சிகள், ப.2
8. தொல்காப்பியம், நூ.1037:3-6
9. தமிழண்ணல், புதிய நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு, பக்.121-122
10. மு.வரதராசன், தமிழ் இலக்கிய வரலாறு, ப.55
11. சி.பாலசுப்பிரமணியன், தமிழ் இலக்கிய வரலாறு, ப.61
12. மதுரைத் தமிழ்ப் பேரகராதி, இரண்டாம் பாகம், ப.802
13. கி. பாண்டுரங்கன், பண்டைத் தமிழர் போரியல் வாழ்க்கையும், தற்காலப் போர் நடவடிக்கையும், ப.87
14. அ. தட்சிணாமூர்த்தி, தமிழர் நாகரிகமும் பண்பாடும், ப.31
15. புறம்.8:1-3
16. புறம்.213:5-11
17. தொல்.பொருள், நூ.64:2-3
18. புறம்.9:1-5
19. அ. தட்சிணாமூர்த்தி, தமிழர் நாகரிகமும் பண்பாடும், ப.35
20. ச.வே.சுப்பிரமணியன், ஐம்பெருங்காப்பியங்கள் மூலமும் உரையும், ப.178.
21. வ. சுப. மாணிக்கம், தமிழ்க் காதல், ப.9
22. பொ.சுந்தரமகாலிங்கம், புறத்திணை விருந்து, ப.17
23. தொல். நூ.1001-1002

24. தொல். நூ.1003

25. புறம். 280:6-7

26. தொல்.பொருள், நூ.61:1

27. தொல்.பொருள், நூ.63:8

28. தொல். நூ.1007-1008

29. அரங்க.இராமலிங்கம், சங்க இலக்கியத்தில் வேந்தர்கள், ப.156

30. புறம்.23:5-11

31. தொல். நூ.1010 -1011

32. பொ. சுந்தரமகாலிங்கம், புறத்திணை விருந்து, ப.19

33. குறள்.1330

34. தொல்.பொருள், நூ.69

35. புறம்.95: 1-3

36. சிலம்பு. இந்திர விழவு ஊர் எடுத்த காதை, 90-93

37. சிலம்பு. வஞ்சி மாநகர் புக்க காதை, 44-46

38. புறம். 225:1-5

39. புறம். 21:2-6

40. அரங்க.இராமலிங்கம், சங்க இலக்கியத்தில் வேந்தர்கள், ப.165.

41. தொல். 1015 - 1016

42. புறம். 284:1-4

43. பதிற். 84:15

44. அரங்க.இரமலிங்கம், சங்க இலக்கியத்தில் வேந்தர்கள், ப.149.

45. பதிற். 90:44

46. தொல். 1019 - 1020

47. பொ. சுந்தரமகாலிங்கம், புறத்திணை விருந்து, ப.20

48. கு.வெ. பாலசுப்பிரமணியன், சங்க இலக்கியத்தில் புறப்பொருள், ப.68

49. நெடு. 186 -188

50. பதிற். 68: 2

51. பொருநர். 143-148

52. புறம். 79:1-4

53. அரங்க.இராமலிங்கம், சங்க இலக்கியத்தில் வேந்தர்கள், ப.169

54. மேலது, ப.170

55. புறம். 377:23-29

56. கலைக்களஞ்சியம் - தொகுதி எட்டு, ப.603

57. புறம். 332:5-8

58. தொல். நூ. 1023 - 1024

59. பொ.சுந்தரமகாலிங்கம், புறத்திணை விருந்து, பக்.20-21

60. புறம். 304:5-6

61. பதிற். 58:5-8

62. தொல். நூ.1026

63. கா. கோவிந்தன், பண்டைய போர்நெறிமுறைகள், ப.20

64. அரங்க.இராமலிங்கம், சங்க இலக்கியத்தில் வேந்தர்கள், ப.155

65. குறள்.771

66. புறம். 294:1-4

67. புறம். 6:21-22

68. பதிற்று. 81:30-3

69. யாப்பருங்கலவிருத்தி, நூ.96

70. மேலது.

71. மேலது.

72. மேலது.

73. தொல்.பொருள், நூ.63:19-21

74. புறம். 329:2-3

75. அகம். 67:8-10

## 3.0 சங்க இலக்கியத்தில் போர்

*சங்க காலச் சமுதாயத்தில் போர் என்பது தலைமையும் முதன்மையும் பெற்றிருந்தது. சங்க காலத்தில் போர்ப் பண்பு மிகுந்து காணப்பட்டதைப் புறப்பொருள் இலக்கியங்கள் எடுத்துரைக்கின்றன.*

**ஒளிறுவாள் அருஞ்சமம் முருக்கிக்**
**களிறெறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே**[1]

*எனப் புறநானூற்றுப் பாடல், சங்க காலத்தில் வாழ்ந்த மறவர்களின் கடமையை எடுத்துரைக்கிறது. சங்க காலத்தில் மறக்குடி மறவர்கள், ஆற்றல் மிக்க வேந்தர்கள், வள்ளல்கள், சிற்றரசர்கள் ஆகியோர் போர் புரிந்துள்ளனர்.*

*பண்டைய வரலாற்றை அறிய இன்று கிடைத்துள்ள இலக்கியங்களும் கல்வெட்டுகளும் சான்றுகளாக உள்ளன. பிற்காலக் கல்வெட்டுகள் வாயிலாக நமக்குக் கிடைக்கும் வரலாற்றைவிட, சங்க இலக்கியத்தில் இடம்பெற்றுள்ள பாடல் கருத்துகள் வழி பெறப்பட்ட வரலாறே அளப்பரியது. எனவே சங்கப் பாடல்கள் வாயிலாகத் திணை அடிப்படையில் போர்கள் எவ்வாறு நடைபெற்றன என்பதை இதன்வழி அறியமுடிகிறது.*

*சேர, சோழ, பாண்டியர் புரிந்த போர்கள்; வடநாட்டு அரசர்களுடன் புரிந்த போர்கள்; குறுநிலமன்னர்கள் புரிந்த போர்கள் எனப் பலவகைப்பட்ட போர்களைப் பற்றிச் சங்கப் பாடல்களால் அறியமுடிகிறது. அதிலும் குறிப்பாகப் பண்டைத் தமிழ்ப் பேரரசர்களிலே புகழ் பெற்றவன் கரிகாலன். அவன் புகழ் அவன் காலத்தில் மட்டுமின்றி அது கடந்தும் நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்வது கண்டு தமிழார்வலர்கள்கூட வியப்பும் மலைப்பும் எய்துகின்றனர். இதற்குக் காரணம் வரலாற்று ஆராய்ச்சியாளர்கள் இலக்கியத்திலும் கல்வெட்டுகளிலும் காலமும் தேசமும் மொழியும் தொலைவாகும்தோறும் புகழ் வளர்வது கண்டு, அவர்கள் பழங்கால இலக்கியச் சான்றுகளை*

*மட்டுமே வரலாற்று மெய்மை எனக்கொள்கின்றனர். பிற்காலக் கல்வெட்டுச் சான்றுரைகள் அனைத்தும் படிப்படியாக வளர்ந்த கற்பனை என வரலாற்றாராய்ச்சியாளர்கள் கருதுகின்றார்கள். "முதற் கரிகாலன் அழுந்தூரை ஆண்ட சென்னி மரபினனாக இருக்கலாம். இந்நுட்பமான ஆராய்ச்சியால், வெண்ணிக் குயத்தியாரால் பாடப்பட்டவன் முதல் கரிகாலன் என்பதும் அறியலாம். முதற் கரிகாலன் ஏறத்தாழ இரண்டு தலைமுறை முற்பட்டவன். அவன் காலம் ஏறத்தாழ கி.மு.120 - கி.மு.90 எனக் கொள்ளலாம்"[2] என்று இராசமாணிக்கனார் கூறுகிறார். "இரண்டாம் கரிகாலன் சங்க காலத்திலே, கி.மு.2 - ஆம் நூற்றாண்டின் முடிவில் மற்றொரு கரிகாலன் இருந்ததாகக் கொள்கின்றனர். இரு கரிகாலர்களையும் பற்றிய சங்க இலக்கியச் சான்றுகளையும் பிரித்துக் காட்டுவதுடன் 'வெண்ணி' அல்லது 'வெண்ணில்' என்ற இடத்தில் நிகழ்ந்த போர் பற்றிய குறிப்புகளையும் இருவேறு கரிகாலர்களால் ஆற்றப்பட்ட மூவேறு போர்கள்"[3] என்றும் விளக்கியுள்ளார் கா.அப்பாத்துரை. இவ்வாறு சோழனைப் பற்றிய அரிய, பெருங்கருத்துக்களை அறிய சங்ககாலத்துப் போர்கள் துணைபுரிவதுடன் திணை அடிப்படையிலான போர்ப் பகுப்பினையும் அறியமுடிகின்றது.*

### 3.1. வெட்சித் திணைப் போர்

*பகைவர் நாட்டு ஆநிரைகளைக் கைப்பற்றுவதும் பகைவர்கள் அவற்றை மீட்டுச் செல்லுதலும் வெட்சித் திணையில் நடைபெறுவதாகத் தொல்காப்பியம் கூறுகிறது. இதனை,*

**நறவும் தொடுமின்; விடையும் வீழ்மின்;**
**பாசுவல் இட்ட புன்காற் பந்தர்ப்**
**புனல்தரும் இளமணல் நிறையப் பெய்ம்மின்;**
**ஒன்னார் முன்னிலை முருக்கிப் பின் நின்று;**
**நிரையொடு வரூஉம் என்னைக்**
**குழையோர் தன்னினும் பெருஞ்சா யலரே[4]**

என்னும் வெட்சித் திணை, உண்டாட்டுத் துறையில் அமைந்த பாடலில் மதுவைப் பிழியுங்கள்; ஆட்டை வெட்டுங்கள்; பசுமையான பைந்தழை இடுங்கள்; சிறுமணலைப் பரப்புங்கள்; பகைவரை அழித்துப் பசுக்கூட்டத்துடன் வரும் என் தலைவனும் அவனுடன் வரும் இளம்வீரர்களும் களைப்படைந்துள்ளனர், எனவே உண்டாட்டு செய்க என்று மதுரைப் பேராலவாயார் பாடியுள்ளார். இதனைப் போன்று,

**ஏறுடைப் பெருநிரை பெயர்தரப் பெயராது**
**இலைபுதை பெருங்காட்டுத் தலைகரந்து இருந்த**
**வல்வில் மறவர் ஒடுக்கம் காணாய்**[5]

எனும் கரந்தைத் திணை, செருமலைத்தல் மற்றும் பிள்ளைப்பெயர்ச்சி என்னும் துறையில் அமைந்த பாடலில் கோடை பாடிய பெரும்பூதனார் கூறுகையில் காளைகளையுடைய பெரிய பசுக்கூட்டத்தை மீட்டு வருபவரை நோக்கி இப்போது உடன் போகாதீர். பெரிய காட்டில் வலிமையுடைய வில்வீரர் மறைந்து இருக்கின்றனர்; சென்றால் ஆநிரை மீட்பது கடினம் என்பதை அறிவுறுத்துவது புலப்படுகிறது.

### 3.2. வஞ்சித் திணைப் போர்

வஞ்சிப்போர் என்பது மண்ணாசைக்காக நிகழும் போர். இவ்வீரர்கள் வஞ்சிப் பூச்சூடி, பகைநாட்டின் மீது படையெடுத்துச் செல்வதால் வஞ்சித் திணையாயிற்று எனலாம்.

### 3.2.1. காரியாற்றுப்போர் II

“நலங்கிள்ளி, நெடுங்கிள்ளி ஆகியவர்க்கு அடுத்து இருந்த பெரிய அரசன் கிள்ளி ஆவான். மாவண்கிள்ளி அல்லது கிள்ளிவளவன் என்பவன் ஆட்சியின் பிற்பகுதியில் சேரரும் பாண்டியரும் மண்ணாசையால் உந்தப்பட்டுச் சோழ நாட்டின் மீது படையெடுத்தனர் என்றும் சோழன் தம்பியால் காரியாற்றில் மாற்றரசர் இருவரும் முற்றிலும் முறியடிக்கப்பட்டார்கள் என்றும் மணிமேகலைக் காப்பியம் நமக்குத் தெரிவிக்கிறது.

முதற்காரியாற்றுப் போரைப் போலவே இப்போரும் தமிழக வடஎல்லையிலேயே நடைபெற்றது என்பது வியப்புக்குரியது. ஏனெனில் எதிரிகள் இருவருள் பாண்டியன் தென்திசையிலும் சேரன் மேல் திசையிலும் இருந்தனர். சோழன் தமிழகத்தில் அடைந்துவரும் முதன்மையை வடபுல அரசருடன் சேர்ந்து சேர, பாண்டியர் ஒடுக்க நினைத்திருத்தல் கூடும் என்பதே பொருத்தமாகத் தோன்றுகிறது"[6] என்கிறார் கா. அப்பாத்துரை. எனவே காரியாறு என்ற இடத்தில் நிகழ்ந்த வஞ்சித்திணையில் அமைந்த இப்போர் காரியாறு - II என்பர். காரியாற்றுப் போரை,

**எஞ்சா மண்நசைஇ இகலுளம் துரப்ப**
**வஞ்சியி னிருந்து வஞ்சி சூடி**
**முறஞ்செவி யானையும் தேரும் மாவும்**
**மறங்கெழு நெடுவாள் வயவரு மிடைந்த**
**தலைத்தார்ச் சேனையொடு மலைத்துதலை வந்தோர்**
**சிலைக்கயல் நெடுங்கொடி செருவேற் தடக்கை**
**ஆர்புனை தெரியல் இளங்கோன் தன்னால்**
**காரியாற்றுக் கொண்ட காவல் வெண்குடை**
**வலிகெழு தடக்கை மாவண்கிள்ளி[7]**

என மணிமேகலை குறிப்பிடுகிறது.

### 3.2.2. திருக்கோவலூர்ப் போர் I

மலையமான் காரி தென்னார்க்காடு மாவட்டத்தில் தென்பெண்ணையாற்றின் கரையிலுள்ள திருக்கோவலூரில் இருந்து ஆண்டுவந்தான். முள்ளூர் மலைப் பகுதியும் அவன் ஆட்சிக்கு உட்பட்டிருந்தது. சோழன் ஆரியப் படையெடுப்பை வல்லத்துப் போரில் வென்றது போலவே, காரியின் முன்னோரும் இம்முள்ளூர் மலையருகே நடந்த போரில் ஆரியரை வென்றதாக அறிகிறோம். நெடுங்கிள்ளிக்கோ சோழரின் வேறு எந்த எதிரிக்கோ உதவிய காரணத்தாலேயே, கிள்ளிவளவன் காரியை எதிர்த்திருக்க வேண்டும். காரி இப்போரில்

*கொல்லப்பட்டான். அவன் சிறுவர் இருவரைக் கிள்ளிவளவன் யானைக்காலிலிட்டு இடறி அழிக்கும்படிக் கட்டளையிட்டான். ஆனால் கோவூர்கிழார் என்ற புலவர் (புறம்.46) சோழ மரபின் பெருமையினையும் காரி மரபின் வள்ளன்மையையும் எடுத்துரைத்து இதனைத் தடுத்தார். கிள்ளிவளவனின் அடுத்த செயல் கருவூர் முற்றுகையேயாகும். இதனை,*

**கருங்கைக் கொல்லன் அரஞ்செய் அவ்வாய்**
**நெடுங்கை நவியம் பாய்தலின் நிலையழிந்து**
**வீகமம் நெடும்சினை புலம்பக் காவுதொறும்**
**கடிமரம் தடியும் ஓசை தன்ஊர்**
**நெடுமதில் வரைப்பில் கடிமனை இயம்ப**
**ஆங்கினிது இருந்த வேந்தனோடு ஈங்குநின்**
**சிலைந்தார் முரசம் கறங்க**
**மலைத்தனை என்பது நாணுத்தக உடைத்தே[8]**

*என்ற பாடல் குறிப்பிடுகிறது. புலவர் ஆலத்தூர் கிழார் வலிய கையையுடைய கொல்லன் அரத்தால் கூர்மையாக்கிய ஒளியமைந்த நீண்ட பிடியுடைய கோடாரி வெட்டுதலால் நிலை சாய்ந்து வீழும் பூக்கள் உள்ள நெடிய கிளைகள் துண்டாகக் காடுகள் தோறும் காவல் மரங்களை வெட்டும் ஓசை, தன் ஊரில் உள்ள உயர்ந்த மதிலில் மோதி அரண்மனைக்குள் ஒலிக்க, முரசு முழங்கப் போரிடுவது என்பது காணும் தன்மையது. ஆதலால் போர்புரிதலை விடுக என அறிவுறுத்தினார்.*

*மலையமானை வென்றபின் அவன் கொங்கு நாட்டின் மீது படையெடுத்து வென்றான். பின் கொங்கு நாடு கடந்து சோழநாட்டின் கோட்டைக்குள் புகுந்து தற்காப்பிலே கவனம் செலுத்தினான். வெளியிலுள்ள காவல் மரத்தைச் சோழன் வெட்டும் ஓசை கேட்டும் அவன் வெளிவராதிருந்தான்.*

*சோழன் சுற்றுப்புறம் உள்ள ஊர்களையும் கழனிகளையும் பூங்காக்களையும் எரித்துப் பாழாக்க முனைந்தான். அப்போது அவனுடன்*

*இருந்த புலவர் ஆலத்தூர்க்கிழார் அவனுக்கு அறிவுரை கூறினார். 'புறாவின் இன்னலை விலக்கிய சோழன் சிபிச் சக்கரவர்த்தி மரபில் வந்தவன் நீ! வீரமின்றி ஒதுங்கி வாழ்தலும் இவ்வரசனை எதிர்ப்பதும் அதற்காக அழிவு சூழ்வதும் உனக்கு நன்றன்று' (புறம்.46) என்று உரைத்தார்.*

*இறுதியில் சோழன் வஞ்சி முற்றுகையில் வெற்றி பெற்றான். இவ்வெற்றியைப் பெண்பாற்புலவர் மாறோக்கத்து நப்பசலையார் இரண்டு பாட்டுக்களில் (புறம்:37,39) சிறப்பித்துள்ளார். மேற்கண்ட பாடல் 36, 46 இரு பாடலிலும் பாட பேதம் உள்ளது உழிஞை, வஞ்சி என இரு திணைக்கும் குறிக்கப்பட்டுள்ளது. பழைய வரலாற்றை உடைய முன்னோனது நிலையைக் கூறுவதால் முதல் வஞ்சியுமாகும். 'முரணிய புறத்தோன் அணங்கிய பக்கம்' என்னும் துறைக்கு எடுத்துக் காட்டுகிறார் இளம்பூரணர்.*

### 3.2.3. திருக்கோவலூர்ப் போர் II

*வேள்மலையமான் ஆட்சி புரிந்த பகுதி கோவலூராகும். இப்பகுதி தற்காலத் தென்னார்க்காடு மாவட்டத்தில் தென்பெண்ணை ஆற்றின் கரையிலுள்ள திருக்கோவலூரைக் குறிக்கும். வேள்மலையமானுக்குக் காரி என்ற பெயர் உண்டு. இந்தக் காரி கிள்ளிவளவனால் கொல்லப்பட்ட காரியானால் கிள்ளிவளவன் ஆட்சியோ பிற்பட்டதாயிருக்க வேண்டும். ஆயின் இந்தக் காரி வேளிர் மரபில் பின் வந்தவனாகவும் இருக்கலாம்.*

*"அதியன் தன் நாட்டை விரிவுபடுத்தும் எண்ணத்துடன் கோவலூர் மீது படையெடுத்தான். கோவலூர்ப் போரில் அதியன் வெற்றி கண்டான். காரி நகர் விட்டு ஓடினான். கோவலூர், அதியமான் நெடுமானஞ்சியின் ஆட்சிக்குள்ளாயிற்று"[9] என்கிறார் கா. அப்பாத்துரை.*

### 3.3. உழிஞைத் திணைப்போர்

*வீரர் கோட்டையைக் காத்து நின்ற போதிலும், அக்கோட்டையை வளைத்துப் பகைவீரர்கள் போரிடுவர்; கோட்டைக்குள் செல்ல முயற்சி செய்வர். இங்ஙனம் கோட்டையை வளைத்தல் உழிஞைத்திணையாகும்.*

### 3.3.1. மோகூர்ப்போர்

*உழிஞை என்பது மாற்றான் மதிலைச் சுற்றி வளைத்தலைக் குறிக்கும். இத்திணையில் அமைந்த போரான மோகூர்ப்போர் செங்குட்டுவன் வெற்றிகளுள் ஒன்று. பாண்டிய நாட்டு எல்லையிலுள்ள பழையனின் மோகூரை அழித்தது ஆகும். இப்போரில் பழையன் நாட்டெல்லையிலிருந்த தலைவன் அறுகை என்பவன், செங்குட்டுவனுக்கு உதவியாயிருந்தான். பழையன் செங்குட்டுவனை எதிர்த்தழித்து விடுவதாக வஞ்சினம் கூறிப் போர்க்கெழுந்தான். இப்போரில் மோகூர் வீழ்ச்சி அடைந்தது. பழையன் காவல் மரமாகிய வேம்பைச் செங்குட்டுவன் வெட்டி வீழ்த்தி, அவன் யானைகளைக் கொண்டே அதனைத் தன் நாட்டுக்கு இழுத்து வந்தான். அந்த வேப்ப மரத்தைக் கட்டி இழுப்பதற்குப் பழையன் குடும்பப் பெண்டிரின் கூந்தல்களை அறுத்து வடமாகத் திரித்துப் பயன்படுத்தினான் என்றும் அறியலாம். இதனை,*

**நுண்கொடி உழிஞை வெல்போர் அறுகை**
**சேணன் ஆயினும் கேள்என மொழிந்து**
**புலம்பெயர்ந்து ஒளித்த களையாப் பூசற்கு**
**அரண்கள் தாவுறீஇ அணங்குநிகழ்ந் தன்ன**
**மோகூர் மன்னன் முரசம் கொண்டு**
**நெடுமொழி பணித்துஅவன் வேம்புமுதல் தடித்து**
**முரசுசெய முரச்சிக் களிறுபல பூட்டி**
**ஒழுகை உய்த்த கொழுஇல் பைந்துணி**[10]

*என்னும் பதிற்றுப்பத்துப் பாடல் பழையனது அரண்களை அழித்து மோகூரை வெற்றி கொண்டமையை வெளிப்படுத்துகிறது. மற்றொரு பாடலான பதிற்றுப்பத்து 49 - ஆவது பாடலில் இப்போரில் பழையனுக்குச் சில வேந்தரும், பல வேளிரும் துணை நின்றதாகத் தெரிகிறது.*

### 3.3.3. உறையூர்ப் போர்

*உழிஞைத் திணைப்போராகச் சோழன் தித்தனுக்கும் கட்டிக்கும் இடையில் நடைபெற்ற போரினைக் குறிக்கலாம். உறையூரிலிருந்து அரசாண்ட தித்தன் என்ற சோழன் காலத்தில் வடுகவேந்தன் கட்டியும் மற்றொரு பாணர் குடி மன்னனும் படையெடுத்து வந்து உறையூரை முற்றுகையிட்டதாக அறிகிறோம். இத்தித்தனுக்கு ஐயை என்ற சீர்சான்ற புதல்வியிருந்ததாகவும், அவள் உறையூரை நன்கு அரண் செய்து காத்ததாகவும் அகப்பாடல்கள் குறிப்பிடுகின்றன. அவன் கோட்டையிலிருந்து ஒலிக்கும் போர்முரசம் கேட்டே எதிரிகள் ஓடியதாகப் புலவர் குறிப்பிடுகிறார் என்பதை,*

**வலிமிகு முன்பின் பாணனொடு மலிதார்த்**
**தித்தன் வெளியன் உறந்தை நாள்அவைப்**
**பாடுஇன் தெண்கிளைப் பாடுகேட்டு அஞ்சிப்**
**போர்அடு தானைக் கட்டி**
**பொராஅது ஓடிய ஆர்ப்பினும் பெரிதே**[11]

*என்பதால் அறியலாம்.*

### 3.3.4. இடும்பில் போர்

*செங்குட்டுவன் பெற்ற உள்நாட்டுப் பெருவெற்றிகளில் கொங்கு நாட்டுப் போருக்கு அடுத்தபடி இடும்பில் கைக்கொண்டதாகும். இப்போரில் நகரைச் சுற்றி வளைத்ததைக் கூறியதால் உழிஞைத் திணையாயிற்று.*

*'இடும்பில்' என்பது தஞ்சை மாவட்டத்திலுள்ள இடும்பவனம் என்று உரையாசிரியர் அடியார்க்கு நல்லார் கூறுகிறார்.*

**மாறா வல்வில் இடும்பில் புறந்திறுத்து**[12]

*என்று பதிற்றுப்பத்தும்,*

**நெடுந்தேர்த் தானையொடு இடும்பில் புறத்து இறுத்த**[13]

*என்று சிலப்பதிகாரமும் இதனைக் குறிப்பிடுகின்றன.*

### 3.3.5. கொடுகூர்ப் போர்

*செங்குட்டுவன், இடும்பிலைக் கைக்கொண்டான்; அதனை அழித்தான்; அடுத்து நிகழ்ந்த போர் கொடுகூர் வெற்றிப் போராகும். பதிகம் தரும் குறிப்பால் வியலூரும் கொடுகூரும் ஒரே ஆற்றின் எதிர்எதிர்க் கரையில் இருந்ததாகத் தெரிகிறது. வியலூர் எறிந்தபின் செங்குட்டுவன் ஆற்றைக் கடந்தே கொடுகூர் சென்று அதை அழித்தான் என கா. அப்பாத்துரை கூறுகிறார். இதனை,*

**“............................................ ‘வியலூர் நூறி’**

**அக்கரை நண்ணிக் கொடுகூர் எறிந்து**[14]

*என்ற பாடல் வெளிப்படுத்துகிறது.*

### 3.3.6. வெண்ணில் போர் அல்லது வாயிற்போர்

*வெண்ணி அல்லது வெண்ணில் என்பது தஞ்சாவூரை அடுத்த ஓர் ஊர். இந்த ஊர் நாயன்மாரால் பாடப்பட்டுள்ளது. இப்போது அது கோயிலுண்ணி (கோயில் வெண்ணி) என்ற பெயருடன் உள்ளது என்கிறார் கா.அப்பாத்துரை.*

*முதல் வெண்ணிப் போரில் கரிகாலன் பதினொரு வேளிர்கள் (அ) சிற்றரசர்களையும் சில அரசர்களையும் ஒருங்கே முறியடித்தான். அவ்வரசர்கள் யார் யார் என்பது கூறப்படவில்லை. ஆனாலும் பன்மையிலேயே குறிக்கப்படுவதால் சேர பாண்டியர் இருவருமே கரிகாலனை எதிர்த்தனர் என்று கருதலாம். முதற்கரிகாலன் பேரரசனல்லாவிட்டாலும் அந்நிலைக்கு உயர்ந்து வருவதையே இது குறிக்கிறது. ஏனெனில், இப்பெருங்கூட்டணியின் வலிமை இப்போரில் கரிகாலனால் முற்றிலும் முறியடிக்கப்பட்டது. அரசரும் சிற்றரசரும் தத்தம்*

போர் முரசங்களை உடன் கொண்டு செல்லக்கூட நேரமில்லாது போர்க்களத்தைக் கைவிட்டு ஓடினர். இப்போர் பற்றிச் சங்க காலப் பழம்பெரும் புலவர் பரணரின் பாடல் வழி அறியலாம்.

**காய்சின மொய்ம்பின் பெரும்பெயர்க் கரிகால்**
**ஆர்கலி நறவின் வெண்ணி வாயில்**
**சீர்கெழு மன்னர் மறலிய ஞாட்பின்**
**இமிழ்இசை முரசம் பொருகளத்து ஒழியப்**
**பதினொரு வேளிரொடு வேந்தர் சாய,**
**மொய்வலி அறுத்த ஞான்றைத்**
**தொய்யா அழுந்தூர் ஆர்ப்பினும் பெரிதே![15]**

என்ற பாட்டின் இறுதியில் போர் வெற்றியின் பயனாக அழுந்தூரில் உண்டான ஆர்ப்பரிப்பு ஆரவாரம் பெரிதென்ற குறிப்புத் தரப்பட்டுள்ளது. இது வெற்றி ஆரவாரமாகும், அழுந்தூர் என்பது வெண்ணில் போர்க்களத்துக்கு அருகிலுள்ள நகரமாகவோ தலைநகரமாகவோ இருக்கவேண்டுமென்பதிலும் ஐயமில்லை. அழுந்தூர் தலைநகரம் என்றும் முதற்கரிகாலன் இச்சமயம் அழுந்தூர்வேள் அல்லது சிற்றரசன் நிலையில் இருந்தே வலிமை பெற்று வளரத்தொடங்கினான் எனவும் அறிந்து கொள்ளமுடிகிறது.

### 3.3.7. தகடூர்ப் போர்

கோவலூர்ப் போரில் தோற்றோடிய காரி, பெருஞ்சேரல் இரும்பொறை என்ற சேரனிடம் தஞ்சமடைந்தான். அவன் தன் நாட்டு எல்லையிலிருந்த வலிமை வாய்ந்தவனான ஓவியர் தலைவன் ஓரியை வெல்லவும் அவனுக்குரிய கொல்லி மலையைக் கைக்கொள்ளவும் திட்டமிட்டிருந்தான். காரி, சேரன் படைத் தலைமையில் தானே சென்று ஓரியைத் துரத்திவிட்டுக் கொல்லி மலையைச் சேரனுக்குச் சேர்ப்பித்தான். முன்பு தோற்றோடிய காரி சேரனிடம் தஞ்சம் புகுந்தான். சேரமான்

*பெருஞ்சேரல் இரும்பொறையும் மலையமான் திருமுடிக்காரியும் சேர்ந்து தகடூர் மீது படையெடுத்தனர்.*

*அதியமானுக்கும், ஓரிக்கும் உதவியாகப் பாண்டியனும், சோழனும் துணை நின்றனர் என்று பதிற்றுப்பத்தின் பதிகம் கூறுகிறது.*

**பொய்இல் செல்வக் கடுங்கோ வுக்கு**
**வேளாவிக் கோமான் பதுமன் தேவி ஈன்றமகன்**
**கொல்லிக் கூற்றத்து நீர்கூர்மீமிசை**
**பல்வேல் தானை அதியமானோடு**
**இருபெரு வேந்தரையும் உடன் நிலை வென்று**
**முரசும் குடையும் கலனும் கொண்டு**
**உரைசால் சிறப்பின் அடுகளம் வேட்டுத்**
**துகள்தீர்மகளிர் இரங்கத் துப்பு அறுத்துத்**
**தகடூர் எறிந்து ...............................................**[16]

*என்று சேரன் அடைந்த பெரு வெற்றியைப் பதிகம், சற்று விரிவாகவே கூறுகிறது.*

**வெல்போர் ஆடவர் மறம்புரிந்து காக்கும்**
**வில்பயில் இறும்பில் தகடூர் நூறி**[17]

*என்ற அடிகள் இவ்வெற்றியைக் குறிக்கின்றன.*

*“தகடூர்ப்போர் பற்றி, தகடூர் யாத்திரை தரும் வரலாற்றுக்கிடையே சில முக்கியக் கூறுகளில் வேற்றுமைகள் உள்ளன. பதிற்றுப்பத்து, தகடூரில் போர் புரிந்தவன் அதிகமான் என்று மட்டுமே குறிக்கிறது. ஔவையார் பாடல்கள் மூலம் இது நெடுநல் அஞ்சி என்று தோன்றுகிறது. ஆனால் தகடூர் யாத்திரையில் அது அவன் மகன் எழினி என்று கூறப்படுகிறது. தவிர, பதிற்றுப்பத்தின் பதிகம் இரண்டரசர் உதவி பற்றிக் குறிக்கிறது. பிற பாடல்களில் அக்குறிப்பு இல்லை. இவை ஆய்வுக்குரியன.”*[18]

### 3.3.8. கூடற் பறந்தலை

*பரணர், சேர சோழர்களைப் பற்றியும் எண்ணற்ற வேளிர்களைப் பற்றியும் பிறநாட்டரசர்களைப் பற்றியும் பாடியிருந்தாலும் பாண்டியரைப் பற்றிக் கிட்டத்தட்ட எதுவுமே கூறவில்லை எனலாம். பசும்பூட்பாண்டியன் என்ற ஒரே மன்னன் பெயர் குறிப்பிடப்பட்டுள்ளது. பாண்டிய நாட்டு வேளிர்களுள் ஒருவனான பழையனும் குறிப்பிடப்படுகிறான். "பசும்பூட்பாண்டியன் என்ற பெயரைச் சிலர் தலையாலங்கானத்துப் பாண்டியன் என்று கொள்வர். ஆனால் பரணர் காலத்திற்கும் காலநிலைக்கும் இது பொருந்தாது. அது முற்பட்ட ஏதோ ஒரு பாண்டியனாகவும், குறிப்பிட்ட போருக்கு அவனே உரியவனாகவும் இருத்தல் கூடும்."[19]*

**மைஅணி யானை, மறப்போர்ச் செழியன்**
**பொய்யா விழவின் கூடற் பறந்தலை**
**உடன்இயைந்து எழுந்த இருபெரு வேந்தர்**
**கடல்மருள் பெரும்படை கலங்கத் தாக்கி,**
**இரங்குஇசை முரசம் ஒழியப் பரந்து அவர்**
**ஒருபுறம் கண்ட ஞான்றை[20]**

*என்றதனால் இருபெரு வேந்தர்களின் படைகளும் கடல்கள் போலிருந்தன. ஆனால் பாண்டியனை எதிர்த்தவர்கள் தோல்வியுற்ற பின் தத்தம் போர் முரசங்களைக் கீழே போட்டுவிட்டு ஓடினர் என்று இப்பாடலில் பரணர் கூறுகிறார்.*

**எம்மொடு புலக்கும் என்ப; வென்வேல்**
**மாரியம்பின், மழைத்தோல் பழையன்**
**காவிரி வைப்பின் போஒர் அன்ன, என்**
**செறிவளை உடைத்தலோ இலனே![21]**

*என்பதனால் இரண்டாம் கூடற்பறந்தலைப்போர் தலையாலங்கானத்துப் பாண்டியன் காலத்தை ஒட்டி, அதற்கு ஒரு சிறிதே முன்னதாக நடந்திருத்தல்*

வேண்டும். ஏனெனில் அதில் தோல்வியுற்ற அரசன் சோழன் கிள்ளிவளவன் ஆவான். வெற்றி பெற்றவனோ தலையாலங்கானத்துப் போரிலே பாண்டிய படைத்தலைவனாக இருந்த பழையன்மாறன் என்பவன் ஆவான். இப்போர் பற்றிய பாடலையும் சிலர் தலையாலங்கானத்துப் போர் பற்றியதாகவே கொள்வதுண்டு. ஆனால் இதனைப் பாடிய புலவர் பரணர். இதில் சோழன் மட்டுமே போரில் ஈடுபட்டுத் தோல்வியடைந்தான். தவிர, பாட்டின் இறுதியடி கோக்கோதை மார்பன் என்ற சேரனைச் சுட்டுவதுபோலக் காணப்படுகிறது. சேரன் இப்போரில் பாண்டியனின் நண்பனாக இருந்திருத்தல் கூடும். தலையாலங்கானத்துப் போரில் அவன் சோழனுக்கு உதவியாய் இருந்தான் என்றும் அறிகிறோம்.

பழையன்மாறன் இப்போரில் கிள்ளிவளவனை முறியடித்ததுடன் அவனிடமிருந்து யானைகள், குதிரைகள் எனப் பலவற்றைக் கைக்கொண்டான் என்று அறிகிறோம். இப்போர் பற்றி நக்கீரர் பாடும் பாடல் வருமாறு :

**இழையணி யானைப் பழையன் மாறன்**
**மாடமலி மறுகின் கூடல் ஆங்கண்,**
**வெள்ளத் தானையொடு வேறுபுலத்து இறுந்த**
**கிள்ளி வளவன் நல்அமர் சாஅய்க்**
**கடும்பரிப் புரவியொடு களிறுபல வவ்வி,**
**ஏதில் மன்னர் ஊர்கொளக்**
**கோதை மார்பன் உவகையிற் பெரிதே![22]**

என்று விளக்கியிருக்கின்றது.

### 3.4. தும்பைத்திணைப் போர்

நாட்டு வீரர் கோட்டையைச் சுற்றிச் செவ்வனே காத்த போதிலும் படைவீரர் கோட்டைக்குள்ளே நுழைந்துவிடுவர். அங்கே இருதிறத்து வீரர்களும் கடும்போர் புரிவர். கோட்டைக்குள் இருத்திறத்துப் படை வீரரும் பொருந்துவது தும்பையாகும்.

### 3.4.1. சோழன் பெருவிறல்கிள்ளிக்கும் குடக்கோ நெடுஞ்சேரலாதனுக்கும் இடையே நடைபெற்ற போர்

சோழன் வேல்பஃறடக்கைப் பெருவிறல்கிள்ளி என்ற சோழப் பெருமன்னனும் சேரமான் குடக்கோநெடுஞ்சேரலாதன் என்ற சேரப்பேரரசனும் வேங்கையுடன் வேங்கை எதிர்த்துப் போர்புரிதலைப் போன்று எதிர்த்து நின்று பொருதனர். இருபுறத்துப் படைகளும் இருபுறத்து அரசரும் முற்றிலும் சரிசமமான வீரமுடையவர்களாகவே இருந்ததால், இருவருக்குமே வெற்றி கிடைக்கவில்லை. அது மட்டுமன்று இருதிறப்படைகளும் சாகும்வரை போரிட்டு மடிந்தன. இரு பேரரசர்களும் ஒருவர் மீது ஒருவர் மும்முரமாகத் தாக்கிப்போர் செய்து இறந்தனர். போர்க்களத்தின் வெற்றி இருவேந்தருக்குமே கிட்டாமல் கூற்றுவனுக்கும், அவன் போர்ப்படைகளுக்கும், கழுகு பருந்துகளுக்குமே கிட்டிற்று.

இப்போர் விளைவாக எழுந்த உருக்கமான கருத்துக்களையும் களங்கண்டு பாடிய இருபெரும் புலவர் நமக்குத் தந்துள்ளனர்.

யானையும் குதிரையும் தேரும் வீரரும் செயலற்றுக் கிடக்க, வீரர்கண் மறைத்துக் கேடயங்கள் கிடக்கின்றன. அடிப்பாரின்றி முரசுகள் உருளுகின்றன. நெஞ்சில் சாந்துடன் குருதியும் சேர்ந்து வடிய மன்னர் கிடக்கின்றனர். இனி நாடு என்ன ஆவது? என்று பெரும்புலவர் பரணர் கலங்குகின்றார் என்பதனை,

**எனைப்பல் யானையும் அம்பொடு துளங்கி**
**விளைக்கும் வினையின்றிப் படையொழிந் தனவே!**
**விறற்புகழ் மாண்ட புரவி யெல்லாம்**
**மறத்தகை மைந்தரொடு ஆண்டுப் பட்டனவே!**
**தேர்தர வந்த சான்றோ ரெல்லாம்**
**தோல்கண் மறைப்ப, ஒருங்கு மாய்ந்தனரே!**
**விசிந்துவினை மாண்ட மயிர்க்கண் முரசம்,**

**பொறுக்குநர் இன்மையின் இருந்து விளிந்தனவே!**

**சாந்தமை மார்பில் நெடுவேல் பாய்ந்தென,**

**வேந்தரும் பொருது, களத்து ஒழிந்தனர்! இனியே,**

**என்ஆவது கொல்தானே ..............................**

**................................... அகன்தலை நாடே?[23]**

*என்பதனால் அறியலாம்.*

*கழாத்தலையார் என்ற மற்றொரு புலவர், 'வெற்றியை நாடி வெற்றிக்குரிய இரு மன்னரும் இப்படிப் போர்புரிவதனால் என்ன பயன்?' என்று கேட்டு, இறுதியில் இத்தகைய வீரம் பாழ்படாது என்று தேறி 'வாழ்க அவர் புகழ்' என்று கூறுகிறார்.*

**வருதார் தாங்கி, அமர்மிகல் யாவது**

**....................................................................**

**அறத்தின் மண்டிய மறப்போர் வேந்தர்**

**தாம்மாய்ந் தனரே; குடைதுளங் கினவே,**

**.......................................................................**

**களம் கொளற்கு உரியோர் இன்றித் தெறுவர,**

**உடன்வீழ்ந் தன்றால், அமரே; பெண்டிரும்**

**பாசடகு மிசையார், பனிநீர் மூழ்கார்,**

**மார்பகம் பொருந்தி ஆங்கு அமைந்தனரே;**

**.................................................................**

**அரும் பெறல் உலகம் நிறைய**

**விருந்து பெற்றனரால்; பொலிக, நும் புகழே[24]**

*என்பதால், வெற்றி கொள்வார் யாருமில்லாமல் இரு பேரரசுப் பெண்டிரும் தத்தம் கணவர் மார்பில் விழுந்து அழுதனராம்! தமிழர் வீரத்தின் பெருமையையும் அது தமிழினத்துக்குச் செய்த அழிவையும் இப்பாடல்கள் நன்கு விளக்குகின்றன.*

### 3.4.2. வடபுலக் கங்கைப்போர்

சேரன் செங்குட்டுவன் கண்ணகி சிலைக்காக வடதிசையில் படையெடுத்துச் செல்வதற்கு நெடுநாள் முன்பே கங்கைப் பேராற்றில் முதற்போர் ஆற்றியிருந்தான். அவன் அப்போது வடதிசை சென்றது, சேரனின் அன்னை கங்கையில் நீராடுவதற்குத் துணையாகவே சென்றான். ஆயினும், படையணிகளுடன் சென்றதால் பலர் அறியப் பல ஆரிய மன்னர்கள் திரண்டுவந்து அவன் போக்கைத் தடுத்தனர். செங்குட்டுவன் தனியாக நின்று அத்தனை வேந்தரையும் களத்தில் சிதறியடித்தான். ஓடிய ஒரு சிலர் நீங்கலாக மீதம் அனைவரும் உயிர் பிரிந்தவராகினர். கங்கைப்படுகளம் ஒரே குருதிக்களமாகவும் ஆயிற்று. சிலப்பதிகாரத்திலேயே மாடலன் கூற்றாகவே இப்போர் வருணிக்கப்படுகிறது.

**கங்கைப்பேர் யாற்றுக் கடும்புனல் நீத்தம்**
**எங்கோ மகனை ஆட்டிய அந்நாள்**
**ஆரிய மன்னர் ஈர்ஐஞ் நூற்றுவர்க்கு**[25]

என்று இப்போரின் கோரக் காட்சியையும் அதில் தனியொருவனாக நின்று செங்குட்டுவன் வெற்றிக் கூத்தாடியதையும் சாவின் தெய்வமாகிய கொற்றவையே கண்ணிமைக்காமல் விழிப்புடன் பார்த்துக் கொண்டிருந்தது என்றும் கவிஞர் வியந்துரைக்கிறார்.

### 3.4.3. காரியாற்றுப் போர்

காரியாறு என்பது ஆற்றுக்கும் ஊருக்குமான பெயர் என்று தெரிகிறது. இது தமிழகத்தின் வட பகுதியில் திருவள்ளூரிலிருந்து காளகஸ்திக்குச் செல்லும் வழியில் இருக்கிறது. இவ்வூர் தற்போது இராமச்சேரி என அழைக்கப்படுகிறது. இதில் கோயில்கொண்ட இறைவன் பெயர் ‘காரிக்கரை உடைய நாயனார்’ என்பதாகும். இது ஊரின் பழைய பெயரைச் சுட்டிக் காட்டுகிறது. “உண்மையில் இராமகிரி என்பது ‘காரி மலை’ என்ற தமிழின் இடைக்காலச் சமஸ்கிருத மொழிபெயர்ப்பாகும். கார்

என்ற தமிழ்ச் சொல் கருமை நிறம் உடையது என்ற பொருளில் நஞ்சு, நஞ்சுண்ட சிவன், நஞ்சுண்டு உடல் கரியவனான திருமால்; கருநிறமுடைய இராமன் ஆகிய பொருள்களைத் தரவல்லது. முற்காலங்களில் அயிரை என்னும் சொல் மலை, ஆறு, ஊர் ஆகியவற்றைத் தாங்கி நின்றதுபோல, இங்கு அமைந்துள்ள மலை, ஆறு, ஊர் ஆகிய மூன்றும் "காரி" என்னும் பெயரைத் தாங்கி நின்றிருக்க வேண்டும். ஏனெனில், இதனருகே ஓடும் இரட்டை ஆறுகளில் ஒன்று காளத்தி என்றும் மற்றொன்று காலேறு என்றும் அழைக்கப்படுகின்றன. காலேறு என்பது காரிமலை என்பதன் தெலுங்கு மரூஉவேயாகும். காரிமலை என்பது அந்நாள் காளத்தியிலிருந்து திருப்பதி வரை இருந்த மலையைக் குறித்தது. அயிரை மலையிலும் காரி (இராமன் அல்லது திருமால்) அல்லது காளி (கொற்றவை) இடங்கொண்டிருந்ததாகக் கூடும். காரிநதி என்ற இப்பெயரின் சிதைவே காரிந்தி அல்லது காளிந்தி என்று மருவியிருத்தல் கூடும்."[26]

நெடுங்கிள்ளிக்கு, வடபுல வடுக அரசர்கள் உதவியிருந்தனர் என்று எண்ண இடமுண்டு. போர் சோணாட்டின் வடஎல்லையில் நடைபெற்றது. இதைக் குறித்துக் காட்டும் நலங்கிள்ளி தன் வழக்கமான மடிமையை அகற்றிவிட்டு மூர்க்கமாகப் போர் புரிந்தான்; ஏழு நாள்கள் வரை இருதிறத்தாரும் ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுக்காமலே கடும்போர் நடத்தினர். இறுதியில் நெடுங்கிள்ளியும் நலங்கிள்ளியும் நேருக்கு நேராக நின்று மறப்போர் புரிந்தனர். இதன் பயனாக நெடுங்கிள்ளி களத்தில் சாய்ந்தான். பின்னாளில் இப்போர் காரணமாகவே அவன் காரியாற்றுத் துஞ்சிய நெடுங்கிள்ளி என்று குறிப்பிடப்பட்டான். அடுத்த தலைமுறையிலும் காரியாற்றில் மற்றொரு போர் நடைபெற்றதை அறியமுடிகின்றது.

### 3.4.4. கொங்கர் செங்களப் போர்

பெருங்கடலை அடக்கிய சேரன் செங்குட்டுவன் முன்னோன் இருதிசைக் கடலிலும் நீராடித் தமிழகத்தின் வடதிசை முழுவதும் ஆண்டான்.

ஆனாலும் கொங்கு வெற்றி முழுவதும் உறுதியாய் விடவில்லை. கொங்கு நாட்டில் எழுந்த கிளர்ச்சிகளைச் செங்குட்டுவன் செங்களம் என்ற இடத்தில் போர் செய்து அடக்க முடிவெடுத்தான். இதில் சோழர், பாண்டியர் கொங்கருக்கு உதவினர் என்று அறிகிறோம்.

**நும்போல் வேந்தர் நும்மொடு இகலிக்**

**கொங்கர் செங்களத்துக் கொடுவரிக் கயற்கொடி**

**பகைப்புறத்துத் தந்தன ராயினும், ஆங்கவை**

**திசைமுக வேழத்தின் செவியகம் புக்கன[27]**

என்று சிலப்பதிகாரத்தால் வில்லவன் கூற்றாக இதை இளங்கோ அறிவிக்கிறார்.

### 3.5. வாகைத்திணைப் போர்

மிக்கோன் செறுவென்றது வாகை எனப்படும். போர்க்களத்தில் பகைவரை வென்று வாகை மாலை சூடுவது வாகைத் திணையாகும்.

### 3.5.1. வாகைப் பறந்தலைப் போர்

கரிகாலன் ஆற்றிய மற்றொரு பெரும்போர் வாகைப் பறந்தலைப் போராகும். இதில் ஒன்பது மன்னர்களைத் தன்னந்தனியாக எதிர்த்தவன் என அறிகிறோம். இதனை,

**விரிஉளைப் பொலிந்த பரியுடை நல்மான்**

**வெருவரு தானையொடு வேண்டுபுலத்து இறுத்த**

**பெருவளக் கரிகால் முன்னிலைச் செல்லார்**

**சூடா வாகைப் பறந்தலை ஆடுபெற**

**ஒன்பது குடையும் நண்பக லொழித்த**

**பீடீஇல் மன்னர் போல,**

**ஓடுவை மன்னல் – வாடைநீ எமக்கே[28]**

என்னும் பாடலில் பரணர் இப்போரை விரித்துரைத்துள்ளார். கரிகாலன் அப்போரில் ஒன்பது மன்னர்களை எதிர்த்துப் போரிட்டான். அவர்கள் கரி,

பரி, தேர், காலாட்படைகளை மிகுதியாகவே உடையவராய் இருந்தனர். ஆனால் அவர்களால் கரிகாலன் முன் நிற்க முடியவில்லை. கரிகாலன் அரும்பெரும் வெற்றி பெற்றான். ஒன்பது மன்னரும் தம் வெண்கொற்றக்குடைகளையும் புகழ்க்கொடிகளையும் களத்திலே எறிந்துவிட்டு ஓடினர் என வெற்றியைப் பாடியதால் வாகையாயிற்று.

"இம்மூன்று போர்களும் (வெண்ணிப் போர், வெண்ணி வாயில் போர் மற்றும் வாகைப் போர்) முதல் கரிகாலனுக்கு உடைய போர்கள். இதனைப் பெரும்பெயர்க் கரிகால் என்ற சங்க ஏடுகளில் கூற்றுகள் மூலம் முதல் கரிகாலன் மரபும் பெயரும் உடைய கரிகாலன் என்று இராசமாணிக்கனார் கூறுகிறார்."[29]

### 3.5.2. கானப் பேரெயில் போர்

கானப் பேரெயில் என்னும் இடத்தில் பாண்டியன் உக்கிரப் பெருவழுதிக்கும் குறுநிலத் தலைவனாகிய வேங்கை மார்பனுக்கும் இடையே நடைபெற்ற போர் கானப் பேரெயில் போர். கானப்பேரெயில் என்பது பாண்டிய நாட்டில் பண்டைய காலத்தில் நிலவிய வலிமை வாய்ந்த கோட்டை கானப்பேர் என்பதாகும். இது இந்நாளைய காளையார்கோயில் என்பது ஆராய்ச்சியாளரின் முடிவு. அதன் கோட்டை மதில்கள் வெல்ல முடியாதவை. அதன் தலைவனான வேங்கை மார்பன் இது பற்றிப் பெரிதும் தருக்குடையவனாக இருந்தான். பாண்டியன் உக்கிரப்பெருவழுதி அதை வென்று வேங்கை மார்பன் தருக்கை அடக்கினான். இக்கருத்தாலேயே அவன் கானப்பேரெயில் கடந்த உக்கிரப்பெருவழுதி என்று அழைக்கப்பட்டான் என்கிறார் கா. அப்பாத்துரை. கானப்பேரெயில் என்னும் வலிமைவாய்ந்த கோட்டையின் சிறப்பை,

**கதிர்நுழை கல்லா மரம்பயில் கடிமிளை**
**அருங்குறும்பு உடுத்த கானப் பேரெயில்**[30]

என்னும் புறப்பாட்டின் மூலம் ஐயூர் மூலங்கிழார் எடுத்துரைக்கிறார்.

### 3.5.3. வெண்ணிப் போர் III

*சங்கப் பாடல்களிலே பத்துப்பாட்டின் இரண்டு பாடல்கள் இப்போர் பற்றிக் கூறுகின்றன. அவை, கடியலூர் உருத்திரங்கண்ணனார் பாடிய பட்டினப்பாலை, முடத்தாமக் கண்ணியார் பாடிய பொருநராற்றுப்படை ஆகியவையாகும். இது மூன்றாம் வெண்ணிப்போர் ஆற்றிய இரண்டாம் கரிகாலனைப் பற்றியதாகும்.*

*"இரண்டாம் கரிகாலன் திருமாவளவன் என்ற புகழ்ப்பெயருடையவன் (பட்டினம்.299). அவன் கரிகாலன் என்ற பெயரும் உடையவன் (பொருநர்.138). அவன் தந்தை உருவப்பஃறேர் இளஞ்சேட்சென்னி (பொருநர்.130) ஆவான். பிறக்கும்போதே அரசுரிமை பெற்றவன். ஆனால் சிறைப்பட்டு வாளால் விடுதலையுற்றான் (பொருநர்.132, பட்டினம்.221.7). அவன் இளமை கண்டு முறைசெய்யும் ஆற்றல் பற்றி ஐயுற்ற முதுமை வாய்ந்த அமைச்சர் நாணும்படி முதுமை வேடத்தில் வந்து முறை செய்தான் (பொருநர்.187-8). பல சமயச்சார்பான விழாப்பணிகள், வேள்வி முறைகள் செய்தான் (பட்டினம்.200-203). ஒளியர், அருவாளர், பாண்டியர், வடவர், மேல்புலத்தவர்கள் ஆகியவர்களை வென்றடக்கியிருந்தான் (பட்டினம்.274-277). பொதுவர் மரபையே அழித்தான். இருங்கோவேளை முறியடித்தான் (பட்டினம்.282-283). உறையூர்க் கோட்டையைப் புதுப்பித்தான்: ஏரி, குளம் வெட்டி உழவு பெருக்கி, புதுக்குடியிருப்புகளையும், கோயிலும் வகுத்தான் பட்டினம்.284-286) வெண்ணிப்போர் ஆற்றினான்"[31] என்று கா.அப்பாத்துரை கூறியுள்ளார்.*

*மூன்றாம் வெண்ணிப்போர் பற்றிப் பொருநராற்றுப்படையில் முடத்தாமக் கண்ணியார் குறிக்கும் அடிகளாவன :*

**இரும்பனம் போந்தைத் தோடும், கருஞ்சினை**
**அரவாய் வேம்பின் அம்குழைத் தெரியலும்**
**ஓங்கிருஞ் சென்னி மேம்பட மிலைந்த**
**இருபெரு வேந்தரும் ஒருகளத் தவிய**

**வெண்ணித் தாக்கிய வெருவரு நோன்தாள்,**

**கண்ணார் கண்ணிக் கரிகால் வளவன்**[32]

என்பதாகும். இங்கே, கரிகால்வளவன் பனம்பூமாலை அணிந்த சேர வேந்தனையும், வேப்பம் பூமாலை அணிந்த பாண்டிய வேந்தனையும் ஒருங்கே எதிர்த்துப் போர் நிகழ்த்தினான். இருபெரு வேந்தர்களும் களத்திலேயே வீழ்ந்துபட்டனர். இதன் பின்னரே கரிகாலன் தமிழகப் பேரரசன் ஆகியிருக்க வேண்டும்.

### 3.5.4. கடம்பின் பெருவாயில் போர்

கடம்பின் பெருவாயில் என்பது நன்னன் வேண்மான் ஆண்ட பாலி நாட்டின் ஒரு நகரம். அதுவே, நன்னன் தலைநகரமாகவும் இருத்தல் வேண்டும். இந்நாடு பூழிநாடு அதாவது தற்போதைய தென் கன்னட மாவட்டத்தை அடுத்துள்ள குடகு மாகாணம் ஆகும். கடம்பின் வாயில் போரில் நன்னனை எதிர்த்தவன் “பதிற்றுப்பத்தின் நான்காம் பத்திற்குரிய களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல் என்னும் சேர அரசனாவான். சேரருக்குரிய மணிமுடியை அவன் முடிசூட்டு விழாவின்போது முடிசூடாததால் அவன் களங்காய் கோத்த நார்முடி அணிந்திருக்க வேண்டுமென்றும் அது காரணமாகவே அப்பெயர் பெற்றானென்றும் உரையாசிரியர் அ.மா.பரிமணம் கூறியுள்ளார்.”[33]

களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரலின் தந்தை சேரலைஆதனென்றும் தாய் வேளாவிக்கோமான் மகளான பதுமன்தேவி என்றும் பதிற்றுப்பத்தின் நான்காம்பத்துப் பதிகம் கூறுகிறது. அவன் நீர் கொப்பளிக்கும் நேரி மலையை உடையவன்; 25 ஆண்டுகள் ஆட்சி செய்தவன்; முன்னும் பின்னும் ஆண்ட சேரர்களைப் போலவே வள்ளன்மை மிக்கவன். நான்காம் பத்தைப் பாடிய புலவர் காப்பியாற்றுக் காப்பியனார். அவருக்கு அவன் அப்பாட்டிற்குரிய பரிசாக நாற்பதாயிரம் பொற்காசும் நாட்டிற்பாதியும் அளித்தான். புலவர் பாதி அரசையும் அரசனிடமே விட்டு அவனிடம் அமைச்சரானார்.

*களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல் பூழி நாட்டின் மீது படையெடுத்துச் சென்றான். பூழி நாடு என்பது இந்நாளைய சேரர் தாயகமான வடமலையாளத்துக்கு வடக்கேயுள்ள தென்கன்னட மாவட்டமே. அதன் ஒரு பகுதியே நன்னனின் பாலி நாடாகிய குடகுப்பகுதி. இப்பூழி நாட்டுப் படையெடுப்பின் ஒரு நிகழ்ச்சியே கடம்பின் வாயிற்போர். அதில் நார்முடிச் சேரல் பொன்னங்கண்ணியும் பொன்மாலையும் சூடிய நன்னனை வென்று அவன் தலையை வெட்டி வீழ்த்தினான். பொன்னால் அணிசெய்யப்பட்ட அவனுக்குரிய வாகை மரத்தை வேருடனும் கிளையுடனும் சிதைத்தான் என்பதைப் பின்வரும் அடிகளின் வாயிலாக அறியமுடிகிறது.*

**பொன்அம் கண்ணிப் பொலந்தேர் நன்னன்**
**சுடர்வீ வாகைக் கடிமுதல் தடித்த**
**தார்மிகு மைந்தின் நார்முடிச் சேரல்**[34]

*அகநானூற்றிலுள்ள பரணர் பாடல்களால் நார்முடிச் சேரல் படைத்தலைவன் ஆய் எயினன் என்றும் நன்னன் படைத்தலைவன் மிஞிலி என்றும் தெரிகிறது. சேரர் படைத்தலைவனாகிய ஆய் எயினன் நன்னன் படைத்தலைவனாகிய மிஞிலியின் வேற்போருக்கு ஆற்றாது போரில் சாய்ந்தான் என்பதனை,*

**கடும்பரிக் குதிரை ஆஅய் எயினன்**
**நெடுந்தேர் மிஞினியொடு பொருதுகளம் பட்டென**[35]

**........................................ ஒன்னார்**
**ஓம்புஅரண் கடந்த வீங்குபெருந் தானை**
**அடுபோர் மிஞிலி செருவிற்கு உடைஇ,**
**முருகுஉறழ் முன்பொடு பொருதுகளம் சிவப்ப**
**ஆஅய் எயினன் வீழ்ந்தென**[36]

*என்பதனால் வெளிப்படுகிறது. களங்காய்க் கண்ணி நார்முடிச்சேரனால் நன்னன் முறியடிக்கப்பட்டு வீழ்ந்த போர் பெருந்துறைப்போர் என்று கல்லாடர் குறிக்கிறார். இதனை,*

**.................................................................. குடாஅது**

**இரும்பொன் வாகைப் பெருந்துறைச் செருவில்**

**பொலன்பூண் நன்னன் பொருதுகளத்து ஒழிய**

**வலம்படு கொற்றம் தந்த வாய்வாள்**

**களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல்![37]**

*என்பதனால் தெளிவுறுகிறது. "பெருந்துறைப் போர் என்பது கடம்பின் வாயில் பெருந்துறைப்போர் என்ற முறையில் கடம்பின் வாயிற் போருக்கே உரிய மற்றொரு பெயராய் இருத்தல் கூடும்."[38]*

### 3.6. காஞ்சித் திணைப் போர்

*காஞ்சித் திணை என்பது நிலையாமையை உணர்த்துவது. போரினால் ஏற்படும் அழிவைப் பாடுவதாகும்.*

### 3.6.1. கங்கைப் போர் II அல்லது குயிலாலயப் போர்

*சேரன் செங்குட்டுவனின் இரண்டாவது வடதிசைப் படையெடுப்பு எனச் சிலப்பதிகாரத்திலேயே இப்போர் மிகவும் விரிவுபட உரைக்கப்பட்டுள்ளது. படையெடுப்பிற்குக் காரணங்கள் இரண்டு. அவை : கண்ணகிக்குச் சிலைக்கான கல் கொணர்வது; வடதிசையரசர்களின் பாலகுமாரன் மக்களாகிய கனகனும், விசயனும் தமிழரசரை ஏளனமாகப் பேசியதே ஆகும்.*

*இதனால் சேரன் செங்குட்டுவன் ஒரு நெடுமொழி கூறிப் புறப்பட்டான். 'இந்த வடபுல ஆரிய அரசரை முறியடித்து அவர்கள் தலைமீதே கண்ணகிச் சிலைக்கான கல்லை ஏற்றிக் கொண்டுவருவேன் அப்படிச் செய்யாவிட்டால் நான் செங்கோலரசனல்ல!' என்று சீற்றத்துடன் எழுந்தான். குயிலாலயம் என்ற இடத்தில் ஆரிய அரசர்கள் பெரும் படையுடன் தமிழ்ப்படையை வந்து எதிர்த்தனர். கனக விசயர் தலைமையில் உத்தரன், விசித்திரன், உருத்திரன், பைரவன், சித்திரசிங்கன், தனுத்தரன், சுவேதன் ஆகிய பல அரசர்கள் தங்கள் படைகளுடன் வந்து குவிந்தார்கள்.*

போர் வெறிகொண்ட யானையைப்போல் சேரன் ஆரிய அரசர்களையும் கடை மாக்களையும் கொன்று களம் குவித்தான். அம்மன்னர் அவன் திசையில் திரும்ப அஞ்சினர். ஆரியப்படை குறையத் தமிழ்ப் படை அதைச் சூழ்ந்து நெருங்கியது. ஒரு பகல் எல்லைக்குள் அவ்வளவு பெருந்தொகையான படை வீரர்களைக் கூற்றுவன் கூடக் கொன்று குவிக்க முடியுமா! என்று வியந்து ஆரிய அரசர் மலைத்தனர். இறுதியில் படைகளெல்லாம் தோற்றபின் அவர்கள் சிவ வேடம் பூண்டு ஒளிந்தனர். இளங்கோவடிகள் மொழிகளில்,

**வாய்வாளா மையின் வண்தமிழ் இகழ்ந்த**
**காய்வேல் தடக்கைக் கனகனும் விசயனும்**
**ஐம்பத்திருவர் கடுந்தேராளரொடு**
**செங்குட்டுவன்தன் சினவலைப்படுதலும்**
**சடையினர் உடையினர் சாம்பற் பூச்சினர்**
**பீடிகைப் பீலிப்பெருநோன்பாளர்,**
**பாடு பாணியர் பல்இயத் தோளினர்**
**ஆடு கூத்தர் ஆகி எங்கணும்**
**ஏந்துவாள் ஒழியத் தாந்துறை போகிய**[39]

அறியலாம். மேலும், இப்போரைப் பற்றிப் பதிற்றுப்பத்துப் பதிகத்திலும் குறிக்கப்பட்டுள்ளது.

**கடவுள் பத்தினிக் கற்கோள் வேண்டிக்**
**கான்நவில் கானம் கணையிற் போகி,**
**ஆரிய அண்ணலை வீட்டிப் பேர்இசை**
**இன்பல் அருவிக் கங்கை மண்ணி;**
**இனம்தெரி பல்ஆன் கன்றொடு கொண்டு**[40]

என்பதனால் அறிய முடிகிறது. இவ்வெற்றியின் பயனாக வடக்கிலிருந்து பல ஆநிரைகளையும் கைக்கொண்டு வந்ததாக இப்பதிகம் குறிக்கிறது. எனவே வெட்சித் திணையிலும் போர் நிகழ்ந்ததை அறியமுடிகிறது.

### 3.7. பாடாண் திணைப் போர்

*பாடப்படும் ஆண்மகனது ஒழுகலாறுகளான வீரம், கல்வி, தறுகண், கொடை பற்றிப் பாடுவது பாடாண் திணை எனப்படும்.*

### 3.7.1. குளமுற்றத்துப் போர்

*கிள்ளிவளவன் செய்த போர்கள் பல என்பது பல பாடல்களால் விளங்குகிறது. இடம் குறிக்காமலே பல பாடல்கள் போர்களைக் குறிக்கின்றன. இவன் பகைவர் அரண்கள் பலவற்றை அழித்தவன்; அரசர் பொன் மகுடங்களைக் கொண்டு தனக்கு வீரக்கழலைச் செய்து கொண்ட வலியவன் என்பதை,*

**நீயே, பிறர்ஓம்புறு மறமன் எயில்**
**ஓம்பாது கடந்து அட்டவர்**
**முடிபுனைந்த பசும் பொன்னின்**
**அடிபொலியக் கழல் தைஇய**
**வல்லாளனை வயவேந்தே**[41]

*என்னும் புறநானூற்றுப் பாடல் மூலம் அறியலாம். எட்டுத் திசையும் எரி கொளுத்திப் பலகேடுகள் நிகழப் பகைவர் நாட்டை அழித்தான்; காற்றுடன் எரி நிகழ்த்தியவர் போன்ற செயலையுடைய போரில் மிக்கவன். வேந்தரது பாடி வீட்டின்கண் குருதிப் பரப்பின் கண்ணே யானையைக் கொன்று புலாலையுடைய போர்க் களத்தை உண்டாக்கிப் போர் செய்யும் படையை உடையவன்; மண்டிய போரில் எதிர்நின்று வெல்லும் படையையும் திண்ணிய தோள்களையும் உடையவன்; வாள் வீரரும் யானையும் குதிரையும் உதிரம் கொண்ட போர்க்களத்தில் மாய, நாடோறும் எதிர் நின்று கொன்று நமக்கு நல்விருந்தளித்தவன்; அப்படிப்பட்ட ‘‘கிள்ளிவளவன் பாண்டியரையும் சேரரையும் அவர்கள் நாட்டுக்குத் துரத்திச் சென்றிருக்க வேண்டும். சேர நாட்டின் குளமுற்றம் என்ற இடத்தில் நிகழ்ந்த ஒரு போரில் அவன் இறந்திருக்கலாம். குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் என்று*

*பின்னாளில் அவனுக்கு வழங்கிய பெயர் இதனைக் காட்டுகிறது.''*[42] குளமுற்றம் ஒரு போர்க்களத்தின் பெயரன்று; சோழன் சென்று தங்கியிருந்த ஓர் இடப்பெயரே என்று கருதுபவரும் உண்டு.

### 3.7.2. தீவுப் போர்

*கடற்கொள்ளைக்காரர் கடற்கரை அடுத்த ஒரு தீவில் கோட்டை கட்டி வாழ்ந்தனர். கடலே தமக்கு முழுநிறை பாதுகாப்பு அளிக்கும் என்று எண்ணினர். ஆனால் குட்டுவன் வீரர்கள் யானைமீது நின்று கடலகத்தில் இறங்கி வேல்களை வீசினர். இதனால் பகைவரின் பாதுகாப்பு உடைபட்டது. இதனை,*

**பல்செருக் கடந்த கொல்களிற்று யானைக்**
**கோடுநரல் பௌவம் கலங்க வேலிட்டு**
**உடைதிரைப் பரப்பில் படுகடல் ஓட்டிய**
**வெல்புகழ் குட்டுவன் கண்டோர்**[43]

*என்றும்*

**கடும்பரிப் புரவி ஊர்ந்தநின்**
**படுந்திரைப் பனிக்கடல் உழந்த தாளே**[44]

**கெடலரும் பல்புகழ் நிலைஇ நீர்புக்குக்**
**கடலொடு உழந்த பணித்துறைப் பரதவ!**[45]

*என்ற அடிகளில் அவன் அஞ்சா நெஞ்சுடன் கடலகம் புகுந்து தன் எதிரிகளுடன் போரிட்ட பரதவன் (அ) கடல் மறவன் எனவும் பாராட்டப்படுகிறான்.*

**பொங்கிரும் பரப்பிற் கடல் பிறக்கோட்டி**[46]

*என்று சிலப்பதிகாரமும் இச்செயல் குறித்துள்ளது.*

பதிற்றுப்பத்து ஐந்தாம்பத்தின் பதிகத்தால் செங்குட்டுவன் தந்தை வடநாட்டினருக்கு அச்சந்தரும் கொடியையுடைய நெடுஞ்சேரலாதன்

என்றும் அவன் தாய் சோழன் மகள் மணக்கிள்ளி என்றும் கூறச் சிலப்பதிகாரத்தில் செங்குட்டுவனின் தாயே கரிகாலன் மகள் நற்சோணை என்று கூறுகிறது. ஆனால், இரண்டும் ஒரே இளவரசிக்குரிய பெயர் என்றும் கொள்ளப்பட்டு வருகிறது.

### 3.8. பொதுவியல் திணைப் போர்

வெட்சி முதல் பாடாண் இறுதியாகவுள்ள ஒன்பது திணைகளுக்கும் பொதுவாய் உள்ளவற்றையும் அவற்றில் கூறாதனவற்றையும் கூறுவது பொதுவியல் திணை எனப்படும்.

#### 3.8.1. கழுமலப் போர்

சோழன் செங்கணான் சேரமான் கணைக்கால் இரும்பொறையுடன் கழுமலத்தில் போர் புரிந்தான் என அறிகிறோம். கணைக்கால் இரும்பொறை, சோழனது குடவாயில் கோட்டத்தில் சிறைவைக்கப்பட்டதாகவும், நீர் கேட்ட போது சிறைக் காவலர் அவனை மதியாது காலந்தாழ்த்தியதால் அவன் தன்மான உணர்ச்சி கொண்டு உணவு, நீர் மறுத்து உயிர்விட்டான் என்றும் தமிழ் மரபு கூறுகிறது. ஆனால் கணைக்கால் இரும்பொறையின் பாடல் ஒன்று,

**குழவி இறப்பினும் ஊன்தடி பிறப்பினும்**
**'ஆள் அன்று' என்று வாளில் தப்பார்**
**தொடர்ப்படு ஞமலியின் இடர்ப்படுத்து இரீஇய**
**கேள்அல் கேளிர் வேளாண் சிறுபதம்**
**மதுகை இன்றி வயிற்றுத்தீத் தணியத்**
**தாம்இரந்து உண்ணும் அளவை**
**ஈன்ம ரோஇவ் வுலகத் தானே**[47]

என்பதால் அறியலாம். சேரமானை விடுவிப்பதற்காகப் பொய்கையார் என்னும் புலவர் கழுமலப் போர் பற்றிக் களவழி நாற்பது பாடல்களை இயற்றினார். ஆனால் களவழி இயற்றிய பொய்கையார் சங்க

இலக்கியத்திலேயே சேரன் கோக்கோதை மார்பனைப் பாடிய பொய்கையார் அல்லர் என்று வரலாற்றாசிரியர் பலர் மறுக்கின்றனர்.

இக்கருத்து பொருத்தமற்றது. செங்கணான் சங்ககாலத் தமிழகத்தின் கடைசிச் சோழனாயிருத்தல் வேண்டும். மேலும், இவன் எழுபது கோயில்களைக் கட்டியவன் என்பதால் சங்ககாலம் அன்று என்பது தெரிகிறது. ஆனால், சங்க காலத் தொடக்கத்திற்குப் பொருந்தும் கடைச் சங்கத்திற்குப் பொருந்தாது. எனவே, கடைச்சங்க காலமாக இருக்கலாம் என்றும் வரலாற்று ஆய்வாளர்கள் கருதினர்.

### 3.9. வஞ்சி, உழிஞைப் போர்

பகைவருடன் போர்த் தொடுத்தலும், பகைவரின் மதில் வளைத்தலும் வஞ்சி, உழிஞை ஆகும். அவ்வகைப் போர்கள் குறித்து இங்கு விளக்கப்படுகின்றது.

### 3.9.1. வியலூர்ப் போர்

சேரன் செங்குட்டுவனின் மற்றுமொரு போர் வியலூர்ப் போர். வியலூர் தஞ்சையில் உள்ள திருவிசலூர் என்று சிலர் கூறுவர். ஆனால்,

**கறிவளர் சிலம்பின் துஞ்சும் யானையின்**
**சிறுகுரல் நெய்தல் வியலூர் எறிந்தபின்**[48]

என்ற சிலப்பதிகார அடிகளால் அது பாலி (அ) குடகு நாட்டு வியலூரே என்று தெரிகிறது. மிளகு வளர்வதும், யானை மிகுதியாயுள்ளதும் ஒருங்கேயிருப்பது மேல்கரையிலேயேயாகும் என்று கா.அப்பாத்துரை கூறுகிறார். போருக்குப்பின் வியலூர் எரிக்கப்பட்டது என்று கூறியமையால் வஞ்சித் திணையாயிற்று. வியலூர் முற்றுகையைக் கிட்டத்தட்ட இதே சொற்களிலேயே பதிற்றுப்பத்துப் பதிகம் தருகிறது.

**உறுபுலி அன்ன வயவர் வீழச்**
**சிறுகுரல் நெய்தல் வியலூர் நூறி**[49]

என்பதினால் வியலூர் கோட்டை நகரம் என்று அறிகிறோம்.

### 3.10. உழிஞை, வாகைப் போர்

பகை மதில் வளைத்தும், போரில் வெற்றி பெற்றதும் பாடுவது உழிஞை, வாகைத் திணை ஆகும். அத்திணைப் போர் குறித்த சான்றுகள் எடுத்துக் காட்டப்படுகின்றன.

#### 3.10.1. நேரிவாயில் போர்

உழிஞை என்பது மாற்றான் மதிலை வளைத்தலைக் குறிக்கும். உழிஞைத் திணையில் அமைந்த போரான நேரிவாயில் போர் என்பது இன்றைய திருச்சிராப்பள்ளி நகரின் பகுதியாகும். இது பண்டைய உறையூரின் தெற்கு வாயில் அருகே அமைந்த ஊர் ஆகும். அதில் நடைபெற்ற போர் நேரிவாயில் போர். இது சோழர் அரசுரிமைக்காகவே எழுந்தது. சேரன் செங்குட்டுவனின் தாய், சோழர் குடிப்பிறந்தவள். ஆதலால் அரசுரிமை கோரிய கிள்ளிவளவன் அவன் மைத்துனனாய் இருந்தான். ஆனால் அதே அரசுரிமைக்கு வேறு ஒன்பது சோழர்குடி இளவல்கள் போட்டியிட்டுக் கிள்ளி வளவனுக்கு எதிராகக் கிளர்ந்தெழுந்தனர். செங்குட்டுவன் கிள்ளிவளவனை ஆதரித்து ஒன்பது இளவரசரையும் ஒருங்கே எதிர்த்து நின்று போரிட்டான்.

போர் ஒரே பகலில் நடைபெற்று முடிந்துவிட்டது. செங்குட்டுவன் ஒன்பது சோழ இளவல்களையும் களத்தில் வென்று முறித்தான். தன் மைத்துனன் கிள்ளிவளவனையே சோழமன்னனாக முடிசூட்டினான். மணிமேகலைக் காப்பியத்தில் இடம்பெறும் சோழன் இவனே. இப்போர் பற்றிப் பதிற்றுப்பத்துப் பதிகமும் சிலப்பதிகாரமும் விரித்துரைக்கின்றன.

**குஞ்சர ஒழுகை பூட்டி, வேந்திறல்**
**ஆராச் செருவின் சோழர்குடிக்கு உரியோர்**
**ஒன்பதின்மர் வீழ, வாயிற்புறந்து இறுத்து;**
**நிலைசெருவின் ஆற்றலை அறுந்து**[50]

என்று பதிற்றுப்பத்துப் பதிகமும்

**ஆர்புனை தெரியல் ஒன்பது மன்னரை**

**நேரி வாயில் நிலைச்செரு வென்று**[51]

என்று சிலப்பதிகாரமும் கூறுகின்றன. மேலும் சிலப்பதிகாரத்தில், செங்குட்டுவனைப் புகழ்ந்து கூறும் முறையில் மாடலன்,

**---------------------------------------------------------------- நின்**

**மைத்துன வளவன் கிள்ளியொடு பொருந்தா**

**ஒத்த பண்பினர் ஒன்பது மன்னர்**

**இளவரசு பொறாஅர், ஏவல் கேளார்,**

**வளநாடு அழிக்கும் மாண்பினர் ஆதலின்,**

**ஒன்பது குடையும் ஒரு பகல் ஒழித்து, அவன்**

**பொன்புனை திகிரி ஒருவழிப் படுத்தோய்!**[52]

என்று இப்போரை விளக்கமாக எடுத்துரைத்துள்ளான்.

### 3.10.2. ஆவூர்ப் போர்

சோழன் நலங்கிள்ளி போர் வெறியும் இறுமாப்பும் தற்பெருமையும் உடையவன். பண்டைய சோழரைப் போலவே அவனிடம் சிறந்த நிலப்படையும் கடற்படையும் இருந்தன. அவற்றின் உதவியால் பழம் புகழ்க் கரிகாலனைப்போலத் தமிழகம் முழுவதும் வென்று வடபுலங்களையும் கீழடக்கிப் பேரரசனாக வேண்டும் என்ற பேரவா அவனுக்கு மிகுதியாயிருந்தது. சோணாட்டிலிருந்து வலஞ்சுற்றிப் புறப்பட்டுப் பாண்டிய நாட்டையும் சேரநாட்டையும் நீ வென்றுவிட்டதால் இனி வடக்கே படையெடுக்கக்கூடும் என்று வடதிசையரசர் நடுங்கினர் என்று கோவூர்கிழார் அவன் கால நிலையைச் சுட்டிக் காட்டுகிறார்.

**குணகடல் பின்ன தாகக் குடகடல்**

**வேண்தலைப் புணரிநின் மான்குளம்பு அலைப்ப,**

**வலமுறை வருதலும் உண்டு'என்று அமைந்து.**

**நெஞ்சு நடுங்கு அவலம் பாயத்**

**துஞ்சாக் கண்ண, வடபுலத் தரசே![53]**

என்பதனால் அறியலாம். பேரவாவுடைய இந்த அரசனுக்கு அவன் ஆட்சியின் முற்பகுதி முழுவதும் அருகிலேயே எதிர்ப்பு இருந்தது. சோழர் குடியின் இளவரசனான நெடுங்கிள்ளி என்பவன் அவனுக்கெதிராக எழுந்து உறையூர், ஆவூர் ஆகிய நகரங்களைக் கைப்பற்றி ஆண்டு வந்தான். நலங்கிள்ளி பெரும் படைகளுடன் புறப்பட்டுச் சென்று அவனை அடக்கி ஒடுக்க முற்பட்டான்.

நலங்கிள்ளிக்கு மாவளத்தான் என்று ஒரு தம்பி உண்டு. நெடுங்கிள்ளிக் கெதிராகப் போரிடும்படி அவனை நலங்கிள்ளி அனுப்பினான். நெடுங்கிள்ளி அச்சமயம் கோவூரிலிருந்தான். மாவளத்தான் அந்நகரை முற்றுகையிட்டான். இம்முற்றுகை பற்றிய இரண்டு செய்திகள் நமக்குத் தெரிகின்றன. அவை,

இளந்தத்தன் என்னும் புலவர் நலங்கிள்ளியைப் பாடிமுடித்த பின்னர் நெடுங்கிள்ளியையும் பாட ஆவூர் வந்தார். அப்புலவரை நலங்கிள்ளியின் ஒற்றன் என்றெண்ணி நெடுங்கிள்ளி கொல்ல முற்பட்டான். கோவூர்கிழார் ஓடோடிச் சென்று புலவர்களின் நடுநிலையுரிமையை எடுத்துரைத்துப் புலவரைக் காத்தார் என்று புறப்பாடல் 47 வழியாக அறிய முடிகிறது.

ஆவூர் முற்றுகை, நாள் கணக்காக, வாரக் கணக்காக நீடித்தது. நெடுங்கிள்ளி வெளிவந்து போரிடாமல் கோட்டைக்குள்ளேயே அடைப்பட்டுக் கிடந்தான். இதனால் நகரத்தின் உள்ளிருந்த மக்களுக்கும் உயிரினங்களுக்கும் பெருத்த முட்டுப்பாடு ஏற்பட்டது. கோவூர்கிழார் மீண்டும் நெடுங்கிள்ளியிடம் சென்று வீர அறிவுரை தந்தார். 'வீரமரபில் வந்தவன் நீ, குடிகள் வருந்த இப்படி அடைப்பட்டுக்கிடப்பது நன்றன்று. போர் புரிய விருப்பம் இருந்தால் ஆண்மையோடு வெளியே வந்து வெற்றி தேடு. இல்லாவிட்டால் நாட்டுக்குரியவனிடம் கோட்டையை விட்டுவிடு' என்றார்.

**அறவை ஆயின், நினதெனத் திறத்தல்**
**மறவை ஆயின் போரொடு திறத்தல்**
**அறவையும் மறவையும் அல்லை ஆகத்,**
**திறவாது அடைத்த திண்ணிலைக் கதவின்**
**நீள்மதில் ஒருசிறை ஒடுங்குதல்**
**நாணுத்தக உடைத்து, இது காணுங்காலே[54]**

*எனும் பாடல்வழி நெடுங்கிள்ளி இச்சுடு சொற்களால் உளங்கிளறப் பெற்று வெளியே வந்து போரிட்டான். அவன் தோற்றுவிடவே, ஆவூரைத் துறந்துவிட்டு உறையூர் சென்று தங்கினான். சில நாட்களுக்குள் நலங்கிள்ளி அங்கும் வந்து முற்றுகை தொடங்கினான். ஆவூரில் நகருக்குள்ளிருந்து நாள்கள் கழித்தது போலவே, உறையூரிலும் நாள்கள் கடத்தினான். இந்தத்தடவை கோவூர்கிழார் நெடுங்கிள்ளிக்கு அறிவுரை கூறவில்லை, நலங்கிள்ளிக்கே கூறினார்.*

**இரும்பனை வெண்தோடு மலைந்தோன் அல்லன்;**
**கரும்சினை வேம்பின் தெரியலோன் அல்லன்;**
**நின்ன கண்ணியும் ஆர்மிடைத்தன்றே! நின்னோடு**
**பொருவோன் கண்ணியும் ஆர்மிடைந் தன்றே!**
**ஒருவீர் தோற்பினும், தோற்பதும் குடியே![55]**

*என்பதனால், நீங்கள் இருவரும் சோழர் அத்திமாலை அணிந்தவர்களே; எவர் தோற்றாலும் தோல்வியறியாச் சோழர் குடிக்குத்தான் இகழ்ச்சி உண்டாகும் என்று கூறிப் புலவர், அவரிருவரையும் நண்பராக்கினார். ஆனாலும், இருவரும் மீண்டும் போர்களில் ஈடுபட்டனர். இப்போர்களில் ஒன்றே காரியாற்றுப்போர். இதே இடத்தில் பின்னும் போர்கள் நடந்ததால் இதை நாம் முதற்காரியாற்றுப் போர் எனச் சுட்டலாம்.*

### 3.11. வாகை, காஞ்சித்திணைப் போர்

*வெற்றியையும், நிலையாமையையும் எடுத்துரைக்கும் திணைப் போர் நிலைகள் இங்கு விளக்கப்படுகின்றன.*

#### 3.11.1. தலையாலங்கானத்துப் போர்

தலையாலங்கானம் என்பது சோழநாட்டின் பகுதி. இது தற்காலத் தஞ்சை மாவட்டத்தைச் சேர்ந்த நன்னிலம் வட்டத்தில் உள்ள ஓர் ஊர். பிற்காலங்களில் இது தலையாலங்காடு என்று வழங்கிற்று. தேவாரத் தலங்களில் திருநாவுக்கரசரால் பாடப்பட்ட சிவநெறிக்குரிய ஒரு திருப்பதியாயிற்று.

சங்க இலக்கியக் காலப் போர்களிலே தலைசிறந்த பெரும் புகழ்ப்போர் தலையாலங்கானத்துப் போராகும். அப்போரின் புகழில் ஈடுபட்டு வியத்தகு வீரக்காட்சிகளையும் அதன் பேராரவாரத்தையும் அதன்பின் ஏற்பட்ட அமளி குமளிகளையும் கண்டும் கேட்டும் அவற்றை வருணனைகளாகவோ, உவமை, அடைமொழிகள் வாயிலாகவோ எடுத்தாளாத புலவர் அந்நாளில் இல்லை எனலாம். அரசுரிமை பெறும் சமயம், இரண்டாம் நெடுஞ்செழியன் வயதுவராத, முதிரா இளைஞனாயிருந்தான் என்பதை இடைக்குன்றூர்க்கிழார் பாடல் வாயிலாக,

**கிண்கிணி களைந்தகால் ஒண்கழல் தொட்டுக்**
**குடுமி களைந்தநுதல் வேம்பின் ஒண்தளிர்**
**நெடுங்கொடி உழிஞைப் பவரொடு மிலைந்து**[56]

என்பதனால் பாண்டி நாட்டைக் கைப்பற்றிவிட இதுவே தருணம் என்று மற்ற அரசர்களும் இரண்டு பேரரசர்களும் ஐந்து வேளிர்களும் சேர்ந்து ஒருங்கு திரண்டு தாக்கினார்கள். எதிர்த்த வேளிர்கள் திதியன், எழினி, எருமையூரன், இளங்கோ வேண்மாள், பொருநன் ஆகியவர்கள். பேரரசருள் இப்போரில் ஈடுபட்ட சேரன் யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை என்று அறிகிறோம். போரில் ஈடுபட்ட சோழன் இராசசூயம்வேட்ட பெருநற்கிள்ளி என்று சிலர் கூறியுள்ளனர். ஆனால், இது பொருத்தமற்றது. அவன் கிள்ளி வளவனாகவே இருத்தல் வேண்டும் என்று கூறலாம். ஏனெனில் தலையாலங்கானத்துக்கு முற்பட்ட கூடற்பறந்தலைப்போர் அவன்

முயற்சியேயாகும். தமிழ் தலைமயங்கிய தலையாலங்கானம் என்று இப்போர்க் களத்தைப் புலவர் குடபுலவியனார் பாடும் பாடல் வருமாறு,

**இமிழ்கடல் வளைஇய ஈண்டுஅகல் கிடங்கைத்**
**தமிழ்தலை மயங்கிய தலையாலங் கானத்து,**
**மன்னுயிர்ப் பன்மையும், கூற்றத்து ஒருமையும்**
**நின்னொடு தூக்கிய வெண்வேல் செழிய!**
**'இரும்புலி வேட்டுவன் பொறிஅறிந்து மாட்டிய**
**பெருங்கல் அடாரும் போன்ம் என விரும்பி,**
**முயங்கினேன் அல்லனோ யானே; மயங்கிக்**
**குன்றத்து இறுத்த குரீஇஇனம் போல,**
**அம்புசென்று இறுந்த அரும்புண் யானைத்**
**தூம்புடைத் தடக்கை வாயொடு துமிந்து,**
**நாஞ்சில் ஒப்ப நிலம்மிகைப் புரள**
**எறிந்துகளம் படுத்த ஏந்துவாள் வலத்தர்**
**எந்தையொடு கிடந்தோர்எம் புன்தலைப் புதல்வர்**[57]

என்கிறது. தமிழகத்து வீரம் முழுவதுமே போரில் ஈடுபட்டிருந்தது என்பதையும் இருபக்கத்தும் தமிழர்களே நிறைந்திருந்தாலும் எருமையூரன் முதலான வடுகர்களின் படைகளும் இடை கலந்திருந்தன என்பதையும் இது நினைவூட்டுகிறது. இத்தனை அரசர் பாண்டியனை எதிர்க்க ஒன்றுபட்டாலும் போர் நடைபெற்ற இடம் பாண்டிய நாடன்று, சோணாடே என்பது குறிப்பிடத்தக்கது. சோழனே கூட்டுறவின் இலக்கும் உறுப்பாகவும் தலைமை உறுப்பாகவும் இருந்தான் என்பதில் ஐயமில்லை.

படைதிரண்டு வருவதறிந்து பாண்டியன் முன்னேறிச் சென்று சோணாட்டில் தலையாலங்கானத்தருகே எதிரிகளைத் தாக்கியிருக்கக்கூடும்; அல்லது படையெடுத்த எதிரிகளை முறியடித்துத் துரத்திச் சென்று தலையாலங்கானத்தை அடைந்ததும் நெருங்கித் தாக்கியிருக்கக்கூடும். எவ்வாறாயினும் பாண்டியன் எழுவரையும் விஞ்சிய வீரமுடையவனாய் இருந்தான் என்பதை எளிதில் அறியலாம்.

“எதிரிகள் பல திசையினர்; ஆதலால் சோணாட்டில் தலையாலங் கானத்திலேயே அவர்கள் ஒருங்கே கூடிப் புறப்பட ஏற்பாடு செய்திருக்கவேண்டும். அவர்கள் கூடுமிடத்திலேயே நெடுஞ்செழியன் அவர்களைத் துணிவுடன் சென்றெதிர்த்தான் என்பதே பொருத்தமுடையதென்று தோன்றுகிறது.”[58]

போர் தொடங்கும் சமயம் பாண்டியன் எவ்வளவு இளைஞனாயிருந்தான் என்பதை இடைக்குன்றூர்க் கிழார் என்ற புலவர் (புறம்.77) பாடலின் வழியாக நமக்குப் படம்பிடித்துக் காட்டியுள்ளார். நெடுஞ்செழியன் படைகள் பெரியதாயிருந்தாலும் ஏழு படைகள் திரண்ட எதிரியின் படைப்பெருங்கடலை நோக்க, அது சிறியதாகவேயிருந்தது. எனவே, போரின் தொடக்கத்தில் எவரும் எதிரிகளின் வெற்றியை எதிர்பார்த்திருக்க முடியும். ஆனால் பாண்டியன் மதுரைவாயில் வெளியிலுள்ள பொய்கையில் குளித்துத் தாரும் கண்ணியும் படைக்கலங்களும் சூடிப் போர்க்களத்துக்கு வந்த சமயம் அவனுடனிருந்த இடைக்குன்றூர்க்கிழார் ‘எதிரிகள் எத்தனைபேர் பிழைத்தார்களோ’ என்றே குறிக்கிறார்.

**மூதூர் வாயில் பனிக்கயம் மண்ணி**
**மன்ற வேம்பின் ஒண்குழை மலைந்து**
**தெண்கிணை முன்னர்க் களிற்றின் இயலி**
**வெம்போர்ச் செழியனும் வந்தனன்; எதிர்ந்த**
**வம்ப மள்ளரோ, பலரே,**
**எஞ்சுவர் கொல்லோ பகல்தவச் சிறிதே![59]**

என்பதனால் வெளிப்படுகிறது. இளையன் என்று தன்னை ஏளனமாகக் கருத, வெற்றி தமதே என்ற இறுமாப்புடன் படையெடுத்த எதிரிகளைக் கண்டு பாண்டியன் கடுஞ்சினம் கொண்டான். ‘அவர்களைச் சிதறடித்து அவர்கள் முரசங்களைக் கைக்கொள்வேன், கொள்ளாவிட்டால் தான் கொடுங்கோலனாகுக. புலவர் என்னைப் பாடா தொழிக. இரவலர்க்கு

*ஈயாத பண்புடையவனாகுக!' என்று வஞ்சினம் கூறுகிறான். இவ்வஞ்சினம் அவனே இயற்றிய ஒரு புறப்பாடலாக நமக்குக் காட்சிதருகிறது எனலாம்.*

**நகுதக் கனரே நாடுமீக் கூறுநர்**

**இளையன் இவன்என உளையக் கூறிப்**

**-------------------------------------------------------------------**

**சிறுசொற் சொல்லிய சினங்கெழு வேந்தரை**

**அரும்சமம் சிதையத் தாக்கி முரசமொடு**

**ஒருங்குஅகப் படேஎன் ஆயின்..........**

**குடிபழி தூற்றும் கோலேன் ஆகுக!**

**-------------------------------------------------------------**

**புலவர் பாடாது வரைக என் நிலவரை!**

**---------------------------------------------------------------**

**இரப்போர்க்கு ஈயா இன்மையான் உறவே**[60]

*"இவ்வாறு பகைவர் எழுவரையும் வெற்றி கொண்டமையாலே தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டிய நெடுஞ்செழியன் என அழைக்கப்பட்டான்"*[61] *என்கிறார் அரங்க. இராமலிங்கம்.*

## 3.12. வாகை, பொதுவியல் திணைப் போர்

*வெற்றியையும் பொதுமை நிலையையும் எடுத்துக்காட்டும் போர்கள் இங்கே விளக்கப்படுகின்றது.*

### 3.12.1. வெண்ணிப் போர் - II அல்லது வெண்ணிப் பறந்தலைப் போர்

*வெண்ணிப் பெருவெளியில் நடந்த இப்போர் சேரமன்னன் பெருஞ்சேரலாதனுக்கும் சோழ மன்னன் கரிகாலனுக்கும் இடையே நடைபெற்றது. வெண்ணிப் பறந்தலை என்னும் இடத்தில் நடைபெற்ற போர் கோரமான போராயிருந்திருக்க வேண்டும் என்று புறநானூற்றுப் பாடல் ஒன்று கூறுகிறது. இதனை,*

**மண்முழா மறப்பப் பண்யாழ் மறப்ப,**

**இருங்கட் குழிசி கவிழ்ந்து இழுது மறப்பச்**

**சுரும்புஆர் தேறல் சுற்றம் மறப்ப,**

**உழவர் ஓதை மறப்ப, விழவும்**

**அகலுள் ஆங்கண் சீறூர் மறப்ப..........**

**புறப்புண் நாணி, மறத்தகை மன்னன்**

**வாள் வடக்கு இருந்தனன்............[62]**

என்னும் பாடலால் முரசு முழங்கவில்லை, யாழ் இசையை மறந்தது. அகன்ற பால் வட்டில்கள் பாலின்றி வறண்டு கிடக்கின்றன. சுறுசுறுப்பான தேனீக்கள் திரட்டிய தேனை இப்போது தீண்டுவாரில்லை. உழவர் கழனிகளில் உழுதலைத் தவிர்த்தனர். ஊர்ப்புற வெளிகள் விழாவயரும் கூட்டங்கள் இன்றி வெறிச்சென்றிருந்தன. சேரமான் பெருஞ்சேரலாதனும் கரிகாலனும் நேருக்கு நேர் இறுதிவரை போரிட்டதில் பெருஞ்சேரலாதன் மார்பில் வேல் பாய்ந்தது. மார்பில் மட்டுமின்றி முதுகிலும் புண்பட்டுவிட்டது. முதுகில் புண் என்பது பொதுவாகக் கோழையின் சின்னம். இங்கே சேரன் புண் இத்தகையதல்ல ஆயினும் அவச் சொல்லுக்கு இடமேற்பட்டது கண்டு, போரை நிறுத்தி வடக்கிருந்து உயிர்விடத் துணிந்தான் என்கிறார் கழாத்தலையார் என்னும் புலவர்.

இப்போரில் கரிகாலனின் வெற்றியையும் சேரமான் பெருஞ்சேரலாதனின் மான உணர்வையும் வெண்ணிக்குயத்தியார் என்னும் பெண்பாற் புலவர்,

**களிஇயல் யானைக் கரிகால் வளவ,**

**சென்றுஅமர்க் கடந்த நின் ஆற்றல் தோன்ற**

**வென்றோய், நின்னினும் நல்லன் அன்றே,**

**கலிகொள் யாணர் வெண்ணிப் பறந்தலை**

**மிகப்புகழ் உலக மெய்திப்**

**புறப்புண் நாணி வடக்கு இருந்தோனே[63]**

என்னும் புறப்பாட்டின் மூலம் எடுத்துரைக்கிறார்.

**தொகுப்புரை**

'சங்க இலக்கியத்தில் போர்' எனும் தலைப்பின்வழி பெறப்பட்ட ஆய்வு முடிவுகள் தொகுப்புரையாக இங்கே இடம்பெறுகின்றன.

- மனித வரலாற்றில் ஒவ்வொரு காலக்கட்டத்திலும் ஒவ்வோர் இயல்பு போற்றப்படுவதுண்டு. சங்க கால மக்கள் அகம், புறம் ஆகிய இரு பொருட்களையும் சிறப்பாகப் போற்றினர். அவற்றுள் அகம் என்பது காதலையும், புறம் என்பது வீரத்தையும் முதன்மையாகக் கொண்டது.

- சங்க காலத்தில் மறம் சிறப்பாகப் போற்றப்பட்டது. ஆகவே, எண்ணற்ற போர்கள் நடந்தன. அதில் அரசர்களான சோழர் புரிந்த போர்கள், சேரர் புரிந்த போர்கள், பாண்டியன் புரிந்த போர்கள் மற்றும் குறுநிலமன்னர்கள் மற்றும் படைத்தளபதிகள் புரிந்த போர்கள் ஆகியவை எடுத்துக்காட்டப்பட்டுள்ளன.

- சங்ககாலத்தில் நடைபெற்ற போர்கள் திணை அடிப்படையில் பகுத்துப் பார்க்கப்பட்டு, மண்ணாசையின் காரணமாக நிகழ்ந்த வஞ்சித் திணைப் போர்களாகக் காரியாற்றுப்போர் II, திருக்கோவலூர் போர் I, திருக்கோவலூர் போர் II நடைபெற்றதையும் அறியமுடிகிறது.

- காஞ்சி என்பது நிலையாமையாகிய அழிவை உணர்த்துவது. காஞ்சித் திணைப் போராக மோகூர்ப் போர் நடைபெற்றதும் அறியமுடிகிறது.

- மாற்றான் மதில் வளைத்தலான உழிஞைத் திணைப் போர்களாக மோகூர்ப் போர், சோழன் தித்தன், கட்டிக்குமிடையே நடைபெற்ற போர், இடும்பில், கொடுகூர் வெற்றிகள், வெண்ணில் போர், தகடூர்ப் போர், கூடற்பறந்தலைப் போர், கங்கைப் போர் நடைபெற்றதையும் அறியமுடிகிறது.

- இருபடைகளும் தம்முள் மாறுபட்டு எதிர் எதிர் நின்று போர் புரிதலான தும்பைத் திணைப் போர்களாகச் சோழன்

பெருவிறல்கிள்ளி, குடக்கோ நெடுஞ்சேரலாதனுக்கும் இடையே நடைபெற்ற போர், வடபுலக் கங்கைப்போர், காரியாற்றுப் போர், கொங்கர் செங்களம் போர் நடைபெற்றதையும் அறியமுடிகிறது.

- வென்றவனது சிறப்பினைக் கூறுவதாக அமைந்த வாகைத்திணைப் போர்களான வாகைப் பறந்தலைப் போர், தகடூர்ப் போர், கானப் பேரெயில் அழிவு, கானப் பேரெயில் போர், வெண்ணில் போர் III, நடைபெற்றதையும் அறியமுடிகிறது.

- பாடப்படும் ஆண் மகனது ஒழுகலாறுகளைக் கூறுவதுமான பாடாண் திணைக்குரிய குளமுற்றத்துப் போர் நடைபெற்றதை அறியமுடிகிறது.

- போர்க்களத்தில் நடைபெறும் பொதுச் செய்திகளை எடுத்து இயம்பும் பொதுவியல் திணைப் போர்களாகக் கழுமலப் போர் நடைபெற்றதை அறியமுடிகிறது.

- உழிஞை, வஞ்சித் திணை வியலூர்ப் போர்கள் நடைபெற்றதையும் இதில் மண்ணாசையால் உந்தப்பட்டு இரு அரசர்கள் இடையே நிலவிய மதில் போட்டியை காணமுடிகிறது.

- உழிஞை, வாகைத் திணைப் போரான நேரிவாயில் போர் நடை பெற்றதை அறியமுடிகிறது.

- வாகை, வெட்சித் திணைப் போரான கடம்பின் பெருவாயில் போர் நடை பெற்றதை அறியமுடிகிறது.

- வாகை, வஞ்சித் திணைப் போர்களாக ஆவூர்ப் போர் ஆகியன மண்ணாசையால் உந்தப்பட்டு இரு அரசர்கள் இடையே நிலவிய கடும் போட்டியில் வெற்றிபெற்றமையை விளக்குகிறது.

- வாகை, காஞ்சித் திணைப் போர்களாகத் தலையாலங்கானத்துப் போர் நடைபெற்றதும் அறியமுடிகிறது. அதில் வெற்றிபெற்ற அரசனது நிலையையும் தோற்ற நாட்டின் நிலையையும் ஒருசேர அறியமுடிகிறது.

- வாகை, உழிஞைத்திணைப் போராக வெண்ணிப் போர் III இல் மதிலை வளைத்த அரசன் வெற்றி பெற்றதைக் காண்கிறோம்.
- வாகை, தும்பைத் திணைப்போராகக் கடம்பின் பெருவாயில் போரின்வழி இரு படைகளும் தம்முள் மாறுபட்டு எதிர் எதிர் நின்று போர் புரிதலில் வெற்றி பெற்றவரது சிறப்பினைக் காணமுடிகிறது.
- உழிஞை, பாடாண் திணைப் போர்களாகச் சேரமான் செங்குட்டுவனின் போர்கள் மூலம் மாற்றான் மதில் வளைத்தலும் வெற்றி பெற்ற அரசனது சிறப்பினையும் அறியமுடிகிறது.
- பொதுவியல், வாகைத் திணைப் போர்களாக வெண்ணிப் போர் - II வெண்ணிப் பறந்தலைப் போர் வழி வெற்றி பெற்ற அரசன் நிலை மற்றும் பொதுவான செய்திகளை ஒருங்கே காணமுடிகிறது.
- சங்க இலக்கியத்தில் இருபத்தேழு போர்கள் இனம் காணப்பட்டுள்ளன. அவற்றில் திணை அடிப்படையான போரில் உழிஞைத் திணைப் போர்களே மிகுதியாக இடம்பெற்றுள்ளன.

**இயல் - மூன்று**

**சான்றெண் விளக்கம்**

1. *புறம். பா.312;:5-6*
2. *கா. அப்பாத்துரை, தென்னாட்டுப் போர்க்களங்கள், ப.82*
3. *மா. இராசமாணிக்கனார், சோழர் வரலாறு, ப.23*
4. *புறம். பா.262*
5. *புறம். பா.259*
6. *கா. அப்பாத்துரை, தென்னாட்டுப் போர்க்களங்கள், ப.135*
7. *மணி.19. சிறைக்கோட்டம் அறக்கோட்டம் ஆக்கிய காதை, 119-127*
8. *புறம். பா.36:6-13*
9. *கா. அப்பாத்துரை, தென்னாட்டுப் போர்க்களங்கள், ப.137*
10. *பதிற். பா.44:10-17*
11. *அகம். பா.226:13-17*
12. *பதிற்.5.பதிகம்.9*
13. *சிலப்பதிகாரம், 28.நடுகல் காதை : 118*
14. *பதிற்.5.பதிகம்: வ. 11-12*
15. *அகம்.பா. 246:8-14*
16. *பதிற்.8 பதிகம், பா.1-9*
17. *பதிற்.78:8-9*
18. *கா.அப்பாத்துரை, தென்னாட்டுப் போர்க்களங்கள், ப.138*
19. *மேலது, ப.125*
20. *அகம், பா.116:13-18*
21. *அகம். பா.186:14-17*
22. *அகம். பா.346:19-25*
23. *புறம். பா.63:1-11*
24. *புறம். பா.62*
25. *சிலப்பதிகாரம், 25. காட்சிக்காதை: 160-162*
26. *கா.அப்பாத்துரை, தென்னாட்டுப் போர்க்களங்கள், ப.123*

27. சிலப்பதிகாரம், 25. காட்சிக்காதை: 152-155

28. அகம். பா. 125:16-22

29. கா.அப்பாத்துரை, தென்னாட்டுப் போர்க்களங்கள், ப.89

30. புறம். பா:21:5-6

31. கா.அப்பாத்துரை, தென்னாட்டுப் போர்க்களங்கள், ப.91

32. பொருநர். பா.143-148

33. அ.மா.பரிமளம், பதிற்றுப்பத்து, ப.127

34. பதிற். பா.40:14-16

35. அகம். பா.148:7-8

36. அகம். பா.181:3-7

37. அகம். பா.199:18-22

38. கா.அப்பாத்துரை, தென்னாட்டுப் போர்க்களங்கள், ப.106

39. சிலப்பதிகாரம், 26 கால்கோள் காதை: 221 -229

40. பதிற். பா.5 பதிகம். 4-8

41. புறம்.பா. 40:1-5

42. மா. இராசமாணிக்கனார், சோழர் வரலாறு, ப.57

43. பதிற். பா.46:10-13

44. பதிற். பா.41:26-27

45. பதிற். பா.48:3-4

46. சிலப்பதிகாரம். 30 வரம்தரு காதை கட்டுரை. வ.12

47. புறம்.74

48. சிலப்பதிகாரம், 28. நடுகல் காதை, வ. 114-115

49. பதிற்.5 பதிகம். 10-11

50. பதிற்.5 பதிகம். 17-20

51. சிலப்பதிகாரம், 28. நடுகல் காதை, வ.116-117

52. சிலப்பதிகாரம், 27. நீர்ப்படைக் காதை, வ.117-123

53. புறம். பா.31:13-17

54. புறம். பா.44:11-15

55. புறம். பா.45:1-5

56. புறம். பா.77:1-3

57. புறம். பா.19:1-13

58. கா.அப்பாத்துரை, தென்னாட்டுப் போர்க்களங்கள், ப.128

59. புறம். பா.79

60. புறம். பா.72

61. அரங்க.ராமலிங்கம், சங்க இலக்கியத்தில் வேந்தர்கள், ப.127

62. புறம். பா.65

63. புறம். பா.66:3-8

# முன்னுரை

மனிதன் தோன்றிய காலத்தில் அவனது மெய்ப்பாடுகளின் வழி வெளிப்பட்ட கருத்துகள் பிற்காலத்தில் மொழியாக மாற்றம் பெற்றன. மொழியின் வாயிலாகத்தான் இலக்கியம் முகிழ்த்தது. இலக்கியங்கள் மனித உணர்வுக் களங்களாக விளங்குகின்றன.

இலக்கியம் பண்பாட்டின் பதிவேடாகவும் வரலாற்றுப் பெட்டகமாகவும் விளங்குகிறது. இலக்கியங்கள் காலங்காலமாக மக்களால் மதிக்கப்பட்டும், பாதுகாக்கப்பட்டும் வருகின்றன. இவை நம் முன்னோர்களின் அறிவுக் கூர்மையையும் வாழ்க்கை முறையையும் அறியப் பயன்படுகின்றன.

காலத்தால் மிகத் தொன்மையான நூல்களாக நமக்குக் கிடைப்பவை தொல்காப்பியமும் சங்க இலக்கியமும் ஆகும். தொல்காப்பியம் கூறும் இலக்கியம் என்பதற்கு எடுத்துக்காட்டுகளாகப் பத்துப்பாட்டையும் எட்டுத்தொகையையும் கூறலாம். சங்க இலக்கியம் பண்டைத் தமிழர்களின் அகம், புறம் சார்ந்த வாழ்க்கையை எடுத்தியம்புவதாக உள்ளது. அவற்றுள் அகம் என்பது ஒத்த தலைவனும் தலைவியும் தமக்குள் நுகரும் இன்ப உணர்ச்சியை எடுத்தியம்புவதாகும்; புறம் என்பது மக்களின் வீரம், கொடை, கல்வி, போர் உள்ளிட்டவற்றை எடுத்தியம்புவதாகும்.

சங்ககாலப் புறநூல்களான புறநானூறு, பதிற்றுப்பத்து, திருமுருகாற்றுப்படை, பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, மலைபடுகடாம் என்கின்ற கூத்தராற்றுப்படை, மதுரைக்காஞ்சி என எட்டு நூல்கள் மற்றும் சிறுபான்மை அகவிலக்கியங்களான அகநானூறு, நெடுநல்வாடை, பட்டினப்பாலை என்பவற்றில் கூறப்படும் போர்ச் செய்திகளையும் ஆதாரமாகக் கொண்டு போரினால் ஏற்படும் மனப்போராட்டம், தற்காத்தல் நடத்தைகள், மனித உணர்வுகள் தொடர்பான உளவியல் அணுகுமுறையுடன் இந்த ஆய்வேடு மேற்கொள்ளப்படுகிறது.

**ஆய்வுப்பொருள்**

சங்க இலக்கியத்தில் உள்ள புறப்பாடல்களிலும் அகப்பாடல்களிலும் உள்ள போர் சார்ந்த பாடல்களில் வெளிப்படும் உளவியல் கூறுகளை ஆய்வதே இந்த ஆய்விற்கான ஆய்வுப் பொருளாகும்.

**ஆய்வுத் தலைப்பு**

"சங்க இலக்கியத்தில் போர் - உளவியல் அணுகுமுறை" என்ற தலைப்பில் இந்த ஆய்வேடு மேற்கொள்ளப்பட்டுள்ளது.

**ஆய்வு நோக்கம்**

சங்க இலக்கியப் படைப்புகளைக் குறித்த ஆய்வுகள் தமிழில் அண்மைக் காலமாகப் பெருகிவருகின்றன. உளவியல் நெறியில் உட்புகுந்து உளவியல் அணுகுமுறை சார்ந்த நெறிகளை வெளிக்கொணர்வதே இந்த ஆய்வேட்டின் முதன்மை நோக்கமாகும். மனிதனின் இயல்பான நடத்தைகளையும், சமூகத்தில் அவனிடம் காணப்படும் செயல்பாடுகளையும் மிகக் கவனமாக உளவியல் துறை உற்றுநோக்குகிறது. இதனால் சங்க இலக்கியத்தை உளவியல் கோட்பாடுகளோடு பொருத்தி அக்கால மக்களின் உளத்தன்மைகளையும் சமூக நடத்தைகளையும் அறிந்துகொள்வதன் பொருட்டு இவ்வாய்வு அமைக்கப்பட்டுள்ளது.

**ஆய்வு முன்னோடிகள்**

இந்த ஆய்விற்கு முன்னோடி ஆய்வுகளாகக் கீழ்க்கண்டவை அமைகின்றன.

**ஆய்வேடுகள்**

- ஆதிபராசக்தி, வீ., இலக்கியமும் உளவியலும், ஆய்வியல் நிறைஞர் (எம்ஃபில்.,) ஆய்வேடு, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், 2006.
- கல்பனா, ச., புறநானூற்றில் புலப்படும் சங்ககாலப் போர் நெறிகள் - ஓர் ஆய்வு, முனைவர் பட்ட (பிஎச்.டி.,) ஆய்வேடு, அழகப்பா பல்கலைக்கழகம், 2008.

- *கீதா, கி., சங்க இலக்கியத்தில் வரலாற்றுக் கூறுகள், முனைவர் பட்ட (பிஎச்.டி.,) ஆய்வேடு, புனித வளனார் கல்லூரி, 2004.*
- *கோகில வாணி. சு., சங்க இலக்கியத்தில் தாய் சேய் உறவு : ஓர் உளவியல் நோக்கு, முனைவர் பட்ட (பிஎச்.டி.,) ஆய்வேடு, சென்னைப் பல்கலைக்கழகம், 1997.*
- *சந்திரசேகரன், கா., சங்கப் புறப்பாடல்கள் காட்டும் போரியல் - ஓர் ஆய்வு, முனைவர் பட்ட (பிஎச்.டி.,) ஆய்வேடு, பாரதிதாசன் பல்கலைக்கழகம், 2007.*
- *சிங்கராஜா, இரா., சங்க இலக்கியத்தில் போரும் அமைதியும், முனைவர் பட்ட (பிஎச்.டி.,) ஆய்வேடு, மதுரை காமராசர் பல்கலைக்கழகம், 2006.*
- *சேஷாத்திரி, ஜ., சங்க இலக்கியத்தில் உளவியல் நோக்கு, முனைவர் பட்ட (பிஎச்.டி.,) ஆய்வேடு, சென்னைப் பல்கலைக்கழகம், 1986.*
- *பாண்டுரங்கன், கி., பண்டைத் தமிழர் போரியல் வாழ்க்கையும் தற்காலப் போர் நடவடிக்கையும், முனைவர் பட்ட (பிஎச்.டி.,) ஆய்வேடு, சென்னைப் பல்கலைக்கழகம், 1983.*
- *மாரியப்பன், சு.மா., சங்க அகஇலக்கியங்களில் புறவாழ்வியல் கூறுகள், முனைவர் பட்ட (பிஎச்.டி.,) ஆய்வேடு, பெரியார் பல்கலைக்கழகம், 2011.*
- *இராமராஜ பாண்டியன், தமிழ்ப் புலம், முனைவர் பட்ட (பிஎச்.டி.,) ஆய்வேடு, அழகப்பா பல்கலைக்கழகம், 2003.*
- *விஜயலட்சுமி, கி., புதுக்கவிதையில் உளவியல், முனைவர் பட்ட (பிஎச்.டி.,) ஆய்வேடு, சென்னைப் பல்கலைக்கழகம், 1989.*

*ஆகிய ஆய்வுகளை இந்த ஆய்வுக் களத்தின் முன்னோடி ஆய்வுகளாகக் கூறலாம்.*

**முதன்மை ஆதாரங்கள்**

ஆய்வு எல்லைக்குள் அடங்கிய சங்க நூல்களான பாட்டில் ஆறு நூல்களும் தொகையில் இரண்டு நூல்களும் என எட்டுப் புறநூல்களும் அகநூல்களான பட்டினப்பாலை, அகநானூறு, நெடுநல்வாடை, பரிபாடல், இரட்டைக் காப்பியங்களான சிலப்பதிகாரம், மணிமேகலை மற்றம் சிக்மண்ட் ஃப்ராய்ட் உளப்பகுப்பு அறிவியல், கல்வி உளவியல், சமூக உளவியல் போன்ற நூல்களும் முதன்மை ஆதாரங்களாகும்.

**துணைமை ஆதாரங்கள்**

சங்க இலக்கியம் தொடர்பாக மேற்கொள்ளப்பட்ட பிற ஆய்வு நூல்கள், திறனாய்வு நூல்கள், உளவியல் அறிஞர்களின் கோட்பாடுகள் தொடர்பான நூல்கள், ஆய்வுக் கட்டுரைகள், ஆய்வுக்கோவைகள், ஆய்வேடுகள், அகராதிகள், கலைக்களஞ்சியம் முதலானவை துணைமைச் சான்றுகளாக அமைகின்றன.

**ஆய்வு எல்லை**

சங்க இலக்கியங்களில் புற இலக்கியமான புறநானூறு, பதிற்றுப்பத்து, திருமுருகாற்றுப்படை, பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, மலைபடுகடாம் மற்றும் மதுரைக்காஞ்சி என அமைந்த எட்டு சங்கப் புறஇலக்கியங்களில் உள்ள போர்ச் செய்திகளும் சிறுபான்மை அகப்புற நூல்களான நெடுநல்வாடை, பரிபாடல், அகஇலக்கியங்களான பட்டினப்பாலை, அகநானூறு மற்றும் இரட்டைக் காப்பியங்களான சிலப்பதிகாரம், மணிமேகலை போன்ற நூல்கள் ஆய்வு எல்லைகளாகக் கொள்ளப்பட்டு இந்த ஆய்வேடு மேற்கொள்ளப்பட்டுள்ளது.

**ஆய்வு அணுகுமுறை**

விளக்கமுறை, பகுப்புமுறை, உளவியல் அணுகுமுறைகளை இந்த ஆய்வு பயன்படுத்தியுள்ளது.

**கருதுகோள்**

*புறத்திணையின் அடிப்படையில் அமைந்த சங்க இலக்கியங்கள் வாயிலாக அறியும் போர்களுக்குப் பின்னால் உளசிக்கலே முதன்மை இடம் பெறுகின்றன என்பது இந்த ஆய்வின் கருதுகோளாக அமைந்துள்ளது.*

**ஆய்வேட்டின் பகுப்பு**

*இந்த ஆய்வேடு முன்னுரை, முடிவுரை நீங்கலாக நான்கு இயல்களைக் கொண்டுள்ளது. அவை :*

*முன்னுரை*

*இயல் 1 : தமிழ் இலக்கியமும் உளவியலும்*

*இயல் 2 : சங்க இலக்கியம் காட்டும் போர் நெறிமுறைகள்*

*இயல் 3 : சங்க இலக்கியத்தில் போர்*

*இயல் 4 : சங்ககாலப் போர் - உளவியல் நோக்கு*

*முடிவுரை*

*துணைநூற்பட்டியல்*

*பின்னிணைப்புகள்*

**ஆய்வு முன்னுரை**

*முன்னுரையில் இந்த ஆய்வேட்டின் அமைப்பு முறை இடம்பெற்றுள்ளது. இதில் ஆய்வுத் தலைப்பு, ஆய்வு நோக்கம், ஆய்வின் கருதுகோள், ஆய்வு முன்னோடிகள், ஆய்வு எல்லை, ஆய்வு அணுகுமுறைகள், ஆய்வேட்டின் பகுப்புமுறை ஆகியன இடம் பெற்றுள்ளன.*

**இயல் ஒன்று**

*தமிழ் இலக்கியமும் உளவியலும் என்பது முதல் இயலாக அமைகிறது. இந்த இயலில் இலக்கியம், இலக்கியத்தின் வகை, உளவியல்*

அறிமுகம், உளவியல் சொற்பொருள், உளவியல் வளர்ச்சி, உளவியல் குறித்து அறிஞர்களின் கருத்து, உளவியல் வரையறைகள், உளவியல் பிரிவுகள், உளவியல் கோட்பாடுகள், இலக்கியமும் உளவியலும், இலக்கியத்தில் உளவியல் அணுகுமுறை, கால வளர்ச்சியில் சிந்தனை மாற்றம், உணர்ச்சிநிலை உளவியல், உளவியல் அணுகுமுறைப் பயன்கள், தொகுப்புரை ஆகியவை இடம் பெற்றுள்ளன.

**இயல் இரண்டு**

சங்க இலக்கியம் காட்டும் போர் நெறிமுறைகள் என்னும் இரண்டாவது இயலில் சங்க இலக்கியம், சங்க இலக்கியத்தில் அகநூல்கள், சங்க இலக்கியத்தில் புறநூல்கள், பண்டைய தமிழர் போர் நெறிகள், போர் விளக்கம், போர் குறித்து அறிஞர்களின் கருத்துகள், போருக்கான காரணங்கள், போரில் தவிர்க்கப்படுபவர்கள், புறத்திணைப் பாகுபாடு, பாகுபாட்டின் அடிப்படை, வெட்சித்திணை, நிமித்தங்கள், வஞ்சித்திணை, காவல் மரத்தினை அழித்தல், உழிஞைத்திணை, நாள் பார்த்து வாளும் குடையும் புறப்படுதல், படைச்செலவு, அரண் முற்றுகையிடுதல், தும்பைத்திணை, வீரரைப் போருக்கு அழைத்தல், போர் முரசு, வாகைத்திணை, பாசறை நிலை, மாலை சூட்டிப் புறப்படுதல், போர்ப்படைகள், போர்க்கருவிகள், காஞ்சித் திணை, வஞ்சினம், பாடாண் திணை, போர் அறம், போரில் நடுநிலைமை, போரும் புலவரும், புறப்பொருள் வெண்பாமாலைத் திணைப் பகுப்பு, நடுகல், தொகுப்புரை ஆகியவை இடம் பெற்றுள்ளன.

**இயல் மூன்று**

மூன்றாவது இயலான சங்க இலக்கியத்தில் போர் என்னும் இயலில் வெட்சித்திணைப் போர், வஞ்சித்திணைப் போர், காரியாற்றுப் போர், திருக்கோவலூர்ப் போர் I, திருக்கோவலூர்ப் போர் II, உழிஞைத்திணைப் போர், மோகூர்ப் போர், உறையூர்ப் போர், இடும்பில் போர், கொடுகூர்ப்

போர், வெண்ணில் போர் அல்லது வாயிற்போர், தகடூர்ப் போர், கூடற் பறந்தலைப் போர், தும்பைத்திணைப் போர், சோழன் பெருவிறல்கிள்ளிக்கும் குடக்கோ நெடுஞ்சேரலாதனுக்கும் இடையே நடைபெற்ற போர், வடபுலக் கங்கைப் போர், காரியாற்றுப் போர், கொங்கர் செங்களப் போர், வாகைத்திணைப் போர், வாகைப் பறந்தலைப் போர், கானப் பேரெயில் (அழிவு) போர், வெண்ணிப் போர் III, கடம்பின் பெருவாயில் போர், காஞ்சித்திணைப் போர், கங்கைப் போர் II அல்லது குயிலாலயப் போர், பாடாண்திணைப் போர், குளமுற்றத்துப் போர், சேரமான் செங்குட்டுவனின் போர்கள், பொதுவியல்திணைப் போர், கழுமலப் போர், வஞ்சி, உழிஞைத்திணைப் போர், வியலூர்ப் போர், உழிஞை, வாகைதிணைப் போர், நேரிவாயில் போர், ஆவூர்ப் போர், வஞ்சி, காஞ்சித்திணைப் போர், தலையாலங்கானத்துப் போர், வாகை, பொதுவியல்திணைப் போர், வெண்ணிப் போர் 11, வெண்ணிப் பறந்தலைப் போர், தொகுப்புரை ஆகியவை இடம்பெற்றுள்ளன.

**இயல் நான்கு**

சங்ககாலப் போர் - உளவியல் நோக்கு என்னும் நான்காம் இயலில் சங்ககாலச் சமுதாயப் போர் உளவியல், வெட்சித்திணைப் போர் உளவியல், வஞ்சித்திணைப் போர் உளவியல், உழிஞைத்திணைப் போர் உளவியல், தும்பைத்திணைப் போர் உளவியல், வாகைத்திணைப் போர் உளவியல், காஞ்சித்திணைப் போர் உளவியல், பாடாண்திணைப் போர் உளவியல், சங்ககாலப் போர் உளவியல், போரினால் ஏற்படும் சமூகப் பின்விளைவுகள், உளநலச்சிக்கல், உளமுறிவு, உளப் போராட்டம், உள இறுக்கம், உளத் தற்காப்பு இயங்குமுறைகள், ஒடுக்கம், உணர்வொடுக்கம், பின்நோக்கம், பொதுமையாக்கம், துறப்பமைவு, ஈடுசெய்தல், தன்முகத் திருப்பம், செயல்படுத்துதல், எதிர் வினையமைப்பு, இடமாற்றம், இரக்க உணர்வு, இயல்பூக்கம், பிறழ்நிலை உளவியல், தொகுப்புரை ஆகியவை இடம் பெற்றுள்ளன.

**முடிவுரை**

நான்கு இயல்களிலிருந்து ஆராய்ந்து பெறப்பட்ட செய்திகள் தொகுப்புரையில் விரிவாகக் கூறப்படுகின்றன.

**மேலாய்வுக் களங்கள்**

எதிர்காலத்தில் சங்க இலக்கியம் குறித்து ஆய்வு செய்ய விரும்புகிறவர்களுக்கு மேலாய்வுக் களங்களுக்கான சில தலைப்புகள் பரிந்துரை செய்யப்பட்டுள்ளன.

**துணை நூற்பட்டியல்**

இப்பகுதியில் ஆய்வுக்குத் துணைநின்ற முதன்மை ஆதாரங்களும், துணைமை ஆதாரங்களும் அகரவரிசையில் பட்டியலிட்டுத் தரப்பட்டுள்ளன.

**பின்னிணைப்புகள்**

1. உளவியல் கலைச்சொற்கள்.
2. புறஇலக்கியங்கள்
3 தொல்காப்பியம், புறப்பொருள் வெண்பாமாலை திணை ஒப்பீடு.
4. தொல்காப்பியம், புறப்பொருள் வெண்பாமாலை துறைகள் ஒப்பீடு.
5. சங்ககாலப் போர்கள், திணை, இடம், வென்ற மன்னர்கள்.
6. சங்ககாலப் போர்களின் உளவியல்.
7. சங்க இலக்கியத்தில் காணலாகும் உளவியல் கூறுகள்.

எனும் தலைப்புகளில் பின்னிணைப்புத் தகவல்கள் தொகுப்பட்டுள்ளன.

**1.0. இலக்கியம்**

ஒரு சமூகத்தின் வாழ்வியலை அறிய உதவும் ஆவணமாகவும் வாழ்வியல் களஞ்சியமாகவும் திகழ்வது இலக்கியமாகும். இலக்கியம் என்பது மொழியால் படைக்கப்படும் கலை சமுதாயத்தின் உயர் படைப்பு. அது கவிஞனின் உயர்ந்த கற்பனைகள், உணர்ச்சிகள், கட்டமைப்புகள், மக்கள் வாழ்க்கைக்குப் பயன்படும் நற்கருத்துகள் முதலானவற்றை உள்ளடக்கியது. இலக்கியம் கருத்துகளைக் கற்பனைத் திறத்துடனும் இயல்பாகப் பொருத்திக்காட்டும் தன்மையுடனும் விளக்குவது; மேலும் மக்களின் வாழ்க்கைக்கு வழிகாட்டியாகவும், அவர்தம் உளத்தைச் செம்மைப்படுத்துவதாகவும் அமைகின்றது.

"மனித குலத்தின் ஒப்பற்ற பெரும் படைப்பு இலக்கியம்; இலக்கியங்கள் வாழ்க்கையின் எதிரொலிகள், சமூகத்தின் வளர்ச்சியைக் காட்டும் மைல்கல். மனித இலட்சியத்தின் உயிர் நாடிகள்"[1] என்று புதுமைப் பித்தன் கூறுகிறார்.

"இலக்கியம் வாழ்வின் பிரதிபலிப்பு. மனிதனுக்கும் உலகிற்கும் இடையேயுள்ள உறவுகளின் ஆழ்ந்த வெளிப்பாடாகத் திகழ்கிறது. உலகம் அறிந்தவற்றுள் சிறந்தவற்றின் பதிவேடு இலக்கியம். சிந்தித்தவற்றுள் சிறந்தவற்றின் சாரம் இலக்கியம். தன்னைத்தான் அறிவதற்கும் தன்னுடைய ஆளுமையை வெளிப்படுத்துவதற்கும் ஒரு கருவியாகப் படைப்பாளனுக்கு உதவுவது இலக்கியம். சொற்களின் வழி மனித உளத்தின் உணர்வுகளை, அனுபவங்களை வெளிப்படுத்தும் கலையே இலக்கியம்"[2] என இலக்கியத்திற்கு இலக்கணம் வகுத்துள்ளனர் இலக்கியப் படைப்பாளிகள் என்று ஆய்வாளர் ஆதிபராசக்தி குறிப்பிடுகிறார்.

**1.1. இலக்கிய வகைகள்**

இலக்கியங்கள் காலத்திற்கேற்பவும் பாடுபொருளுக்கு ஏற்பவும் பல வடிவங்களைப் பெற்றுள்ளன. பாட்டும், தொகையும் சங்க இலக்கியங்கள் என்பர். அப்பாடல்கள் ஆசிரியப்பாவால் இயற்றப்பட்டவை. அவற்றின்

பாடுபொருள் இயற்கை மற்றும் மனித உணர்வு பற்றியதாகும். அதற்குப் பின் தோன்றிய இலக்கியமான பதினெண் கீழ்க்கணக்கு நான்கு அடிகளைக் கொண்ட வெண்பா யாப்பால் இயற்றப்பட்டன. அதன் பாடுபொருள் மிகுதியும் அறக்கருத்தாகும். அதற்குப் பின் காப்பிய வடிவம் தோன்றியது.

காப்பியங்களில் ஒரு கருத்தை மையமாகக் கொண்டு பலபாடல்கள் எழுதும் வல்லமை பெற்றவர்களாகப் புலவர்கள் திகழ்ந்தனர். தொடக்கத்தில் காப்பியங்கள் ஆசிரியப்பாவால் இயற்றப்பட்டன. பின் விருத்தம் உள்ளிட்ட பல வகைப் பாக்களாலும் காப்பியங்கள் இயற்றப்பட்டுள்ளன. அதற்குப் பின் தோன்றிய இலக்கிய வடிவமாகச் சமய இலக்கிய வகைகள் தோன்றலாயின. அவற்றின் பாடுபொருள் பக்தியாக அமைந்தது. இறையருளைப் போற்றும் வகையில் பாடப்பட்ட அப்பாடல்களில் இசைக்கு முக்கியத்துவம் கொடுத்துப் பாடப்பட்டிருந்தது.

பதினான்காம் நூற்றாண்டில் இலக்கிய வடிவத்தின் ஒருகூறான உரைநடை தோன்றியது. தொடக்ககால உரைநடை ஆசிரியர்களாக, இலக்கண உரையாசிரியர்களே இருந்தனர். ஐரோப்பியர் வருகைக்குப்பின் உரைநடையில் மறுமலர்ச்சி ஏற்பட்டது. அதன் காரணமாக இலக்கிய வடிவங்கள் மாற்றம் பெற்றுக் கடிதம், கட்டுரை, சிறுகதை, புதினம், நாவல் எனப் பல வகைகளில் உரைநடை இலக்கியம் வளர்ச்சியடைந்துள்ளது.

செய்யுள் வடிவத்தில் மாற்றம் பெற்று வசனகவிதை என்கிற படைப்பு வடிவம் பெற்றது. பின்பு வசனகவிதையின் பரிணாமத்தில் புதுக்கவிதை தோற்றம் பெற்றது. அதன் வகைகளாக ஹைக்கூக் கவிதை, படிமக்கவிதை, தொன்மக்கவிதை, குறியீட்டுக் கவிதை போன்றன தோன்றலாயின என்பதை அறியமுடிகிறது.

### 1.2. உளவியல் அறிமுகம்

உளவியல் என்பது உளம், இயல் என்னும் சொற்களை மூலமாகக்கொண்டு உருவாக்கப்பட்டது. எனவே உளத்தைப் பற்றிய இயல்

உளவியல் எனப்படுகிறது. Psychology என்னும் கிரேக்கச் சொல்லுக்கு உளவியல் என்று பொருள் கொள்ளப்படுகிறது.

உளவியலின் தோற்றத்திற்கு முதன் முதலில் அடிகோலியவர் கிரேக்கத் தத்துவவாதியான சாக்ரடீஸ் (Socrates) ஆவார். இவரைத் தொடர்ந்து பிளாட்டோ (Plato), அரிஸ்டாட்டில் (Aristotle) போன்றோர் உளவியல் தொடர்பான தத்துவங்களைக் கூறியுள்ளனர்.

### 1.2.1 சாக்ரடீஸ் (Socrates)

சாக்ரடீஸின் தொடக்கக்காலத் தத்துவச் சிந்தனைகள் உலகம் ஏன்? மனிதப்படைப்பு ஏன்? முதலானவற்றிற்கான விடைகளைக் கண்டறிகின்ற போக்கில்தான் இருந்தன. இந்தத் தத்துவப்போக்கு கி.மு.6 ஆம் நூற்றாண்டின் டெமாக்ரிடஸ் (Democritus) என்பவரிடமிருந்து தொடங்கியது. அதனைத் தொடர்ந்து மனிதன் பற்றியும் அவனின் நடவடிக்கைகள், படைப்புகள் பற்றியும் விசாரணைகள் எழுந்தன.

**“செஞ்ஞாயிற்றுச் செலவும்**
**அஞ் ஞாயிற்றுப் பரிப்பும்**
**பரிப்புச் சூழ்ந்த மண் டிலமும்**
**வளி திரிதரு திசையும்**
**வறிது நிலைஇய காயமும் என்றிவை**
**சென்றளந்து அறிந்தார் போல”**[3]

என்ற புறப்பாடலில் உறையூர் முதுகண்ணன் சாத்தனார் கதிரவனின் பாதையையும் அதன் இயக்கத்தையும் காற்றின் திசையும் முடிவில்லாத வானத்தையும் நேரில் சென்று அறிந்தவர்கள்போல அவற்றின் தன்மைகளைக் கூறும் அறிஞர்கள் உள்ளனர் என்ற கருத்தைப் பதித்துள்ளார். சாக்ரட்டீஸ் கருத்தான உலகம் ஏன்? அதன் தன்மை பற்றிய அறிவு மனிதனுக்கு உண்டு என்பதை இதனால் உணரமுடிகிறது. “சாக்ரடீஸின் மாணவரான பிளாட்டோ(Plato)விடமிருந்து முறையான உளவியல் வரலாறு தொடங்கியது”[4] என்கிறார் தி.கு.இரவிச்சந்திரன்.

### 1.2.2. பிளாட்டோ (Plato)

"பிளாட்டோவின் தத்துவப்படி உடலும் உளமும் வெவ்வேறானவை என்பதாகும். உடலுக்கு எவ்வாறு இயக்கங்கள் இருக்கின்றனவோ அதே போன்று உளத்திற்கும் இருக்கின்றன என்கிறார். உளவியல் வரலாற்றில் உடலையும் உளத்தையும் பிரித்துப் பார்த்தவர் இவரே ஆவார். அதே சமயம் கருத்தையும் (Idea) பொருளையும் (Matter) பிரித்து உணர்த்தியவர் இவரே."[5]

"ஒரு பொருள் அழகாக இருக்கிறது என்று சொன்னால் பொருளும், அழகும் வெவ்வேறானவை என்பது பிளாட்டோவின் கருத்து. பொருள் என்றைக்கும் பொருள் தான். அது புறவுலகில் இருப்பதாகும். ஆனால், 'அழகு' என்பது உளத்தின் எண்ணமாகும். இந்த எண்ணம் அல்லது கருத்து உளத்தில் உதிப்பதாகும். புறப்பொருளுக்கு ஏற்பத்தான் கருத்து உதிக்கிறது"[6] என்பது பிளாட்டோவின் வாதம்.

உளம் (Mind), பொருள் (Matter), ஊடாடல் வைத்துக் கொள்கிறபோது என்றைக்கும் ஒரே மாதிரியாக உறவு வைத்துக் கொள்ளாமல் இடத்திற்கும், பொருளுக்கும் ஏற்ப உறவு கொள்கின்றன. அதனால், இவற்றின் உறவு மாறுதலுக்கு உட்பட்டது. இந்த மாறுதல் பொருளின் தன்மைக்கு ஏற்பவும் மனதின் இயல்புக்கு ஏற்பவும் ஏற்படுகிறது. எனவேதான் அனைவரிடமும் ஒரே மாதிரியான உறவைக் காணமுடிவதில்லை.

உளம் பற்றி பிளாட்டோ கூறியவற்றில் மிகவும் கவனிக்க வேண்டியது 'உளம் - பொருள்' இடையே உள்ள உறவாகும். இதனை,

**அண்ணாந்து ஏந்திய வனமுலை தளரினும்**
**பொன்னேர் மேனி மணியின் தாழ்ந்த**
**நன்னெடுங் கூந்தல் நரையொடு முடிப்பினும்**
**நீத்தல் ஓம்புமதி பூக்கேழ் ஊர![7]**

எனும் சங்கப் பாடல் ஊடாக உணரலாம். தலைவியின் விருப்பத்திற்கு இணங்க அவளைத் தலைவனுடன் சேர்க்கும் தோழி, 'இன்று இளமையும்

அழகுமாக ஒளிரும் தலைவி முதுமையுறுவாள். அப்பொழுது தலைவியின் தனங்கள் தளர்ந்திடும்; கருநிறக் கூந்தல் நரைமிகும்; பொன்மேனியில் சுருக்கம் விழும்; அப்பொழுதும் இன்றுபோல் என்றும் அன்பு நீங்காமல் நிலையாக இருக்கவேண்டும்' என்று தலைவனை வேண்டுவதில் தலைவியைப் பற்றிய எண்ணம் அவளின் தோற்றத்திற்கு ஏற்ப மாற்றம் பெறும் என்பதையும் ஆனால் தலைவன் தலைவியின் மேல் வைத்த பற்று என்றும் நிலைத்த தன்மையுடன் இருக்க வேண்டும் என்பதையும் தோழியின் கருத்தாக இப்பாடல் படம் பிடித்துக் காட்டுகிறது. இக்கருத்தையே பிளாட்டோ கூறியுள்ளார் என்று அறியமுடிகிறது.

### 1.2.3. அரிஸ்டாட்டில் (Aristotle)

"பிளாட்டோவின் மாணவரான அரிஸ்டாட்டில் (Aristotle) பிளாட்டோ கூறிய உளம் பொருள் இவற்றிற்கு இடையே உள்ள உறவை மறுக்கிறார். உளத்திற்கும் பொருளுக்கும் இடையே எத்தகு தனித்தன்மையும் இல்லை"[8] என்பதே அரிஸ்டாட்டில் வாதமாகும். மேலும், "கி.மு. 384 - 322 இல் வாழ்ந்த கிரேக்கத் தத்துவ அறிஞர் அரிஸ்டாட்டில் எழுதிய ஆன்மாவின் இயல்புகள் என்ற நூலே, உளவியல் பற்றி எழுந்த முதல் நூலாகும்"[9] மேற்கண்ட இம்மூன்று கிரேக்கத் தத்துவவாதிகளின் கருத்துகளை அடிப்படையாகக் கொண்டே உளவியல் தோற்றம் பெற்றதாகக் கருதப்படுகிறது.

மேலும், அரிஸ்டாட்டில் "ஒரு கல்லில் சிலை வடிக்கப்படுகிறது என்றால் அந்தச் சிலைக்குரிய வடிவம் கல்லில் இருக்கிறதா அல்லது உளத்தில் உள்ளதா என்கிற பாகுபாடு எழுகிறது. அரிஸ்டாட்டில் கூற்றுப்படி இரண்டிலும் உள்ளது. இரண்டிலும் இருந்தால்தான் சிலை வடிவம் பெறுகிறது. இவ்வாறு கருத்தோடு தொடர்புடைய வடிவம் (Form) உளத்தின் தனித்தன்மையாக அல்லாமல் பொருளோடு (Matter) இணைந்துள்ள பாங்கை"[10] அரிஸ்டாட்டில் காட்டுகிறார். அதேபோல் பொருளும் கருத்தோடு இணைந்துதான் செயல்படுகிறது என்று கூறுகிறார்.

பிளாட்டோ, அரிஸ்டாட்டில் இருவரின் கருத்தும், ஐரோப்பியத் தத்துவவாதிகளிடம் குறிப்பிடத்தக்க தாக்கத்தை ஏற்படுத்தின. உளமும் பொருளும் தனித்தன்மையோடும் அதே சமயம் மாறும் தன்மையோடும் உறவு கொள்கின்றன என்கிற கருத்து, பிற்காலத்திய தத்துவவாதிகளிடத்திலும் அறிவியல் முறை உளவியலிலும் குறிப்பிடத்தக்க மாற்றத்தை ஏற்படுத்தியது. பின்னர் வந்த காலக்கட்டத்தில் கிரேக்கத் தத்துவவாதிகளிடமிருந்து அமெரிக்க, ஐரோப்பியத் தத்ததுவாதிகள் உளத்தைப் பற்றிய சிந்தனைகளை வெளிப்படுத்தியுள்ளதை அறியமுடிகிறது.

### 1.3. உளவியல் - சொற்பொருள்

Psychology என்னும் சொல்லின் அடிப்படைப் பொருள் ஆன்மா அல்லது மனம் என்பதாகும். ஆரம்பக் காலத்தில் உளவியல் என்பது ஆன்மாவைப் பற்றிக் குறிப்பதாக, அதன் நிலை வகைகளை ஆராய்வதாக அமைந்தது என்று கூறலாம்.

ஆன்மாவின் இருப்பிடம் எது என்பதை அறுதியிட்டுக் கூறமுடியாத நிலையில் இக்கருத்து மாற்றம் பெற்றது. மனம் அல்லது உளம் என்பதன் பண்புகளையும் செயல்களையும் விளக்கும் அறிவுப் பிரிவெனக் கொள்ளத் தொடங்கினர். மன இயக்கச் செயல் - உடலியக்கச் செயலிலிருந்து வேறுபட்டது. எனவே, இக்கருத்தை அனைவரும் ஏற்றுக்கொள்ள மறுத்ததனால் மாற்றம் பெற்று நனவு நிலைச் செயல்களை விளக்கும் அறிவியல் என்று உளவியலார் கருதினர் என்பதும் இங்குச் சுட்டுவதற்குரியது.

உளம் நனவு நிலையை மட்டும் குறிப்பது அன்று; நனவற்ற நிலைக்கும் அது பொருந்தும்; கனவுகள், சித்தம் கலங்கிய உளச்செயல்கள், அறிதுயில் முதலான நனவிலிச் செயல்களுக்கும் உளமே அடிப்படை; எனவே, இக்கருத்தும் கைவிடப்பட்டு உளவியல் என்பது மனிதனது நடத்தை பற்றிய அறிவியலாக இன்று மலர்ந்து நிற்கிறது.

உளவியல் எனப் பொருள்படும் சைக்காலஜி என்ற சொல்லை அமைத்தவர் 'கோக்கல்' (Gockel) ஆவார். இவர் 16ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவர். உளத்தின் அமைப்புத் தொழில்கள் முதலானவற்றைப் பற்றி ஓரளவு அறிவியல் முறைப்படி சிந்தித்துத் தமது கருத்துக்களை வெளியிட்டவர் தெக்கார்த்தே (Descartes) என்னும் பிரெஞ்சு நாட்டு அறிஞர் ஆவார்.

மனிதன் தன்னுடைய இயல்புகளையும் நடத்தைகளையும் அவற்றுக்கான காரணங்களையும் புரிந்துகொள்வதற்கும் தன்னை ஒத்த பிறமாந்தரின் போக்கினை அறிந்துகொள்வதற்கும் சமுதாயப் பிரச்சினைகளைப் புரிந்துகொண்டு தீர்வு காண்பதற்கும் உளவியல் பெரிதும் துணை நிற்கிறது. "மனதின் புறச்செயல்களை உற்று நோக்கி முறையாக ஆராய்ந்து அதன்மூலம் அவை எங்ஙனம் அகத்தே நிகழும் சிந்தனை ஓட்டங்களுடன் தொடர்பு கொண்டுள்ளன என்று சுற்றுச்சூழலில் ஏற்படும் நிகழ்ச்சிகளால் எவ்வாறு பாதிக்கப்படுகின்றன என்றும் விளக்குவதே உளவியலாகும்"[11] என்றும் கூறுவர்.

அதாவது மனித நடத்தையை அறிவியல் கண்கொண்டு அணுகி ஆராய்தலே உளவியலாகும். (Psychology is a scientific way of studying human behaviour) நடத்தை என்பது ஓர் உயிரியின் (organism) பலநிலைப்பட்ட 'துலங்கல்கள்' (Response - R) என்பதைக் குறிக்கும் சொல். இத்துலங்கல்களைத் தூண்டல்களினால் (Stimulus – S) ஏற்படும் விளைவாகவும் குறிப்பிடுவர். ஆங்கிலத்தில் நடத்தையை 'S-R' என்னும் குறிப்பெழுத்தால் சுட்டுகின்றனர். தூண்டல்கள் நமது சுற்றுப்புறத்திலிருந்தோ உடலுக்குள்ளிருந்தோ (அல்லது) உளத்தினின்றோ எழக்கூடும் என்றும் அறியமுடிகிறது.

உளப்பாகுபாடு என்பது முதன்முதலில் 'ஹிஸ்டீரியா' போன்ற உளக் கோளாறுகளை நீக்கப் பயன்படுத்தப்பட்ட ஒரு தனிப்பட்ட முறையாகும். நாளடைவில் உளத்தைப் பற்றித் தனிப்பட்ட கருத்துகளைக் கொண்ட உளவியல் பகுதியாக அமைந்துள்ளது.

நனவு, உளத்தைவிட மிகவும் முக்கியமானது. மனிதன் நடத்தையைத் தீர்மானிப்பதுமான ஆழ்ந்த உளத்தைப் பற்றியும் (unconscious) அது இயங்கும் வகைகளையும் விதங்களையும் உளப்பாகுப்பாடு அறிஞர்கள் வெளியிட்டுள்ளார்கள். இவை உளவியல் என்ற சொல்லுக்காக அறிஞர்கள் கூறும் விளக்கங்களாக அமைந்துள்ளன. இவ்வாறு உளவியலின் வளர்ச்சி நிலைகள் அமைந்திருக்கின்றன.

**1.4. உளவியல் வளர்ச்சி**

தொடக்கக் காலத்தில் சாக்ரடீஸ், பிளாட்டோ, அரிஸ்டாட்டில் மூவரும் தத்துவத்தில் உளவியல் என்ற ஒன்றை முதன்முதலில் தோற்றுவித்தாலும் இவர்களைத் தொடர்ந்து பதினேழாம் நூற்றாண்டில் ரெனி தெக்கார்த்தே (Rene Descartes), லிப்னை (Leibniz), ஜான் லாக் (John Locke), ஜார்ஜ் பெர்கிலி (George Berkeley), இமானுவேல் காண்ட் (Immanuel Kant) முதலானோரும் உளவியல் தத்துவங்களை வழங்கியுள்ளனர்"[12] என்று அறியமுடிகிறது.

இவர்கள் அனைவரின் தத்துவங்களிலும் உளத்தின் இயல்புகள் பற்றியும் உளக்கூறுகள் பற்றியும் காணமுடிகிறது. "ஐரோப்பியத் தத்துவங்களைத் தொடர்ந்து ஐசக் நியூட்டன் (Isaac Newton), சார்லஸ் டார்வின் (Charles Darwin), கார்ல் மார்க்ஸ் (Karl Marx), சிக்மண்ட் ஃப்ராய்ட் (Sigmund Freud), ஆல்பர்ட் ஐன்ஸ்டின் (Albert Einstein), போன்றோர் மனிதச் சிந்தனைப் போக்கை முழுமையாகத் திசை திருப்பியவர்கள் எனலாம்."[13]

மேலும் "அறிவியல் முறைப்படி உளத்தை அணுகும் போக்கிற்கு 19 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில்தான் அதிகக் கவனம் செலுத்தப்பட்டது. ஐரோப்பிய நாடுகளைச் சார்ந்த அறிவியலாளர் சிலர் உளவியல் துறையை உருவாக்கி வளர்த்தனர். குறிப்பாக பிச்னர் (Fechner), லிப்பிஸ் (Lipps), ஹெல்மால்ட் (Helmholtz), டார்வின் (Darwin), சார்கோ (Charcot), ஃப்ராய்ட் (Freud) முதலானோர் குறிப்பிடத்தக்கவராவர். இவர்கள் காலத்தில் உளவியல் என்கின்ற தனித்த ஒரு துறை இல்லாதிருந்தது.

இக்காலகட்டத்தில் உளவியல் சிந்தனைகளை வழங்கியவர்கள் பெரும்பாலும் உடலியல் மருத்துவர்களே ஆவர். உடல்போல் உளமும் தனிநிலையாகக் கவனிக்கப்பட வேண்டிய ஒன்று என்பதை உணர்ந்து உளவியலாளர்கள் தனிக்கவனம் செலுத்தத் தொடங்கியதால் உளவியல் தனித்துறையாக வளர்ச்சி பெற்றது''[14] என்கிறார் தி.கு இரவிச்சந்திரன்.

### 1.4.1. தெக்கார்த்தே (1539 - 1630)

ரெனி தெக்கார்த்தே என்பவர் பிரான்ஸ் நாட்டைச் சார்ந்தவர். இடைக்கால உளவியல் வரலாறு இவரிடமிருந்துதான் தொடங்கியது. இவர் மனிதனைச் சிந்திக்கும் விலங்கு என்கிறார். சிந்திப்பதால் மட்டுமே அனைவரும் இயங்குகிறோம். சிந்தனை இல்லை என்றால் இயக்கம் நிகழாது. தன்னைப் பற்றியும், உடலைப் பற்றியும், கடவுளைப் பற்றியும் சிந்திப்பதால் மட்டுமே அறிந்துகொள்ள முடிகிறது. உளத்தின் இயக்கம்கூட சிந்தனையில் உள்ளது. சிந்தனையுள்ள மனிதன் பெறும் அனுபவத்தினை அடிப்படையாகக் கொண்டு எந்தச் செயலையும் தூண்டுகிறது என்பது இவரது கருத்து. மனித இயக்கம் இரண்டு முக்கிய நிலையைக் கொண்டது. அவை :

- உளம் - உளத்தைச் சிந்திக்கும் பொருள் (Thinking Substance)
- பொருள் - விவரிக்கும் பொருள் என்பவையாகும்.

மேற்குறிப்பிட்ட இரண்டு கருத்துகளை அடிப்படையாகக் கொண்டு இவர் உளவியல் குறித்த புதிய சிந்தனையைத் தோற்றுவிக்கிறார். இடைக்கால உளவியல் வரலாறு இவரிடம் தொடங்கினாலும் தொடர்ந்து இவரின் சமகாலத்தவரான தாமஸ் ஹாப்பீஸிடம் வளர்ச்சி நடை அமைந்திருந்தது எனலாம்.

### 1.4.2. தாமஸ் ஹாப்பீஸ் (1588 - 1679)

இங்கிலாந்து நாட்டைச் சார்ந்த தாமஸ் ஹாப்பீஸ் தெக்கார்த்தேயின் காலத்தில் வாழ்ந்தவர். கலிலியோவின் தாக்கத்தால் இயற்கையியலுக்கு

வந்தவர். இயற்கையியலில் உளத்தின் தன்மைகளைச் சுட்டிக் காட்டிய இவர் இயற்கையை ஆய்வு செய்யும் போக்கில் விலங்குகள், மனிதர்களின் இயல்புகளைக் காண விழைந்தவர் என்பதை அறியமுடிகிறது.

அனைவரிடத்திலும் 'இயல்பூக்கம்' உண்டு. தமக்கு எது தேவை? எவற்றைத் தம்மால் பெற முடியும்? ஆகியவை ஊக்கங்கள் தொடர்பாக எழும் ஒவ்வொருவரின் உளத்திலும் இருக்கின்ற பொதுமைப் பண்புகளாகும். இவற்றின் செயல்பாடுகளால் மனிதன் தன்னையும் தன்னுடைய வாழ்க்கையையும் நெறிப்படுத்திக் காத்துக்கொள்கிறான்.

மனிதனுக்கு தற்சார்புத் தேவைகளும் போராட்டமும் முக்கிய கூறுகளாக உள்ளன. அதேபோல் தன்னைக் காத்துக்கொள்வதில் அச்சம் (Fear) பெறும்பங்கு வகிக்கிறது.

வாழ்க்கைப் பாதுகாப்பு (life security), போராட்டம் (conflict), அச்சம் (fear) முதலானவை உளத்தில் செயல்பாடுகளாகின்றன. இவற்றின் செயல்பாடுகளால்தான் மனிதன் தன்னையும் தன்னுடைய வாழ்வையும் நெறிப்படுத்திக் காத்துக் கொள்கிறான் என்பது தாமஸ் ஹாப்பீஸ் கருத்தாகும்.

16 ஆம் நூற்றாண்டில் தெக்கார்த்தே ஏற்படுத்திய தாக்கம் பல நாடுகளிலும் எதிரொலித்தது. தாமஸ் காலத்திலும் காலம் கடந்து இன்றும் தாக்கத்தை ஏற்படுத்தி வருகிறது. இவர்களை அடுத்து வந்தவர் பெனடிக் ஸ்பினோசா ஆவார்.

### 1.4.3. பெனடிக் ஸ்பினோசா (1632-1677)

இவர் இங்கிலாந்து நாட்டைச் சார்ந்தவர். இவரிடம் தெக்கார்த்தேயின் தாக்கம் அதிகம் காணப்படுகிறது. தெக்கார்த்தேயின் உடல் - உளம் உறவுநிலைகளை மேலும் வளர்த்தெடுத்த இவர் உடலுக்கும், உளத்திற்கும் இடையே இணைநிலைகள் (Parallels) இருப்பதாகக் கூறுகிறார். உடலும் உள்ளமும் ஒழுங்கமைந்த உறவை வைத்துக்கொள்கின்றன என்று குறிப்பிடுகிறார்.

இயற்பியலில் அபௌதிகக் (Metaphysics) கொள்கை பிரசித்தி பெற்றது. இதற்கு இரண்டு பொருள் உண்டு என்பர். அவை,

- இருத்தல் (அ) மெய்ம்மை பற்றிப் படிப்பது.
- அனுபவத்திற்கு அப்பால் (அ) உணர்தலுக்கு அப்பால் இருக்கும் நடப்புகளை விளக்குவது என்பதாகும்.

'அபௌதிக இலக்குகள்' பல இருந்தாலும் முதன்மையான கருத்தாக ஒன்றையே கூறுவர். அவை, ஐயமற்ற முதல் அடிப்படைகளை (Basic Principles) உருவாக்குவதையே இத்தத்துவவியல் செய்கிறது என்பதை இங்கு அறியமுடிகிறது.

### 1.4.4. ஜான் லாக் (1632-1704)

இவர் இங்கிலாந்தைச் சார்ந்தவர். லிப்னைசுக்கு அடுத்தவராக வந்து உளவியல் சிந்தனைகளை மேலும் வளர்த்தவர். இவருக்குமுன் இருந்தவர்கள் அனுபவத்தாலும் (experience) கவனிப்பாலும் (observation) கூறப்பட்டு வந்த உளவியல் முறையில் (experiment) உள இயக்கங்களைக் கண்டறியும் புதிய அணுகுமுறையை ஏற்படுத்தியவர். இவரின் ஆய்வு முறை, அனுபவங்களையும், கவனிப்புகளையும் சோதனை செய்து புதிய முடிவுகளை கண்டறிகின்ற முறையாகும். இதன் வழியில் புதிய அணுகுமுறையை உளவியல் வளர்ச்சிக்கு வழங்கினார். இவரது கொள்கைகள் பெர்கிலி (Berkeley), ஹியூம் (Hume), காண்ட் (Kant) முதலானோரிடமும் தாக்கத்தை ஏற்படுத்தின.

ஜான் லாக் 'அனுபவங்களைக் கொண்டுதான் உளம் அறிவைப் பெறுகிறது' என்கிறார். உளத்தின் எந்தக் கருத்தும் தான்தோன்றியாகத் தோன்றுவது இல்லை. புற உலகின் பதிவுகளே கருத்துகளாக வெளிப்படுகின்றன என ஆய்ந்தவர்; இவரைப் 'பட்டறிவு உளவியலின் தந்தை' என்று அழைப்பர்.

### 1.4.5. வில்ஹெம் லிப்னைஸ் (1646 - 1716)

தெக்கார்த்தே, ஸ்பினோசாவின் தத்துவங்களை அடிப்படையாகக் கொண்டு உளத்தின் மீது புதிய விசாரணையை ஏற்படுத்தி நனவிலி மனம் தொடர்பான சிந்தனைக்கு வித்திட்டவர் இவர். ஆகவே உளவியல் வரலாற்றில் மிக முக்கியமாகக் கருதப்படுபவர்களில் இவரும் ஒருவர்; லிப்னைசுக்கு முன் வந்தவர்கள் உடலுக்கும் உளத்திற்கும் உள்ள உறவு நிலைகளில் புலப்படக் கூடிய இயக்கங்களை மட்டும் விவரித்தனர். ஆனால், இவரோ அதையும் தாண்டிப் 'புலப்படா மனம்' என்ற ஒன்று உண்டு என்றும் அது வலிமை மிக்கது என்றும் கூறுகிறார். புலனறிவின் பதிவுகளுக்கு ஏற்ப நடத்தைகள் (behaviour) நிகழ்கின்றன என்கிறார். இக்கொள்கையே நடத்தையியல் கோட்பாட்டிற்கு அடிகோலுவதாக அமைகிறது.

### 1.4.6. ஜார்ஜ் பெர்கிலி (1685 - 1753)

இவர் அயர்லாந்து நாட்டைச் சார்ந்தவர். ஜான் லாக் கருத்தின் தாக்கம் பெற்று ஆனால், அதிலிருந்து மாறுபட்டுக் காணப்படுகிறார். கருத்தாக்கத்தில் இரண்டு வகைகள் உள்ளன.

- முன்னவரின் கருத்துக்களால் தாக்கம் கொண்டு அக்கருத்துக்களை ஏற்று அவற்றை வளர்த்து வெளிப்படுத்துகின்ற போக்கு நேர் தாக்கம் என்பர்.
- முன்னவரின் கருத்துக்களை மறுத்து புதிதாக சிந்தித்து புதிய கருத்தைக் கூறுகின்ற போக்கு எதிர் தாக்கம் என்பர்.

நேர் தாக்கத்தில் வெளிப்படையாகத் தாக்கம் இருக்கும். ஆனால், எதிர் தாக்கத்தில் வெளிப்படையாகத் தெரியாது. ஆனால் எதிர்மறையான கருத்துக்களை பின்னவர் கூறுவதற்குச் சிந்திக்க தூண்டியவர் முன்னவரே ஆவார்.

இவரின் கொள்கை நடைமுறைக்கு ஏற்றதன்று என்று கருதுவோரும் உண்டு. இந்த அபௌதிகக் கொள்கையைத்தான் பிற்காலத்தில் வந்த

ஃப்ராய்ட் முழுமையாக நம்பித் தம் ஆய்வுக்களத்தை விரிவுபடுத்திக் கொண்டார் என அறியமுடிகிறது.

### 1.4.7. டேவிட் ஹார்ட்லி (1705 - 1765)

இவர் இங்கிலாந்து தத்துவவாதியாவார். உளம்சார் தத்துவ வளர்ச்சியில் ஒரு திருப்புமுனையானவர். "இருமை வாதத்தை தெக்கார்த்தே தத்துவத்திலிருந்து பெற்று அதற்கு புதிய முலாம் பூசியவர். உடலும் உளமும் இணைந்தே இயங்குகின்றன. இவ்விரண்டையும் இருநிலை முறைமைகளாக ஹார்ட்லி காண்கிறார். உடலும் உளமும் தனித்தனி நிலைகளாக இருந்தாலும் ஒன்றுக்கொன்று இணைநிலையாக இயங்குகின்றன என்றும் ஒன்றை மற்றொன்று பிரியாமல் இயங்குகின்றன என்றும் ஹார்ட்லி கூறுகிறார். உணர்தல், கருத்தல், எண்ணுதல் போன்றவை உளம் தொடர்புடைய இயக்கங்கள் என்றும், அதிர்வுகள், நரம்புகளின் செயல்பாடுகள் போன்றவை உடல் தொடர்புடைய இயக்கங்கள் என்றும் சுட்டிக்காட்டுகிறார். இவர் இவ்விரண்டும் பின்னிப் பிணைந்து செயல்படுவதால் உடலியக்கமும், உளவியக்கமும் நிகழ்கின்றன. இதை இயைபு வாதம் (Associationism) என்று அறிவியல் உலகம் காண்கிறது".[15]

### 1.4.8. டேவிட் ஹியூம் (1711 - 1776)

இவர் ஸ்காட்லாந்து தத்துவ அறிஞர் பெர்கிலியைத் தொடர்ந்து 'அனுபவம்' என்பதை ஏற்றுக்கொள்கிறார். "ஒரு மனிதனுக்குப் பல அனுபவங்கள் ஏற்படுகின்றன. அவை, ஒன்றோடொன்று தொடர்பில்லாமல் நடந்து வருகின்றன. அவற்றுக்கென்று வரிசையோ சட்டத்திட்டங்களோ இல்லை. காரணம், மனித எண்ணங்களின் போக்கு அவ்வாறு அமைந்துள்ளது. அனுபவங்களைப் பெறுகின்ற உளம், அவற்றில் வேண்டியவை - வேண்டாதவை எனப் பகுத்துத் தன்னுள் தக்க வைத்துக் கொள்கிறது. இடம், காலம், சூழல் ஆகியவற்றிற்கு ஏற்ப அந்த அனுபவங்களை இயக்கத்திற்கு உட்படுத்திக் கொள்கிறது"[16] என்கிறார். இவர்

அக மாறாட்டத்திற்கு (disorder) புறவுலக மாறாட்டமே (out world - disorder) காரணமாகும் என்கிறார்.

### 1.4.9. இமானுவேல் காண்ட் (1724 - 1804)

இவர் ஜெர்மானிய நாட்டைச் சார்ந்தவர். ஹியூம் கூறும் கருத்தை மறுக்கிறார். காண்ட் சுட்டிக்காட்டுவது பொதுவான உணர்வுகள்தாம் அனுபவத்தை நிர்ணயிக்கின்றன என்பதாகும். புலனுணர்வுகள் (sensations) பொருள் மீது வைத்துக் கொள்கிற உறவே அனுபவமாகிறது. அவை இரண்டு வகைப்படும்.

- உணர்தல் இல்லாத நிலையில் தற்செயலாக ஏற்படுதல். அதாவது உளம் எதிர்பாராத நிலையில் ஏற்படும் அனுபவம்.
- தன்னிச்சையாகக் குறிப்பிட்ட செயலை உளம் செய்து பெறுகின்ற அனுபவம் என்பனவாகும். இவை இரண்டிற்கும் பொதுமைக் காரணி உணர்தல் அல்லது புலன் உணர்தல் ஆகும். இதன் வழியில் காண்ட் தன்னுடைய பட்டறிவுக் கண்ணோட்டத்தில் உளவியலைத் தெளிவுபடுத்த முயல்கிறார்.

## 1.5. உளவியல் குறித்து அறிஞர்களின் கருத்து

### 1.5.1. இந்திய மெய்ப்பொருளியல் அறிஞர்கள்

இந்திய மெய்ப்பொருளியல் வல்லுநர்கள் உளவியல் குறித்துக் கூறும்போது தனிமனிதனுடைய நடத்தை எந்தத் தனித்த பண்பினால் மிகுந்த அளவில் ஆதிக்கம் செலுத்துகிறதோ அதனைப் பொறுத்து அவரவர் இயல்பு அமையும்.

சத்துவ குணம் - சாந்தமான இயல்பு உடையவர் (மென்மையான குணம்)

ராஜஸகுணம் - செயலாற்றலும் அமைதியும் உடையவர் (போர், தீவிரமாகச் செயலாற்றும் குணம்)

| | |
|---|---|
| தாமசகுணம் | - செயலின் விளைவு பற்றிக் கவலைப்படாதவர் (சோம்பல் மற்றும் தாழ்வு மனப்பான்மை போன்ற குணம்) |

என உளவியல் குறித்து விளக்கம் கொடுக்கின்றனர் இந்திய மெய்ப்பொருள் வல்லுநர்கள்.

### 1.5.2. ஹிப்போகிரேட்டீஸ் (கி.மு. 460 - 377)

இவர் கிரேக்க நாட்டைச் சார்ந்தவர். தனி மனிதனின் உடலில் உள்ள நீங்கள்தான் உங்களுடைய உளப்போக்கில் காணப்படும் தனித்த வகைகளுக்கும் காரணம் என்கிறார்.

### 1.5.3. வில்கெல்ம் உண்ட்டு (1832 - 1920)

இவர் செருமானிய உளவியல் அறிஞர். மனித மனத்தை மூன்று கூறுகளாகப் பகுக்கின்றார். அவை, வலித்தூண்டுதல்களினால் ஏற்படும் புலன் உணர்வுகள், உளத்தில் ஏற்படும் உணர்வுகளை ஒத்த பட்டறிவுகள், பட்டறிவுகளின் மனவெழுச்சிக் கூறுகள் என்பனவாகும்.

இவர் உலகப் புகழ்பெற்ற உளவியல் அறிஞரான ஃப்ராய்டுக்கு முன் தோன்றியவர். இவர்களின் பெரும்பாலான கருத்துகளை அடிப்படையாகக் கொண்டுதான் ஃப்ராய்ட் உளவியல் துறையை வளர்த்தார். இவரின் வழித் தோன்றலாக யூங், ஆட்லர் முதலானோரைக் குறிப்பிடலாம்.

### 1.5.4. சிக்மெண்ட் ஃப்ராய்ட் (1856 - 1939)

இவர் புரூக்கின் மாணவர் ஆவார். இவர் செக்கோஸ்லோவேகியா நாட்டின் மொராவாவில் உள்ள பிரைபர்க் என்னும் ஊரில் 1856ஆம் ஆண்டு மே மாதம் 6ஆம் தேதி பிறந்தார். இவரின் இயற்பெயர் சிக்மெண்ட் ஆகும். ஃப்ராய்ட் என்பது பரம்பரைப் பெயர். நான்கு வயதில் ஆஸ்திரியாவின் தலைநகர் வியன்னாவிற்குச் சென்று தங்கினார்; அங்குதான் கல்வி கற்றார்.

மருத்துவம் படிக்க அவ்வளவாக விரும்பவில்லை. மாறாக மனிதர்கள் உளத்தில் புதைந்துள்ள இரகசியத்தைத் தெரிந்து கொள்வதிலேயே அவருடைய விருப்பம் சென்று கொண்டிருந்தது. அவ்விருப்பத்தை நிறைவேற்றிக் கொள்வதற்தாக ஆராய்ச்சிகளை அடிக்கடி நடத்தி வந்தார். 15 ஆண்டுகளில் மனித மனத்தின் அடியில் புதைந்துள்ள உண்மைகளைக் கண்டறிய முற்பட்டார். ஃப்ராய்டின் இந்த வளர்ச்சிக்கு கெதெ (Goethe), காரல் புளுக், குஸ்தாவ் வெச்னர் (Gustay Fechner) முதலான உளவியல் அறிஞர்களின் கருத்துகள் அடிப்படையாக அமைந்தன.

19 ஆம் நூற்றாண்டின் இறுதியில் உடற்கூறு அறிவியலும் (Biological science) உளவியலும் ஒன்றோடொன்று தொடர்பு கொண்டு வேகமாக வளர்ந்தன. ஃப்ராய்டைக் கவர்ந்த அறிவியல் பல. அவை, பௌதீக (Physics) இயலை அடிப்படையாகக் கொண்டிருந்தன. இச்சூழ்நிலையில் ஹேம் ஹொல்டஸ் (Helmholtz) புது பௌதீக விதியைக் கண்டுபிடித்தார். இந்த விதி ஃப்ராய்டை மருத்துவக் கல்லூரியில் சேர ஊக்குவித்தது.

எர்னால்டு புளுக்கின் கருத்தை ஏற்றுக் கொண்டதன் விளைவால் 20 ஆண்டுகள் கடந்து இயங்கும் ஆளுமையை (Dynamic personality) ஃப்ராய்ட் கண்டறிய முடிந்தது.

பைபிள் படிக்கும் தன் விருப்பம் ஃப்ராய்ட்டை ஈர்த்தது. அவ்விருப்பம் இறுதியில் அவரை இத்துறையில் ஈடுபடச் செய்தது. ஆனால் வயது முதிர்ந்த காலத்தில் பைபிளுக்கு முரணான கருத்தைச் சொன்னார் என்ற நிலையும் காணப்படுகிறது.

'இயங்கும் ஆளுமை என்பது ஆளுமை(Personality)க்குள் காணப்படும் சக்தியின் மாற்றங்களும் மாறுதல்களுமாகும்' என்பது, ஃப்ராய்ட் கண்டுபிடித்த வரலாற்றில் சிக்கலானதும் உண்மையான உண்மையுமாகும். மனக்கோளாறுகளைப் போக்க, ஃப்ராய்ட் இரண்டு வழிகளைக் கண்டுபிடித்தார். அவை மின்சார முறை, உறங்க வைக்கும் முறை ஆகும்.

உறங்க வைக்கும் முறையிலும் உறங்க வைக்காமலேயே நினைப்பூட்டும் முறையிலும் (suggestion), வெற்றிகரமாக நோய் தீர்க்கப்பட்டது. உறங்கச் செய்யும் முறைகளில் நோய்களைக் குணப்படுத்துவது சில சமயம் நெறி தவறாக இருந்தது. இதிலும் சிக்கல்கள் இருப்பதாக ஃப்ராய்ட் உணர்ந்தார். அதன்படி, எல்லா நோயாளிகளையும் உறங்கவைக்க முடியவில்லை என்றும் தாம் விரும்பிய அளவுக்கு நோயாளிகளை ஆழமாக உறங்கவைக்க இயலவில்லை என்றும் உணர்ந்தார்.

இவை முதலான கருத்துகளை அடிப்படையாகக் கொண்டு பின்னர் வந்த உளவியல் அறிஞர்கள் கோட்பாடுகளை வகுத்தனர்.

### 1.5.5. ஆல்பர்ட் C.W. (1897 - 1968)

இவர் பல புதிய கருத்துகளைக் கூறி ஆளுமைக் கோட்பாட்டிற்கு வலுச்சேர்த்த உளவியல் அறிஞராவார். தனிமனிதனின் சூழ்நிலைகளுடன் பொருத்தப்பாடுகளை நிர்ணயிக்கும் உள, உடல் அமைப்புகள் தனிமனிதனிடம் ஒருங்கிணைந்து இருக்கும் நிலையை 'ஆளுமை' என்று வரையறுக்கிறார்.

இவரின் கருத்துகளின்படி மனிதாபிமான உளவியலில், மனித மனநல இருத்தல் நிலைசார் உளவியலில் அடங்கும். தற்கருத்து (self-concept) தன் முனைப்பு (proprium) என்னும் சொற்களை இவர் பயன்படுத்தினார். மேலும்,

- அடிப்படைப் பண்புகள் (Cardinal traits)
- வழிநிலைப் பண்புகள் (Secondary traits)

என்று இருவகைப் பண்புகள் காணப்படுகின்றன என்கிறார். இயல்புநிலை மனிதர்களின் பண்புகளுக்கும் உளக்கோளாறு நோயாளிகளின் பண்புகளுக்கும் இடையே சில வேறுபாடுகள் உள்ளன என்றும் கூறுகிறார்.

'இயல்பு நிலை' மனிதனிடத்தில், எதிர்த்து நிற்றல், மெய்நிலை உணர்தல், ஒருமைப்பாடு, சுயஅறிவு, வயதுக்கேற்ற சமாளிக்கும் திறன், கட்டுப்பாடு, பரந்த நோக்கு ஆகிய பண்புகள் காணப்படுகின்றன.

'உளக்கோளாறு' மனிதரிடத்தில், தவிர்த்தல், உண்மை மறுத்தல், பிளவுபட்ட ஆளுமை, உள்நோக்கு இல்லாமை, நிலைத்தல், உட்துடிப்பு, தடை செய்யப்பட்ட புலன்காட்சி ஆகிய பண்புகள் காணப்படுகின்றன என்கிறார்.

**1.5.6 எரிக் பிரோம் (1900 - 1980)**

மனிதவியலாரும் சமூக அறிவியலாரும் பண்பாட்டுச் சூழ்நிலை, மரபு நிலை ஆகிய காரணிகள் தனிமனிதனின் நடத்தையைப் பெருமளவு முடிவு செய்கின்றன என்கின்றனர். இவர் தம்முடைய உளப்பகுப்புக் கொள்கையில் சமூக - காரணிக்கு முதலிடம் கொடுத்தார். பிரோமின் ஆளுமைக் கோட்பாடு, ஃப்ராய்டின் கொள்கைகளை ஒத்திருந்தாலும் சில கருத்துகளில் பிரோம் வேறுபடுகிறார்.

மனிதன் இயற்கையில் பண்படா இயல்பு கொண்டவன் என்று ஃப்ராய்ட் கூறியதை, பிரோம் இயற்கைத் தேவைகளை எந்த அளவுக்கு நிறைவேற்றிக்கொள்ள மனிதனுக்குச் சமூகம் உதவுகிறதோ, அந்த அளவுக்கு அவன் நல்லவனாக இருக்கிறான் என்கிறார். பாலுந்துதல் பற்றி ஃப்ராய்ட் கூறுவதைப் பிரோம் முழுமையாக ஏற்றுக் கொள்ளவில்லை.

**1.6. உளவியல் - வரையறைகள்**

'உளவியல் என்பது நடத்தையின் காரணங்கள், நிபந்தனைகள், நடக்கும் முறைகள் ஆகியவை பற்றிப் படிப்பதாகும்' (வில்லியம் மக்டுகல்).

'உளவியல் என்பது மனித நடத்தைகள் மற்றும் மனித உறவுகள் பற்றி படிப்பதாகும்' (குரோ மற்றும் குரோ).

'ஓர் உயிரி சுற்றுப்புறத்துடன் கொண்டு வெளியிடும் நடத்தைகள் பற்றி படிப்பது உளவியல்' (கோஃப்கா).

'உளவியல் என்பது நடத்தை மற்றும் மனித செயல் முறை பற்றிய அறிவுசார் படிப்பு' (பெல்டுமேன்).

இவர்களின் விளக்கங்களையும் வரையறைகளையும் கொண்டு தெளியும்போது உளவியல் என்பது உயிரினங்களின் நடத்தையை, அனுபவங்களை விவரிக்கும் அறிவியல்; நடத்தை என்பது உடலில் உளச் செயல்களின் ஒருங்கிணைந்த அனுபவங்கள் என வரையறுக்கமுடிகிறது.

## 1.7. உளவியல் பிரிவுகள்

உளவியல் துறையைப் பல வகைகளாகப் பிரித்து ஆராய்வது என்பது கற்பதற்கும் பயன்படுத்துவதற்கும் ஏற்படுத்தப்பட்ட ஒரு எளிமையான, தற்காலிக ஏற்பாடுதான். அவற்றுள் சில உளவியல் பிரிவுகள்.

"பொது உளவியல், குழந்தை உளவியல், நெறிபிறழ் உளவியல், உடற்கூறு உளவியல், ஒப்புமுறை உளவியல், சமூக உளவியல், நடைமுறை உளவியல், மருத்துவ உளவியல், ஆற்றுப்படுத்தும் உளவியல், கல்வி உளவியல், பள்ளி உளவியல், தொழிற்சாலை உளவியல், சுற்றுச்சூழல் உளவியல், பரிசோதனை உளவியல், நல்வழி உளவியல், ஆளுமை உளவியல், வளர்ச்சி உளவியல், உயிரி உளவியல், இளையோர் உளவியல், கெஸ்டால்ட் உளவியல்"[17] என வகைப்படுத்தப்படுகின்றன.

### 1.7.1. பொது உளவியல்

இது எல்லா உளவியல் பிரிவுகளுக்கும் அடிப்படையான, பொதுவான கருத்துகள் பற்றியது. சாதாரண மனிதர்களின் முதிர்ச்சியடைந்த நடத்தையைப் பொது உளவியல் விவரிக்கிறது. இப்பிரிவில் புலன்காட்சி, மனவளர்ச்சி, மனஎழுச்சி, ஊக்குவித்தல், கற்றல், சிந்தித்தல் முதலானவையும் அடங்கும். தனியாள் வேற்றுமைகளின் தன்மை, அவற்றின் அளவு, அவை தோன்றக் காரணங்கள் முதலானவற்றையும் இப்பிரிவு ஆராய்கிறது.

### 1.7.2 குழந்தை உளவியல்

குழந்தையின் வளர்ச்சி, அவ்வளர்ச்சியில் மரபுநிலை, சூழ்நிலை ஆகியவற்றின் பங்கு, குழந்தைகளிடம் காணப்படும் திறன்கள், அவற்றை அளவிடும் முறைகள், குழந்தை தனது சூழ்நிலையுடன் இணைத்துப் பொருத்தப்பாட்டை அடையும் வகைகள் முதலானவற்றை ஆராயும் மனவியல் பிரிவு குழந்தை உளவியல் ஆகும். குழவி மனவியல், குமரப்பருவ மனவியல் ஆகியனவும் இன்று பிரிந்து வளர்ந்துள்ளன.

### 1.7.3. நெறிபிறழ் உளவியல்

சமநிலையினின்று பிறழ்ந்து நரம்பு நோய்கள், உளத்தடுமாற்றங்கள் போன்ற கோளாறுகளால் பீடிக்கப்பட்ட மனிதர்களின் அசாதாரண நடத்தைகளை விவரிக்கும் பிரிவு, நெறிபிறழ் உளவியலாகும். இப்பிரிவு மனமாற்றத்துடன் இணைந்ததாகும். ஃப்ராய்ட் உளப்பகுப்பாய்வு இதன் வளர்ச்சிக்குப் பெரிதும் உதவுகிறது.

### 1.7.4. உடற்கூறு உளவியல்

இப்பிரிவில் மனச்செயல்முறைகள் உடலியல் அடிப்படைகளில் ஆராயப்படுகின்றன. நரம்புமண்டலம், புலன்கள், சுரப்பிகள் முதலானவற்றின் அமைப்பு - செயல்பாடு ஆகியன இப்பிரிவில் இடம்பெறும்.

### 1.7.5. ஒப்புமுறை உளவியல்

மனிதனின் நடத்தையுடன் பிற விலங்கினங்களின் நடத்தைகளை ஒப்பிட்டு அவற்றினுள் காணப்படும் தொடர்புகளையும் வேறுபாடுகளையும் அறியும் பிரிவே ஒப்பீட்டு உளவியலாகும். மனிதர்களைக் கொண்டு நடத்த முடியாத அல்லது நடத்தக் கூடாத சோதனைகளை, விலங்குகளைக் கொண்டு நடத்திட இப்பிரிவு வழிகாட்டுகிறது.

### 1.7.6. சமூக உளவியல்

ஒரு குழுவில் உறுப்பினராக உள்ள தனி மனிதனின் நடத்தை பற்றியும் குழுக்களில் காணப்படும் தொடர்புகள் பற்றியும் இப்பிரிவு விவரிக்கிறது. குழுக்களில் பரவியுள்ள மனப்பான்மைகள், சார்பெண்ணங்கள் போன்றவையும் சமூக மனவியல் ஆய்வுக்குரியனவாகும்.

### 1.7.7. நடைமுறை உளவியல்

இப்பிரிவில் தொழில் துறை உளவியல், விளம்பரம் பற்றிய உளவியல், கல்வி உளவியல் போன்றவை அடங்கியுள்ளன. இதன் பயனாக வாழ்க்கைத் துறைகள் பெரும் பயன் பெற்றுள்ளன. மையர்ஸ் போன்றோர் தொழில் உளவியல் வளர்ச்சிக்கு உதவியுள்ளனர். அது மேலும் பரந்து விரிந்து தனித்த துறையாக உருப்பெற்று வருகிறது.

### 1.8. உளவியல் கோட்பாடுகள்

மனிதனின் இயல்பும் நடத்தை முறைகளும் உளவியல் அறிஞர்களால் பல கோணங்களிலிருந்து ஆராயப்படுகின்றன. அதனால் அறிஞர்களுக்கிடையே அடிப்படைக் கருத்து வேற்றுமைகள் தோன்றுகின்றன. அவற்றின் விளைவாகப் பல மனவியல் கோட்பாடுகள் தோன்றின. அவற்றுள் சில கோட்பாடுகள் இலக்கியத் திறனாய்வில் பயன்படுத்தப்படுகின்றன. அவை, உளப்பகுப்புக் கோட்பாடு (Psycho analysis), ஹார்மிகக் கொள்கை (Harmism), இரக்க உணர்வுக் கோட்பாடு (Sympathy), நெறிபிறழ்க் கோட்பாடு (Abnormal psychology), புதிய ப்ராய்ட் கோட்பாடு (Neo Fruedian theories) என்பனவாகும்.

### 1.8.1. உளப்பகுப்புக் கோட்பாடு (Psycho analysis)

இது மனத்திற்குள் உறைந்திருக்கும் உண்மையைக் கண்டறிவது. நீரில் மிதக்கும் ஒரு பனிக்கட்டியைப்போல மனித உளத்தின் கனமும் அடர்த்தியும் அதன் வெளிப்பரப்பிற்கு அடிக்கடி எழும் சூழ்நிலைகளாக மாற்றக் கூடிய

வகையில் அனைத்தும் பாலுணர்வினாலேயே உந்தப்படுகின்றன. மனிதனின் உணர்வு உந்துதல்கள் அனைத்திற்கும் அடிப்படையாய் விளங்குவன. அவற்றுள், இன்ப விழைவுணர்வும் பிறரைத் தாங்கும் உணர்வும் முதலானவை ஆகும்.

உணர்வு நாட்டங்கள் முனைப்பான நிலைக்குச் செல்லும் பொழுது நெகிழ்ச்சியுடையனவாக மாறுகின்றன. மனித நடத்தையைக் குறித்து மனிதனின் கண்ணோட்டத்தை அறிந்துகொள்ள இரண்டு வினாவினை எழுப்பி அதைத் தன் கொள்கையாகக் கொண்டார் ஃப்ராய்ட். மனித நடத்தையில் இயங்கும் சக்தி எது? அவ்வியக்கத்தைக் கட்டுப்படுத்தும் விதிகள் எவை? என்பன அவ்வினாக்கள் ஆகும்.

இதனை அடிப்படையாகக் கொண்டு மனித நடவடிக்கைளைப் பற்றிய ஆராய்ச்சியில் மனிதனின் சுயவுணர்வு கடந்த நிலையை (unconscious) நுணுக்கமாக ஆராயும் முறையைக் கண்டறிந்தார். இம்முறையை உளநிலைப் பகுப்பாய்வு (Psychoanalysis) என்று ஃப்ராய்ட் குறிப்பிடுகிறார்.

லிபிடோ (libido) சக்திப் பிரவாகத்தை, உளவியல், குறிப்பாக மன அலசல், குழந்தை வளர்ச்சியின் மூன்று பருவங்கள் என்று குறிப்பிடுகின்றது. அண்மைக்கால ஆய்வுகள் லிபிடோ வளர்ச்சியின் ஒரு பருவத்தின் மீது கவனத்தை ஈர்க்கிறது. அது சுய எழுச்சி(பருவம்)யினூடாகப் பொருள் விருப்பம் (object love) வகைப்பட்ட விருப்பத்திற்குச் செல்கிறது. இந்த நிலைக்குக் (stage) கொடுக்கப்பட்ட பெயர் சுயமோகம் (அல்லது) தற்காத்தல் என்பதாகும்.

மனித நடத்தையில் அடிப்படையான இரு ஊக்குவிக்கும் திறன்கள் உண்டு என ஃப்ராய்ட் கருதுகிறார். அவற்றை ஆக்கச் செயல்களில் ஈடுபடத் தூண்டும் 'வாழ்வுத் தூண்டல்கள்' (life urges) எனவும் அழிவுச் செயல்களில் ஈடுபடத் தூண்டும் 'இறப்புத் தூண்டல்கள்' (death urges) எனவும் பிரித்துக்காட்டினார். வாழ்வுத் திறனுக்கு இராஸ் (Eros) எனவும்,

இறப்புத்திறனுக்குத் தானாடொஸ் (Thanatos) எனவும் கிரேக்கக் காப்பியத்தைத் தழுவிப் பெயரிட்டார் என்பதை அறியலாம்.

ஃப்ராய்டின் உளப்பகுப்பியல் கொள்கைகளில் தன்முனைப்பு உள்துடிப்புகள் (Ego impulses) சிறப்புற்ற பாங்கினையே கொள்கின்றன. பால் உந்துதல்களும் (Sex Drives) ஆணை உந்துதல்களும் 'பெருமளவில்' சிறப்பிடம் பெறுகின்றன. உளப்பகுப்பியலாளர்களின் கண்ணோட்டத்தில் அன்பும், வெறுப்பும் ஒன்றோடு மற்றொன்று மாறுபட்டிருக்க வேண்டுவதன்று.

சான்றாக ஒரு செய்தியை உற்றுநோக்கலாம். காதல் புரிதலில் அடிக்கடிப் பிணக்குகள் நேர்தல் உண்டு. காதலிக்கப்படும் ஆண், பெண் பன்முறை துன்புறுதலும் உண்டு. இத்தகைய முறையில் தம்முன் போரிடும் ஊக்கிகளும் மனப்பான்மைகளும் உடனுறைந்து உளப்பகுப்பியலில் மிகுந்து காணப்படும். உடலில் தோற்றுவிக்கப்படும் திறன் பல்வேறு வாழ்க்கைத் தூண்டல்களில் செயல்படுகின்றன என ஊக்குவித்தல் பற்றி ஃப்ராய்டின் விளக்கம் துணிவு கொள்கிறது. திறன் மிக்க இவ்வுந்துதல்கள் விறைப்பினைத் தோற்றுவிக்கின்றன. பால் திறனால் தோற்றுவிக்கப்படும் விறைப்பு, காதற்செயல்களில் ஈடுபடுவதில் சமூகம் பல முட்டுக்கட்டைகளை இடுவதால் இயல்பாக நேரடி முறையில் பாலுந்துதிறன் வெளியிடப்பெறுவது தடை செய்யப்படுகிறது. இதனால் பால் திறன் பெருமளவில் தேக்கி நிறுத்தப்படுகிறது.

குவித்துள்ள விறைப்பை வெளியிடுதல், விறைப்பைக் குறைக்கும் நரம்பு நோய் அறிகுறிகள், பிறவழிகளால் மாற்றிக்கொள்ளப்படலாம். கவிதை, சமயம், இசை, கலை, பணி, கடுமையான உடற்பயிற்சி ஆகியவற்றில் ஈடுபடுதல் பாற்புடமிடுதலுக்குப் பயன்படும் சில எளிய முறைகள் ஆகும். இவற்றைப் போன்றே அடைப்பட்டுள்ள எதிர்ப்புத் திறனும் ஆணைத்திறனும் வெளியிடப்படுகின்றன. தம் பகைவரிடம் இயல்பாகக் கொள்ளும் ஆணை, தோட்டப்பணி செய்தல், விறகு வெட்டுதல், வேட்டையாடுதல் என்பவற்றில் அவர் ஈடுபடுவதன் மூலம் அது புடமிடப்படுகிறது எனலாம்.

மனிதனிடத்தில் மூன்றுவகைப் பசிகள் - உந்துதல்கள் உள்ளன. அவை வயிற்றுப் பசி, பாலியல் பசி, பணப்பசி என்பன. இவற்றை அடைய முயலும்பொழுது உண்டாகும் வெற்றி தோல்விகளும் எதிர்பார்ப்புகளும் ஏமாற்றங்களும் மனிதனுடைய மனதைப் பெரிதும் பாதிக்கின்றன. போட்டி, பூசல், போர் முதலியன சாவியல் இயல்பூக்கத்தால் உந்தப்படுகின்றன.

தான் இன்பம் எனக் கருதுவதை அடைய மனிதன் கொள்ளும் ஆசையின் பெருக்கமும் அம்முயற்சியில் உண்டாகும் தோல்வியும் மனமுறிவை (frustration) உண்டாக்குகின்றன. இதனை ஈடு செய்யுமுகமாக, தன் ஆற்றல் அனைத்தையும் வேறு திசைகளில் மனிதன் திருப்பிவிடுகிறான். திசை திருப்பலின் - மடைமாற்றலின் - ஒருவகை வெளிப்பாடே கலையாக முகிழ்க்கிறது. தன் மனமுறிவைக் கலையாக வெளிப்படுத்த இயலாதபொழுது, அம்மனிதன் மனக் கோளாறினால் பாதிக்கப்படுகிறான்; பித்தனாகிறான்.

உலகில் சிறப்புமிக்கனவாகப் போற்றப்படும் கவிதை (இலக்கியம்), இசை, நாட்டியம், ஓவியம், சிற்பம் முதலிய அழகுக் கலைகள் யாவுமே, மனமுறிவின் வேற்றுருவங்களாகும் என்பது ஃபிராய்டின் சித்தாந்தமாகும்.

ஃப்ராய்டின் கருத்துப்படி உளம் மூன்று நிலைகளைக் கொண்டது என்கிறார். இதனை நனவு உணர்வின் நிலைகள் (Level of consciousness) என்றும் கூறுவர்.

- ஆழ் நனவு நிலை (subconscious)
- நனவிலி நிலை (unconscious)
- நனவு நிலை (conscious)

என்று மூன்று நிலைகளாக அவர் வகுக்கின்றார்.

#### 1.8.1.1. ஆழ் நனவு நிலை

இது நினைவுகளையும் விருப்பங்களையும் கொண்டு அமையும் பகுதியாகும். இந்நிலையில் மனதின் நினைவுகளும் விருப்பங்களும் அவ்வேளையில் நனவு நிலையில் இல்லாதிருப்பினும் அவற்றை எளிதில் நினைவுகூர இயலும்.

#### 1.8.1.2. நனவிலி நிலை

தனி மனிதனின் கட்டுப்பாட்டிற்கு உட்படாதனவாய் அடியில் சென்ற எண்ணங்கள், மனவெழுச்சிகள், உள்துடிப்புகள் என்பன தேக்கி வைக்கப்பட்டிருக்கும் உட்பகுதி நனவிலி நிலையாகும்.

#### 1.8.1.3. நனவு நிலை

ஒரு குறிப்பிட்ட சூழலில் (நேரத்தில்) ஒரு மனிதன் உணரும் உள நிகழ்வுகளும் நினைவுகளும் நனவுநிலை ஆகும். நனவிலி உளம் உறங்குவது இல்லை. அவை பிற நிலைகளில் உள்ள தெளிவான பொருட்களின் சேர்க்கையையும் ஓட்டத்தையும் பெருமளவில் தாக்குகின்றன.

### 1.8.2. இலக்கியத்தில் உளப்பகுப்புத் திறனாய்வு

இதை உளவியல் திறனாய்வின் ஒரு பகுதியாகக் கருதலாம். இலக்கியத்தில் உளப்பகுப்புத் திறனாய்வு நான்கு முறைகளை உள்ளடக்கியது. அவை :

- படைப்பாளியைத் திறனாய்வு செய்தல்,
- படைப்புப் படிமுறையை ஆய்வு செய்தல்,
- பாத்திரங்களைப் பகுப்பாய்வு செய்தல்,
- வாசகர்களைப் பகுப்பாய்வு செய்தல்

என வகைப்படுத்தலாம்.

இந்நான்கையும் உளப்பகுப்பாய்வு தகவமைத்துக் கொள்கிறது. படைப்பாளியைத் திறனாய்வு செய்வதில் நரம்பு நோயாளிக்கு

இணையாகப் படைப்பாளி வைக்கப்படுகிறான். நோயாளி பேச்சைக் கொண்டு நோய்க்குறி மூலம் காண்பதுபோலப் படைப்புகள் அணுகப்படுகின்றன. கனவு உருவாக்கமும் படைப்புத் தொழிலும் இணைநிலையானவை என்கிற கருத்தாக்கம் மையமாக உள்ளது. படைப்புப் படிமுறையை ஆய்வு செய்தல் என்பது கனவுப் பகுப்பாய்வுக்கு இணையானதாகும். இந்த அணுகுமுறையில் காட்சிப் படிமங்கள் முதலிடம் வகுக்கின்றன. மூன்று கனவுத் தொழில்களான உறைவு, இடப்பெயர்வு, குறியீட்டாக்கம் அடிப்படையில் படைப்புகளை ஆய்கின்ற முறை இதற்கு அடிப்படை. மூன்றாவதான பாத்திரப் படைப்புத் திறனாய்வு என்பது படைப்பில் உள்ள பாத்திரப் படைப்பை ஒரு தனி மனிதன் ஆய்வது போல் அணுகி, உளப் பண்புகளை வெளிக்கொணர்கின்ற முறையாகும். மேற்கூறியவற்றில் முதல் வகையான படைப்பாளியைப் படைப்புக் கொண்டு ஆய்வதும் ஆளுமைப் பண்பை நோக்கமாகக் கொண்டுள்ளது. இந்த வகையில் பாத்திரங்கள் முதன்மை வகிக்கின்றன. கடைசியாக, வாசகர் பற்றிய ஆய்வு. இது வாசகன் மீது படைப்புப் பாத்திரத்தை மையப்படுத்துகின்றது. இதில் படைப்பாளி வழி மற்றும் படைப்புவழி திறனாய்வு அணுகுமுறைகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

### 1.8.3. ஹார்மிக் கொள்கை (Harmism)

ஹார்மிக் கொள்கையைத் தோற்றுவித்தவர் வில்லியம் மக்டுகல் என்னும் ஆங்கிலேயர் ஆவார். “ஹார்மிக்கின் அடிப்படைக் கருத்து மனிதனிடம் ஓர் உளச்சக்தி உண்டு. அச்சக்தி தனிப்பட்ட இயக்கங்கள் கொண்ட இயல்பூக்கங்களின் வழியாக நிறைவு பெறுகின்றது என்பதாகும். இக்கருத்து உளப்பகுபாட்டின் கருத்துக்கு ஒத்துள்ளது. இச்சக்திக்கு ஃப்ராய்ட் ‘லிபிடோ’ என்று பெயரிட்டார். மக்டுகலோ ‘ஹார்ம்’ என்று பெயரிட்டார். அதன் காரணமாக அவருடைய உளவியல் அமைப்பு ஹார்மீகம் என்று அழைக்கப்பட்டது. மனிதனின் எல்லா நடத்தைகளையும் இயல்பூக்கங்களே ஆக்குவிக்கின்றன என்று மக்டுகல் குறித்தார். ஃபிராய்ட் குறித்தது போன்று

மனிதன் தனது நடத்தையை ஒரு தேவையை(விடாய்)க்கொண்டோ ஒரே ஒரு இயல்பூக்கத்தைக் கொண்டோ மக்டுகல் விளக்கவில்லை. ஒரு மனிதனிடம் அடிப்படையாக அச்சம், சினம், பால், அன்பு, ஒன்றுபட்டு வாழ்தல் முதலான உணர்வுகளின் அடிப்படையில் மூன்று பிரிவாகப் பிரித்துப் பின் பதினேழு இயல்பூக்கங்கள் உள்ளன எனக் குறித்துள்ளார்”[18]. அவற்றை,

- புலவுணர்வு - Perception
- நடத்தை - Behaviour
- உணர்ச்சி - Emotion

என அடிப்படையில் மூன்றாகப் பிரித்துள்ளார். மேலும், பதினேழு இயல்பூக்கங்களைப் பின்வருமாறு தொகுத்தார். அவை,

- பசி (பசிவூக்கம்) - Hunger
- குறிப்பிட்ட பொருளினை நிராகரித்தல் (நிராகரிப்பூக்கம்) - Rejection of particular substance
- ஆர்வம் (ஆய்வூக்கம்) - Curiosity
- தப்பித்தல் (ஒதுக்கூக்கம்) - Escape
- சினம் (போரூக்கம்) - Pugnacity
- காமம் (பாலூக்கம்) - Sex
- தாய் தந்தை உள்ளுணர்வு (மகவூக்கம்) - Maternal / paternal instinct
- கூடி வாழ்தல் (கூட்டூக்கம்) - Gregariousness
- சுயதேவை (தன்னெடுப்பு) - Self – assertion
- சமர்ப்பிப்பு - Submission
- கட்டூக்கம் - Construction
- திரட்டூக்கம் - Acquisition
- அழுதல் - Crying out / Appeal

- *சிரித்தல் (மகிழ்ச்சி)* - Laugh
- *பாதுகாத்தல்* - Conform
- *ஓய்வு (ஓய்வூக்கம்)* - Rest / sleep
- *இடம் பெயர்தல்* - Migration

*என்பனவாகும்.*

*தற்காலத்தில் உளவியலாளர்களில் பெரும்பாலோர் கீழ்த்தர, உயர்வானவையிலிருப்பது போன்று ஊக்கம்* (Motivation), *அச்சம், சினம் போன்ற மெய்ப்பாடுகளும் மனிதனிடத்து உள்ளன என்று கருதுகிறார்கள். ஊக்கிக்கு அடிப்படையாகப் பல தேவைகள் உள்ளன. அவை பசி, தாகம், தூக்கம், கழிவு, பால் எனப்படும். இவை எல்லாம் உயிர்வாழ உதவும் உடல்சார் தேவைகள் ஆகும்.*

*பால் தேவை, மனிதனின் இனவிருத்திக்காக அமைந்துள்ளது. இந்த உடல்சார் தேவைகளைப்* (Physiological needs) *பூர்த்தி செய்வது மிகவும் அவசியம். இவை பிறப்பால் அமைகின்றன. இவை சூழ்நிலையின் உதவியால் பல்வேறு வகையில் பூர்த்தி செய்யப்படுகின்றன. குழந்தை வளர வளரச் சூழ்நிலைத் தொடர்பு வளர வளர, உடல்சார் விடாய்கள் பூர்த்தி செய்வதற்குத்தக உளசார் விடாய்கள்* (Physiological needs) *ஒருவரிடம் தோன்றுகின்றன. இவை முடிவில் மனிதரிடத்து உடல்சார் தேவைகளைவிட முக்கியமாக அமைகின்றன.*

*மதிப்புப்பெறல்* (Recognition), *கூடிவாழ்தல்* (Belongings), *அன்பு* (Affection), *வெற்றிபெறல்* (Achievement) *முதலான உளச்சார் விடாய்கள் மனிதனிடத்து மிகவும் முக்கியமாக அமைகின்றன. உடல்சார் விடாய்கள் பூர்த்தி அடையாத நிலையில் ஒருவருக்கு உடல் சேதம் ஏற்பட்டு முடிவில் மரணம் ஏற்படுகிறது. உளச்சார் விடாய்கள் பூர்த்தி அடையாத நிலையில் உடல் உளக் கோளாறுகள்* (Psychosomatic Disorders) *ஏற்படுகின்றன. உளக்கோளாறுகளினால் தோன்றும் உள நோய்களில் சமூக விரோதச் செயல்களில் ஈடுபடும் போக்கும் உண்டாகிறது.*

#### 1.8.3.1. போரூக்கம்

மனித இனம் வளர்ச்சி பெறவும் தன்னைத் தற்காத்துக்கொள்ளவும் மேற்கொள்ளும் முயற்சியாகத் தோன்றுவது போரூக்கமாகும். இது காடுகளில் விலங்குகளுடன் விலங்காக இருந்த ஆதிகால மக்களிடமிருந்து தோற்றம் பெற்றது. பண்டைய காலம் தொட்டு நடைபெற்ற பல போர்கள் போரூக்கத்தால் ஏற்படுபவை. பணம், பெண், நிலம் தொடர்பான உரிமை மற்றும் வேட்கைக்கு இடையூறு - நாட்டத்திற்கு இடையூறு ஏற்பட்டால் இவ்வூக்கம் தூண்டப்படுகிறது என்று உளவியலாளர் கூறுகின்றனர். மக்டுகலின் இயல்பூக்கத்தில் போரூக்கமும் ஒன்று. இவ்வூக்கம் சங்கப் பாடலில் இடம் பெற்றுள்ளது.

ஒருவனை ஒருவன் அடுதலும் தொலைதலும்
புதுவது அன்று; இவ் வுலகத்து இயற்கை[19]

எனும் இடைக்குன்றூர் கிழார் பாடிய பாடலின் வரிகளே அதற்குச் சான்றாக அமைகின்றது.

#### 1.8.4. இரக்கவுணர்வுக் கோட்பாடு (Sympathy)

இரக்கம் என்பது இயல்பான மனிதமன உணர்வாகும். சமூகச் சூழ்நிலையால் துன்பங்களை அனுபவித்த மனிதனின் மறுவினைச் செயலாகவும் இவ்விரக்கவுணர்வு காணப்படுகின்றது. தனது கடந்த அனுபவங்களும் துன்பங்களும் ஒருவரிடம் தோன்ற அவர் தன்னை விடுவித்துக் கொள்ள விரும்புகிறார். இந்நிலையில் அவரை எதிர்ப்படும் மற்றவரும் அவரை ஒத்த சூழ்நிலையில் இருப்பதை அறியும்போது அவர்பால் இவருக்கு இரக்கவுணர்வு தோன்றுகிறது. இவ்விரக்கவுணர்வே பிறருக்காக எதையும் செய்யும் அன்பினைத் தோற்றுவிக்கின்றது.

சுமித் (Smith) என்பவர் தனது நூலில் “மனிதன் எவ்வளவுதான் தன்னலம் கருதுபவனாக வாழ்ந்தாலும் அவனிடமும் சில கொள்கைகள் காணப்படுகின்றன. பிறவியிலேயே உதவுதல் - பிறரை மகிழ்வித்தல்

முதலானவற்றிற்கு வித்துக்கள் இயற்கையாகக் காணப்படுகின்றன எனக் கூறுகின்றார். இவர் இரக்க உணர்வினை இரு தன்மையான அமைப்புகளாகப் பிரிக்கின்றார். முதலாவது உடனடி மறிவினையாகத் (Reflex) துலங்க வழி உண்டாக்கும் இரக்க உணர்வாகும். நம் எதிரே ஒருவர் துன்பப்படும்போது நாமும் நம் உடலை நெளிக்கின்றோம். இது பிறப்பால் வந்த மறிவினைச் செயலாக அமைகின்றது"[20] என உளவியலாளர் கூறுகின்றனர்.

### 1.8.5. நெறிபிறழ்க் கோட்பாடு (Abnormal Psychology)

நெறிபிறழ் உளவியல் குறித்துச் "சமநிலையினின்றும் பிறழ்ந்து நரம்பு நோய்கள் (Neuroses), உளத்தடுமாற்றங்கள் (Psychosis) போன்ற கோளாறுகளால் பிடிபட்ட மனிதர்களின் அசாதாரணமான நடத்தைகளை விவரிக்கும் பிரிவு, நெறிபிறழ் மனவியலாகும். இப்பிரிவு மனமருத்துவ இயலுடன் இணைந்ததாகும்"[21] என்று கி.நாகராஜன் கூறுகிறார்.

இவ்வகையான உளவியல் கோட்பாடுகள் இலக்கியத் திறனாய்வில் பயன்படுத்தப்படுகின்றன. இலக்கியங்களில் கூறப்படும் வாழ்வியல் உண்மைகளை அறிய இத்தகைய உளவியல் கருத்துகள் பயன்படுகின்றன. இதனால் மனித மனதில் ஏற்படும் சிக்கல்களையும் குழப்பங்களையும் அறிய வாய்ப்புகள் கிடைக்கின்றன. இதன் மூலம் நாம் வாழ்க்கைத் துன்பங்களுக்குரிய காரணங்களை அறிந்து, அவற்றைத் தீர்க்க முற்படலாம்.

### 1.8.6. புதிய ப்ராய்ட் கோட்பாடுகள் (Neo Freudian Theories)

உளப்பகுப்புக் கொள்கைக்கு ஓரளவு உட்பட்டும் அதேபோன்று ஃப்ராய்டின் கருத்துக்களை முழுமையாக ஏற்காதவர் பலரும் தங்களது ஆளுமைக் கொள்கைகளைக் குறிப்பிட்டுள்ளனர். இவர்களில் யூங் (Carl Jung) ஆட்லர் (Alfred Adler) இருவரும் மிக முக்கியமானவர்கள். இவர்களது கோட்பாடுகள் புதிய ப்ராய்ட் கோட்பாடுகள் என்றழைக்கப்படுகின்றன.

#### 1.8.6.1. ஆட்லரின் தனிநபர் உளவியல் (Adler's Individual Psychology)

*ஃப்ராய்டின் தொடக்ககால நண்பராயிருந்து பின் அவரோடு கருத்து வேறுபாடு கொண்டு பிரிந்தவர் ஆட்லர் ஆவார். ஒருவனது ஆளுமைத் தன்மையில் பாலுக்கத்தை விட ஆக்கிரமிப்பு அல்லது வலுவந்த ஊக்கத்தின்* (Aggression) *சக்தி, ஆளுமை வளர்ச்சியில் அடிப்படை இயல்பூக்கங்களை விடச் சமூகச் சக்திகளின் மிகுதியான செல்வாக்கு போன்றவற்றை ஆட்லர் வலியுறுத்துகிறார்.*

#### 1.8.6.2. தாழ்வுச் சிக்கல் (Inferiority Complex)

*தாழ்வுச் சிக்கல் என்ற கருத்தைத் தோற்றுவித்தவரும் இவரே. இவரது கருத்துப்படி ஒவ்வொருவரும் குழந்தையாக இருக்கும்போது, பிறரைச் சார்ந்தே இருக்க வேண்டிய தாழ்வுநிலையில் வாழ்க்கையைத் தொடங்குகின்றோம். அதாவது உண்ணல், உடுத்தல், உடல் இயக்கம் என அனைத்து வேலைகளுக்கும் சிறு குழந்தை பிறரை - குறிப்பாகத் தாயைச் சார்ந்திருக்கிறது. இவ்வாறு தான் தாழ்நிலையில் இருக்கின்றோம் என்று உணர்தலே ஒருவரை உயர்நிலையடைய முயல வைக்கிறது. இவ்வாறு முயலும்போது உண்ணல், உடுத்தல், உடல் இயக்கம் என அனைத்துச் செயல்களையும் தானே செய்யக் கற்கிறார். இது குடும்பத்தில் தொடங்கிப்பின் வெளியுலகச் சமூக வாழ்விலும் தொடர்கிறது. இவ்வாறு தனக்குத் தகுந்தவாறு தனித்தன்மையுடன் உயர்நிலையடைய முயலுதலையே ஒருவரது வாழ்க்கை முறை* (Lifestyle) *அல்லது பாணி என்று அழைக்கிறோம். இவ்வாறு உருவாகும் வாழ்க்கை முறை பொருத்தப்பாடு உடையதாகவோ, பொருத்தப்பாடற்றதாகவோ அமையலாம். வாழ்க்கை முறையை உருவாக்கிக் கொள்ளும்போது உலகைப் பற்றித் தான் ஏற்றுக்கொள்ளும் தவறான அல்லது சிதைவுற்ற பொய்யான எண்ணங்கள்தாம், பொருத்தப்பாடற்ற நடத்தைக்கு* (Maladaptive behaviour) *அடிப்படைக் காரணமாகும்.*

### 1.8.7.கார்ல் யூங் பகுப்பாய்வு உளவியல் (Carl Jung Analytical Psychology)

யூங் என்பவர் ஃப்ராய்டின் கருத்துக்களினின்று இரு முக்கிய நிலைகளில் வேறுபடுகிறார். ஃப்ராய்ட் போன்றே மனிதனது தன்மை பற்றி யூங் சிறப்பான கருத்தைக் கொண்டிருந்தார். மனிதனது நடத்தை அவனது இயல்பூக்கங்களை நிறைவு செய்வதற்கு மட்டும் எழுந்தது இல்லை எனவும், தன்னுள் காணப்படும் பல்வேறு ஆக்கச்சக்திகளை வளர்க்கவும் மனிதன் முயல்கிறான் எனவும் யூங் கருதினார்.

ஒவ்வொருவரது நடத்தைக்குப் பின்னும் அவனது தனிப்பட்ட நனவிலி மனம் (Personal unconscious) இருத்தலுடன் மனித இனத்துக்குப் பொதுவான தொகுப்பு நனவிலி உள்ளத்தின் (Collective unconscious) செல்வாக்கும் இருத்தலை யூங் சுட்டிக் காட்டுகின்றார். இதில் மனித இனத்தின் பண்டைய நினைவுகளும் நடத்தை முறைகளும் உள் ஒடுங்கியுள்ளன. மனித மனத்தின் நான்கு செயல்களான சிந்தித்தல் (Thinking), உணர்தல் (Sensing), உணர்ச்சி கொள்ளுதல் (Feeling) மற்றும் உள்ளுணர்வு (Intuition) ஆகியவை பற்றியும் அவை எவ்வாறு நடைபெறுகின்றன என்பதைப் பொறுத்தும் மனித ஆளுமை வளர்ச்சி தீர்மானிக்கப்படுகிறது என்று யூங் விளக்கியுள்ளார். மனித ஆளுமை வகைப்பாடுகளான அகமுகத்தான் புறமுகத்தான் குறித்து விளக்கியவரும் இவரே ஆவார்.

### 1.9. இலக்கியமும் உளவியலும்

இலக்கியம், படைப்பாளர்களின் உளத்தில் தோன்றும் கருத்துகளின் உருவாக்கம். எனவே படைப்பாளரின் உளவியலும், அவரால் படைக்கப்பெறும் கதை மாந்தர்களின் உளவியலும் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டிய தேவை கற்பவருக்கு ஏற்படுகிறது.

வாழ்க்கை நடப்புகளை அடிப்படையாகக் கொண்டு இலக்கியம் படைக்கப்படுகிறது. ஆகையினால் வாழ்க்கையின் அமைப்புக் கூறான

உளவியல் சிந்தனை இலக்கிய உருவாக்கத்துக்கு உறுதுணையாக அமைகிறது.

மனவோட்டத்தின் பல்வேறு போக்குகளைச் சுற்றுச்சூழல் சிந்தனையுடன் பொருத்திக் கொண்டு இலக்கியத்தை உணர்த்திக் காட்ட விரும்பும் சிந்தனைக் கருத்துகளுடன் இணைத்து விளக்கம் காண முயன்றால் அரிய உண்மைகளை அறியமுடியும். அவ்வகையில் இலக்கிய ஆய்வுக்கு உளவியல் அறிவு நல்ல துணையாக அமைகிறது.

“உளவியல் வகுத்துக் காட்டும் மனித மனப்போக்குக்குப் பொருந்தாத இலக்கியப் படைப்புகள் உலக இயல்புக்கு மாறுபட்டதாகக் கருதப்படும். உண்மையான வாழ்வை உலக இயல்புக்குத் தக்கவாறு உருவாக்கிக் காட்டும் இலக்கியமே சிறந்ததாக மதிக்கப்படும். இத்தகைய இலக்கியங்களை உளவியல் அறிவுடன் சிந்திப்பது பயனுள்ள அணுகுமுறை”[22] என்பது ஆய்வாளர் அ.நா. பெருமாள் அவர்களின் கருத்தாகும்.

அனைத்து மொழிகளின் இலக்கியங்களும் உளவியல் சிந்தனைக்கு இடம் வகுத்துத் தருகின்றன. அதுபோல் சங்க இலக்கியத்திலும் முழுமையான அளவுக்கு உளவியல் சிந்தனைக் கூறுகள் காணப்படுகின்றன.

“சங்க இலக்கியத்திற்குப் பிறிதொரு பெயர் சூட்டுக என்று கேட்டால் தயங்காமல் உளவியல் இலக்கியம் எனக் குறிப்பிடலாம். அக இலக்கியங்களில் நூறு விழுக்காடும் புற இலக்கியங்களில் எழுபத்தைந்து விழுக்காடும் உளவியல் அடிப்படையில் உருக்கொண்டவையே ஆகும். ஏதேனும் ஒரு மனநிலைமையை மட்டுமோ அல்லது அம்மனநிலை விளைவுக்குரிய சூழலை மட்டுமோ அவை பாடுபொருளாகக் கொண்டவை”[23] என்று கூறப்படுகின்றது.

இலக்கியத்தில் கற்பனைக்கு இடம் உண்டு. அவை உளவியல் போக்குக்குப் பொருந்தும் பாங்கில் அமைவது சிறப்பாகும். அன்றேல் வெறும் கற்பனையாகிச் சிறப்பிழந்து விடுகிறது.

மேலும் உளவியல் என்பது ஒரு தனித்துறையாகவும், இலக்கியம் என்பது ஒரு தனித்துறையாகவும் உள்ளன. எனவே உளவியல் அறிவினை அடிப்படையாகக் கொண்டு இலக்கியத்தினை ஆராயலாம். அத்தகைய ஆராய்ச்சிக்கு மேலைநாட்டு அறிஞர்களின் உளவியல் கருத்துகள் வழிவகுக்கின்றன. எனவே நம் இலக்கிய மரபுக்கு ஏற்றாற் போல உளவியலைப் பின்பற்றி ஆய்வு மேற்கொள்ள வேண்டியது அவசியமாகும்.

## 1.10. இலக்கியத்தில் உளவியல் அணுகுமுறை

இலக்கியத்தைச் சரியாக விளங்கிக் கொள்வதற்கு உளவியல் அணுகுமுறை தேவைப்படுகிறது. மொழியில்லாமல் இலக்கியம் இல்லை. ஆகவே, மொழியியல் நோக்கில் இலக்கியத்தை ஆய்வது என்பது இன்றியமையாத ஓர் ஆய்வாக வளர்ந்து விட்டது. அதைப் போல மனித மனம் என்ற ஒன்று இல்லாமல் இலக்கியம் இல்லை. மனித மனத்தின் இயல்புகளைப் புரிந்து கொண்டால்தான் இலக்கியத்தை விளங்கிக் கொள்வதிலும் ஒரு முழுமை கிடைக்கும். மனித உளத்தின் வாழ்க்கை முறையைப் பகுத்துக் கூறும் ஓர் அறிவியலே உளவியல். ஒருவனது உளம் அவனுடைய செயல்களின் மூலம் உணர்ச்சிகளை வெளிப்படுத்துகிறது. எனவே செயலை அறிந்து ஆராய்வதன் வழி உளத்தை நேரடியாக அறியமுடியும். “உளத்தை நேரடியாக அறிவதற்கு உபகரணங்கள் மூலம் கணிக்கமுடியும். இங்ஙனமே இலக்கியங்கள் கவிஞனின் உளத்துள் சென்று உணர்வாக்கப்பட்டு, பின்னர் உணர்ச்சியாக மாற்றம் செய்யப்படுகிறது”[24] என்று வீ. ஆதிபராசக்தி கூறியுள்ள கருத்தும் உளவியல் அணுகுமுறை குறித்து விளக்குகின்றது.

இலக்கியங்களைப் பலவாறு அணுகலாம். அவற்றுள் உளவியல் முறையும் ஒன்று. எனவே, உளவியல் நோக்கில் இலக்கியத்தை “இயல்புநிலை, உணர்ச்சிநிலை, மயக்கநிலை, ஐயநிலை, கூட்டுநிலை, காலவளர்ச்சி நிலை, சமூக நிலை, சுற்றுச் சார்பு நிலை, உறவு நிலை போன்ற பலவித நிலைகளை அடிப்படையாகக் கொண்டு உளவியல் சிந்தனையில் இலக்கியத்தை அணுகலாம்”[25] என்கின்றார் அ. நா. பெருமாள்.

எனவே, இலக்கியத்தில் காட்டப்படும் வாழ்வியலின் உண்மைகளை அறியவும் இலக்கிய மாந்தர் மனதில் ஏற்படும் சிக்கல்களையும், குழப்பங்களையும் அறியவும் உளவியல் அணுகுமுறை இலக்கியத்தில் கையாளப்படுகிறது.

இலக்கிய மாந்தர், படைப்போர், படிப்போர் ஆகியோருக்கிடையில் உள்ள உளவியல் தொடர்பினை அறிதல் வேண்டும். பல்வேறு சூழ்நிலையில் பல்வேறு இயல்புடைய மாந்தர் இடம்பெற்று, செயல்படுவதில் உளவியல் எந்த அளவுக்கு இயல்பாகவும் இயல்பு மீறியும் அமைகிறது என்பதைக் கண்டறிய வேண்டும். முரண்பட்டு, மாந்தர் பொருந்தாச் செயல்களில் ஈடுபடலாம்; அதன் காரணத்தை அறிய உளவியல் உத்தி தேவைப்படுகின்றது.

படைப்போரின் நோக்கும் போக்கும் படிப்போரின் எண்ணப் போக்கிற்கு ஒத்தும் ஒவ்வாமலும் இருக்கலாம். இலக்கியம் எழுந்த காலவுணர்வு காலப்போக்கில் மாறுவது இயல்பு. இயற்கைத் தன்மையைத் தவிர மற்றவை கால வளர்ச்சியில் மாறி அமையலாம். இதை நன்கு அறிய உளவியலுடன் சமூகச் சிந்தனையும் இணைந்து இடம்பெற வேண்டும்.

திட்டவட்டமாக உளவியலின் போக்கை உறுதிப்படுத்திக்காண இயலாது. மனித மனத்தின் போக்கு, வரம்புக்கு உட்படும் தன்மையுடையது அன்று. முற்றிலும் உணர முடியாத இயல்புகளுடன் கற்றறிய முடியாத புதிராக மனிதனின் மனம் சிந்திக்கிறது. ஆகையால் முடிந்த அளவிற்கு முயன்று இலக்கிய உண்மைகளை உளவியல் அணுகுமுறைகளைக் கொண்டு அறிய வேண்டும்.

### 1.10.1. கால வளர்ச்சியில் சிந்தனை மாற்றம்

கால வளர்ச்சியில் அறிவு வளர்கிறது. அதனால் சிந்தனை மாறுகிறது. குறிப்பிட்ட ஒரு காலக்கட்டத்தில் சரியாகக் கருதப்பட்ட ஒன்று, இன்னொரு காலத்தில் நேர்மாறாகக் கருதப்படலாம். சங்க காலத்தில் ‘மன்னன் உயிர்த்தே

மலர்தலை உலகம்' என்ற உணர்வு நிலவியது. கம்பர் காலத்தில் "மன்னன் உயிரெலாம் உறையுமோர் உடம்பினான்" என்றும், பாரதியார் காலத்தில், 'எல்லாரும் இந்நாட்டு மன்னர்கள்' என்றும் இலக்கியப் பதிவுகளின்வழி கால இடைவெளியில் மக்களின் எண்ணப் போக்கில் ஏற்பட்டுள்ள மாற்றத்தை நன்கு உணரலாம். அறிவு வளர்ச்சி உளவியல் போக்கை மாற்றும் தன்மை கொண்டதை இதன்வழி அறிந்துகொள்ள முடிகின்றது.

### 1.10.2. உணர்ச்சி நிலை உளவியல்

உணர்ச்சிப் பெருக்கில் உளவியலின் போக்கு இயல்புக்கு ஏற்ப மாறுபடும். நலங்கிள்ளிக்கும் நெடுங்கிள்ளிக்கும் இடையில் அண்ணன் தம்பி உறவுமுறை; ஆனால் அரசுரிமை யாருக்கு என்ற போட்டியின் காரணத்தால் பகைத்து, கொல்லும் அளவுக்கு மனமாற்றம் அடைந்ததைப் புறநானூற்றுப் பாடல் புலப்படுத்தும். உணர்ச்சிநிலை உளவியலை நன்கு அறிந்தவர்கள்தாம் இச்சூழலைச் சரியான கோணத்தில் புரிந்து கொள்ளமுடியும். இதைப் போன்று பல பாடல்கள் உணர்ச்சி நிலை உந்துதலால் பாடப்பட்ட பாடல்களாக இருப்பதைக் காணமுடிகிறது; அவ்வழி உளவியல் தொடர்பின் பயன்பாடும் புலப்படுகிறது.

### 1.10.3. உளத்தில் உண்டாகும் சிக்கல்கள்

தனி மனிதர்களுக்கிடையே உள்ள சில பல இயல்புகள் சமூகத்தின் நெறிமுறைகளுக்கும் பழக்க வழக்கங்களுக்கும் முரண்பட்டனவாகவே உள்ளன. அவற்றுள் பெரும்பாலானவை அவர்கள் வாழும் சமூகத்தால் ஏற்கப்படுவது இல்லை. இத்தகைய சமூக ஏற்பினைப் பெறாத, விருப்பங்களை அடைய விரும்புதல் மனித இயல்பு. இதனால், சமூக வாழ்வில் தனிமனிதர்களுக்குத் தோல்விகள் உண்டாகின்றன. தோல்விகளால் மனிதமனம் பாதிக்கப்படுகிறது. இதன் விளைவாக மனமுறிவோ, தாழ்வு மனப்பான்மையாகிய மனக் கோட்டமோ, அடக்கியாளத் துடிக்கும் ஆதிக்க மனப்பான்மையோ ஒருவருக்கு உண்டாகலாம் என்கின்றனர் உளவியலாளர்கள்.

“நெடுங்கிள்ளியும் நலங்கிள்ளியும் அண்ணன் தம்பிகள்; இளந்தத்தன் என்ற புலவர் நலங்கிள்ளியைப் பாடிவிட்டு, நெடுங்கிள்ளியையும் பாட ஆவூர் வந்தார். அவரை நலங்கிள்ளியின் ஒற்றன் என்றெண்ணி நெடுங்கிள்ளி கொல்ல முற்பட்டான். கோவூர்கிழார் ஓடோடிச் சென்று புலவர்களுக்கே உரிய நடுநிலையுரிமையை எடுத்துரைத்து இளந்தத்தனைக் காத்தார் என்று புறநானூற்றுப் பாடல் 46 வழியாக அறிகிறோம்”[26] இது அரசவுரிமையால் இருவரிடையே உண்டான உள்ளச் சிக்கலைப் படம்பிடித்துக் காட்டுகிறது.

### 1.10.4. உளவியல் அணுகுமுறையின் பயன்பாடு

இலக்கியத்தில் காட்டப்படும் வாழ்க்கை இயல்புகளின் உண்மைகளைச் சரியாக அறியவும் மனித மனதில் ஏற்படும் சிக்கல்களையும் குழப்பங்களையும் அறியவும் உளவியல் அணுகுமுறை உதவுகிறது. வாழ்க்கைத் துன்பங்களுக்கு உரிய காரணத்தைத் தெரிந்து அவை தீர வழிகாட்டவும் இத்தகைய அணுகுமுறையிலான ஆய்வு உதவும். சமுதாயத்தை நல்ல முறையில் மாற்றி அமைக்க உளவியல் சிந்தனை பயன்படும்.

உளவியல் சிந்தனையின் பல கூறுகளையும் நன்குணர்ந்து இலக்கியத்தில் இணைத்து ஆய்வு மேற்கொள்ளவேண்டும். நுட்பமான சிந்தனை உளவியல் அணுகுமுறைக்கு மிகவும் தேவைப்படுகின்றது. மேலும் இலக்கியச் சிந்தனையில் உளவியல் அணுகுமுறையால் பயன்மிக்க பல கருத்துகள் கிடைக்கும் என அறிய முடிகிறது.

### தொகுப்புரை

‘தமிழ் இலக்கியமும் உளவியலும்’ எனும் தலைப்பில் அமைந்த இந்த இயலின் ஆய்வு முடிவுகள் தொகுப்புரையாக இடம்பெறுகின்றன.

- இலக்கியம் என்பது மனித உணர்வுகளின் பிரதிபலிப்பு; அவை மனித மனத்தில் தோன்றுபவை. ஆனால், உளவியல் என்பது மனித இயல்பினையும் நடத்தையில் ஏற்படும் மாற்றத்தையும் அறிய உதவுகிறது.

- உளவியல் அறிவியல் கிரேக்கர்களின் காலத்தில் தோன்றியது. முதல் உளவியல் நூல் ஆன்மாவின் இயல்புகள் என்பதாகும். உளவியல் வளர்ச்சி நிலையில் ஏற்பட்ட மாற்றங்கள் மற்றும் உளவியல் வரையறைகள் காலத்திற்கேற்ப மாறுபட்டதை இந்த இயல் கருத்துகள் வழி அறிந்துகொள்ள முடிகின்றது.

- உலகில் சிறப்புமிக்கனவாகப் போற்றப்படும் கவிதை (இலக்கியம்), இசை, நாட்டியம், ஓவியம், சிற்பம் முதலிய அழகுக் கலைகள் யாவுமே, மனமுறிவின் வேற்றுருவங்களாகும் என்பது ஃபிராய்டின் சித்தாந்தமாகும்.

- மனிதனிடம் தனிப்பட்ட ஒரு சக்தி உண்டு. மனிதனின் அனைத்து நடத்தைகளையும் இயல்பூக்கங்களே ஊக்குவிக்கின்றன என்று மக்டுகல் குறித்தார். இக்கொள்கை ஹார்மிகக் கொள்கை (Harmism) எனப்பட்டது. மனிதனிடம் பதினேழு வகை இயல்பூக்கங்கள் உள்ளன. அவை புலனுணர்வு, நடத்தை, உணர்வு என அடிப்படையில் மூன்றாகப் பிரிக்கப்பட்டுள்ளன.

- மனிதன் எவ்வளவுதான் தன்னலம் கருதுபவனாக வாழ்ந்தாலும் அவனிடமும் பிறவியிலேயே இயற்கையாக உதவுதல், பிறரை மகிழ்வித்தல் போன்றவற்றிற்குச் சில கொள்கை வித்துக்கள் காணப்படுகின்றன. இவற்றைச் சுமித்தின் (Smith) இரக்க உணர்வுக் கோட்பாடு (Sympathy) வெளிப்படுத்துகின்றது.

- மனித மனதில் ஏற்படும் சிக்கல்களையும் குழப்பங்களையும் அறிய உளவியலில் வாய்ப்புகள் கிடைக்கின்றன. அதன் மூலம் நம் வாழ்க்கைத் துன்பங்களுக்குரிய காரணங்களை அறிந்து, அவற்றைத் தீர்க்க நெறிபிறழ்க் கோட்பாடு (Abnormal psychology) உதவுகிறது.

- ஃப்ராய்டின் கருத்துப்படி உண்மைக் கொள்கை, இன்பக் கொள்கை ஆகியவற்றின் இடையே ஏற்படும் போராட்டங்கள் அடிப்படையில் ஆளுமையை உணர்தல் வேண்டும் என அறியமுடிகிறது.

- புலவனின் கற்பனையில் தோன்றிய இலக்கியம் உளவியல் உத்தியுடன் ஒன்றிப்போகும்போது என்றும் வெற்றிபெறும்; அவ்வாறு வெற்றிபெற்ற இலக்கியங்களில் உளவியல் கூறுகள் பலவும் உள்ளன என இந்த இயல் கருத்துகள் வழி தெரிந்துகொள்ள முடிகின்றது.

**இயல் - ஒன்று**

**சான்றெண் விளக்கம்**

1. சிற்பி பாலசுப்பிரமணியம், தமிழ் இலக்கிய வரலாறு, ப.1.
2. வீ. ஆதிபராசக்தி, இலக்கியமும் உளவியலும், ப.1.
3. புறம்.30:1-6
4. தி.கு. இரவிச்சந்திரன், சிக்மண்ட் ஃப்ராய்ட் உளப்பகுப்பாய்வு அறிவியல், ப.20.
5. மேலது, ப.21.
6. மேலது, ப.21.
7. நற்றிணை, பா.10:1-4.
8. தி.கு. இரவிச்சந்திரன், சிக்மண்ட் ஃப்ராய்ட் உளப்பகுப்பாய்வு அறிவியல், ப.21.
9. அ.அ. ஞானசுந்தரத்தரசு, கம்பனும் உளவியலும், ப.18.
10. தி.கு. இரவிச்சந்திரன், சிக்மண்ட் ஃப்ராய்ட் உளப்பகுப்பாய்வு அறிவியல், ப.21.
11. கி. நாகராஜன், கல்வி உளவியல், ப.3.
12. தி.கு. இரவிச்சந்திரன், சிக்மண்ட் ஃப்ராய்ட் உளப்பகுப்பாய்வு அறிவியல், ப.19.
13. மேலது, ப.19.
14. மேலது, ப.19.
15. மேலது, பக்.28-29.
16. மேலது, ப.27.
17. இலக்குவன், உளவியல் நிபுணர் கையேடு, ப.17.
18. நா. வேதமணி மானுவேல், சமக உளவியல், பக். 74 - 75.
19. புறம், 76:1-2.
20. கி. விஜயலட்சுமி, புதுக்கவிதையில் உளவியல், ப.14
21. கி.நாகராஜன், கல்வி உளவியல்,ப.15.

22. அ.நா.பெருமாள், இலக்கியத் திறனாய்வில் உளவியல் அணுகுமுறைகள், ப.101.
23. தமிழண்ணல், சங்க இலக்கிய ஒப்பீடு, ப.138.
24. வீ. ஆதிபராசக்தி, இலக்கியமும் உளவியலும், ப.1.
25. அ.நா.பெருமாள், இலக்கியத் திறனாய்வில் உளவியல் அணுகுமுறைகள், ப.101.
26. தமிழண்ணல், புறநானூறு, ப.149.

## 2.0. சங்க இலக்கியம்

*இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட காலம் சங்க காலமாகும். அக்காலத்தில் தமிழில் தோன்றிய பாடல்களின் தொகுப்பினைச் சங்க இலக்கியம் என்பர். அவை 'பாட்டும் தொகையும்' ஆகும். பாட்டு என்பது பத்துப்பாட்டு; தொகை என்பது எட்டுத்தொகை. இவற்றைப் 'பதினெண் மேற்கணக்கு' என்றும் கூறுவர். எட்டுத்தொகையின் பாடல்கள் ஒவ்வொன்றும் பல பாடல்களின் தொகுப்பாகும். பத்துப்பாட்டானது பத்துத் தனித்தனி நீண்ட நெடிய பாடல்களின் தொகுப்பு எனக் கூறலாம்.*

*சங்க இலக்கியப் பாடல்கள் அகம், புறம் என்னும் இருபொருட்களை அடிப்படையாகக் கொண்டு இயற்றப்பட்டன. காதல் தொடர்பானவை அகம் என்றும் வீரம், கொடை, புகழ் முதலானவை புறம் என்றும் கூறப்படுகின்றன. "சங்க இலக்கியப் பாடல்கள் மொத்தம் 2381. இவற்றைப் பாடிய புலவர்களுள் பெயர் தெரிந்த புலவர்கள் 473 பேர். பெயர் தெரியாத புலவர்கள் 102 பேர்"[1] சங்க இலக்கியத்துள் பெரும்பான்மையான பாடல்கள் அகவல்பாக்களால் ஆனவை. ஏனைய பாடல்கள் கலிப்பா, வஞ்சிப்பா, பரிபாட்டு என்னும் செய்யுள் வகைகளால் இயற்றப்பட்டுள்ளன.*

### 2.1.1. எட்டுத்தொகை

*அடிவரையறையில் தொகுக்கப்பட்டதால் இவற்றைத் தொகை என்றும் கூறுவர். இவற்றுள் நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, அகநானூறு, கலித்தொகை, பதிற்றுப்பத்து, புறநானூறு, பரிபாடல் எனும் எட்டும் அடங்கும். இதனை,*

**நற்றிணை நல்ல குறுந்தொகை ஐங்குறுநூறு**
**ஒத்த பதிற்றுப்பத்து ஓங்கு பரிபாடல்**
**கற்றறிந்தார் ஏத்தும் கலியொடு அகம், புறம் என்னும்**
**இத்திறத்த எட்டுத் தொகை**[2]

என்னும் பழம்பாடலால் அறியலாம். இந்நூலில் உள்ள பாடல்கள் ஒவ்வொன்றும் பல்வேறு காலத்தில் வாழ்ந்த புலவர்களால் பாடப்பட்டவை. எட்டுத்தொகை நூல்களுள் பதிற்றுப்பத்தும் புறநானூறும் புறப்பொருள் இலக்கியங்கள். பரிபாடல் அகம் புறம் சார்ந்தது. ஏனைய ஐந்தும் அகப்பொருள் இலக்கியங்களாகக் கருதப்படுகின்றன. பழம்பெரும் இலக்கண நூலாகிய தொல்காப்பியம் கூறும் அகப்பொருள், புறப்பொருள் இலக்கணங்களுக்கு எட்டுத்தொகை நூல்கள் இலக்கியங்களாகத் திகழ்கின்றன.

### 2.1.2. பத்துப்பாட்டு

பத்துப்பாட்டு என்பது ஒரு கலைச் சுரங்கம், பண்பாட்டுச் சுரங்கம் மற்றும் வரலாற்றுப் பெட்டகமாகத் திகழ்கிறது. தமிழர் வாழ்க்கையைக் காட்டும் ஓவியமாகவும் விளங்குகிறது. உலகளாவிய தமிழரின் வணிகத்தை உணர்த்தும் இலக்கியமாகத் திகழ்கிறது. இது நெடும் பாடல்களின் தொகுப்பு. இவற்றைத் தொகுத்தவரும், தொகுப்பித்தவரும் யாரெனத் தெரியவில்லை. இவற்றுள் திருமுருகாற்றுப்படை, பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, முல்லைப்பாட்டு, மதுரைக்காஞ்சி, நெடுநல்வாடை, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை, மலைபடுகடாம் முதலானவை இடம் பெறுகின்றன. இதனை,

**முருகு பொருநாறு பாணிரண்டு முல்லை**
**பெருகு வளமதுரைக் காஞ்சி – மருவினிய**
**கோலநெடு நல்வாடை கோல் குறிஞ்சி பட்டினப்**
**பாலை கடாத்தொடும் பத்தே**[3]

என்னும் பழம்பாடலால் அறியலாம். இவற்றுள் ஆற்றுப்படை நூல்கள் ஐந்தும் மதுரைக்காஞ்சியும் புறம் சார்ந்தவை, நெடுநல்வாடை என்பது அகமா, புறமா என்ற கருத்து வேறுபாடு உண்டு. எஞ்சிய மூன்றும் அகம்

சார்ந்த நூல்கள். இப்பாடல்களில் மிகச்சிறியது 103 அடியுள்ள முல்லைப்பாட்டு. மிகப்பெரியது 782 அடியுள்ள மதுரைக்காஞ்சி ஆகும்.

### 2.2 சங்க இலக்கியத்தில் அகநூல்கள்

அகம் என்பது ஒத்த தலைவனும் தலைவியும் தமக்குள் நுகரும் இன்ப நுகர்ச்சியாகும். இது இத்தன்மையானது என்று எடுத்துக்கூற இயலாத தன்மை கொண்டது அகம் எனப்படும். சங்க இலக்கியத்தில் உள்ள எட்டுத்தொகையில் ஐந்தும், பத்துப்பாட்டில் மூன்றும் அகஇலக்கியமாகும்.

#### 2.2.1. நற்றிணை

எட்டுத்தொகையில் சிறப்பிடம் பெறும் நூல் நற்றிணையாகும். இது 'நல்' என்ற அடைமொழி பெற்றது. அகப்பொருள் கூறும் நூலுக்கு அமைந்த திணை என்னும் பெயரும் சேர்ந்து நற்றிணை என்று வழங்கலாயிற்று. இப்பாடல் அளவால் குறுகியும் மிக நீண்டும் அமையாத இடைநிலைப்பட்ட பாடல்களைக் கொண்டது. மொத்தம் நானூறு பாடலைக் கொண்டமையால் நற்றிணை நானூறு என்று இந்நூல் வழங்கப்படுகிறது.

அகச்சுவை நிரம்பிய பாடல்களில் மக்களின் அறவாழ்வு, மன்னர் கொடை, ஆட்சித்திறம், ஒருமைப்பாடு, உள்ளூறை, பழக்க வழக்கங்கள், வரலாற்றுச் செய்திகளும் நற்றிணையில் இடம்பெற்றுள்ளன. 'வல்வில் ஓரி', கொற்றச் சோழர், கொங்கர், பழையன் ஆகியவர்களின் குறிப்புகள் காணப்படுகின்றன. சிலப்பதிகாரத்துக் கண்ணகியை நினைவுபடுத்தும் விதமாக 'ஒரு முலையிழந்த திருமாவுண்ணி' குறித்து 216 ஆவது பாடல் கூறுகிறது.

#### 2.2.2. குறுந்தொகை

'நல்ல குறுந்தொகை' என்று பாராட்டப்படுகிறது. பெயருக்கு ஏற்பக் குறுகிய அடியான நான்கு முதல் எட்டு அடிகளைக் கொண்ட நானூறு

பாடல்களின் தொகுப்பாகும். எனவே குறுந்தொகை நானூறு என்ற பெயர் பெற்றது. இந்நூலுக்குப் பாரதம் பாடிய பெருந்தேவனார் முருகனைப் பற்றிப் பாடிய பாடல் கடவுள் வாழ்த்தாக அமைந்துள்ளது. இதன் தனிச் சிறப்பு உரையாசிரியர்கள் பலரால் மிகுதியான பாடல்கள் மேற்கோளாக எடுத்தாளப்பட்ட பெருமை பெற்ற நூலாகும். இவற்றுள் பரணர் பாடிய பாடல்களில் வரலாற்றுக் குறிப்புகள் காணப்படுகின்றன.

### 2.2.3. ஐங்குறுநூறு

மூன்றடி முதல் ஐந்தடி வரை அடிகளைக் கொண்ட பாடல்களின் தொகுப்பு ஐங்குறுநூறு. ஒவ்வொரு திணைக்கும் நூறு பாடல்கள் வீதம் ஐந்நூறு பாடல்களைக் கொண்டது. அவை முறையே பாடியவர், பாடலின் திணை விளக்கும் விதமாகப் பழம் பாடல் ஒன்று உள்ளது.

**மருதம் ஓரம்போகி நெய்தல் அம்மூவன்**
**கருதுங் குறிஞ்சி கபிலர் – கருதிய**
**பாலை ஓதலாந்தை பனிமுல்லை பேயனே**
**நூலை ஓது ஐங்குறு நூறு**[4]

### 2.2.4. கலித்தொகை

ஓசை நயமும் கவிதை அழகும் செறிந்த நூறு பாடல்கள் கொண்டது இந்நூல். மற்றத் தொகை நூல்கள் அகவற்பாவால் இயற்றப்பட்ட பாட்டுகளின் தொகுப்பாக விளங்க, கலித்தொகை ஓசை இனிமையும் தரவு, தாழிசை, தனிச்சொல், சுரிதகம் என்ற சிறப்பான அமைப்பையும் கொண்ட கலிப்பாக்களின் தொகுப்பாகத் திகழ்கிறது. அன்பின் ஐந்திணையுடன் கைக்கிளையும் பெருந்திணையும் காட்டுவது கலித்தொகையாகும். இதன் திணை வைப்புமுறை பாலைக்கலி, குறிஞ்சிக்கலி, மருதக்கலி, முல்லைக்கலி, நெய்தல்கலி என்ற முறையில் அமைந்துள்ளது.

சங்ககால மக்களது வாழ்க்கையின் போக்கும் நோக்கும் சிந்தனை நலங்களும் உலகியல் பார்வையும் இந்நூலால் தெளிவாகக் காட்டப்

பெற்றுள்ளன. மேலும் இந்நூல் நாடகப்பாங்கு அமைப்பைக் கொண்டுள்ளது.

### 2.2.5. அகநானூறு

இத்தொகை நூல் பதின்மூன்றடி முதல் முப்பத்தோர் அடி வரை கொண்ட நீண்ட பாடல்கள் கொண்டதால் நெடுந்தொகை எனப் பெயர் பெற்றது. இதில் முதல், கரு, உரிப்பொருள் மூன்றும் நிறைவுற அமைந்த பாங்கினைக் காணமுடிகிறது. வரலாற்றுச் செய்திகளாகிய புறச் செய்திகளும் மிகுதியாகக் கிடைக்கின்றன. இந்நூல் மூன்று பகுப்புடையது. அவை : களிற்றியானைநிரை, மணிமிடைப்பவளம், நித்திலக்கோவை என்பனவாகும்.

"இந்நூலில் வரலாற்றுச் செய்திகள் பல காணப்படுகின்றன. மாமூலர் பாடிய பாடல்களில் பாடலிப்புத்திரத்தைக் குறித்தும் அங்கு நந்தர்கள் (கி.மு.425 - 323) கங்கையில் மறைத்த நிதியம் குறித்தும் அறிகின்றோம். மோரியர் படையெடுப்பு (69, 281, 375) பல பாடல்களில் குறிப்பிடப்பட்டுள்ளது. பல பேரரசர், சிற்றரசர்கள் பற்றியும் கோசகர் பற்றியும் அறிகின்றோம். அன்னிமிஞிலி, ஆதிமந்தி கதையும் எடுத்துரைக்கப்பட்டுள்ளன."[5]

### 2.2.6. முல்லைப்பாட்டு

தலைவனைப் பிரிந்த தலைவி வினை முடிந்து தலைவன் திரும்பும் வரை ஆற்றியிருத்தல் முல்லை. அகப்பாட்டில் தலைவன் தலைவியர் பெயர் சுட்டப்படுவதில்லை இம்முறையைத் தழுவிய முதல் நூல்தான் முல்லைப்பாட்டு. இதன் ஆசிரியர் நப்பூதனார்.

#### 2.2.6.1. முதல் காட்சி

போர்க் காரணத்தால் பிரிந்த தலைவன் வரவை எண்ணி தலைவி காத்திருத்தல், அவன் வாராததனால் தலைவி கண்களில் வழியும் நீரும்

மேகங்கள் கூடியதனால் உண்டான மழை பொழிவதால் வடியும் நீரும் ஒப்பிடப்பட்டுள்ளன.

### 2.2.6.2. இரண்டாவது காட்சி

தலைவன் இருக்கும் பாசறை கடல்போல் பரந்த பாடிவீடு, அரசனின் தனியறை திரைச்சீலைகளுடன் காட்சி தருகின்றது. வில்நட்ட அம்புக்கூடு தொங்கவும் வேல்நட்டுக் கேடயம் சாத்தியும் அரண் நின்றன காவல் யானைகள். நெற்கதிரும் அதிமதுரத் தழையும் கரும்பும் கலந்த உணவை உண்ணாது நிற்கப் பாகர் வடமொழியில் அதட்டி உண்பித்தனர். இடைக் கச்சில் வாள் செருகிய மங்கையர் விளக்கினைத் தூண்டி நின்றனர். நாழிகை வட்டிலின் துணையால் பொழுதளந்தறிந்து காவலர் கூறினர். ஊமையரான மிலேச்சர் காவல் புரிந்தனர். மன்னனோ மாண்ட வீரரையும் மயங்கும் விலங்குகளையும்  எண்ணி, பாசறையில் இருந்தான்.

### 2.2.7. குறிஞ்சிப்பாட்டு

ஆரிய அரசன் பிரகதத்தனுக்குத் தமிழ்ச்சுவை உணர்த்த கபிலரால் பாடப்பட்டது குறிஞ்சிப்பாட்டாகும். இந்நூல் அகப்பொருள் பற்றியது. குறிஞ்சி நிலத்தின் களஒழுக்கமான அறத்தொடு நிற்றல் துறை சார்ந்த பாடலாகும்.  இது சிறுகதை போன்ற ஆற்றொழுக்க வருணனை உடைய பாடல். தலைவியின் தாயார் தலைவிக்கு ஏற்பட்ட நோய்க்கு மருந்தாக வேலனைத் தேடி வெறியாட்டு நிகழ்த்த ஏற்பாடு செய்கிறாள். அதற்குத் தோழி கூறுகையில், நானும் தலைவியும் தினைப்புலத்தைக் காவல் காக்கச் சென்றபோது யானையைக் கண்டு அஞ்சினோம். அப்போது அங்கு வந்த தலைவன் தன் அம்பால் யானையை நிலைகுலையச் செய்தான். அன்று முதல் தலைவியைப் பின் தொடர்ந்தான். அவன் மீது கொண்ட காதலால் தலைவி அறத்தொடு நிற்க நானும் தலைவிக்கு அறத்தொடு நின்றேன் எனத் தலைவியின் தாயிடம் எடுத்துரைப்பதாக அமைந்துள்ளது. இதில் 99 மலர்களின் பெயர்களைத் தொகுத்துக் கூறியுள்ளதால் இதனைப் பெருங்குறிஞ்சி எனக் கூறியுள்ளதை அறியமுடிகிறது.

### 2.2.8. பட்டினப்பாலை

பாலை நிலத்தின் உரிப்பொருள் பிரிதலும் பிரிதல் நிமித்தமுமாகும். காவிரிப்பூம்பட்டினத்தின் பெருவளத்தை விவரிப்பதால் பட்டினப்பாலை எனப்பட்டது. இதில் புகழப்படும் தலைவன் கரிகாலன். பாடியவர் கடியலூர் உருத்திரங்கண்ணனார். இப்பாடல் பாடியதற்காகப் பதினாறு நூறாயிரம் பொற்காசு பரிசு பெற்றதைக் கலிங்கத்துப்பரணி தெரிவிக்கின்றது. இதில் கரிகாலனின் பகைவர் அஞ்சினர் என்பதை,

**பல்லொளியர் பணியொடுங்கத்**
**தொல்லருவாளர் தொழில்கேட்ப**
**வடவர் வாடக் குடவர் கூம்பத் தென்னவன் திறல் கெட[6]**

எனும் வரிகளின் வழி அறியமுடிகிறது. வணிக நேர்மையும் போற்றப்பட்டதை அறியமுடிகிறது. காவிரிப்பூம்பட்டினம் இயற்கை வளம் செழித்ததையும் மக்கள் சிறப்புடன் வாழ்ந்ததையும் இப்பாடல் புலப்படுத்துகிறது.

### 2.2.9. நெடுநல்வாடை

தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனைப் பிரிந்து அரசமாதேவி துன்புறுகின்றாள். அவள் வருத்தம் நீங்குமாறு கொற்றவையைப் பரவுகின்றனர். இது இப்பாடலின் பொருள். அகத்திணை சார்ந்ததாக இருந்தாலும் பாடலில் ‘சுட்டி ஒருவர் பெயர் கொளப் பெறாஅர்’ என்ற தொல்காப்பிய விதி தவறி ‘வேம்பு தலை யாத்த நோன்காழ் எஃகம்’ எனக் கூறப்பட்டதால் சான்றோர் இதனைப் புறத்திணைப் பாடலாய் அமைத்தனர். பாடியவர் மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார் ஆவார்.

தலைவனைப் பிரிந்த தலைவிக்கு ஒரு பொழுது ஒரு யுகமாகத் தோன்றுகிறதாம். அதனால் தலைவிக்கு நெடுவாடையாயிற்று. போர் இயற்றும் தலைவனுக்கோ வினை முற்றும் நற்காலமாதலின் நல்வாடையாயிற்று. எனவே இப்பெயர் பெற்றது இதன் சிறப்பாகும்.

## 2.3. சங்க இலக்கியத்தில் புறநூல்கள்

சங்க இலக்கியங்கள் பண்டைத் தமிழரின் அரசியல், சமூகம், வீரம், கொடை, புகழ், நாகரிகம், பண்பாடு, பழக்கவழக்கங்கள் ஆகியவற்றைத் தெளிவாகக் காட்டும் காலக்கண்ணாடியாகும். அவற்றுள் எட்டுத்தொகையில் புறநானூறும் பதிற்றுப்பத்தும் புறப்பொருள் பற்றிய முழுமையான நூல்களாகும். பத்துப்பாட்டில் ஆற்றுப்படை நூல்களில் ஐந்தும் மதுரைக்காஞ்சியும் புறம் பற்றிய நூல்களாகும். புறம் என்ற சொல்லுக்குச் சென்னைப் பல்கலைக்கழகப் பேரகராதி வெளியிடம், அன்னியம், புறத்திணை, புறநானூறு, வீரம், பக்கம், முதுகு, புறக்கொடை, பின்புறம், புறங்கூற்று, அலர்மொழி, பட்சபாதம், இடம், இறையிலி நிலம் (வரி விதிக்கப்படாத நிலம்), ஏழாம் வேற்றுமை உருபுகளில் ஒன்று, திசை, காலம் என்ற பொருள்களைத் தந்துள்ளது. சங்க இலக்கியத்தில் புறப்பொருள் நானூற்றுத் தொண்ணூற்றெட்டுப் பாடல்களாகும்.

### 2.3.1. புறநானூறு

இந்நூல் புறப்பொருள் பற்றிய நானூறு பாடல்களைக் கொண்டுள்ளதால் புறநானூறு எனப் பெயர் பெற்றது. புறம், புறப்பாட்டு, புறம்பு நானூறு எனவும் அழைக்கப்படுகிறது. இந்நூல் 400 அகவற்பாக்களைக் கொண்டது. இந்நூலிற்குக் கடவுள் வாழ்த்துப் பாடியவர் பாரதம் பாடிய பெருந்தேவனார். இதில் உள்ள பாடல்கள் “சேர, சோழ, பாண்டியராகிய முடியுடை வேந்தர்கள், சிற்றரசர்கள், அமைச்சர்கள், சேனைத்தலைவர்கள், வீரர்கள், கடையெழு வள்ளல்கள், ஆண்பாற்புலவர், பெண்பாற்புலவர், மறக்குடி மகளிர் எனப் பலருடைய வரலாற்றுக் குறிப்பினையும் எடுத்தியம்புகின்றன”[7] என்கிறார் சி. செல்வத்தாண்டவர்.

புறநானூறு வெட்சி, கரந்தை, வஞ்சி, காஞ்சி, நொச்சி, தும்பை, பாடாண், வாகை, பொதுவியல், கைக்கிளை, பெருந்திணை எனும் பதினொரு திணைகளை உள்ளீடாகக் கொண்ட புறவிலக்கியமாகும்.

உழிஞைத் திணைப்பாடல் மட்டும் புறநானூற்றில் இடம் பெறவில்லை. இந்நூலில் உள்ள பாடல்களால், அக்கால மக்களுடைய பழக்க வழக்கங்கள், மொழிநடை, நாகரிகக் கருத்துகள், சமய வாழ்க்கை, கலை வளர்ச்சி, மன்னர்களின் கொடை, வீரம், புகழ் முதலியவற்றை நன்கு அறியலாம். தொகை நூல்களுள் தமிழர்களின் வாழ்க்கை, வரலாற்றை அறியப் பேருதவி செய்யும் நூலாக இதனைக் கூறலாம்.

### 2.3.2. பதிற்றுப்பத்து

சேரமன்னர்களைப் பற்றிப் புகழ்ந்து பாடிய தொகை நூல் இது. ஒவ்வொரு மன்னனைப் பற்றியும் பத்துப்பாடல்கள் வீதம் பத்துச் சேர மன்னர்களைப் பற்றி வெவ்வேறு புலவர்கள் பாடியிருப்பது தனிச் சிறப்பாகும். முதற்பத்தும் இறுதிப்பத்தும் கிடைக்கப்பெறவில்லை. இதற்கும் பழைய உரை ஒன்று உண்டு. பாடல்களின் முடிவில் துறை, வண்ணம், தூக்கு (இசை), பாடலின் பெயர் ஆகியவை குறிக்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு பாடலுக்கும் அதில் வரும் சிறப்புடைய தொடரொன்றால் பெயர் இடுவது குறிப்பிடத்தக்கது ஆகும்.

பதிற்றுப்பத்து அந்தாதித் தொடையால் ஆகியுள்ளது ஒருதனிச்சிறப்பாகும். ஒவ்வொரு பத்தின் இறுதியிலும் பதிகம் ஒன்றுண்டு. பத்தின் வரலாற்றைக் கூறுவது பதிகம் ஆயிற்று. அது பாடினோர் பெயர், பத்துச்செய்யுட்களின் பெயர், பாடிய புலவர், பெற்ற பரிசில், அரசர் பெயர், அவர் ஆண்ட கால அளவு முதலானவற்றைத் தெரிவிக்கிறது. பிற்காலத்தில் கல்வெட்டுக்களில் இடம் பெறும் மெய்க்கீர்த்திகளின் போக்கில் இது அமைந்துள்ளது.

பதிற்றுப்பத்துப் பாடல் மன்னர்களைத் தனித்தனிப் பாடலாகப் பாடி மகிழ்விக்காமல், பத்துப்பத்தாகப் பாடும் மரபு தோன்றிய போதே இலக்கிய வகையாக்கம் கிளைக்கத் தொடங்கியது. இப்பாடலில் சேர நாட்டு வருணனை மிகுதி; இவை சேரமன்னர்களின் ஆற்றலையும் வீரத்தையும் இன்பச் சிறப்பையும் புகழ்ந்து வாழ்த்துவதை நோக்கமாகக்

கொண்டெழுந்தவையே. வெவ்வேறு புலவர்களால் பாடப்பட்டவையே ஆனாலும் இவை அனைத்துப் பாடல்களும் ஒரு நோக்கும் போக்கும் உடையவையாகக் காணப்படுகின்றன. இந்த உத்தி பின்னாளில் காப்பியம் தோன்றக் காரணமாயிற்று என்பதை அறியலாம்.

### 2.3.3. ஆற்றுப்படை நூல்கள்

பரிசில் பெற்ற ஓர் இரவலன் தன் எதிரே வரும் வறுமைப்பட்ட இரவலனை அழைத்துத்தான் பரிசில் பெற்று வந்த வள்ளலின் சிறப்பையும் வீரத்தையும் கொடைப் பண்பையும் விளக்கி, நீயும் சென்று பரிசில் பெறலாம் எனக்கூறி அங்குச் செல்வதற்குரிய வழிவகைகளைக் கூறி ஆற்றுப்படுத்துவதே ஆற்றுப்படையாகும். ஆற்றுப்படைக்கான தோற்றுவாய் தொல்காப்பியத்தில் காணப்படுகிறது. இதனை,

**கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்**
**ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றிப்**
**பெற்ற பெருவளம் பெறாஅர்க்கு அறிவுறீஇச்**
**சென்று பயனெதிரச் சொன்ன பக்கமும்**[8]

என்று வெளிப்படுத்துகிறது.

#### 2.3.3.1. திருமுருகாற்றுப்படை

திருமுருகாற்றுப்படை என்பது முருகக்கடவுளின் அருளைப் பெற்றவர் ஒருவர் அந்த அருளை நாடும் மற்றவர்க்கு வழிகாட்டுவதாக அமைந்தபாடல். இது 317 அடிகளைக் கொண்ட நெடும்பாட்டாகும். இது ஏனைய ஆற்றுப்படைகளிலிருந்து சில கூறுகளில் வேறுபட்டுள்ளது. அவற்றுள் முதன்மையானது பிற ஆற்றுப்படைகள் எல்லாம் ஆற்றுப்படுத்தப்படுபவர் பெயரால் அமைந்திருக்க, இது மட்டும் பாட்டுடைத்தலைவர் பெயரால் அமைந்துள்ளது. “சங்ககாலத்தில் ஒரு சமுதாய வழக்கு உண்டு. வெறியாட்டெடுப்போர் ‘முருகாற்றுப்படுத்தல்

உண்டு. ‘முருகாற்றுப் படுத்த உருகெழு நடுநாள்’ (அகம்.22) என இது கூறப்படும். முருகனைத் துன்பப்படுவோரிடத்தே ஆற்றுப்படுத்தி அவரைக் காக்குமாறு வேண்டுதல் அதன் பொருளாகும். அதன் அடிப்படையில் முகிழ்த்ததே இத்திருமுருகாற்றுப்படை என்ற நெடும்பாட்டு; பெயரளவில் தான் முருகனிடம் ஆற்றுப்படுத்துகின்றன”[9] என்று தமிழண்ணல் கூறுகிறார். அக்காலத்தில் இருந்த முருகன் கோயில்களைப் பற்றியும் வழிபாட்டு முறைகளைப் பற்றியும் அறிவிக்கும் குறிப்புகள் இதில் உள்ளன. இதில் அமைந்துள்ள இயற்கை வருணனைகளும் சிறப்பானவை.

முதல் பகுதியில் திருப்பரங்குன்றம் மலைக்கோயில் பற்றியும் அதைச் சூழ்ந்த இயற்கை வளம்பற்றியும் முருகன் திருக்கோலம் பற்றியும் சூரனுடன் செய்த போர் பற்றியும் விளக்கங்கள் உள்ளன.

இரண்டாம் பகுதியில் முருகனுடைய ஆறு திருமுகங்களின் குறிப்புகளும் பன்னிரண்டு கைகளின் செயல்களும் திருச்செந்தூர் என்னும் தலத்தின் சிறப்பும் விளக்கப்படுகின்றன.

மூன்றாம் பகுதியில் முருகனை வழிபடும் முனிவர்களின் பெருமையும் பழனியின் வழிபாட்டுக்கு வரும் மகளிரின் இயல்பும் கூறப்பட்டுள்ளன.

நான்காம் பகுதியில் திருவேரகம் என்னும் தலத்தில் வழிபடுவோரைப் பற்றிக் கூறப்பட்டுள்ளது.

ஐந்தாம் பகுதியில் மலைநாட்டு மக்கள் குரவைக் கூத்து ஆடிச் சேவிக்கும் முறைகள் முதலியன எடுத்துரைக்கப்படுகின்றன. இத்தலம் திருத்தணியாகவும் கொள்வோர் உண்டு.

இறுதியில் ஆறாம் பகுதியில் முருகன் எழுந்தருளும் இடங்களும் அவனிடம் சென்று அருள் பெறும் முறையும் பழமுதிர்ச்சோலையில் அருவியின் சிறப்பும் விளக்கப்படுகின்றன.

### 2.3.3.2. பொருநராற்றுப்படை

*பொருநராற்றுப்படை என்பது சோழன் கரிகாற் பெருவளத்தானை முடத்தாமக்கண்ணியார் பாடிய பாட்டு. இது 248 அடிகளைக் கொண்டது. பரிசில் பெற விழைந்த பொருநன் ஒருவனைப் பரிசில் பெற்று வந்த பொருநன் ஆற்றுப்படுத்துவதாக இதன் பொருள் அமைந்துள்ளது. பொருநரில் ஏர்க்களம் பாடுவோர், போர்க்களம் பாடுவோர், பரணி பாடுவோர் எனப் பலர் உண்டு. இது போர்க்களம் பாடும் பொருநரால் பாடப்பட்டதாகும்.*

*"வறுமையால் வாடிய அந்தக் கலைஞர்களின் இன்னலைப் போக்கிச் சோழ அரசன் உயர்ந்த ஆடைகளைத் தருவானாம். நூல் இழை சென்ற வழியைக் கண்ணின் பார்வை பின்பற்ற முடியாத அவ்வளவு நுண்மையானது என்றும், அரசனால் தரப்படும் பட்டாடை புகழப்படுகிறது"[10] என்று கூறுகிறார்.*

*பொருநன் விழா முடிந்ததும் அவ்வூரை விட்டு நீங்கி வேற்று ஊர் செல்வான். செல்லும்போது வழிப்பறிக் கொள்ளையர்கள் - கொள்ளையில் ஈடுபட்டவர்களைப் பொருநன் யாழை எடுத்து இனிய இசை எழுப்பினால் அந்தக் கொடியவர்களின் மனமும் மாறிவிடும் என்றும் அவர்கள் தம் கையில் எடுத்து வந்த கொலைக் கருவிகளையும் விலக்குமாறு இசையில் மயங்குவர் என்றும் சிறப்பாகப் பாடப்பெற்றுள்ளது. பாலையாழின் ஒன்பது உறுப்புகள் சித்திரம்போல் காட்டப்பட்டுள்ளன. பொருநனுடன் வரும் பாடினியின் அழகு தலைமுடி முதல் பாதம் வரை கேசாதி பாதமாக வருணிக்கப்பட்டுள்ளது. அரசனின் விருந்தோம்பும் பண்பு இந்நூலில் மிகவும் சிறப்பாகக் கூறப்படுகிறது.*

### 2.3.3.3. சிறுபாணாற்றுப்படை

*ஒய்மாநாட்டு நல்லியக் கோடனை இடைக்கழிநாட்டு நல்லூர் நத்தத்தனார் பாடியது. 269 அடிகளைக் கொண்ட ஆசிரியப்பாவால்*

அமைந்தது. பாணர்களில் யாழ்ப்பாணர், இசைப்பாணர், மண்டைப்பாணர் எனப் பல பிரிவுகளுண்டு. யாழ் கொண்டு பாடும் யாழ்ப்பாணனையே இந்நூல் குறிக்கின்றது. யாழ்ப்பாணரில் சிறுபாணரை ஆற்றுப்படுத்தியமையால் சிறுபாணாற்றுப்படை என்று பெயர் பெற்றது. கடையெழு வள்ளல்களான பேகன், பாரி, காரி, ஆய், அதியன், நள்ளி, ஓரி என எழுவர் பூண்ட ஈகையைச் சிறப்பாகக் கூறுகிறது.

### 2.3.3.4. பெரும்பாணாற்றுப்படை

இந்நூல் 500 அடிகளைக் கொண்டது; பெரிய யாழை வாசிக்கும் பாணர்களைப் பற்றிக் கூறப்படுவதனாலும் இந்நூல் இப்பெயர் பெற்றது. காஞ்சியில் ஆண்டு வந்த இளந்திரையன் என்னும் அரசனுடைய ஆட்சிச் சிறப்பினைப் பற்றியும் அவனுடைய நாட்டின் இயல்பு பற்றியும் கடற்கரையைப் பற்றியும் இந்தப் பாட்டு விளக்குகிறது. இதில் கூறப்படும் இளந்திரையன் "வென்வேற்கிள்ளி என்னும் சோழ மன்னனுக்கும் பீலிவளை என்னும் நாகக்கன்னிக்கும் பிறந்த இளந்திரையன் என்று மணிமேகலை முழங்குகிறது"[11] என்று சி. பாலசுப்பிரமணியன் கூறுகிறார்.

உருத்திரன் மகன் கண்ணனார் ஐந்து நில மக்களின் வாழ்வையும் இதில் நன்கு புனைந்துள்ளார். மோர் விற்கும் ஆய்ச்சி, நெய்க்குக் கிடைக்கும் விலையைப் பொன்னாகப் பெறவும் விரும்பமாட்டாளாம்; எருமைக் கன்றுகளை வாங்கவே விரும்புவாள். மன்னனுக்குச் சிறிதளவு இடமும் மக்களுக்குப் பேரிடமும் தருவதால் பெரும்பாணற்றுப்படையைச் 'சமுதாயப் பாட்டு' மற்றும் பாணர்களின் வரலாற்றை உரைப்பதால் 'பாணாறு' எனவும் பெயர் பெற்றது என்றும் கூறப்படுகிறது.

### 2.3.3.5. மலைபடுகடாம் அல்லது கூத்தராற்றுப்படை

பல்குன்றக் கோட்டத்துச் செங்கண் மாத்துவேல் நன்னன்சேய் நன்னனை இரணியமுட்டத்துப் பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனார் 583 அடிகளாகிய ஆசிரியப்பாவில் பாடியுள்ளார். இதற்குக் 'கூத்தராற்றுப்படை'

என்ற பெயரும் உண்டு. பரிசில் பெற்ற கூத்தன் ஒருவன் எதிர்ப்பட்ட இரவலனாம் மற்றொரு கூத்தனை ஆற்றுப்படுத்துவதாய் அமைந்த பாடல் இது. ஆற்றுப்படைப் பாடல்களிலேயே அடி எண்ணிக்கையில் மிகப் பெரியது. இந்நூல் 'மலைபடுகடாம்' எனக் காரணக்குறியும் பெற்று மதங்கொண்ட யானை முழங்குவது போல், மலையில் கேட்கும் ஓசைகளை எல்லாம் 56 அடிகளில் தொகுத்துக் கூறி 'மலைபடு கடாஅம் மாதிரத்து இயம்ப' (348) என வருவதால் இப்பாட்டு மலைபடுகடாம் என்று பெயர் பெற்றது எனலாம்.

இந்நூலில் நன்னன் நாட்டிற்குச் செல்லும் வழியின் தன்மை, இடைவழியில் உண்ணக்கிடைக்கும் உணவுப்பொருள்கள், மன்னன் கொடை, நாட்டின் பெருமை, மலை வளம், சோலையின் அழகு முதலியன சிறப்புறக் கூறப்படுகின்றன. நன்னன் முன்னோர் பெருமை, சிவன் அருள், நன்னனின் நவிரமலை, சேயாறு அவனது நாளோலக்கப் பொலிவு முதலியனவும் விளக்கமாக இப்பாட்டில் கூறப்பட்டுள்ளன. இசை வாத்தியமான பேரியாழின் வருணனை கூறப்பட்டுள்ளது. இதன் சிறப்புக் காட்சிகளைத் தொகுத்துச் சொல்லிப் பின்னர் ஒவ்வொன்றாக விரித்துக் கூறும் திறன் இவ்வாற்றுப்படைக்கே உரிய அரிய செய்தியாகத் தெரிகிறது. இந்த நூல் சொல்லாட்சிச் சிறப்பிலும் சிறந்து விளங்குகிறது.

### 2.3.4. மதுரைக்காஞ்சி

பத்துப்பாட்டில் மிகப்பெரியது 782 அடிகள் கொண்டது மதுரைக்காஞ்சியாகும். இது பெயருக்கேற்றாற்போல் மதுரை நகரை 354 அடிகளால் வருணித்துள்ளது. ஒருவர் ஒருநாள் காலையில் தொடங்கி மறுநாள் விடியல் வரையில் நகரத்தைச் சுற்றிவந்து தான் கண்டவற்றை முறைப்படக் கூறுவதுபோல் அமைக்கப்பட்டது. 'காஞ்சி' என்பது உலகின் நிலையாமையை வலியுறுத்துகிறது. தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனை வழிப்படுத்துவதாய் மாங்குடி மருதனாரால் பாடப்பட்ட பாடல் இது. 'பெருகு வளமதுரைக்காஞ்சி' எனப்

புகழப்படுகிறது. மதுரை நகரினை விளக்குவதால் 'கூடற்றமிழ்' என்று பெயர் பெற்றது.

### 2.4. பண்டைய தமிழ்ப் போர் நெறிகள்

பண்டைய தமிழரின் புறத்திணை ஒழுக்கத்தை இலக்கியங்களில் கூறிச்சென்றார்கள் புலவர்கள். அதன் திறத்தை இலக்கியங்களில் ஆய்ந்து, திணை, துறை பகுத்துத் தெளிவு படுத்தினர். அவ்விலக்கண அறிஞர் வரிசையிலேயே நமக்குத் தெரிந்த முதல் அறிஞராய்த் தொல்காப்பியர் திகழ்கின்றார்.

அடுத்து, பன்னிரு படலமும் புறப்பொருள் வெண்பாமாலையும் படைத்திட்ட அறிஞர்கள் ஆவர். வீரசோழியம், இலக்கண விளக்கம், தொன்னூல் விளக்கம் ஆகிய நூல்களை யாத்த வித்தகர்களும் உள்ளனர்.

இவற்றுள் பன்னிருபடலம் மறைந்திட்டதால் புறப்பொருள் வெண்பாமாலை பாடிய ஐயனாரிதனாரே புறப்பொருளுக்கென்று தனி இலக்கண நூல் செய்த பெருமை பெறுகிறார்.

தொல்காப்பியர் புறத்திணையியல் எனப் பெயரிட்ட புறப்பொருளைத் தொல்காப்பியத்தில் மூன்றாம் அதிகாரமான பொருளதிகாரத்தில் புறத்திணை என்ற இயலில் விளக்கியதை ஒப்ப, வீரசோழியப் புத்தமித்திரனார் பொருட்படலத்திலும் இலக்கண விளக்கத்து வைத்தியநாததேசிகர் தொன்னூல் விளக்கத்திலும் வீரமாமுனிவர் ஆகியோர் பொருளதிகாரத்திலும் புறப்பொருளைத் தத்தம் நூலின் ஒரு பகுதியாகவே விளக்கினர் என்பதை அறியமுடிகிறது.

#### 2.4.1. போர் விளக்கம்

மனிதனின் அடிப்படை உணர்வாக சண்டை அமைந்திருந்தது. மனிதன் தொடக்க காலத்தில் தன்னைத் தற்காத்துக்கொள்ள முற்பட்டபோதே சண்டை புரியத் தொடங்கினான். அவன் செய்த முதல்

சண்டை விலங்குகளோடும் பின்பு மனிதர்களோடும் அமைந்தது. பின்பு இதுவே நாளடைவில் போராக மாற்றம் பெற்றது. போர் என்பதன் பொருள் குறிக்கும் சொற்களாக "அமர், ஆகவம், ஆயோதனம், ஆர்ப்பு, இகல், இரணம், சமீகம், வெஞ்சமம், உடன்றல், உறழ்வு, எதிர், கணையம், கதனம், கலகம், காளையங்கம், குறும்பு, கூட்டம், சங்கரம், சங்கிராமம், சமம், சமரம், சமர், செறு, ஞாட்பு, தாக்கு, திறல் எனப் பல சொற்களால் குறிக்கப்பட்டுள்ளது"[12] என்று கூறுகிறது மதுரைத் தமிழ்ப் பேரகராதி. போர் என்பது மனித நேயமற்ற செயல்; உலகம் தோன்றிய காலம் முதலே மக்களிடையே போர்கள் இருந்து வருகின்றன. போர் அனைவருக்கும் பொது என்பதால் ஒரு சமுதாய நிகழ்ச்சியாகக் கருதப்படுகிறது. எனவே காலத்திற்கும் சூழ்நிலைக்கும் ஏற்பப் போரின் தன்மையும் மாறுபடுகிறது எனலாம். அப்போரானது "இரண்டு அல்லது இரண்டுக்கும் மேற்பட்ட நாடுகளிடையே வெளிப்படையாக பகைமையைத் தோற்றுவிக்கும் ஓர் அமைதிகெட்ட நிலையே போர்"[13] என்றும் கூறுவர்.

"போர் என்பது தவிர்க்க முடியாத ஒரு நிகழ்ச்சி என்றும் 'ஒருவனை ஒருவன் அடுதலும் தொலைதலும் உலகத்து இயற்கை' (புறம்.76) என்றும் கருதினர். போரின்றேல் வீரர்களின் சீர் வாடிவிடும் என்றும் படையின்றேல் மன்னன் சீர் வாடிவிடும் என்றும் கருதுவர் (நான்மணி.42), மன்னனுக்குரிய இன்றியமையாச் சின்னங்களில் படையும் வாளும் யானையும் குதிரையும் போருக்குரியன. முன்னோர்கள் போரில் ஈடுபட்டதை சில அறிஞர் பெருமக்கள் வெறுக்கவில்லை. 'மாறாகப் பிறன் ஆளும் நாடுகோள் மன்னர் தொழில்' (நான்மணி.83) என்று கருதிப் பாராட்டினர். 'பிறன் மண் உண்ணும் செம்மல்' (புறம்.20) என்றும் 'கொண்டி யுண்டித் தொண்டையோர் மருக' (பெரும்.31) என்றும் பாராட்டிக் கூறியுள்ளார்."[14]

### 2.4.2. போர் குறித்து அறிஞர்களின் கருத்துகள்

- பாசியலாளர் (Fascists) தவிர்க்க முடியாதது போர் என்றனர்.
- மார்க்சியலாளர் (Marxists) வருக்கப் போர் என்றும் உரைப்பர்.

- ஆர்னால்டு டாயின்பீ (Arnold Toynbee) போன்ற வரலாற்றாசிரியர்கள் போர் தவிர்க்க முடியாதது என்றும், பிறப்போடு தொடர்புடையது என்றும் கூறி, இந்துக்களின் ஊழ்வினைக் கருத்தோடு (Karma theory) தொடர்புபடுத்தி உரைப்பர்.

- டார்வின் (Darwin) முதலான கூர்தலறக் கோட்பாட்டினர் போரானது, தன்னை நிலைநிறுத்திக் கொள்ளும் உணர்வு (The instinct of self - preservation) தகுதியுடையவை நிலைபெறுதல் (Survival of the fittest) ஆகிய இரண்டு காரணங்களின் அடிப்படையில் நிகழும் என்பர்.

- சிக்மண்ட் பிராய்ட் (Sigmund Freud) முதலான உளவியலாளர் தன்னைத்தானே காத்துக்கொள்ள வேண்டும் (Instinct of self perservation) என்ற மன இயல்பே போருக்குக் காரணம் என்று கூறுவர்.

- அண்ணல் காந்தியடிகள், “போரும் அமைதியும்” புகழ் உருசிய எழுத்தாளர் டால்ஸ்டாய் (Tolstoy) முதலானோர் போர்ச்செயல் குற்றமுடையது; பாவகரமானது என்று கருதுகின்றனர்.

- ஐக்கிய நாடுகள் அவை என்னும் அமைப்பு, போர்கள் வீண் செலவினை ஏற்படுத்துவன எனக் கருதி, போரினைத் தவிர்க்க முனைகின்றது.

- கவிஞரும் பேராசிரியருமான இன்குலாப் எழுதிய “குறிஞ்சிப் பாட்டு” நவீன நாடகப்பனுவலில் கபிலர் பாரிமகளிருக்கு இரங்கிய உருக்கமான தகவல்களை இக்கால உலக நடப்புக்கேற்ப உணர வைத்திருப்பார். போர் ஏற்படுத்தும் கடுமையான விளைவுகளைச் சாடும் உரையாகும் இது.

- *அமெரிக்க ஆவணப்பட இயக்குநர் மைக்கேல் மூர், வளைகுடாப் போர் உள்ளிட்ட சமகாலப் போர்களை எதிர்த்துப் போராடியவர்களில் முக்கியமானவர். அண்மைய அமெரிக்கக் குடியரசுத் தலைவர் தேர்தல்களில் இவருடைய ஆதரவு காத்திரமானது.*

- *எம்ஐடி (மசாசூஸெட்ஸ் இன்ஸ்டிடியூட் ஆஃப் டெக்னாலஜி) மொழியியல் பேராசிரியர் நோம் சாம்ஸ்கி அக்டோபர் 1967 ஆம் ஆண்டு அமெரிக்க அரசின் பெண்டகன், நீதித்துறை முன்பாக வியட்நாம் போருக்கு எதிரான ஆர்ப்பாட்டத்தில் ஈடுபட்டதால் சிறையில் அடைக்கப்பட்டார். அவருடன் சிறையறையில் கழித்த நார்மன் மெய்லர் கூறுவது : "ஒல்லியான - ஆனால், திறன்வாய்ந்த மனிதரான சாம்ஸ்கியின் பார்வை முழுதாக உறுதியானது; ஆளுமை நெறி பிறழாதவர்" என்ற தமது நூலில்* (The Armies of the Night) *குறிப்பிட்டுள்ளார்.*

### 2.4.3. போருக்கான காரணங்கள்

*தொல்காப்பியர் கருத்துப்படி ஆநிரை கவர்தலும் மீட்டலும் போருக்கான ஆயத்தமாகக் கருதப்பட்டன. பழங்காலத்தில் போர் தவிர்க்க முடியாததாகவும் காலத்தின் தேவையாகவும் அமைந்தது. போரின்போது மீட்ட ஆநிரைகளைத் தமக்கென வைத்திராது பிறருக்கு வழங்கியதை அறியமுடிகிறது. எனவே, மூவேந்தர்களான சேர, சோழ, பாண்டியர்களும் வள்ளல்களும் குறுநில மன்னர்களும் தமக்குள் பல போர்கள் செய்தனர்.*

*உணவு, உறையுள் என்பன மனிதனின் அடிப்படைத் தேவைகள். இத்தேவைகளை நிறைவேற்றுவதன் பொருட்டுப் போர்புரிந்தனர்.*

*தன்னாட்டில் வாழும் குடிகள் வளத்துடன் வாழ்வதற்குப் போதிய இடமின்மையாலும் இடம் சிறிதென்னும் ஊக்க மேலீட்டினாலும் வேந்தர் போர் தொடுப்பர் என்பதை,*

**வையங் காவலர் வழிமொழிந் தொழுகப்**

**போகம் வேண்டிப் பொதுச்சொல் பொறாஅது**

**இடஞ்சிறிது என்னும் ஊக்கந் துரப்ப**[15]

*என்ற பாடாண் திணைப் பாடலடிகள் உணர்த்துகின்றன.*

*தன்னுடைய நாட்டு எல்லையை விரிவு படுத்தவும் நாடுகளின் எல்லைகள் சரியாக வரையறுக்கப்படாமையால் நாடுகளுக்கு இடைப்பட்ட பகுதிகள் தொடர்பான எல்லைப் போர்கள் தோன்றக் காரணமாயிற்று என்றும் கூறப்படுகிறது. மேலும்,*

- *தலைமைப்பண்பு காரணத்திற்காகப் போர்புரிந்தனர்.*
- *அரசுரிமை யார்க்கெனும் சிக்கலுக்காகப் போர் புரிந்துள்ளனர்.*

*அரசுரிமைக்குத் தடை ஏற்படும் பொழுதும் போர் நிகழ்வதுண்டு. உருவப்பஃறேர் இளஞ்சேட்சென்னியின் மகன் கரிகாற்பெருவளத்தான் பகைவரின் காவலினின்று தப்பிச் சென்று அரசுரிமையைப் பெறுவதற்காகப் போர் புரிந்தான் எனப் பட்டினப்பாலை (220 - 227) மற்றும் பொருநராற்றுப்படை (130 - 138) வாயிலாக அறியலாம்.*

*இளவரசர் தமக்கு முறையாக வரும் அரசுரிமையை வேந்தர் தருமுன்னரே, ஆட்சியுரிமை பெறுவதற்குப் போர் மேற்கொண்டனர் என்பதை,*

**தொன்றுஉறை துப்பின் நின் பகைஞரும் அல்லர்**

**அமர்வெம் காட்சியொடு மாறுஎதிர் எழுந்தவர்**

**நினையும் காலை நீயும் மற்றவர்க்கு**

**அனையை அல்லை அடுமான் தோன்றல்**

**பரந்துபடு நல்லிசை எய்தி மற்றுநீ**

**உயர்ந்தோர் உலகம் எய்திப் பின்னும்**

**ஒழிந்த தாயம் அவர்க்குரித் தன்றே**[16]

எனவரும் புறநானூற்று வஞ்சித் திணைப் பாடல் வரிகளால் புல்லாற்றூர் எயிற்றியனார் தெளிவுபடுத்துகிறார்.

மண்ணாசை காரணத்திற்காகப் போர்புரிந்தனர் என்பதை,

**எஞ்சா மண்நசை வேந்தனை வேந்தன்**

**அஞ்சுதகத் தலைச்சென்று அடல்குறித் தன்றே**[17]

எனத் தொல்காப்பிய நூற்பா உணர்த்துகின்றது. மேலும், மறப்பண்பு காரணத்திற்காகவும் பிறர் மீது ஆதிக்கம் செலுத்த வேண்டும் என்ற நோக்கத்திற்காகவும் தற்காப்பு எண்ணத்திற்காகவும் கோபம், பொறாமை முதலான காரணங்களுக்காகவும் போர் புரிந்துள்ளனர். போரில் இறந்தவர்க்கு வீர சுவர்க்கமுண்டு என்ற நம்பிக்கைக்காகவும் புகழ் பெறவேண்டும் என்ற காரணத்திற்காகவும் போர்புரிந்தனர் என்பதை அறியமுடிகிறது.

### 2.4.4. போரில் தவிர்க்கப்படுபவர்கள்

போரின் தொடக்கத்தில் பகைவர் நாட்டிற் புகுந்து அவர்க்குரிய ஆக்களைக் கவர்ந்து வருதல் அக்கால மரபு என்கின்றனர். ஆனால் போரும் ஆக்களைக் கவர்வதிலேயே தொடங்கியது என்று கருத முடியவில்லை. மாடு என்றாலே செல்வம், பொன் என்ற பொருள்படுதல் காணலாம். மேலும், சமயச் சின்னமாகவும் அவை விளங்கின. இதனால் அவற்றுக்கு ஊறு விளைவித்தலாகாது என்று கருதி அவற்றைக் கவர்ந்து வந்ததாகப் பண்டுதொட்டுக் கூறி வருகின்றனர். பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப்பெருவழுதி என்பானை நெட்டிமையார் பாடாண் திணையில் பாடும் பொழுது,

**ஆவும் ஆனியற் பார்ப்பன மாக்களும்**

**பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்**

**தென்புல வாழ்நர்க் கருங்கடன் இறுக்கும்**

**பொன்போற் புதல்வர்ப் பெறாஅ தீரும்**

**எம்அம்பு கடிவிடுதும் நும்அரண் சேர்மினென**[18]

எனப் பகைநாட்டில் பறையறைவித்துப் பின் போர் தொடுத்ததாகப் பாராட்டிக் கூறியுள்ளார். “நச்சினார்க்கினியர் தமிழர் போர் முறையில் கடைப்பிடித்த வேறு சில முறைகளாகச் சிலவற்றைக் குறிக்கின்றார், கோழைகளையும் மயிர்குலைந்தோரையும் பெண் பெயர் கொண்டோரையும் படைக்கருவிகளைக் கை நழுவ விட்டவரையும் ஒத்த படை இடாதோரையும் தமிழர் வீரர் கொல்லார் என்கின்றார்.”[19]

“தமிழ் வீரர்கள் சமயத் துறையிலும் கலைத் துறையிலும் ஈடுபட்டவர்க்கு ஊறு செய்யாப் பண்பாட்டினர் என்பது செங்குட்டுவன் கங்கைக் கரையில் கனகவிசயரை வென்றபோது அஞ்சியோடிய வடபுலத்து வீரர் பலர் சடையுடையவராகவும் காவியுடை உடையவராகவும் சாம்பல் பூசிய உடம்பினராகவும் கையில் மயிற்பீலி ஏந்தியோராகவும் பாடும் பாணர்களாகவும் பல வாத்தியக் கருவிகளைத் தோளில் சுமந்தவராகவும் ஆடுகின்ற கூத்தர்களாகவும் வேடம் தரித்து ஓடியதாகச் சிலப்பதிகாரத்தில் இளங்கோவடிகளின் கூற்றில் உணரலாம்.”[20]

மேலும், கடுஞ்சினங் கொண்டு மதுரையைச் சீறியழித்த கண்ணகியும் தீக்கடவுளை ஏவும்போது பசு, பத்தினிப்பெண்டிர், மூத்தோர், குழவி என இவர்களைக் கைவிட்டுத் தீயோரை மட்டும் அழிக்குமாறு பணித்ததாக அடிகள் கூறுவார். எனவே, போரில் நல்லவர்கள் அழியலாகாதென்பது அறியப்படும்.

வீரர் அல்லாரையும் அடிபிறக்கிட்டவரையும் புண்பட்டோரையும் முதியவரையும் இளையோரையும் கொல்வது படை மடமாகக் கருதப்பட்டது. மன்னர்கள் இறந்தால் தோல்வியை ஒப்புக்கொண்டு போரை நிறுத்துதலும் இரவில் பொருதலைத் தவிர்த்தலும் மரபு. அஞ்சியொளிந்தவனைத் தாக்குதலும் முற்றுகையிட்டபோது வெளியே வராது நெடுங்காலம் மக்கள் துயருறுமாறு உள்ளே கிடத்தலும் அறமற்ற செயல்களாகக் கருதப்பட்டுள்ளன.

**2.5. புறத்திணைப் பாகுபாடு**

இயற்கையிலேயே மிக்க வலிமை பெற்ற ஒருவன் குறைந்த வலிமை பெற்ற தன்னோடு வாழும் பிறரைப் பாதுகாத்தல் தன் கடன் என்று கொள்வதற்கு மாறாக அவர்தம் வலியற்ற நிலையையும் தன் வன்மையையும் பயன் கொண்டு அம்மிகப்பலரை அத்தனியொருவன் ஆட்டிப்படைக்கத் தொடங்கிய அத்தொல்லுலகக் காலத்தில் தோற்றம் கொண்டதே இப்போர் என்று சான்றோர் கூறியுள்ளனர்.

தொடக்கத்தில் இவ்வாறு தோற்றங்கொண்ட போரை போர்க்கள அடிப்படைக்காரணம் கருதி ஏழாக வகைப்படுத்தி விளக்கியுள்ளனர். அவை, வெட்சிப்போர், வஞ்சிப்போர், உழிஞைப்போர், தும்பைப்போர், வாகைப்போர், காஞ்சிப்போர், பாடாண்போர் என்று ஏழாகக் கூறுகின்றனர்.

பன்னிரு படலமும் அதனைத் தழுவிய புறப்பொருள் வெண்பாமாலையும் தொல்காப்பியரினின்றும் வேறுபட்டுத் திணைப்பகுப்பை வெட்சி, கரந்தை, வஞ்சி, காஞ்சி, நொச்சி, உழிஞை, தும்பை, வாகை, பாடாண், கைக்கிளை, பெருந்திணை, பொதுவியல் எனப் பன்னிரண்டாக மொழிகின்றன.

வீரசோழியமோ, பன்னிரண்டு திணைகளில் கைக்கிளை, பெருந்திணை என்ற இரண்டொழித்துப் பத்தே எனப்பகுக்கிறது. தொல்காப்பியத்தை ஒப்பித் திணை வகுத்த இலக்கண விளக்கம், திணைகள் ஏழே என்று சுட்டினும் ஒழிபியலுள் பன்னிருபடலம் கூறிய பொதுவியல், கைக்கிளை, பெருந்திணை என்ற திணைகளையும் அடக்கிக் கூறுகின்றது.

இவ்வாறு புறத்திணைப் பாகுபாடுகள் பலபட மொழியப் பெறுவதால் புறத்திணை பாகுபாடு இலக்கணநூலுக்கு ஏற்ப மாறுபடுவதை அறியலாம்.

**2.5.1 பாகுபாட்டின் அடிப்படை**

"அகத்திணைப் பாகுபாட்டிற்கு அடிப்படை காதலே ஆகும். ஆண், பெண் நெஞ்சங்களிடையே நிகழ்கின்ற ஒழுக்க வீறுகளே காதற்கிளைகளாக, திணைகளாக விளக்கப் பெற்றன. அதுபோலப் புறத்திணைப் பகுப்பிற்கு அடிப்படையானது வீரமே என்று தமிழ்க் காதல் ஆசிரியர் வ.சுப.மாணிக்கனார் கூறுகிறார்."[21]

புறத்திணைகளுள் வெட்சி, கரந்தை, வஞ்சி, காஞ்சி, நொச்சி, உழிஞை, தும்பை என்பவை முழுக்க முழுக்க வீரந்தெறிக்கும் போர்த்திணைகளாம். வாகைத்திணையும் வீரத்தை ஒரு கூறாக வீறுடன் கொண்டுள்ளது. பாடாண் திணையும் அத்தகைய பேறு உடையதேயாகும். எனவே, இத்திணைகள் இரண்டும் போர்த்திணைகள் என்று கூறப்படுகின்றன.

மேலும், ஐயனாரிதனார் பொதுவியல் திணையிலும் வீரக்குறிப்புத் துறைகள் வகுத்துள்ளார். இங்ஙனமாகப் புறத்திணையின் அடிச்சுவடாக வீரம் பொலிவதால் வீரமே புறத்திணைக்கு அடிப்படை எனலாம்.

அப்படியாயின், புறத்திணை என்ற பெயருக்கு மாறாக வீரத்திணை அல்லது போர்த்திணை என்றல்லவோ பெயர் சூட்டியிருப்பர் பெரியோர். மேலும், "புறத்திணை புறம், புறப்புறம், அகப்புறம் எனும் மூன்று பிரிவுகளை உள்ளடக்கியதாகும். இதில் புறம், புறப்புறம் என்ற இரு பிரிவுகளை வெண்பா மாலையார் குறிப்பிடுகின்றார். அகப்புறம் என்ற பிரிவை அறிஞர் உ.வே.சா. குறிப்பிடுகின்றார்."[22] எனவே, புறத்திணை வீரத்தோடு தொடர்புடைய அகப்புறப் பிரிவையும் கொண்டமையால் புறத்திணைப் பாகுபாட்டிற்கு வீரம் மட்டும் அடிப்படையன்று என்பது புலனாகின்றது.

தொல்காப்பியரும் ஏழு அகத்திணைகள் ஏழு புறத்திணைகள் எனப் பகுத்து விளக்கியுள்ளார். எனவே, அகத்திணைப் பாகுபாடே புறத்திணைப் பாகுபாட்டிற்கு அடிப்படையாயிற்று என்று இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும் கருதுகின்றனர்.

அகத்திணையும் புறத்திணையும் ஒப்புமை உடையன என்ற கருத்தினராய் அகத்திணையியலின் இறுதியில் புறத்திணை பற்றியும் புறத்திணையியலின் தொடக்கத்தில் அகத்திணை குறித்தும் நூற்பாக்களில் கூறியுள்ளார் தொல்காப்பியர். அவை,

**புறத்திணை மருங்கின் பொருந்தின் அல்லது**
**அகத்திணை மருங்கின் அளவுதல் இலவே**
**அகத்திணை மருங்கின் அரில்தப உணர்ந்தோர்**
**புறத்திணை இலக்கணம் திறப்படக் கிளப்பின்**[23]

என்பனவாம். தொல்காப்பிய நூற்பாக்கள் வைப்பு முறையும் இயல்களின் அமைப்பு முறையும் அகத்திணை, புறத்திணை இவற்றின் தொடர்பை வலியுறுத்துகின்றன. மேலும், 'வெட்சி தானே குறிஞ்சியது புறனே' என்ற தொல்காப்பியத் திணை விளக்கங்கள் வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி, பாடாண் என்ற ஏழு புறத்திணைகள் நிரலே முற்படக் கிளைத்த குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை, பெருந்திணை, கைக்கிளை என்ற ஏழு அகத்திணைகளுக்குப் புறனாம் என்பதைத் தெளிவுறுத்துகின்றன.

### 2.5.1.1. வெட்சித்திணை

வெட்சி என்பது நிரைகவர்தலாகும். யாரும் அறியாது எதிர்நாட்டவரின் பசுக்கூட்டத்தைக் கொண்டுவருவது. இது அகத்துறையான குறிஞ்சிக்குப் புறனானது. வெட்சிக்கான இலக்கணத்தைத் தொல்காப்பியம் கூறுவது,

**வேந்து விடுமுனைஞர் வேற்றுப்புலக் களவின்**
**ஆதந்து ஓம்பல் மேவற்றாகும்**[24]

என்பது குறிஞ்சிப் புறத்து வெட்சித்திணை விளக்கமாகும். குறிஞ்சிக்களவு போன்று வெட்சியிலும் யாமத்தில் யாரும் அறியாது ஆநிரைக் களவு போற்றப்படுகின்றது. வெட்சித் திணையைப் போர் தொடக்கத் திணையாக

அறிஞர்கள் கருதினர். மேலும், ஒரொப்புமை கிட்டும். குறிஞ்சிக்களவு ஏனைய முல்லை இரங்கற்கும் அடிப்படையானதோர் அன்புணர்ச்சியை அழகுற நெஞ்சில் பதித்தல்போல, வெட்சியின் போர்த்தொடக்கம் பிற திணைகளுக்குரிய நாட்டுக் காவலுக்கும் மதிற்காவலுக்கும் மறக்காவலுக்கும் வெற்றி மேவலுக்கும் உரிய மற உணர்ச்சியை எழுப்பக் கால்கோள் விழா நடத்துகின்றது எனலாம். எனவே போருக்கான தொடக்கமாகத்தான் கருதப்பட்டிருக்க வேண்டும். வெட்சித் துறைகள் 14 ஆகும். ஆநிரை கவர்வதால் எழும் துறைகளைக் கூறி மீட்பதால் நிகழ்கின்ற 21 துறைகளாக வகுத்துக் கூறியுள்ளார். அவற்றுள் ஒன்றான பாக்கத்து விரிச்சி என்பது நற்சொல் கேட்டலைக் குறிக்கும். இதனை நிமித்தம் பார்த்தல் என்பர்.

### 2.5.1.1.1. நிமித்தங்கள்

பண்டைக் காலத்தில் வேந்தர்களும் மறவர்களும் போருக்குப் புறப்படுமுன் விரிச்சி கேட்டல் மரபு. விரிச்சி என்பது நற்சொல் எனப்படும். போருக்குச் செல்லும் முன் தூய மலர்களை நெல்லுடன் தூவிக் கைதொழுது வணங்கி விரிச்சி கேட்டு நிற்பர் என்பதை,

**நெல்நீர் எறிந்து விரிச்சி ஓர்க்கும்**
**செம்முது பெண்டின் சொல்**[25]

என்ற புறப்பாட்டு விளக்குகிறது.

**படையியங்கு அரவம், பாக்கத்து விரிச்சி**[26]

என்ற தொல்காப்பிய வெட்சித் திணை அடிகளும் எடுத்தியம்புகின்றன.

### 2.5.1.1.2 உன்ன நிலை

பண்டைய வேந்தர்கள் விரிச்சி கேட்பதோடு மட்டுமில்லாமல், உன்ன மரத்தைக் காண்பது வழக்கம். நிமித்தம் பார்க்கும் மரங்களுள் உன்ன மரமும் ஒன்று.

**உடல் வேந்து அடுக்கிய உன்ன நிலையும்**[27]

காண்பவர்க்கு வெற்றி கிடைக்குமாயின் தழைத்தும், தோல்வி நேருமாயின் வாடியும் காணப்படும். எனவே, வேந்தரும் மறவரும் நிமித்தம் பார்த்துப் போருக்குச் சென்றுள்ளனர் என்பதை அறிய முடிகிறது. சில வேளைகளில் வீரர்கள் உன்ன மரம் கரித்துக் காட்டிய வழியும் போருக்குச் சென்றனர் என்பது அம்மறவர்களின் மறமேம்பாடே காரணம். அவ்வாறு உன்னத்துப் பகைவனாக செல்வக் கடுங்கோ வாழியாதன் திகழ்ந்தான் என்று பதிற்றுப்பத்தின் வாயிலாக அறியமுடிகின்றது.

### 2.5.1.2. வஞ்சித்திணை

வஞ்சி என்பது மண்ணாசைக்காக நடக்கும் போராகும். இது அகத்திணையான முல்லையது புறமானது. இதனை,

**வஞ்சி தானே முல்லையது புறனே**
**எஞ்சா மண்நசை வேந்தனை வேந்தன்**
**அஞ்சு தகத்தலைச் சென்று அடல்குறித் தன்றே**[28]

என்கிறது தொல்காப்பியம். முல்லைப் புறத்திற்கு வஞ்சியின் விளக்கம் இது. முல்லைத்திணை கற்பின் சிறப்பைப் பாடுவதாம். களவினையே காலமெல்லாம் விரும்பும் தலைவனின் போக்கைத் தலைவி எதிர்த்துக் கற்பு நெறிகாட்டி வெற்றி கொண்டதன் விளக்கமே முல்லைத் திணை; அதன் மறுதலைத் திணையாம் வஞ்சி. மாற்றானின் மண் வெளவி இன்பம் பெற விரும்புந் தலைவனை எதிர்த்தலை உரிப்பொருளாகக் கொண்டுள்ளது.

வஞ்சிப்போர், மண் ஆசை காரணமாக நிகழும் போராம். ஆகவே அப்போர் இருநாடு எல்லைப் படைகளுக்கு இடையே நடைபெறுவதாகும். இதன் துறைகள் பதிமூன்றாகும்.

#### 2.5.1.2.1. காவல் மரத்தினை அழித்தல்

பண்டைத் தமிழர்கள் காவல் மரம் நாட்டையும் மக்களையும் காப்பாற்றும் என நம்பினர். அதனால், அம்மரத்தைக் காவல் மரம் என

அழைத்தனர். பழந்தமிழ் வேந்தர்கள் ஒவ்வொருவரும் தம் நாட்டின் எல்லைப் பகுதியில் ஒரு குறிப்பிட்ட மரத்தைக் காவல் மரமாக வளர்த்துப் பாதுகாத்தனர். "வேங்கை, புன்னை, வேம்பு முதலிய மரங்களைத் தமிழ் வேந்தர் வெற்றியைக் குறிக்கும் மரங்களாக வைத்துப் போற்றி வந்தனர். இம்மரம் வழிபடுவதற்கு உரிய மரமாகக் கருதப்பட்டது. இம்மரத்தினை வீரர் இரவு பகலாகக் காத்து வந்தனர். இதனால் இம்மரம் 'கடிமரம்' எனப்பட்டது. கடிமரம் சில அரசரால் தலைநகரில் மட்டும் தனிமரமாகவும் சிலரால் சோலைதோறும் தனிமரமாகவும் வளர்க்கப்பட்டதாகத் தெரிகிறது"[29] என்கிறார் அரங்க.இராமலிங்கம்.

வேந்தர் தம் பகைவர்களின் காவல் மரத்தை வெட்டுவது வீரமாகவும் கொள்ளப்பட்டது. அதே போல் பகைவரின் வெட்டுதலுக்கு ஆட்படாமல் காவல் மரத்தைக் காப்பது மானமுடைய வேந்தர்களின் கடமையாகவும் கருதப்பட்டது. தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் தன் பகைவரின் காவல் மரத்தை உணர்த்தும் பாடல்,

**கூர்நல் அம்பின் கொடுவில் கூளியர்**
**கொள்வது கொண்டு, கொள்ளா மிச்சில்**
**கொள்பதம் ஒழிய வீசிய புலனும்;**
**வடிநவில் நவியம் பாய்தலின், ஊர்தொறும்**
**கடிமரம் துளங்கிய காவும் நெடுநகர்**
**வினைபுனை நல்இல் வெவ்எரி இனைப்ப**[30]

என வடித்துக் கூராக்கப் பெற்ற கோடாரி பாய்வதால் ஊர்தோறும் சோலைகளில் அமைந்த காவல் மரங்கள் நிலைகுலைந்தன என்று கல்லாடர் எடுத்துரைக்கிறார்.

காவல் மரத்தில் விளைந்த கனியினை உண்டதற்காக ஒரு பெண் கொலைத்தண்டம் பெற்றதைப் பரணர் பாடலில் நன்னன் வரலாறு உணர்த்தும். இவற்றிலிருந்து காவல்மரம் வேந்தரின் அடையாளமாகும். இருந்தும் குடை, மாலை, படை முதலியவற்றைச் சுட்டும்

தொல்காப்பியனார் காவல் மரத்தைச் சுட்டாமல் சென்றது எண்ணத்தக்கது எனலாம்.

### 2.5.1.3. உழிஞைத்திணை

உழிஞை என்பது மாற்றான் மதிலை வளைத்தலைக் குறிக்கும். இது அகத்திணையான மருதத்திற்குப் புறம்பானது. இதனை,

**உழிஞை தானே மருதத்துப் புறனே**
**முழுமுதல் அரணம் முற்றலும் கோடலும்**
**அனைநெறி மரபிற்று ஆகும் என்ப[31]**

எனத் தொல்காப்பியம் விளக்கம் தருகிறது. மாற்றான் அரணை முற்றுகையிட்டு முடிவில் கைக்கொள்ளல் இத்திணையின் குறிக்கோள் என்று கூறுகிறது.

“கோடல் என்பதை அகத்தோன் செயலாக்கி முற்றுதலைப் புறத்தோன் செயலாகக் கூறி இரண்டு ஒழுக்கங்களை இத்திணைக்கு உரியன என உரையாசிரியர் கூறுகின்றார்”[32] என்பதை அறியலாம்.

அகத்திணை மருதத்தில் தலைவன் வாயில் வேண்டத் தலைவி மறுத்தல்போல, உழிஞையில் புறத்தோன் வாயிற் கதவு திறக்குமாறு வேண்ட அகத்தோன் கதவடைத்து வாயில் மறுக்கின்றான். மருதத்தின் உரிப்பொருளில் ஊடலும் தொக்கி நின்றது. வள்ளுவர், ஊடல் கூடலின் முன் நடக்கின்ற விளையாட்டு என்பதை,

**ஊடுதல் காமத்திற் கின்பம் அதற்கின்பம்**
**கூடி முயங்கப் பெறின்[33]**

என வரும் பாடல் வரிகள் தெளிவுபடுத்துகின்றன. இவ்வகைக் கருத்தும் மதிலை முற்றல் மட்டும் உழிஞையன்று வெற்றி கொள்ளலுமே என்பதை விளக்குகிறது. இதன் துறைகள் எட்டாகும். இதன் எதிர் செயலாக 12 துறைகளையும் குறிப்பிடுகிறார்.

#### 2.5.1.3.1. நாள் பார்த்து வாளும் குடையும் புறப்படுதல்

*போர் மேற்செல்லும் வேந்தன் கொற்றக் குடையையும் வாளையும் முறையே நல்ல நாளில் புறத்தே அனுப்புவது மரபு. இதனை,*

**குடையும் வாளும் நாள் கோள் அன்றி**[34]

*எனும் தொல்காப்பிய உழிஞைத் திணை அடிகள் எடுத்தியம்புகின்றன. வாள் முதலான படைக் கருவிகளைப் போரற்ற காலத்தில் மாலையிட்டு அலங்கரித்தலும் உண்டு.*

**இவ்வே, பீலி அணிந்து, மாலைசூட்டிக்**
**கண்திரள் நோன்காழ் திருத்தி, நெய் அணிந்து**
**கடியுடை வியள்நக ரவ்வே; அவ்வே**[35]

*என்னும் புறநானூற்றுப் பாடல் வரிகள் எடுத்துரைக்கின்றன.*

*நன்னாளில் வேந்தர் போர் தொடங்குவர். திருமாவளவன் நல்ல நாளில் வாளையும் குடையையும் முரசையும் போக்கியதை,*

**செருவெங் காதலிற் றிருமா வளவன்**
**வாளுங்குடையு மயிர்க்கண் முரசும்**
**நாளொடு பெயர்ந்து நண்ணார்ப் பெறுகவிம்**
**மண்ணக மருங்கினென் வலிகெழு தோள்**[36]

*என்றும், வடநாட்டு மன்னரை வெல்லும் பொருட்டு நல்ல நாளில் சேரன் செங்குட்டுவன் வாளையும், குடையையும் வெளிப்போக்கியதை,*

**மறமிகு வாளு மாலைவெண் குடையும்**
**புறநிலைக் கோட்டப் புரிசையிற் புகுத்திப்**
**புரைதீர் வஞ்சி போந்தையிற் றொடுப்போன்**[37]

*என்றும் இளங்கோவடிகள் உரைப்பர். பண்டைய வேந்தரிடம் நாள் பார்க்கும் பழக்கம் இருந்ததை அறியமுடிகிறது.*

### 2.5.1.3.2. படைச்செலவு

*பகைவர் நாட்டின் மீது படையெடுத்துச் செல்லும் வேந்தன் தன் அடையாளப்பூவைச் சூடிப் படையை அழைத்துச் செல்வான். அவ்வாறு சென்ற படையினைப் புறநானூற்றுப் பாடல் காட்டுகிறது. இதனை,*

**தலையோர் நுங்கின் தீஞ்சேறு மிசைய,**
**இடையோர் பழத்தின் பைங்கனி மாந்தக்,**
**கடையோர், விடுவாய்ப் பிசிரொடு சுடுகிழங்குநுகர,**
**நிலமலர் வையத்து வலமுறை வளை,**
**வேந்துபீ டழித்த ஏந்து வேல் தானையொடு**[38]

*வேந்தனின் படைகள் தலை, இடை, கடை, என வரிசை முறைப்படிச் சென்றதையும் முன்னால் சென்ற படைவீரர்கள் பனம் நுங்கினை உண்டனர் என்றும் இடைச் சென்றவர்கள் பனம்பழத்தை உண்டதையும் இறுதியில் சென்றவர் கிழங்கினைச் சுட்டுத் தின்றனர் என்றும் ஆலத்தூர் கிழார் எனும் புலவர் எடுத்துரைக்கிறார்.*

### 2.5.1.3.3. அரண் முற்றுகையிடுதல்

*பழந்தமிழ் வேந்தர்கள் மேற்கொள்ளும் போர் இருநிலைகளில் நடைபெற்றது. அவை பரந்த இடத்தில் இரு பகை வேந்தர்களும் நேருக்கு நேர் நின்று போர் புரிவது ஒரு நிலை. மற்றொன்று கோட்டைக்குள்ளே பாதுகாப்பாக இருந்து கொண்டு போரிடுவது. இதன் காரணமாக எதிர்த்து வந்த வேந்தர் அரணை அழித்துக் கோட்டையைக் கைப்பற்றுவர். அதனால் பழந்தமிழ் வேந்தர் மதிலை, வலிமையுடனும் அரணைப் பாதுகாப்புடனும் அமைத்தனர் என்பதை,*

**நிலவரை இறந்த குண்டு கண் அகழி,**
**வான்தோய்வு அன்ன புரிசை, விசும்பின்**
**மீன் பூத்தன்ன உருவ ஞாயில்**

**கதிர்நுழை கல்லா மரம்பயில் கடிமிளை**

**அருங்குறும்பு உடைத்த கானப்பேர் எயில்**[39]

எனும் பாடல் வரிகள் எடுத்துரைக்கின்றன. "வேந்தன் தங்கியிருக்கும் கோட்டையைச் சுற்றிப் பல அரண்கள் அமைந்திருக்கும். அவை முறையே மதிலரண், நிலவரண், நீரரண், காட்டரண், மலையரண் என ஐவகைப்படும்"[40] என்கிறார் அரங்க.இராமலிங்கம்.

### 2.5.1.4. தும்பைத்திணை

தும்பை என்பது அதிரப்போர் புரிதலைக் குறிக்கும். இது அகத்திணையான நெய்தலது புறம்பானது. இதனை,

**தும்பை தானே நெய்தலது புறனே**

**மைந்துபொருளாக வந்த வேந்தனைச்**

**சென்றுதலை யழிக்கும் சிறப்பிற் றென்ப**[41]

எனத் தொல்காப்பிய நூற்பா வரிகள் விளக்கம் தருகின்றன. தும்பை என்னும் திணை நெய்தல் என்னும் அகத்திணைக்குப் புறனாம். மைந்துபொருளாக வந்த வேந்தனைச் சென்று தலையழிக்கும் சிறப்பிற்று. எனவே, அழித்தலைக் குறிக்கோளாகக் கொண்டதாம்.

இருபெருவேந்தரும் ஒருகளத்துப் பொருதலின் அதற்கு இடம் காடும் மலையும் கழனியும் ஆகாமையானும், களம் மணலும் பரந்த வெளிநிலத்துப் பொருதல் வேண்டுதலானும் அந்நிலம் கடல்சார்ந்த வழியல்லது இன்மையானும் நெய்தற்கு ஓதிய எற்பாடு போர்த்தொழிற்கு முடிவாதலாலும் நெய்தற்குப் புறனாயிற்று எனலாம். இதன் துறைகள் பன்னிரெண்டாகும்.

#### 2.5.1.4.1. வீரரைப் போருக்கு அழைத்தல்

போர்க்காலத்தில் முரசு அறிவித்தோ அல்லது தூதுவரை அனுப்பியோ தன் நாட்டிலுள்ள வீரர்களைப் போருக்கு அழைத்ததை,

**வருகதில் வல்லே; வருகதில் வல்லென**

**வேந்துவிடு விழுத்தூ தாங்காங் கிசைப்ப,**

**நூலரி மாலை சூடிக் காலிற்**

**றமியன் வந்த மூதி லாளன்[42]**

*எனப் புறநானூறு தும்பைத் திணைப் பாடல் குறிப்பிடுகிறது. போருக்குப் புறப்படும் மறவன் நூலரிமாலையைச் சூடிக் காலால் நடந்து சென்று வேந்தனிடம் அடையாளப் பூக்களைச் சூடுவான். இவ்வாறு ஒவ்வொரு வீரனையும் போருக்கு அழைப்பது பண்டைய மரபாகும். மேலும், போருக்கு வருமாறு தண்ணுமையை முழங்கி வீரரை அழைப்பர்.*

**போர்ப்புறு தண்ணுமை யார்ப்பெழுந்து நுவல[43]**

*என்று பதிற்றுப்பத்து வரி குறிப்பிடுகிறது.*

### 2.5.1.4.2. போர் முரசு

*போர் முரசு அழிக்கப்படுமானால், அம்முரசுக்குரிய வேந்தன் தோற்றவனாகக் கருதப்படுவான். அதனால் பகைவரின் முரசைக் கைப்பற்றுவது வெற்றிக்கு அடையாளமாகக் கருதப்பட்டது. முரசின் சிறப்பைச் சான்றோர்கள் "போர் செய்து வருத்தாமல் தன் அச்சந் தரத்தக்க ஒலியினாலேயே பகைவரை வெருவியோட வைத்து வேந்தனுக்கு வெற்றியைத் தேடித்தந்த முரசு என்று குறிக்கப்பட்டது"[44] என அரங்க.இராமலிங்கம் கூறுகிறார்.*

*போரில் முரசு முழங்குவதோடு தடாரிப்பறை, போர்ப்பறை முதலியனவும் முழங்கின என்பதை,*

**வெம்போர் மன்னர் தெண்கிணை கறங்க[45]**

*எனத் தடாரிப்பறை முழங்கியதைப் பதிற்றுப்பத்து குறிப்பிடுகிறது.*

### 2.5.1.5. வாகைத்திணை

வாகை என்பது வென்றவனது சிறப்பினைக் கூறுவது. இது அகத்திணையான பாலைக்குப் புறம்பானது. இதனை,

**வாகை தானே பாலையது புறனே**

**தாவில் கொள்கைத் தத்தம் கூற்றைப்**

**பாகுபட மிகுதிப் படுத்தல் என்ப**[46]

என்ற பாடல் குறிக்கிறது.

பாலையாவது தனக்கென ஒருநிலமின்றி எல்லா நிலத்தினும் காலம் பற்றிப் பிறப்பது போல் இதுவும் எல்லாக் காலத்திலும் காலம் பற்றி நிகழ்வதாலும் ஒத்தார் இருவர் புணர்ச்சியின் நின்றும் புகழ்ச்சி காரணமாகப் பிரியுமாறு போலத் தன்னோடும் ஒத்தாரின் நின்றும் நீக்கிப் புகழப்படுவதாலும் அதற்கு இது புறனாயிற்று என உரையாசிரியர் கூறுகிறார். மேலும் "பாலை அறக்காதலை வளர்த்து மீண்டும் இன்பத்தை மிகுப்பதுபோல, வாகை மறக்காதலை வளர்த்து வெற்றி இன்பம் விளைவிக்கிறது"[47] என்று கூறியுள்ளதை அறிய முடிகிறது. இதன் துறைகள் பதினெட்டாகும்.

#### 2.5.1.5.1. பாசறை நிலை

வேந்தர்கள் போர் மேற்கொண்ட பொழுது பகை நாட்டில் நீண்ட நாள்கள் தங்க நேரிட்டது. வேந்தனும் அவனது படைகளும் தங்கிய இடத்தைப் பாசறை, கட்டூர் என இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. பாசறை என்பது போருக்கு முன்னும் பின்னும் களிறும் மாவும் தேரும் படைவீரரும் தங்கியிருக்கும் பரந்த இடப்பகுதி. இப்பாசறை பெரும்பாலும் ஊர்ப்புறத்தே இயற்கையாக அமைந்திருக்கும் அல்லது செயற்கையாக ஏற்படுத்தப்பட்டிருக்கும். இயற்கைச் சூழலில் மரம், செடி, கொடி, மலை முதலியவை சூழப்பெற்ற பரந்த இடப்பகுதியைப் பாசறையாக ஏற்படுத்திக் கொள்ளுதல் பண்டை வேந்தர் மரபு. இவ்வாறு இயற்கையாக அமைந்த

பாசறை பகைவர் கண்களுக்கு எளிதில் புலப்படாது. ஆனால் பகைவர் எளிதில் புலனாகும் வண்ணம் அமைந்திருக்கும்"[48] என்கிறார் கு.வெ.பாலசுப்பிரமணியன். இதனை, 'பார்வற் பாசறை' (84:5) எனப் பதிற்றுப்பத்துக் குறிப்பிடுகிறது. இதனைப் போன்றே 'பருந்துபறக் கல்லாப் பார்வை பாசறை' (231) என மதுரைக்காஞ்சி குறிப்பிடுகின்றது. இவற்றில் இருந்து பாசறை என்பது வேந்தனின் ஊர்ப்புறத்தே இயற்கையாய் அமைந்த அரணை உடையது; பகைவரின் கண்ணுக்கு எளிதில் புலப்படாதது; உள்ளிருப்போருக்குப் பகைவரைக் காட்டும் இயல்பினது; களிறும் மாவும் தேரும் படைவீரரும் ஒருங்கே தங்கியிருக்கும் அளவிற்குப் பரந்த இடத்தினையுடையது என அறிந்துகொள்ள முடிகின்றது.

இத்தகு பாசறையில் வேந்தனும் வீரரும் தங்கியிருப்பர். பகலில் போரிடுவதும் இரவில் போரை நிறுத்திப் பாசறையில் ஓய்வெடுப்பதும் பண்டையோர் போர் நெறி. இரவில் வேந்தன் துயில் கொள்ளாது, புண்பட்ட வீரர்களுக்கு ஆறுதல் கூறி வரும் பாசறை வாழ்வினை நெடுநல்வாடை கூறுகிறது.

**நள்ளென் யாமத்துப் பள்ளி கொள்ளான்**
**சிலரொடு திரிதரும் வேந்தன்**
**பலரொடு முரணிய பாசறைத் தொழிலே[49]**

எனச் சிறப்பித்தார் நக்கீரர். கட்டூர் என்பது பாசறையைக் குறிக்கும். வேற்றுப்புலம் சென்று பகை முடியுமட்டும் படைகள் தங்குவதற்காகப் புதிதாக ஏற்படுத்திய பாசறையைக் கட்டூர் எனப் பழந்தமிழ் இலக்கியங்கள் சுட்டுகின்றன. இது செயற்கையான சூழலில் உருவாக்கப்பட்டது. இதனை,

**வேறுபுலத் திறுத்த கட்டூர்[50]**

என்று பதிற்றுப்பத்து குறிப்பிடுகின்றது. பகைவர் நாட்டிடத்தே சென்றமைத்துத் தங்கிய பாசறை என்று ஔவை சு. துரைசாமிப் பிள்ளையும் வேற்று நாட்டிடத்தே சென்று தங்கிய பாசறை எனப் பதிற்றுப்பத்தின் பழைய உரைகாரரும் குறிப்பிடுகின்றனர்.

#### 2.5.1.5.2. மாலை சூட்டிப் புறப்படுதல்

*போருக்கெழும் வேந்தரும் தத்தமக்குரிய மாலையினைச் சூடுதல் மரபு. சேர, சோழ, பாண்டியருக்கு முறையே, பனை, ஆத்தி, வேம்பு ஆகிய மாலைகள் உரியன என்பார் தொல்காப்பியனார். மூவேந்தரும் தத்தமக்குரிய மாலையினை அணிந்து போர்புரிந்ததை,*

**இரும்பனம் போந்தைத் தோடுங் கருஞ்சினை**
**அரவாய் வேம்பின் அங்குழைத் தெரியலும்**
**ஓங்கிருஞ் சென்னி மேம்பட மிலைந்த**
**இருபெரு வேந்தரு மொருகளத் தவிய**
**வெண்ணித் தாக்கிய வெருவரு நோன்றாட்**
**கண்ணார் கண்ணிக் கரிகால் வளவன்**[51]

*எனப் பொருநராற்றுப்படை குறிப்பிடுகிறது. வேம்பின் தளிரைச் சூடிப் போருக்கெழுந்த தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனை இடைக்குன்றூர் கிழார் வாகைத் திணைப் பாடலில்,*

**மூதூர் வாயில் பனிக்கயம் மண்ணி**
**மன்ற வேம்பின் ஒண்குழை மலைந்து**
**தெண்கிணை முன்னர்க் களிற்றின் இயலி**
**வெம்போர்ச் செழியனும் வந்தனன்; எதிர்ந்த**[52]

*எனக் கூறியுள்ளார். மற்றொரு வாகைத் திணைப் பாடலிலும் நூலரி மாலையினைச் சூடித் தனியாய்ப் போருக்கு நடந்து செல்லும் மறவனை ஓரம்போகியார் பாடலில் அறியமுடிகிறது.*

#### 2.5.1.5.3. போர்ப்படைகள்

*போர் நடைபெறுவதற்கும் நாட்டைக் காப்பதற்கும் படைகள் பயன்பட்டன. "படையை வேந்தனின் திருமேனி எனச் செப்புகிறது சிலப்பதிகாரம்".*[53] *இக்கூற்றிலிருந்து படைகள் எவ்வளவு முக்கியத்துவம்*

வாய்ந்தவை என உணரலாம். பழந்தமிழ் வேந்தர்கள் நிலப்படை, கடற்படை ஆகிய இருவகைப் படைகளைப் பயன்படுத்தினர்.

நிலப்படை "காலாட்படை, குதிரைப்படை, யானைப்படை, தேர்ப்படை என்ற நான்கு வகையான படைகளை வேந்தர்கள் போரில் பயன்படுத்தினர். படைகளின் வகைகளாக மூலப்படை, கூளிப்படை, நாட்டுப்படை, காட்டுப்படை, துணைப்படை, பகைப்படை என ஆறு பிரிவுகளையுடையது"[54] என்கிறார் அரங்க.இராமலிங்கம்.

நால்வகைப் படைத்தலைவரும் சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியைச் சூழ்ந்திருப்பதை,

**புகர் நுதலவிர் பொற்கோட் டியானையர்**
**கவர் பரிக் கச்சை நன்மா வினர்**
**வடிமணி வாங்குருள**
**கொடிமிசை நற்றேர்க் குழுவினர்**
**கதழிசை வன் கணினர்**
**வாளின் வாழ்நரார்வமொ டூண்டிக்**
**கடலொலி கொண்ட தானை**[55]

என உலோச்சனார் புறநானூற்றில் குறிப்பிடுகிறார்.

### 2.5.1.5.4. போர்க் கருவிகள்

போரில் பயன்படுத்தப்படும் கருவிகள் போர்க்கருவிகள் எனப்படும். முத்தமிழ் வேந்தர்கள் "பெரிய பாறைகள், கூர்மையான கற்கள், கதை, கம்பு, கத்தி, ஈட்டி, வாள், கோடரி, வில், அம்பு முதலியவற்றைப் போர்க் கருவிகளாகப் பயன்படுத்தினர். தமிழகத்தின் மதில்களில் விற்பொறி, கருவிரல் ஊகம், கல்லுமிழ் கவண், பரிவுறு வெந்நெய், பாகடு குழிசி, காய் பொன்னுலை, கல்லிடு கூடை, தொடக்கு, ஆண்டலையடுப்பு, கவை, கழு, கைபெரூசி, சிரல், பன்றி, பணை, கோல், குந்து, வேல்"[56] முதலிய போர்க் கருவிப் பொறிகள் அமைந்திருந்ததாகக் கலைக்களஞ்சியம் கூறுகிறது.

*சங்க காலப் போர்க் கருவிகளுள் சிறப்பாகப் போற்றப்படுவது வேல். போர்க்களத்திலும் பாசறையிலும் வேலைப் புகழ்ந்து பாடும் மரபு உண்டு. போர்க் கருவிகளுள் வில், வாள் இவற்றைவிட வேலுக்கே முதன்மையான இடம் தரப்பட்டுள்ளது. போர் முனைக்கு எடுத்துச் செல்வதற்கு முன்பு வேலுக்கு வழிபாடு நடைபெற்றது என்பதை,*

**மங்கல மகளிரொடு மாலை சூட்டி**
**இன்குரல் இரும்பை யாழொடு ததும்பத்**
**தெண்ணீர்ப் படுவினும் தெருவினும் திரிந்து**
**மண்முழு தழுங்கச் செல்லினுமஞ் செல்லும்**[57]

*என்று புறநானூற்றுப் பாடல் வரிகள் எடுத்துரைக்கின்றன.*

### 2.5.1.6. காஞ்சித்திணை

*காஞ்சி என்பது நிலையாமையாகும். இது அகத்திணையான பெருந்திணைக்குப் புறம்பானது. இதனை,*

**காஞ்சி தானே பெருந்திணைப் புறனே**
**பாங்கம் சிறப்பின் பல்லாற்றானும்**
**நில்லா உலகம் புல்லிய நெறித்தே**[58]

*என்ற தொல்காப்பிய நூற்பா காஞ்சித் திணை நிலையாமை வெற்றியைக் குறிப்பிடுகிறது. இத்திணை அகப்பெருந்திணைக்குப் புறமாகும். "கிடைத்த காமவின்பம் நிலையற்றுப் போனதால் நெஞ்சம் தாங்காது வீங்கிய அயலாரின் பெருந்திணை நிலையாகிய, நிலையாமைக் குறிப்புடைய காஞ்சித் திணைக்கு ஒப்புமை உடையதாம் என்று உரையாசிரியர் குறிப்பிடுகின்றார்."[59] இளம்பூரணர் நிலையாமையினை மூன்றாகக் கூறுகிறார். அவை, இளமை நிலையாமை, செல்வம் நிலையாமை, யாக்கை நிலையாமையாகும். இதன் துறைகள் இருபதாகும்.*

### 2.5.1.6.1. வஞ்சினம்

*போருக்குச் செல்வதற்கு முன் வேந்தரும் வீரரும் வஞ்சினம் கூறுதல் மரபு. வேந்தர்களும் படைவீரர்களும் உரைக்கும் வஞ்சினம் போரில் வெற்றிபெற அவர்களை ஊக்கப்படுத்துவதற்கும் சிறப்பாகப் போரிடச் செய்வதற்குமாகும். படைவீரர்களின் நம்பிக்கை சிதையாமல் இருப்பதற்கும் வஞ்சினம் கூறப்பட்டது. அரசர்கள் தம் பகைவருக்கு வஞ்சினம் கூறுவதும் உண்டு. படைவீரர்கள் தங்களுக்குள்ளேயும் வஞ்சினம் கூறிக் கொள்ளுதல் உண்டு. இதனை,*

**எம்முன் தப்பியோன் தம்பியொடு ஒராங்கு**
**நாளைச் செய்குவென் அமரெனக் கூறி**[60]

*என்பதனால் தன் முன்னோனைக் கொன்றவனை அவன் தம்பியோடு சேர்த்துக் கொல்லப் போவதாக மறவன் வஞ்சினம் கூறுவதைப் புறநானூறு எடுத்துரைக்கிறது. இன்று இனிது உண்டு மகிழ்ந்தோம். நாளைப் பகைவர் மதிலைப் பாழ் செய்யாது விருந்துண்ணல் செய்யோம் என வஞ்சினம் உரைக்கும் வீரர் நிலையினை,*

**இன்றினிது நுகர்ந்தன மாயி னாளை**
**மண்புனை யிஞ்சி மதில்கடந் தல்ல**
**உண்குவ மல்லேம் புகாவெனக் கூறிக்**
**கண்ணி கண்ணிய வயவர் பெருமகன்**[61]

*என்று பதிற்றுப்பத்துப் பாடல் வரிகள் எடுத்துரைக்கின்றன.*

### 2.5.1.7. பாடாண்திணை

*பாடாண் என்பது பாடப்படும் ஆண் மகனது ஒழுகலாறுகளைக் கூறுவது. இது அகத்திணையான கைக்கிளைக்குப் புறம்பானது. இதனை,*

**பாடாண் பகுதி கைக்கிளைப் புறனே**
**நாடுங்காலை நாலிரண் டுடைத்தே**[62]

ஒருதலைக் காமமாகி வருவது கைக்கிளை அகத்திணையாம். அதன் புறமாகிய பாடாண் திணையில் தலைவன் பரவலும் புகழ்ச்சியும் வேண்டப் புலவன் பரிசில் வேண்டுதலின் ஒருதலைக் காமக் கைக்கிளைக்குப் பாடாண் திணை ஒப்புமை உடையதாயிற்று. இதன் துறைகள் இருபத்திநான்காகும்.

ஒரு மன்னனின் இசை, வலிமை, தண்ணொளி, வண்மை முதலியவற்றைப் புகழ்ந்து பாடுதல் பாட்டு ஆகும். பாடாண் என்னும் சொல்லுக்குப் பாடப்படுகின்ற ஆண்மகனுடைய ஒழுகலாறு என்பது பொருள். இது வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை என்றும் கூறுவார் ஆசிரியர் நச்சினார்க்கினியர்.

மேல் சொல்லப்பட்ட போர்களை இரண்டு வகையாகப் பிரிப்பர். அவை நின்று தாக்கும் போர்களை அழிவுப்போர்கள் என்றும் சென்று தாக்கும் போர்களை ஆக்கப்போர்கள் என்றும் கூறுவர். "நிரை கவரவும், நாடு கைப்பற்றவும், அரண் அழிக்கும், ஆற்றல் நிலை நாட்டவும் மேற்கொண்ட போர்கள் அழிவுப் போர்களாகும்"[63] என்று கூறியுள்ளதை அறியமுடிகிறது.

### 2.5.1.7.1 போர் அறம்

போர் தொடங்குவதற்கு முன்னர்ப் போர் பற்றிய செய்தியினை முரசறைந்து தெரிவிப்பர். அப்பொழுது ஆநிரை, பார்ப்பனர், பெண்டிர், பிணியுடையோர், மக்கட் பெற்றோர் முதலானவர்களுக்குப் போரினால் துன்பம் ஏற்படாதவாறு பாதுகாப்பர் எனப் புறநானூறு பாடாண் திணைப் பாடல் (9:1-6) எடுத்தியம்புகிறது. அறப்போர் மேற்கொள்வதைப் பண்டைத் தமிழர் மறமாகப் போற்றினர். மேலும், அறப்போர் என்பது "தமிழ் வேந்தர் கொடைமடம் படுதல் அல்லது படைமடம் படாத தன்மையினர் என்பதைப் புறநானூறு குறிப்பிடுகின்றது. இப்புறப் பாடலுக்கு உரை எழுதிய உ.வே.சாமிநாதையர் படைமடமென்றது, வீரரல்லாதோர் மேலும் புறமுதுகிட்டார் மேலும் புண்பட்டோர் மேலும் மூத்தோர் இளையோர் மேலும் செல்லுதல் இல்லை என்பர். போரில் ஈடுபடும் இருதிறத்து

*வீரர்களும் ஓர் இடத்தைத் தேர்ந்தெடுத்து அவ்விடத்தில் நேருக்கு நேர் நின்று போரிடுவர். இக்காலத்தில் நடை பெறுதல் போன்று திடீரென்று தாக்குதல், மறைந்து இருந்து தாக்குதல் போன்ற போர் முறைகள் அக்காலத்தில் இல்லை. பலர் அறிய வஞ்சினம் கூறிப் பொது இடத்தில் தம்மொடு ஒப்பாரிடம் மட்டுமே போரிடும் அறப்பண்பு வாய்ந்தவர்களாகப் பழந்தமிழர்கள் விளங்கினர்.''*[64]

**என்னைமுன் நில்லன்மின் தெவ்வீர் பலரென்னை**
**முன்நின்று கல்நின் றவர்**[65]

*என்னும் குறள் சங்க கால வீரரின் அறப்பண்பையும் மறப்பண்பையும் ஒருசேர விளக்குவதாக அமைந்துள்ளது.*

### 2.5.1.7.2. போரில் நடுநிலைமை

*போர்க்களத்தில் நடுநிலைமை என்பது நண்பர்கள், உறவினர்கள் என்று பாராட்டாமல் தம்மை எதிர்த்து வரும் பகை நாட்டு வீரர்களுடன் போர் செய்வதும் படைவீரர் ஒருங்கே கூடித் தங்கியிருந்த கடல் போன்ற பாசறையிலிருந்து நீங்கிச் சென்று வேல் முதலிய படைக் கருவிகளைக் கொண்டு தம்மவர் அயலவர் என்று பாராமல் போர் செய்தனர் என்பதை,*

**வெண்குடை மதியம் மேல்நிலாத் திகழ்தரக்**
**கண்கூடு இறுத்த கடல்மருள் பாசறைக்**
**குமரிப்படை தழீஇய கூற்றுவினை ஆடவர்**
**தமர் பிறர் அறியா அமர்மயங்கு அழுவத்து**[66]

*எனப் பெருந்தலைச் சாத்தனார் பாடலைப் பாடியுள்ளார். எதிர்த்து வருபவர் உறவினராய் இருப்பினும் தம் நாட்டு நலங்கருதிப் போரிட்டனர் என்பதிலிருந்து போர் வீரர்களின் நடுநிலைமை புலனாகின்றது.*

#### 2.5.1.7.3. போரும் புலவரும்

*பண்டைய தமிழ் வேந்தருக்கு வீர உணர்ச்சியினை ஊட்டிச் சிறப்பாகப் போரிடச்செய்வதற்கும் அறிவுரை கூறியும் தூது சென்றும் போரினைத் தடுத்து நிறுத்தவும் புலவர்கள் துணை நின்றனர்.*

*வேந்தர்கள் புலவர்களுக்கு உயர்ந்த இடம் தந்து போற்றினர். அதனால் புலவர்கள் வேந்தனின் ஆட்சியிலும் மக்கள் நலனிலும் ஆதரவுடன் செயல்பட்டனர். புலவர் பகைவர் நாடு அழியும் தன்மையை எடுத்துக்கூறி, வேந்தருக்கு வீர உணர்ச்சி ஊட்டினர் என்பதை,*

**வாடுக இறைவநின் கண்ணி ஒன்னார்**

**நாடுசுடு கமழ்புகை எறித்த லானே![67]**

*என்னும் பாடாண் திணையில் அமைந்த புறப்பாட்டில் உன் தலையில் உள்ள மாலை நீ பகைவர் நாட்டைச் சுடுகின்ற தீயினால் வாடுவதாக எனக் கூறிப் பாண்டியன் பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதியைக் காரிக்கிழார் புகழ்கிறார்.*

*தன் நாட்டின் மீது மற்றொரு மன்னர் படையெடுக்க முற்படுங்கால் அந்நாட்டரசன் புலவர்களைத் தூது அனுப்புவதும் உண்டு. புறநானூற்றுப் பாடலொன்று ஔவையார் அதியமானுக்காக, தொண்டைமானிடம் தூது செல்வதைத் தெரிவிக்கிறது.*

*போர் மேற்கொண்டு பாசறையிலேயே தம் வாழ்நாளைக் கழிக்கும் வேந்தருக்கு, இல்லறத்தை நினைவுபடுத்திப் போரை விரைவில் முடிக்கத் தூண்டுவர். இதனை,*

**பெருந்தகைக் கமர்ந்த மென்சொற் றிருமுகத்து**

**மணியிழை யரிவை காணிய வொருநாட்**

**பூண்க மாளநின் புரவி நெடுந்தேர்[68]**

*எனப் பெருங்குன்றூர்க்கிழார் குடக்கோ இளஞ்சேரல் இரும்பொறைக்கு அறிவுறுத்தியுள்ளதை அறியமுடிகிறது.*

## 2.6 புறப்பொருள் வெண்பாமாலை - திணைப்பகுப்பு

*அகத்திணைப் பகுப்பைப் புறத்திணைப் பகுப்பிற்கு ஒப்புமை கூறும் தொல்காப்பிய நெறியில் இருந்து பன்னிருபடலநெறி மாறுபடுகிறது. தொல்காப்பியம் வெட்சித் திணையை மன்னுறு தொழிலாகவே கருதப் பன்னிருபடலமோ,*

**தன்னுறு தொழிலே வேந்துறு தொழிலென்**
**றன்ன இருவகைத்தே வெட்சி[69]**

*என்று இருவகை வெட்சிகளை இசைக்கின்றது.*

*தொல்காப்பிய நெறி வெட்சி, உழிஞை என்று கூறிய திணைகளுக்கு மறுதலைத் திணைகளாக,*

**வெட்சியுங் கரந்தையும் தம்முன் மாறே[70]**
**வஞ்சியுங் காஞ்சியும் தம்முன் மாறே[71]**
**உழிஞையும் நொச்சியும் தம்முன் மாறே[72]**

*என்று பன்னிரு படலம், கரந்தை, காஞ்சி, நொச்சி என்ற திணைகளைச் சுட்டுகின்றது. மேலும், அகத்திணைக் காமத்திற்குரிய கைக்கிளை, பெருந்திணைகள் பன்னிருபடலத்தில் புறப்பொருளாகிவிட்டன. இவ்வாறு வேறுபட்ட கொள்கைகளை உடைய தொல்காப்பியரும் பன்னிரு படலமும் திணை மற்றும் துறைகளின் எண்ணிக்கையில் மாறுபடுகின்றன. இக்கருத்தாக்கமே புறப்பொருள் வெண்பாமாலை எழுதிய ஐயனாரிதனார் இடமும் காணப்படுகிறது. இவரும் புறத்திணைகளைப் பன்னிரு படலமாகத் தொகுத்துள்ளார்.*

*பன்னிரு படலத்தில் குறிப்பிட்டுள்ள வெட்சியைப் போன்று தன்னுறு தொழிலாகவும் மன்னுறு தொழிலாகவும் விளக்குகிறார்.*

தொல்காப்பியர் திணை வைப்பு முறைக்கும் புறப்பொருள் வெண்பாமாலையார் திணை வைப்பு முறைக்கும் மாறுபடுகிறது. திணைப்பகுப்பில் தொல்காப்பியர் காஞ்சித் திணையை பாடாண் திணைக்கு முன்வைக்கின்றார். ஆனால், புறப்பொருள் வெண்பாமாலையாரோ நொச்சிப் படலத்திற்கு முன் காஞ்சிப் படலம் வைத்துள்ளார். தொல்காப்பியர் குறிப்பிடும் காஞ்சித்திணை நிலையாமை குறித்தது. புறப்பொருள் வெண்பாமாலையார் வஞ்சிப் படலத்தின் எதிர் செயலாகக் காஞ்சிப் படலத்தைக் குறிப்பிடுகிறார். இவ்வாறே துறையிலும் தொல்காப்பியர் வெட்சியில் கூறிய குடிநிலை, பனம்பூ சூடல், வேப்பம்பூ சூடல், ஆத்திச்சூடல் முதலான துறைகளைப் பொதுவியலில் வைத்துள்ளார் எனச் சில இடங்களில் வேறுபடுகிறார்.

### 2.6.1. நடுகல்

தொல்காப்பியத்தில் திணையில் கூறப்பட்ட செய்தி புறப்பொருள் வெண்பாமாலையில் பொதுவியல் திணையில் நடுகல் அமைப்புப் பற்றிக் கூறுகிறது. போர்க்களத்தில் பகைவர் முன்னின்று விழுப்புண்பட்டு வீர மரணமடைந்த வீரர்களை நினைவுகூர அமைக்கப்பட்டதே நடுகல்லாகும். நடுகல்லில் வீரனின் பெயரும் பெருமையும் பெற்ற சிறப்புகளும் பொறிக்கப்பட்டன. பின்னர் இது வழிபடும் நடுகல்லாகவும் மாறியது. இதன் அமைப்பு முறையை,

**காட்சி கால்கோள் நீர்ப்படை நடுகல்**
**சீர்த்தகு மரபில் பெரும்படை வாழ்த்தலென்று**
**இம்மூன்று மரபில் கல்லொடு**[73]

என்று தொல்காப்பிய நூற்பா கூறுகிறது. நடுகல்லைத் தேர்ந்தெடுத்து நீராட்டுவர். நீராட்டிய கல்லை ஏற்ற இடத்தில் நட்டு வழிபடுவர்.

**புடைநடு கல்லின் நாட்பலி ஊட்டி,**
**நல்நீ ராட்டி, நெய்ந்நறைக் கொளீஇய**[74]

என்றும் போர்க்களத்தில் பொருதுபட்டு வீழ்ந்த வீரர்களின் பெயரும், பீடும் எழுதி மயிற்றோகை சூட்டி வழிபடுவர். இதனை,

**நல்அமர்க் கடந்த நாணுடை மறவர்**
**பெயரும் பீடும் எழுதி, அதர்தொறும்**
**பீலி சூட்டிய நிலை நடுகல்**[75]

என இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. நடுகற்களுக்கு மயிற்றோகை சூட்டி, துடியை அடித்து நெல்லால் ஆகிய கள்ளோடு செம்மறியாட்டுக் குட்டியைப் பலியிடுவர் என்று அகநானூறு கூறுகிறது.

இக்காலத்தில் வழக்கத்திலிருக்கும் மதுரை வீரன், குதிரை வீரன், முனியன், நொண்டி, இருளன், கருப்பன் முதலிய சிறு தெய்வங்கள் நடுகல்லின் உருமாறிய அல்லது வளர்ச்சி பெற்ற நிலைகள் என்றே கூறலாம். ஊர்மன்றங்களில் உள்ள கற்களில் கடவுள் உறைவதாக நம்பினர். அக்கற்களுக்கு வழிபாடுகளும் நடைபெற்றன.

இந்த நம்பிக்கையின் அடிப்படையில் நடுகல்லிலும் வீரனின் ஆவியிருப்பதாக நம்பி வழிபட்டனர். பழந்தமிழ் இலக்கியத்திலிருந்தும் மூன்று நிலையில் இறந்தவர்களுக்கு நடுகல் எடுக்கப்பட்டதைக் காணமுடிகிறது.

**தொகுப்புரை**

'சங்க இலக்கியம் காட்டும் போர் நெறிமுறைகள்' எனும் இந்த இயலின் வழி பெறப்பட்ட ஆய்வுக் கருத்துகள் தொகுப்புரையாக இடம்பெறுகின்றன.

- சங்க இலக்கியம் என்பது பதினெண்மேற்கணக்கு என்று கூறப்படும் பதினெட்டு நூல்களைக் கொண்டது. எட்டுத்தொகையில் ஐந்து நூல்களும் பத்துப்பாட்டில் மூன்று நூல்களும் என எட்டு நூல்கள் அகஇலக்கியங்கள் ஆகும். அவற்றுள் குறுந்தொகை பரணர்

பாடல்களில் வரலாற்றுக் குறிப்புகள் காணப்படுகின்றன. அகநானூற்றில் மிகுதியான வரலாற்றுச் செய்திகள் காணப்படுகின்றன.

- அகமா, புறமா எனும் சிக்கலில் உள்ளவை பரிபாடலும் நெடுநல்வாடையும் ஆகும்.

- புறஇலக்கியங்களான எட்டுத்தொகையில் இரண்டு நூல்களான புறநானூறும், பதிற்றுப்பத்தும், பத்துப்பாட்டில் ஆற்றுப்படை நூல்கள் ஐந்தும், மதுரைக்காஞ்சி ஒன்றுமாக மொத்தம் எட்டு நூல்களாகும். புறநானூற்றிலிருந்து சேர, சோழ, பாண்டியர் பற்றிய வரலாறு மற்றும் புலவர் வாழ்க்கையை அறியமுடிகிறது. மன்னர்களின் கல்வி, கொடை, தருக்கண் மற்றும் மக்களின் புறவாழ்க்கையைப் படம்பிடித்துக் காட்டுவது இவ்விலக்கியமாகும். இதில் புறத்திணைகள் பதினொரு திணை பற்றிய பாடல்கள் இடம்பெற்றுள்ளன. உழிஞைத் திணைப்பாடல் மட்டும் இடம்பெறவில்லை.

- பதிற்றுப்பத்தில் சேரமன்னர்களின் வீரதீரச் செயல்கள் இடம் பெற்றுள்ளன. ஒவ்வொரு பத்தின் இறுதியிலும் பதிகம் ஒன்றுண்டு. பத்தின் வரலாற்றைக் கூறுவது பதிகமாகும். இதற்குப் பழைய உரை ஒன்று உண்டு. பாடல்களின் முடிவில் துறை, வண்ணம், தூக்கு (இசை) பாடலின் பெயர் ஆகியவை குறிப்பிடப்பட்டுள்ளது.

- ஆற்றுப்படை நூல்களின் வழி அரசர்களிடையே நடைபெற்ற போர்கள் மற்றும் பாடல் பாடிய புலவனின் வாழ்க்கை நிலை, ஐவகை நிலங்களில் கிடைக்கும் உணவு வகைகளை அறியலாம். இது பயண இலக்கியமாகவும் திகழ்கிறது.

- புறநானூற்றின் வளர்ச்சியே மதுரைக்காஞ்சியாகும். இது நிலையாமையை உணர்த்தும் இலக்கியமாகத் திகழ்கிறது. உலகில் உள்ள நிலையற்ற பொருள்களைத் தேடுவதைக் காட்டிலும் நிலைத்த மதுரையின் மாண்பினையும் பாண்டியப் படையெடுப்புகளையும் அறியமுடிகிறது.

- புறம் பற்றி எழுந்த தனி இலக்கணமான புறப்பொருள் வெண்பாமாலை புறத்திணைகளைப் பன்னிரண்டாக விரித்துள்ளது.

- மனித நாகரிகத்தின் தொடக்கமே போராகத்தான் அமைகிறது. மனிதன் தொடக்ககாலத்தில் தன்னைத் தற்காத்துக்கொள்ள முற்பட்டபோதே போர்புரியத் தொடங்கினான். அவன் செய்த முதல் போர் விலங்குகளோடும் பின்பு மனிதனுடனும் அமைந்திருக்கிறது.

- அரசுரிமைக்காக உருவப்பஃறேர் இளஞ்சேட்சென்னியின் மகன் கரிகாற்பெருவளத்தான் பகைவரின் காவலினின்று தப்பிச் சென்று அரசுரிமையைப் பெறுவதற்காகப் போர் புரிந்தான் எனப் பட்டினப்பாலை, பொருநராற்றுப்படை மூலம் அறியலாம்.

- பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப்பெருவழுதி என்பானை நெட்டிமையார் பாடிய பாடலில் போரில் தவிர்க்கப்படுபவர்களான பசு, பார்ப்பனர், பெண்டிர், நோய்வாய்ப்பட்டோர், வயது முதிர்ந்தவர் மக்களை பெறாதீர் மீது என் அம்பு செல்லாது எனக் கூறியுள்ளார்.

- வெட்சித்திணை என்பது நிரைகவர்தலாகும். இது குறிஞ்சிக்குப் புறமானது. இதன் துறையான நிமித்தம் பார்க்கும் வழக்கம் உண்டு என்று (புறம்.280:6-7) போருக்குச் செல்லும்முன் தூய மலர்களை நெல்லுடன் தூவிக் கைதொழுது விரிச்சி கேட்டு நிற்பதைக் காணலாம்.

- வஞ்சித்திணை என்பது மண்ணாசைக்காக நடக்கும் போராகும். இது முல்லையது புறனானது இதன் துறையாகக் காவல் மரங்களை அழிப்பர் என்பது கல்லாடர் பாடலில் (புறம்.23:5-11) இடம் பெற்றுள்ளது.

- உழிஞைத்திணை என்பது மாற்றான் மதிலை வளைத்தலைக் குறிக்கும். இது அகத்திணையான மருதத்திற்குப் புறம்பானது. இதன் துறையாக நாள் பார்த்து வாளும் குடையும் புறப்படுதல் தொல்காப்பியப் பொருள் (நூ.69) உணர்த்தும். இது இலக்கியத்தில் திருமாவளவன் நல்ல

*நாளில் வாளையும் குடையையும் முரசையும் போக்கியதைப் புறம், சிலம்பு, வஞ்சிமாநகர் புக்க காதையில் கூறப்பட்டுள்ளது.*

- *படைச்செலவு என்னும் துறை பகைவர் நாட்டின் மீது படையெடுத்துச் செல்லும் வேந்தன் தன் அடையாளப் பூவைச் சூடிப் படையை அழைத்துச் செல்வர். அவ்வாறு சென்ற படையினை (புறம்.228) பாடல் வேந்தனின் படைகள் தலை, இடை, கடை என வரிசை முறைப்படிச் சென்றதையும் முன்னர் சென்ற படைவீரர்கள் பனம் நுங்கினை உண்டனர். இடைச் சென்றவர்கள் பனம் பழத்தை உண்டனர் இறுதியில் சென்றவர் கிழங்கினைச் சுட்டுத் தின்றனர் என்று ஆலத்தூர் கிழார் கூறுகின்றார்.*

- *தும்பைத்திணை என்பது அதிரப்போர் புரிதலைக் குறிக்கும். இது அகத்திணையான நெய்தலுக்குப் புறம்பானது. இதன் துறையாக வீரரைப் போருக்கு அழைத்தமையைப் பதிற்றுப்பத்து (பாடல் -84) வழி அறியலாம்.*

- *வாகைத்திணை என்பது வென்றவனது சிறப்பினைக் கூறுவது; இது அகத்திணையான பாலைக்குப் புறம்பானது. இதன் துறையான பாசறை நிலை என்பது வேந்தர்கள் போர் மேற்கொண்டபொழுது பகை நாட்டில் நீண்ட நாள்கள் தங்க நேரிட்டது. வேந்தனும் அவனது படைகளும் தங்கிய இடத்தைப் பாசறை, கட்டூர் என இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன.*

- *பாசறை என்பது மதுரைக்காஞ்சி 231 ஆவது வரியில் பார்வை பாசறை என்றும், பதிற்றுப்பத்து 84 ஆவது பாடலில் பார்வற் பாசறை என்றும், நெடுநல்வாடை பாசறைத் தொழிலே என்றும் கூறுகிறது. கட்டூர் என்பதைப் பதிற்றுப்பத்து (பாடல் - 68) வேறுபுலத்திறுத்த கட்டூர் என்கிறது.*

- படையை வேந்தனின் திருமேனி எனச் செப்புகிறது சிலப்பதிகாரம். இப்படை இரு வகைப்படும். அவை நிலப்படை, கடற்படை என்பவையாகும்.
- நிலப்படை என்பது காலாட்படை, குதிரைப்படை, யானைப்படை, தேர்ப்படை என்று நான்கு வகையான படைகளை வேந்தர்கள் போரில் பயன்படுத்தினர். இந்நான்கு வகைப் படைகளும் சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியைச் சூழ்ந்ததைப் புறப்பாடலில் உலோச்சனார் குறிப்பிடுகிறார்.
- போர்க்கருவிகளில் வேல் முதன்மை இடம் பெற்றுள்ளது. போர்க்களத்திலும் பாசறையிலும் வேலைப் புகழ்ந்து பாடும் மரபு உண்டு. போர்க் கருவிகளுள் வில், வாள் இவற்றைவிட வேலுக்கு முதன்மையான இடம் தந்தனர். போர் முனைக்கு எடுத்துச் செல்வதற்கு முன்பு வேலுக்கு வழிபாடு நடைபெற்றதைப் புறநானூற்றுப் பாடல் 332 எடுத்துரைக்கிறது.
- காஞ்சித்திணை என்பது நிலையாமையாகும். இது அகத்திணையான பெருந்திணைக்குப் புறம்பானது.
- போருக்குச் செல்வதற்கு முன் வேந்தரும் வீரரும் வஞ்சினம் கூறுதல் மரபு. வேந்தர்களும் படைவீரர்களும் வஞ்சினம் கூறுவர். இதனை புறநானூற்றுப் பாடல் 304 இல் தன் முன்னோனைக் கொன்றவனை அவன் தம்பியோடு சேர்த்துக் கொல்லப் போவதாக மறவன் வஞ்சினம் கூறுவதிலிருந்து அறியலாம்.
- பாடாண்திணை என்பது பாடப்படும் ஆண் மகனது ஒழுகலாறுகளைக் கூறுவது. இது அகத்திணையான கைக்கிளைக்கு புறம்பானது.
- போர்க்களத்தில் நடுநிலைமை என்பது உறவினர்கள் என்று பாராட்டாமல் தம்மை எதிர்த்து வரும் பகை நாட்டு வீரர்களுடன் போர் செய்வதும் படைவீரர் ஒருங்கே கூடித் தங்கியிருந்த கடல் போன்ற

*பாசறையிலிருந்து நீங்கிச் சென்று வேல் முதலிய படைக் கருவிகளைக் கொண்டு தம்மவர் அயலவர் என்று பாராமல் போர் செய்ததை புறம் - 294 இல் பெருந்தலைச்சாத்தனார் பாடியுள்ளார்.*

- *வீரமரணம் அடைந்தவர்களுக்கு நடுகல் வைக்கும் மரபு இருந்தது என்றும், நடுகல்லில் வீரனின் பெயரும், பெருமையும், பெற்ற சிறப்புகளும் பொறிக்கப்பட்டன என்றும் தொல்.பொருள் (நூ.63), அகம் (67), புறம் (329) உரைக்கிறது. தொல்காப்பியர் வெட்சித்திணையில் குறிப்பிடும் செய்தி புறப்பொருள் வெண்பாமாலையில் பொதுவியலில் இடம் பெற்றுள்ளது என்பது இந்த இயலில் எடுத்துக் கூறப்பட்டுள்ளது.*

**இயல் - இரண்டு**

**சான்றெண் விளக்கம்**

1. மு.வரதராசன், தமிழ் இலக்கிய வரலாறு, ப.42
2. தமிழண்ணல், புதிய நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு, ப.99
3. மேலது, ப.104
4. மேலது, ப.111.
5. ஜெயம் அ, தமிழ் இலக்கிய வரலாறு, ப.25.
6. பட்.பாலை, பா.274-276.
7. சி.செல்வத்தாண்டவர், புறநானூற்றுக் காட்சிகள், ப.2
8. தொல்காப்பியம், நூ.1037:3-6
9. தமிழண்ணல், புதிய நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு, பக்.121-122
10. மு.வரதராசன், தமிழ் இலக்கிய வரலாறு, ப.55
11. சி.பாலசுப்பிரமணியன், தமிழ் இலக்கிய வரலாறு, ப.61
12. மதுரைத் தமிழ்ப் பேரகராதி, இரண்டாம் பாகம், ப.802
13. கி. பாண்டுரங்கன், பண்டைத் தமிழர் போரியல் வாழ்க்கையும், தற்காலப் போர் நடவடிக்கையும், ப.87
14. அ. தட்சிணாமூர்த்தி, தமிழர் நாகரிகமும் பண்பாடும், ப.31
15. புறம்.8:1-3
16. புறம்.213:5-11
17. தொல்.பொருள், நூ.64:2-3
18. புறம்.9:1-5
19. அ. தட்சிணாமூர்த்தி, தமிழர் நாகரிகமும் பண்பாடும், ப.35
20. ச.வே.சுப்பிரமணியன், ஐம்பெருங்காப்பியங்கள் மூலமும் உரையும், ப.178.
21. வ. சுப. மாணிக்கம், தமிழ்க் காதல், ப.9
22. பொ.சுந்தரமகாலிங்கம், புறத்திணை விருந்து, ப.17
23. தொல். நூ.1001-1002

24. தொல். நூ.1003

25. புறம். 280:6-7

26. தொல்.பொருள், நூ.61:1

27. தொல்.பொருள், நூ.63:8

28. தொல். நூ.1007-1008

29. அரங்க.இராமலிங்கம், சங்க இலக்கியத்தில் வேந்தர்கள், ப.156

30. புறம்.23:5-11

31. தொல். நூ.1010 -1011

32. பொ. சுந்தரமகாலிங்கம், புறத்திணை விருந்து, ப.19

33. குறள்.1330

34. தொல்.பொருள், நூ.69

35. புறம்.95: 1-3

36. சிலம்பு. இந்திர விழவு ஊர் எடுத்த காதை, 90-93

37. சிலம்பு. வஞ்சி மாநகர் புக்க காதை, 44-46

38. புறம். 225:1-5

39. புறம். 21:2-6

40. அரங்க.இராமலிங்கம், சங்க இலக்கியத்தில் வேந்தர்கள், ப.165.

41. தொல். 1015 - 1016

42. புறம். 284:1-4

43. பதிற். 84:15

44. அரங்க.இரமலிங்கம், சங்க இலக்கியத்தில் வேந்தர்கள், ப.149.

45. பதிற். 90:44

46. தொல். 1019 - 1020

47. பொ. சுந்தரமகாலிங்கம், புறத்திணை விருந்து, ப.20

48. கு.வெ. பாலசுப்பிரமணியன், சங்க இலக்கியத்தில் புறப்பொருள், ப.68

49. நெடு. 186 -188

50. பதிற். 68: 2

51. பொருநர். 143-148

52. புறம். 79:1-4

53. அரங்க.இராமலிங்கம், சங்க இலக்கியத்தில் வேந்தர்கள், ப.169

54. மேலது, ப.170

55. புறம். 377:23-29

56. கலைக்களஞ்சியம் - தொகுதி எட்டு, ப.603

57. புறம். 332:5-8

58. தொல். நூ. 1023 - 1024

59. பொ.சுந்தரமகாலிங்கம், புறத்திணை விருந்து, பக்.20-21

60. புறம். 304:5-6

61. பதிற். 58:5-8

62. தொல். நூ.1026

63. கா. கோவிந்தன், பண்டைய போர்நெறிமுறைகள், ப.20

64. அரங்க.இராமலிங்கம், சங்க இலக்கியத்தில் வேந்தர்கள், ப.155

65. குறள்.771

66. புறம். 294:1-4

67. புறம். 6:21-22

68. பதிற்று. 81:30-3

69. யாப்பருங்கலவிருத்தி, நூ.96

70. மேலது.

71. மேலது.

72. மேலது.

73. தொல்.பொருள், நூ.63:19-21

74. புறம். 329:2-3

75. அகம். 67:8-10

### 3.0 சங்க இலக்கியத்தில் போர்

சங்க காலச் சமுதாயத்தில் போர் என்பது தலைமையும் முதன்மையும் பெற்றிருந்தது. சங்க காலத்தில் போர்ப் பண்பு மிகுந்து காணப்பட்டதைப் புறப்பொருள் இலக்கியங்கள் எடுத்துரைக்கின்றன.

**ஒளிறுவாள் அருஞ்சமம் முருக்கிக்**
**களிறெறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே**[1]

எனப் புறநானூற்றுப் பாடல், சங்க காலத்தில் வாழ்ந்த மறவர்களின் கடமையை எடுத்துரைக்கிறது. சங்க காலத்தில் மறக்குடி மறவர்கள், ஆற்றல் மிக்க வேந்தர்கள், வள்ளல்கள், சிற்றரசர்கள் ஆகியோர் போர் புரிந்துள்ளனர்.

பண்டைய வரலாற்றை அறிய இன்று கிடைத்துள்ள இலக்கியங்களும் கல்வெட்டுகளும் சான்றுகளாக உள்ளன. பிற்காலக் கல்வெட்டுகள் வாயிலாக நமக்குக் கிடைக்கும் வரலாற்றைவிட, சங்க இலக்கியத்தில் இடம்பெற்றுள்ள பாடல் கருத்துகள் வழி பெறப்பட்ட வரலாறே அளப்பரியது. எனவே சங்கப் பாடல்கள் வாயிலாகத் திணை அடிப்படையில் போர்கள் எவ்வாறு நடைபெற்றன என்பதை இதன்வழி அறியமுடிகிறது.

சேர, சோழ, பாண்டியர் புரிந்த போர்கள்; வடநாட்டு அரசர்களுடன் புரிந்த போர்கள்; குறுநிலமன்னர்கள் புரிந்த போர்கள் எனப் பலவகைப்பட்ட போர்களைப் பற்றிச் சங்கப் பாடல்களால் அறியமுடிகிறது. அதிலும் குறிப்பாகப் பண்டைத் தமிழ்ப் பேரரசர்களிலே புகழ் பெற்றவன் கரிகாலன். அவன் புகழ் அவன் காலத்தில் மட்டுமின்றி அது கடந்தும் நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்வது கண்டு தமிழார்வலர்கள்கூட வியப்பும் மலைப்பும் எய்துகின்றனர். இதற்குக் காரணம் வரலாற்று ஆராய்ச்சியாளர்கள் இலக்கியத்திலும் கல்வெட்டுகளிலும் காலமும் தேசமும் மொழியும் தொலைவாகும்தோறும் புகழ் வளர்வது கண்டு, அவர்கள் பழங்கால இலக்கியச் சான்றுகளை

*மட்டுமே வரலாற்று மெய்மை எனக்கொள்கின்றனர். பிற்காலக் கல்வெட்டுச் சான்றுரைகள் அனைத்தும் படிப்படியாக வளர்ந்த கற்பனை என வரலாற்றாராய்ச்சியாளர்கள் கருதுகின்றார்கள். "முதற் கரிகாலன் அழுந்தூரை ஆண்ட சென்னி மரபினனாக இருக்கலாம். இந்நுட்பமான ஆராய்ச்சியால், வெண்ணிக் குயத்தியாரால் பாடப்பட்டவன் முதல் கரிகாலன் என்பதும் அறியலாம். முதற் கரிகாலன் ஏறத்தாழ இரண்டு தலைமுறை முற்பட்டவன். அவன் காலம் ஏறத்தாழ கி.மு.120 - கி.மு.90 எனக் கொள்ளலாம்"[2] என்று இராசமாணிக்கனார் கூறுகிறார். "இரண்டாம் கரிகாலன் சங்க காலத்திலே, கி.மு.2 - ஆம் நூற்றாண்டின் முடிவில் மற்றொரு கரிகாலன் இருந்ததாகக் கொள்கின்றனர். இரு கரிகாலர்களையும் பற்றிய சங்க இலக்கியச் சான்றுகளையும் பிரித்துக் காட்டுவதுடன் 'வெண்ணி' அல்லது 'வெண்ணில்' என்ற இடத்தில் நிகழ்ந்த போர் பற்றிய குறிப்புகளையும் இருவேறு கரிகாலர்களால் ஆற்றப்பட்ட மூவேறு போர்கள்"[3] என்றும் விளக்கியுள்ளார் கா.அப்பாத்துரை. இவ்வாறு சோழனைப் பற்றிய அரிய, பெருங்கருத்துக்களை அறிய சங்ககாலத்துப் போர்கள் துணைபுரிவதுடன் திணை அடிப்படையிலான போர்ப் பகுப்பினையும் அறியமுடிகின்றது.*

### 3.1. வெட்சித் திணைப் போர்

*பகைவர் நாட்டு ஆநிரைகளைக் கைப்பற்றுவதும் பகைவர்கள் அவற்றை மீட்டுச் செல்லுதலும் வெட்சித் திணையில் நடைபெறுவதாகத் தொல்காப்பியம் கூறுகிறது. இதனை,*

**நறவும் தொடுமின்; விடையும் வீழ்மின்;**
**பாசுவல் இட்ட புன்காற் பந்தர்ப்**
**புனல்தரும் இளமணல் நிறையப் பெய்ம்மின்;**
**ஒன்னார் முன்னிலை முருக்கிப் பின் நின்று;**
**நிரையொடு வரூஉம் என்னைக்**
**குழையோர் தன்னினும் பெருஞ்சா யலரே[4]**

என்னும் வெட்சித் திணை, உண்டாட்டுத் துறையில் அமைந்த பாடலில் மதுவைப் பிழியுங்கள்; ஆட்டை வெட்டுங்கள்; பசுமையான பைந்தழை இடுங்கள்; சிறுமணலைப் பரப்புங்கள்; பகைவரை அழித்துப் பசுக்கூட்டத்துடன் வரும் என் தலைவனும் அவனுடன் வரும் இளம்வீரர்களும் களைப்படைந்துள்ளனர், எனவே உண்டாட்டு செய்க என்று மதுரைப் பேராலவாயார் பாடியுள்ளார். இதனைப் போன்று,

**ஏறுடைப் பெருநிரை பெயர்தரப் பெயராது**

**இலைபுதை பெருங்காட்டுத் தலைகரந்து இருந்த**

**வல்வில் மறவர் ஒடுக்கம் காணாய்**[5]

எனும் கரந்தைத் திணை, செருமலைத்தல் மற்றும் பிள்ளைப்பெயர்ச்சி என்னும் துறையில் அமைந்த பாடலில் கோடை பாடிய பெரும்பூதனார் கூறுகையில் காளைகளையுடைய பெரிய பசுக்கூட்டத்தை மீட்டு வருபவரை நோக்கி இப்போது உடன் போகாதீர். பெரிய காட்டில் வலிமையுடைய வில்வீரர் மறைந்து இருக்கின்றனர்; சென்றால் ஆநிரை மீட்பது கடினம் என்பதை அறிவுறுத்துவது புலப்படுகிறது.

### 3.2. வஞ்சித் திணைப் போர்

வஞ்சிப்போர் என்பது மண்ணாசைக்காக நிகழும் போர். இவ்வீரர்கள் வஞ்சிப் பூச்சூடி, பகைநாட்டின் மீது படையெடுத்துச் செல்வதால் வஞ்சித் திணையாயிற்று எனலாம்.

### 3.2.1. காரியாற்றுப்போர் II

“நலங்கிள்ளி, நெடுங்கிள்ளி ஆகியவர்க்கு அடுத்து இருந்த பெரிய அரசன் கிள்ளி ஆவான். மாவண்கிள்ளி அல்லது கிள்ளிவளவன் என்பவன் ஆட்சியின் பிற்பகுதியில் சேரரும் பாண்டியரும் மண்ணாசையால் உந்தப்பட்டுச் சோழ நாட்டின் மீது படையெடுத்தனர் என்றும் சோழன் தம்பியால் காரியாற்றில் மாற்றரசர் இருவரும் முற்றிலும் முறியடிக்கப்பட்டார்கள் என்றும் மணிமேகலைக் காப்பியம் நமக்குத் தெரிவிக்கிறது.

முதற்காரியாற்றுப் போரைப் போலவே இப்போரும் தமிழக வடஎல்லையிலேயே நடைபெற்றது என்பது வியப்புக்குரியது. ஏனெனில் எதிரிகள் இருவருள் பாண்டியன் தென்திசையிலும் சேரன் மேல் திசையிலும் இருந்தனர். சோழன் தமிழகத்தில் அடைந்துவரும் முதன்மையை வடபுல அரசருடன் சேர்ந்து சேர, பாண்டியர் ஒடுக்க நினைத்திருத்தல் கூடும் என்பதே பொருத்தமாகத் தோன்றுகிறது"[6] என்கிறார் கா. அப்பாத்துரை. எனவே காரியாறு என்ற இடத்தில் நிகழ்ந்த வஞ்சித்திணையில் அமைந்த இப்போர் காரியாறு - II என்பர். காரியாற்றுப் போரை,

**எஞ்சா மண்நசைஇ இகலுளம் துரப்ப**
**வஞ்சியி னிருந்து வஞ்சி சூடி**
**முறஞ்செவி யானையும் தேரும் மாவும்**
**மறங்கெழு நெடுவாள் வயவரு மிடைந்த**
**தலைத்தார்ச் சேனையொடு மலைத்துதலை வந்தோர்**
**சிலைக்கயல் நெடுங்கொடி செருவேற் தடக்கை**
**ஆர்புனை தெரியல் இளங்கோன் தன்னால்**
**காரியாற்றுக் கொண்ட காவல் வெண்குடை**
**வலிகெழு தடக்கை மாவண்கிள்ளி[7]**

என மணிமேகலை குறிப்பிடுகிறது.

**3.2.2. திருக்கோவலூர்ப் போர் I**

மலையமான் காரி தென்னார்க்காடு மாவட்டத்தில் தென்பெண்ணையாற்றின் கரையிலுள்ள திருக்கோவலூரில் இருந்து ஆண்டுவந்தான். முள்ளூர் மலைப் பகுதியும் அவன் ஆட்சிக்கு உட்பட்டிருந்தது. சோழன் ஆரியப் படையெடுப்பை வல்லத்துப் போரில் வென்றது போலவே, காரியின் முன்னோரும் இம்முள்ளூர் மலையருகே நடந்த போரில் ஆரியரை வென்றதாக அறிகிறோம். நெடுங்கிள்ளிக்கோ சோழரின் வேறு எந்த எதிரிக்கோ உதவிய காரணத்தாலேயே, கிள்ளிவளவன் காரியை எதிர்த்திருக்க வேண்டும். காரி இப்போரில்

*கொல்லப்பட்டான். அவன் சிறுவர் இருவரைக் கிள்ளிவளவன் யானைக்காலிலிட்டு இடறி அழிக்கும்படிக் கட்டளையிட்டான். ஆனால் கோவூர்கிழார் என்ற புலவர் (புறம்.46) சோழ மரபின் பெருமையினையும் காரி மரபின் வள்ளன்மையையும் எடுத்துரைத்து இதனைத் தடுத்தார். கிள்ளிவளவனின் அடுத்த செயல் கருவூர் முற்றுகையேயாகும். இதனை,*

**கருங்கைக் கொல்லன் அரஞ்செய் அவ்வாய்**
**நெடுங்கை நவியம் பாய்தலின் நிலையழிந்து**
**வீகமம் நெடும்சினை புலம்பக் காவுதொறும்**
**கடிமரம் தடியும் ஓசை தன்ஊர்**
**நெடுமதில் வரைப்பில் கடிமனை இயம்ப**
**ஆங்கினிது இருந்த வேந்தனோடு ஈங்குநின்**
**சிலைந்தார் முரசம் கறங்க**
**மலைத்தனை என்பது நாணுத்தக உடைத்தே**[8]

*என்ற பாடல் குறிப்பிடுகிறது. புலவர் ஆலத்தூர் கிழார் வலிய கையையுடைய கொல்லன் அரத்தால் கூர்மையாக்கிய ஒளியமைந்த நீண்ட பிடியுடைய கோடாரி வெட்டுதலால் நிலை சாய்ந்து வீழும் பூக்கள் உள்ள நெடிய கிளைகள் துண்டாகக் காடுகள் தோறும் காவல் மரங்களை வெட்டும் ஓசை, தன் ஊரில் உள்ள உயர்ந்த மதிலில் மோதி அரண்மனைக்குள் ஒலிக்க, முரசு முழங்கப் போரிடுவது என்பது காணும் தன்மையது. ஆதலால் போர்புரிதலை விடுக என அறிவுறுத்தினார்.*

*மலையமானை வென்றபின் அவன் கொங்கு நாட்டின் மீது படையெடுத்து வென்றான். பின் கொங்கு நாடு கடந்து சோழநாட்டின் கோட்டைக்குள் புகுந்து தற்காப்பிலே கவனம் செலுத்தினான். வெளியிலுள்ள காவல் மரத்தைச் சோழன் வெட்டும் ஓசை கேட்டும் அவன் வெளிவராதிருந்தான்.*

*சோழன் சுற்றுப்புறம் உள்ள ஊர்களையும் கழனிகளையும் பூங்காக்களையும் எரித்துப் பாழாக்க முனைந்தான். அப்போது அவனுடன்*

இருந்த புலவர் ஆலத்தூர்க்கிழார் அவனுக்கு அறிவுரை கூறினார். 'புறாவின் இன்னலை விலக்கிய சோழன் சிபிச் சக்கரவர்த்தி மரபில் வந்தவன் நீ! வீரமின்றி ஒதுங்கி வாழ்தலும் இவ்வரசனை எதிர்ப்பதும் அதற்காக அழிவு சூழ்வதும் உனக்கு நன்றன்று' (புறம்.46) என்று உரைத்தார்.

இறுதியில் சோழன் வஞ்சி முற்றுகையில் வெற்றி பெற்றான். இவ்வெற்றியைப் பெண்பாற்புலவர் மாறோக்கத்து நப்பசலையார் இரண்டு பாட்டுக்களில் (புறம்:37,39) சிறப்பித்துள்ளார். மேற்கண்ட பாடல் 36, 46 இரு பாடலிலும் பாட பேதம் உள்ளது உழிஞை, வஞ்சி என இரு திணைக்கும் குறிக்கப்பட்டுள்ளது. பழைய வரலாற்றை உடைய முன்னோனது நிலையைக் கூறுவதால் முதல் வஞ்சியுமாகும். 'முரணிய புறத்தோன் அணங்கிய பக்கம்' என்னும் துறைக்கு எடுத்துக் காட்டுகிறார் இளம்பூரணர்.

### 3.2.3. திருக்கோவலூர்ப் போர் II

வேள்மலையமான் ஆட்சி புரிந்த பகுதி கோவலூராகும். இப்பகுதி தற்காலத் தென்னார்க்காடு மாவட்டத்தில் தென்பெண்ணை ஆற்றின் கரையிலுள்ள திருக்கோவலூரைக் குறிக்கும். வேள்மலையமானுக்குக் காரி என்ற பெயர் உண்டு. இந்தக் காரி கிள்ளிவளவனால் கொல்லப்பட்ட காரியானால் கிள்ளிவளவன் ஆட்சியோ பிற்பட்டதாயிருக்க வேண்டும். ஆயின் இந்தக் காரி வேளிர் மரபில் பின் வந்தவனாகவும் இருக்கலாம்.

"அதியன் தன் நாட்டை விரிவுபடுத்தும் எண்ணத்துடன் கோவலூர் மீது படையெடுத்தான். கோவலூர்ப் போரில் அதியன் வெற்றி கண்டான். காரி நகர் விட்டு ஓடினான். கோவலூர், அதியமான் நெடுமானஞ்சியின் ஆட்சிக்குள்ளாயிற்று"[9] என்கிறார் கா. அப்பாத்துரை.

### 3.3. உழிஞைத் திணைப்போர்

வீரர் கோட்டையைக் காத்து நின்ற போதிலும், அக்கோட்டையை வளைத்துப் பகைவீரர்கள் போரிடுவர்; கோட்டைக்குள் செல்ல முயற்சி செய்வர். இங்ஙனம் கோட்டையை வளைத்தல் உழிஞைத்திணையாகும்.

### 3.3.1. மோகூர்ப்போர்

*உழிஞை என்பது மாற்றான் மதிலைச் சுற்றி வளைத்தலைக் குறிக்கும். இத்திணையில் அமைந்த போரான மோகூர்ப்போர் செங்குட்டுவன் வெற்றிகளுள் ஒன்று. பாண்டிய நாட்டு எல்லையிலுள்ள பழையனின் மோகூரை அழித்தது ஆகும். இப்போரில் பழையன் நாட்டெல்லையிலிருந்த தலைவன் அறுகை என்பவன், செங்குட்டுவனுக்கு உதவியாயிருந்தான். பழையன் செங்குட்டுவனை எதிர்த்தழித்து விடுவதாக வஞ்சினம் கூறிப் போர்க்கெழுந்தான். இப்போரில் மோகூர் வீழ்ச்சி அடைந்தது. பழையன் காவல் மரமாகிய வேம்பைச் செங்குட்டுவன் வெட்டி வீழ்த்தி, அவன் யானைகளைக் கொண்டே அதனைத் தன் நாட்டுக்கு இழுத்து வந்தான். அந்த வேப்ப மரத்தைக் கட்டி இழுப்பதற்குப் பழையன் குடும்பப் பெண்டிரின் கூந்தல்களை அறுத்து வடமாகத் திரித்துப் பயன்படுத்தினான் என்றும் அறியலாம். இதனை,*

**நுண்கொடி உழிஞை வெல்போர் அறுகை**
**சேணன் ஆயினும் கேள்என மொழிந்து**
**புலம்பெயர்ந்து ஒளித்த களையாப் பூசற்கு**
**அரண்கள் தாவுறீஇ அணங்குநிகழ்ந் தன்ன**
**மோகூர் மன்னன் முரசம் கொண்டு**
**நெடுமொழி பணித்துஅவன் வேம்புமுதல் தடித்து**
**முரசுசெய முரச்சிக் களிறுபல பூட்டி**
**ஒழுகை உய்த்த கொழுஇல் பைந்துணி**[10]

*என்னும் பதிற்றுப்பத்துப் பாடல் பழையனது அரண்களை அழித்து மோகூரை வெற்றி கொண்டமையை வெளிப்படுத்துகிறது. மற்றொரு பாடலான பதிற்றுப்பத்து 49 - ஆவது பாடலில் இப்போரில் பழையனுக்குச் சில வேந்தரும், பல வேளிரும் துணை நின்றதாகத் தெரிகிறது.*

### 3.3.3. உறையூர்ப் போர்

உழிஞைத் திணைப்போராகச் சோழன் தித்தனுக்கும் கட்டிக்கும் இடையில் நடைபெற்ற போரினைக் குறிக்கலாம். உறையூரிலிருந்து அரசாண்ட தித்தன் என்ற சோழன் காலத்தில் வடுகவேந்தன் கட்டியும் மற்றொரு பாணர் குடி மன்னனும் படையெடுத்து வந்து உறையூரை முற்றுகையிட்டதாக அறிகிறோம். இத்தித்தனுக்கு ஐயை என்ற சீர்சான்ற புதல்வியிருந்ததாகவும், அவள் உறையூரை நன்கு அரண் செய்து காத்ததாகவும் அகப்பாடல்கள் குறிப்பிடுகின்றன. அவன் கோட்டையிலிருந்து ஒலிக்கும் போர்முரசம் கேட்டே எதிரிகள் ஓடியதாகப் புலவர் குறிப்பிடுகிறார் என்பதை,

**வலிமிகு முன்பின் பாணனொடு மலிதார்த்**
**தித்தன் வெளியன் உறந்தை நாள்அவைப்**
**பாடுஇன் தெண்கிளைப் பாடுகேட்டு அஞ்சிப்**
**போர்அடு தானைக் கட்டி**
**பொராஅது ஓடிய ஆர்ப்பினும் பெரிதே**[11]

என்பதால் அறியலாம்.

### 3.3.4. இடும்பில் போர்

செங்குட்டுவன் பெற்ற உள்நாட்டுப் பெருவெற்றிகளில் கொங்கு நாட்டுப் போருக்கு அடுத்தபடி இடும்பில் கைக்கொண்டதாகும். இப்போரில் நகரைச் சுற்றி வளைத்ததைக் கூறியதால் உழிஞைத் திணையாயிற்று.

'இடும்பில்' என்பது தஞ்சை மாவட்டத்திலுள்ள இடும்பவனம் என்று உரையாசிரியர் அடியார்க்கு நல்லார் கூறுகிறார்.

**மாறா வல்வில் இடும்பில் புறந்திறுத்து**[12]

என்று பதிற்றுப்பத்தும்,

**நெடுந்தேர்த் தானையொடு இடும்பில் புறத்து இறுத்த**[13]

*என்று சிலப்பதிகாரமும் இதனைக் குறிப்பிடுகின்றன.*

### 3.3.5. கொடுகூர்ப் போர்

*செங்குட்டுவன், இடும்பிலைக் கைக்கொண்டான்; அதனை அழித்தான்; அடுத்து நிகழ்ந்த போர் கொடுகூர் வெற்றிப் போராகும். பதிகம் தரும் குறிப்பால் வியலூரும் கொடுகூரும் ஒரே ஆற்றின் எதிர்எதிர்க் கரையில் இருந்ததாகத் தெரிகிறது. வியலூர் எறிந்தபின் செங்குட்டுவன் ஆற்றைக் கடந்தே கொடுகூர் சென்று அதை அழித்தான் என கா. அப்பாத்துரை கூறுகிறார். இதனை,*

**“........................................ ‘வியலூர் நூறி’**
**அக்கரை நண்ணிக் கொடுகூர் எறிந்து**[14]

*என்ற பாடல் வெளிப்படுத்துகிறது.*

### 3.3.6. வெண்ணில் போர் அல்லது வாயிற்போர்

*வெண்ணி அல்லது வெண்ணில் என்பது தஞ்சாவூரை அடுத்த ஓர் ஊர். இந்த ஊர் நாயன்மாரால் பாடப்பட்டுள்ளது. இப்போது அது கோயிலுண்ணி (கோயில் வெண்ணி) என்ற பெயருடன் உள்ளது என்கிறார் கா.அப்பாத்துரை.*

*முதல் வெண்ணிப் போரில் கரிகாலன் பதினொரு வேளிர்கள் (அ) சிற்றரசர்களையும் சில அரசர்களையும் ஒருங்கே முறியடித்தான். அவ்வரசர்கள் யார் யார் என்பது கூறப்படவில்லை. ஆனாலும் பன்மையிலேயே குறிக்கப்படுவதால் சேர பாண்டியர் இருவருமே கரிகாலனை எதிர்த்தனர் என்று கருதலாம். முதற்கரிகாலன் பேரரசனல்லாவிட்டாலும் அந்நிலைக்கு உயர்ந்து வருவதையே இது குறிக்கிறது. ஏனெனில், இப்பெருங்கூட்டணியின் வலிமை இப்போரில் கரிகாலனால் முற்றிலும் முறியடிக்கப்பட்டது. அரசரும் சிற்றரசரும் தத்தம்*

போர் முரசங்களை உடன் கொண்டு செல்லக்கூட நேரமில்லாது போர்க்களத்தைக் கைவிட்டு ஓடினர். இப்போர் பற்றிச் சங்க காலப் பழம்பெரும் புலவர் பரணரின் பாடல் வழி அறியலாம்.

**காய்சின மொய்ம்பின் பெரும்பெயர்க் கரிகால்**
**ஆர்கலி நறவின் வெண்ணி வாயில்**
**சீர்கெழு மன்னர் மறலிய ஞாட்பின்**
**இமிழ்இசை முரசம் பொருகளத்து ஒழியப்**
**பதினொரு வேளிரொடு வேந்தர் சாய,**
**மொய்வலி அறுத்த ஞான்றைத்**
**தொய்யா அழுந்தூர் ஆர்ப்பினும் பெரிதே![15]**

என்ற பாட்டின் இறுதியில் போர் வெற்றியின் பயனாக அழுந்தூரில் உண்டான ஆர்ப்பரிப்பு ஆரவாரம் பெரிதென்ற குறிப்புத் தரப்பட்டுள்ளது. இது வெற்றி ஆரவாரமாகும், அழுந்தூர் என்பது வெண்ணில் போர்க்களத்துக்கு அருகிலுள்ள நகரமாகவோ தலைநகரமாகவோ இருக்கவேண்டுமென்பதிலும் ஐயமில்லை. அழுந்தூர் தலைநகரம் என்றும் முதற்கரிகாலன் இச்சமயம் அழுந்தூர்வேள் அல்லது சிற்றரசன் நிலையில் இருந்தே வலிமை பெற்று வளரத்தொடங்கினான் எனவும் அறிந்து கொள்ளமுடிகிறது.

### 3.3.7. தகடூர்ப் போர்

கோவலூர்ப் போரில் தோற்றோடிய காரி, பெருஞ்சேரல் இரும்பொறை என்ற சேரனிடம் தஞ்சமடைந்தான். அவன் தன் நாட்டு எல்லையிலிருந்த வலிமை வாய்ந்தவனான ஓவியர் தலைவன் ஓரியை வெல்லவும் அவனுக்குரிய கொல்லி மலையைக் கைக்கொள்ளவும் திட்டமிட்டிருந்தான். காரி, சேரன் படைத் தலைமையில் தானே சென்று ஓரியைத் துரத்திவிட்டுக் கொல்லி மலையைச் சேரனுக்குச் சேர்ப்பித்தான். முன்பு தோற்றோடிய காரி சேரனிடம் தஞ்சம் புகுந்தான். சேரமான்

*பெருஞ்சேரல் இரும்பொறையும் மலையமான் திருமுடிக்காரியும் சேர்ந்து தகடூர் மீது படையெடுத்தனர்.*

*அதியமானுக்கும், ஓரிக்கும் உதவியாகப் பாண்டியனும், சோழனும் துணை நின்றனர் என்று பதிற்றுப்பத்தின் பதிகம் கூறுகிறது.*

**பொய்இல் செல்வக் கடுங்கோ வுக்கு**
**வேளாவிக் கோமான் பதுமன் தேவி ஈன்றமகன்**
**கொல்லிக் கூற்றத்து நீர்கூர்மீமிசை**
**பல்வேல் தானை அதியமானோடு**
**இருபெரு வேந்தரையும் உடன் நிலை வென்று**
**முரசும் குடையும் கலனும் கொண்டு**
**உரைசால் சிறப்பின் அடுகளம் வேட்டுத்**
**துகள்தீர்மகளிர் இரங்கத் துப்பு அறுத்துத்**
**தகடூர் எறிந்து ...............................................**[16]

*என்று சேரன் அடைந்த பெரு வெற்றியைப் பதிகம், சற்று விரிவாகவே கூறுகிறது.*

**வெல்போர் ஆடவர் மறம்புரிந்து காக்கும்**
**வில்பயில் இறும்பில் தகடூர் நூறி**[17]

*என்ற அடிகள் இவ்வெற்றியைக் குறிக்கின்றன.*

*"தகடூர்ப்போர் பற்றி, தகடூர் யாத்திரை தரும் வரலாற்றுக்கிடையே சில முக்கியக் கூறுகளில் வேற்றுமைகள் உள்ளன. பதிற்றுப்பத்து, தகடூரில் போர் புரிந்தவன் அதிகமான் என்று மட்டுமே குறிக்கிறது. ஔவையார் பாடல்கள் மூலம் இது நெடுநல் அஞ்சி என்று தோன்றுகிறது. ஆனால் தகடூர் யாத்திரையில் அது அவன் மகன் எழினி என்று கூறப்படுகிறது. தவிர, பதிற்றுப்பத்தின் பதிகம் இரண்டரசர் உதவி பற்றிக் குறிக்கிறது. பிற பாடல்களில் அக்குறிப்பு இல்லை. இவை ஆய்வுக்குரியன."*[18]

### 3.3.8. கூடற் பறந்தலை

*பரணர், சேர சோழர்களைப் பற்றியும் எண்ணற்ற வேளிர்களைப் பற்றியும் பிறநாட்டரசர்களைப் பற்றியும் பாடியிருந்தாலும் பாண்டியரைப் பற்றிக் கிட்டத்தட்ட எதுவுமே கூறவில்லை எனலாம். பசும்பூட்பாண்டியன் என்ற ஒரே மன்னன் பெயர் குறிப்பிடப்பட்டுள்ளது. பாண்டிய நாட்டு வேளிர்களுள் ஒருவனான பழையனும் குறிப்பிடப்படுகிறான். "பசும்பூட்பாண்டியன் என்ற பெயரைச் சிலர் தலையாலங்கானத்துப் பாண்டியன் என்று கொள்வர். ஆனால் பரணர் காலத்திற்கும் காலநிலைக்கும் இது பொருந்தாது. அது முற்பட்ட ஏதோ ஒரு பாண்டியனாகவும், குறிப்பிட்ட போருக்கு அவனே உரியவனாகவும் இருத்தல் கூடும்."[19]*

**மைஅணி யானை, மறப்போர்ச் செழியன்**
**பொய்யா விழவின் கூடற் பறந்தலை**
**உடன்இயைந்து எழுந்த இருபெரு வேந்தர்**
**கடல்மருள் பெரும்படை கலங்கத் தாக்கி,**
**இரங்குஇசை முரசம் ஒழியப் பரந்து அவர்**
**ஒருபுறம் கண்ட ஞான்றை[20]**

*என்றதனால் இருபெரு வேந்தர்களின் படைகளும் கடல்கள் போலிருந்தன. ஆனால் பாண்டியனை எதிர்த்தவர்கள் தோல்வியுற்ற பின் தத்தம் போர் முரசங்களைக் கீழே போட்டுவிட்டு ஓடினர் என்று இப்பாடலில் பரணர் கூறுகிறார்.*

**எம்மொடு புலக்கும் என்ப; வென்வேல்**
**மாரியம்பின், மழைத்தோல் பழையன்**
**காவிரி வைப்பின் போஒர் அன்ன, என்**
**செறிவளை உடைத்தலோ இலனே![21]**

*என்பதனால் இரண்டாம் கூடற்பறந்தலைப்போர் தலையாலங்கானத்துப் பாண்டியன் காலத்தை ஒட்டி, அதற்கு ஒரு சிறிதே முன்னதாக நடந்திருத்தல்*

வேண்டும். ஏனெனில் அதில் தோல்வியுற்ற அரசன் சோழன் கிள்ளிவளவன் ஆவான். வெற்றி பெற்றவனோ தலையாலங்கானத்துப் போரிலே பாண்டிய படைத்தலைவனாக இருந்த பழையன்மாறன் என்பவன் ஆவான். இப்போர் பற்றிய பாடலையும் சிலர் தலையாலங்கானத்துப் போர் பற்றியதாகவே கொள்வதுண்டு. ஆனால் இதனைப் பாடிய புலவர் பரணர். இதில் சோழன் மட்டுமே போரில் ஈடுபட்டுத் தோல்வியடைந்தான். தவிர, பாட்டின் இறுதியடி கோக்கோதை மார்பன் என்ற சேரனைச் சுட்டுவதுபோலக் காணப்படுகிறது. சேரன் இப்போரில் பாண்டியனின் நண்பனாக இருந்திருத்தல் கூடும். தலையாலங்கானத்துப் போரில் அவன் சோழனுக்கு உதவியாய் இருந்தான் என்றும் அறிகிறோம்.

பழையன்மாறன் இப்போரில் கிள்ளிவளவனை முறியடித்ததுடன் அவனிடமிருந்து யானைகள், குதிரைகள் எனப் பலவற்றைக் கைக்கொண்டான் என்று அறிகிறோம். இப்போர் பற்றி நக்கீரர் பாடும் பாடல் வருமாறு :

**இழையணி யானைப் பழையன் மாறன்**
**மாடமலி மறுகின் கூடல் ஆங்கண்,**
**வெள்ளத் தானையொடு வேறுபுலத்து இறுந்த**
**கிள்ளி வளவன் நல்அமர் சாஅய்க்**
**கடும்பரிப் புரவியொடு களிறுபல வவ்வி,**
**ஏதில் மன்னர் ஊர்கொளக்**
**கோதை மார்பன் உவகையிற் பெரிதே!**[22]

என்று விளக்கியிருக்கின்றது.

### 3.4. தும்பைத்திணைப் போர்

நாட்டு வீரர் கோட்டையைச் சுற்றிச் செவ்வனே காத்த போதிலும் படைவீரர் கோட்டைக்குள்ளே நுழைந்துவிடுவர். அங்கே இருதிறத்து வீரர்களும் கடும்போர் புரிவர். கோட்டைக்குள் இருத்திறத்துப் படை வீரரும் பொருந்துவது தும்பையாகும்.

### 3.4.1. சோழன் பெருவிறல்கிள்ளிக்கும் குடக்கோ நெடுஞ்சேரலாதனுக்கும் இடையே நடைபெற்ற போர்

*சோழன் வேல்பஃறடக்கைப் பெருவிறல்கிள்ளி என்ற சோழப் பெருமன்னனும் சேரமான் குடக்கோநெடுஞ்சேரலாதன் என்ற சேரப்பேரரசனும் வேங்கையுடன் வேங்கை எதிர்த்துப் போர்புரிதலைப் போன்று எதிர்த்து நின்று பொருதனர். இருபுறத்துப் படைகளும் இருபுறத்து அரசரும் முற்றிலும் சரிசமமான வீரமுடையவர்களாகவே இருந்ததால், இருவருக்குமே வெற்றி கிடைக்கவில்லை. அது மட்டுமன்று இருதிறப்படைகளும் சாகும்வரை போரிட்டு மடிந்தன. இரு பேரரசர்களும் ஒருவர் மீது ஒருவர் மும்முரமாகத் தாக்கிப்போர் செய்து இறந்தனர். போர்க்களத்தின் வெற்றி இருவேந்தருக்குமே கிட்டாமல் கூற்றுவனுக்கும், அவன் போர்ப்படைகளுக்கும், கழுகு பருந்துகளுக்குமே கிட்டிற்று.*

*இப்போர் விளைவாக எழுந்த உருக்கமான கருத்துக்களையும் களங்கண்டு பாடிய இருபெரும் புலவர் நமக்குத் தந்துள்ளனர்.*

*யானையும் குதிரையும் தேரும் வீரரும் செயலற்றுக் கிடக்க, வீரர்கண் மறைத்துக் கேடயங்கள் கிடக்கின்றன. அடிப்பாரின்றி முரசுகள் உருளுகின்றன. நெஞ்சில் சாந்துடன் குருதியும் சேர்ந்து வடிய மன்னர் கிடக்கின்றனர். இனி நாடு என்ன ஆவது? என்று பெரும்புலவர் பரணர் கலங்குகின்றார் என்பதனை,*

**எனைப்பல் யானையும் அம்பொடு துளங்கி**
**விளைக்கும் வினையின்றிப் படையொழிந் தனவே!**
**விறற்புகழ் மாண்ட புரவி யெல்லாம்**
**மறத்தகை மைந்தரொடு ஆண்டுப் பட்டனவே!**
**தேர்தர வந்த சான்றோ ரெல்லாம்**
**தோல்கண் மறைப்ப, ஒருங்கு மாய்ந்தனரே!**
**விசிந்துவினை மாண்ட மயிர்க்கண் முரசம்,**

**பொறுக்குநர் இன்மையின் இருந்து விளிந்தனவே!**

**சாந்தமை மார்பில் நெடுவேல் பாய்ந்தென,**

**வேந்தரும் பொருது, களத்து ஒழிந்தனர்! இனியே,**

**என் ஆவது கொல்தானே ...............................**

**.................................... அகன்தலை நாடே?[23]**

*என்பதனால் அறியலாம்.*

*கழாத்தலையார் என்ற மற்றொரு புலவர், 'வெற்றியை நாடி வெற்றிக்குரிய இரு மன்னரும் இப்படிப் போர்புரிவதனால் என்ன பயன்?' என்று கேட்டு, இறுதியில் இத்தகைய வீரம் பாழ்படாது என்று தேறி 'வாழ்க அவர் புகழ்' என்று கூறுகிறார்.*

**வருதார் தாங்கி, அமர்மிகல் யாவது**

**..................................................................................**

**அறத்தின் மண்டிய மறப்போர் வேந்தர்**

**தாம்மாய்ந் தனரே; குடைதுளங் கினவே,**

**.....................................................................................**

**களம் கொளற்கு உரியோர் இன்றித் தெறுவர,**

**உடன்வீழ்ந் தன்றால், அமரே; பெண்டிரும்**

**பாசடகு மிசையார், பனிநீர் மூழ்கார்,**

**மார்பகம் பொருந்தி ஆங்கு அமைந்தனரே;**

**...............................................................................**

**அரும் பெறல் உலகம் நிறைய**

**விருந்து பெற்றனரால்; பொலிக, நும் புகழே[24]**

*என்பதால், வெற்றி கொள்வார் யாருமில்லாமல் இரு பேரரசுப் பெண்டிரும் தத்தம் கணவர் மார்பில் விழுந்து அழுதனராம்! தமிழர் வீரத்தின் பெருமையையும் அது தமிழினத்துக்குச் செய்த அழிவையும் இப்பாடல்கள் நன்கு விளக்குகின்றன.*

### 3.4.2. வடபுலக் கங்கைப்போர்

சேரன் செங்குட்டுவன் கண்ணகி சிலைக்காக வடதிசையில் படையெடுத்துச் செல்வதற்கு நெடுநாள் முன்பே கங்கைப் பேராற்றில் முதற்போர் ஆற்றியிருந்தான். அவன் அப்போது வடதிசை சென்றது, சேரனின் அன்னை கங்கையில் நீராடுவதற்குத் துணையாகவே சென்றான். ஆயினும், படையணிகளுடன் சென்றதால் பலர் அறியப் பல ஆரிய மன்னர்கள் திரண்டுவந்து அவன் போக்கைத் தடுத்தனர். செங்குட்டுவன் தனியாக நின்று அத்தனை வேந்தரையும் களத்தில் சிதறியடித்தான். ஓடிய ஒரு சிலர் நீங்கலாக மீதம் அனைவரும் உயிர் பிரிந்தவராகினர். கங்கைப்படுகளம் ஒரே குருதிக்களமாகவும் ஆயிற்று. சிலப்பதிகாரத்திலேயே மாடலன் கூற்றாகவே இப்போர் வருணிக்கப்படுகிறது.

**கங்கைப்பேர் யாற்றுக் கடும்புனல் நீத்தம்**
**எங்கோ மகனை ஆட்டிய அந்நாள்**
**ஆரிய மன்னர் ஈர்ஐஞ் நூற்றுவர்க்கு**[25]

என்று இப்போரின் கோரக் காட்சியையும் அதில் தனியொருவனாக நின்று செங்குட்டுவன் வெற்றிக் கூத்தாடியதையும் சாவின் தெய்வமாகிய கொற்றவையே கண்ணிமைக்காமல் விழிப்புடன் பார்த்துக் கொண்டிருந்தது என்றும் கவிஞர் வியந்துரைக்கிறார்.

### 3.4.3. காரியாற்றுப் போர்

காரியாறு என்பது ஆற்றுக்கும் ஊருக்குமான பெயர் என்று தெரிகிறது. இது தமிழகத்தின் வட பகுதியில் திருவள்ளூரிலிருந்து காளகஸ்திக்குச் செல்லும் வழியில் இருக்கிறது. இவ்வூர் தற்போது இராமச்சேரி என அழைக்கப்படுகிறது. இதில் கோயில்கொண்ட இறைவன் பெயர் ‘காரிக்கரை உடைய நாயனார்’ என்பதாகும். இது ஊரின் பழைய பெயரைச் சுட்டிக் காட்டுகிறது. “உண்மையில் இராமகிரி என்பது ‘காரி மலை’ என்ற தமிழின் இடைக்காலச் சமஸ்கிருத மொழிபெயர்ப்பாகும். கார்

என்ற தமிழ்ச் சொல் கருமை நிறம் உடையது என்ற பொருளில் நஞ்சு, நஞ்சுண்ட சிவன், நஞ்சுண்டு உடல் கரியவனான திருமால்; கருநிறமுடைய இராமன் ஆகிய பொருள்களைத் தரவல்லது. முற்காலங்களில் அயிரை என்னும் சொல் மலை, ஆறு, ஊர் ஆகியவற்றைத் தாங்கி நின்றதுபோல, இங்கு அமைந்துள்ள மலை, ஆறு, ஊர் ஆகிய மூன்றும் "காரி" என்னும் பெயரைத் தாங்கி நின்றிருக்க வேண்டும். ஏனெனில், இதனருகே ஓடும் இரட்டை ஆறுகளில் ஒன்று காளத்தி என்றும் மற்றொன்று காலேறு என்றும் அழைக்கப்படுகின்றன. காலேறு என்பது காரிமலை என்பதன் தெலுங்கு மரூஉவேயாகும். காரிமலை என்பது அந்நாள் காளத்தியிலிருந்து திருப்பதி வரை இருந்த மலையைக் குறித்தது. அயிரை மலையிலும் காரி (இராமன் அல்லது திருமால்) அல்லது காளி (கொற்றவை) இடங்கொண்டிருந்ததாகக் கூடும். காரிநதி என்ற இப்பெயரின் சிதைவே காரிந்தி அல்லது காளிந்தி என்று மருவியிருத்தல் கூடும்."[26]

நெடுங்கிள்ளிக்கு, வடபுல வடுக அரசர்கள் உதவியிருந்தனர் என்று எண்ண இடமுண்டு. போர் சோணாட்டின் வடஎல்லையில் நடைபெற்றது. இதைக் குறித்துக் காட்டும் நலங்கிள்ளி தன் வழக்கமான மடிமையை அகற்றிவிட்டு மூர்க்கமாகப் போர் புரிந்தான்; ஏழு நாள்கள் வரை இருதிறத்தாரும் ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுக்காமலே கடும்போர் நடத்தினர். இறுதியில் நெடுங்கிள்ளியும் நலங்கிள்ளியும் நேருக்கு நேராக நின்று மறப்போர் புரிந்தனர். இதன் பயனாக நெடுங்கிள்ளி களத்தில் சாய்ந்தான். பின்னாளில் இப்போர் காரணமாகவே அவன் காரியாற்றுத் துஞ்சிய நெடுங்கிள்ளி என்று குறிப்பிடப்பட்டான். அடுத்த தலைமுறையிலும் காரியாற்றில் மற்றொரு போர் நடைபெற்றதை அறியமுடிகின்றது.

### 3.4.4. கொங்கர் செங்களப் போர்

பெருங்கடலை அடக்கிய சேரன் செங்குட்டுவன் முன்னோன் இருதிசைக் கடலிலும் நீராடித் தமிழகத்தின் வடதிசை முழுவதும் ஆண்டான்.

ஆனாலும் கொங்கு வெற்றி முழுவதும் உறுதியாய் விடவில்லை. கொங்கு நாட்டில் எழுந்த கிளர்ச்சிகளைச் செங்குட்டுவன் செங்களம் என்ற இடத்தில் போர் செய்து அடக்க முடிவெடுத்தான். இதில் சோழர், பாண்டியர் கொங்கருக்கு உதவினர் என்று அறிகிறோம்.

**நும்போல் வேந்தர் நும்மொடு இகலிக்**
**கொங்கர் செங்களத்துக் கொடுவரிக் கயற்கொடி**
**பகைப்புறத்துத் தந்தன ராயினும், ஆங்கவை**
**திசைமுக வேழத்தின் செவியகம் புக்கன**[27]

என்று சிலப்பதிகாரத்தால் வில்லவன் கூற்றாக இதை இளங்கோ அறிவிக்கிறார்.

### 3.5. வாகைத்திணைப் போர்

மிக்கோன் செறுவென்றது வாகை எனப்படும். போர்க்களத்தில் பகைவரை வென்று வாகை மாலை சூடுவது வாகைத் திணையாகும்.

### 3.5.1. வாகைப் பறந்தலைப் போர்

கரிகாலன் ஆற்றிய மற்றொரு பெரும்போர் வாகைப் பறந்தலைப் போராகும். இதில் ஒன்பது மன்னர்களைத் தன்னந்தனியாக எதிர்த்தவன் என அறிகிறோம். இதனை,

**விரிஉளைப் பொலிந்த பரியுடை நல்மான்**
**வெருவரு தானையொடு வேண்டுபுலத்து இறுத்த**
**பெருவளக் கரிகால் முன்னிலைச் செல்லார்**
**சூடா வாகைப் பறந்தலை ஆடுபெற**
**ஒன்பது குடையும் நண்பக லொழித்த**
**பீடீஇல் மன்னர் போல,**
**ஓடுவை மன்னல் – வாடைநீ எமக்கே**[28]

என்னும் பாடலில் பரணர் இப்போரை விரித்துரைத்துள்ளார். கரிகாலன் அப்போரில் ஒன்பது மன்னர்களை எதிர்த்துப் போரிட்டான். அவர்கள் கரி,

பரி, தேர், காலாட்படைகளை மிகுதியாகவே உடையவராய் இருந்தனர். ஆனால் அவர்களால் கரிகாலன் முன் நிற்க முடியவில்லை. கரிகாலன் அரும்பெரும் வெற்றி பெற்றான். ஒன்பது மன்னரும் தம் வெண்கொற்றக்குடைகளையும் புகழ்க்கொடிகளையும் களத்திலே எறிந்துவிட்டு ஓடினர் என வெற்றியைப் பாடியதால் வாகையாயிற்று.

"இம்மூன்று போர்களும் (வெண்ணிப் போர், வெண்ணி வாயில் போர் மற்றும் வாகைப் போர்) முதல் கரிகாலனுக்கு உடைய போர்கள். இதனைப் பெரும்பெயர்க் கரிகால் என்ற சங்க ஏடுகளில் கூற்றுகள் மூலம் முதல் கரிகாலன் மரபும் பெயரும் உடைய கரிகாலன் என்று இராசமாணிக்கனார் கூறுகிறார்."[29]

### 3.5.2. கானப் பேரெயில் போர்

கானப் பேரெயில் என்னும் இடத்தில் பாண்டியன் உக்கிரப் பெருவழுதிக்கும் குறுநிலத் தலைவனாகிய வேங்கை மார்பனுக்கும் இடையே நடைபெற்ற போர் கானப் பேரெயில் போர். கானப்பேரெயில் என்பது பாண்டிய நாட்டில் பண்டைய காலத்தில் நிலவிய வலிமை வாய்ந்த கோட்டை கானப்பேர் என்பதாகும். இது இந்நாளைய காளையார்கோயில் என்பது ஆராய்ச்சியாளரின் முடிவு. அதன் கோட்டை மதில்கள் வெல்ல முடியாதவை. அதன் தலைவனான வேங்கை மார்பன் இது பற்றிப் பெரிதும் தருக்குடையவனாக இருந்தான். பாண்டியன் உக்கிரப்பெருவழுதி அதை வென்று வேங்கை மார்பன் தருக்கை அடக்கினான். இக்கருத்தாலேயே அவன் கானப்பேரெயில் கடந்த உக்கிரப்பெருவழுதி என்று அழைக்கப்பட்டான் என்கிறார் கா. அப்பாத்துரை. கானப்பேரெயில் என்னும் வலிமைவாய்ந்த கோட்டையின் சிறப்பை,

**கதிர்நுழை கல்லா மரம்பயில் கடிமிளை**
**அருங்குறும்பு உடுத்த கானப் பேரெயில்**[30]

என்னும் புறப்பாட்டின் மூலம் ஐயூர் மூலங்கிழார் எடுத்துரைக்கிறார்.

### 3.5.3. வெண்ணிப் போர் III

*சங்கப் பாடல்களிலே பத்துப்பாட்டின் இரண்டு பாடல்கள் இப்போர் பற்றிக் கூறுகின்றன. அவை, கடியலூர் உருத்திரங்கண்ணனார் பாடிய பட்டினப்பாலை, முடத்தாமக் கண்ணியார் பாடிய பொருநராற்றுப்படை ஆகியவையாகும். இது மூன்றாம் வெண்ணிப்போர் ஆற்றிய இரண்டாம் கரிகாலனைப் பற்றியதாகும்.*

*"இரண்டாம் கரிகாலன் திருமாவளவன் என்ற புகழ்ப்பெயருடையவன் (பட்டினம்.299). அவன் கரிகாலன் என்ற பெயரும் உடையவன் (பொருநர்.138). அவன் தந்தை உருவப்பஃறேர் இளஞ்சேட்சென்னி (பொருநர்.130) ஆவான். பிறக்கும்போதே அரசுரிமை பெற்றவன். ஆனால் சிறைப்பட்டு வாளால் விடுதலையுற்றான் (பொருநர்.132, பட்டினம்.221.7). அவன் இளமை கண்டு முறைசெய்யும் ஆற்றல் பற்றி ஐயுற்ற முதுமை வாய்ந்த அமைச்சர் நாணும்படி முதுமை வேடத்தில் வந்து முறை செய்தான் (பொருநர்.187-8). பல சமயச்சார்பான விழாப்பணிகள், வேள்வி முறைகள் செய்தான் (பட்டினம்.200-203). ஒளியர், அருவாளர், பாண்டியர், வடவர், மேல்புலத்தவர்கள் ஆகியவர்களை வென்றடக்கியிருந்தான் (பட்டினம்.274-277). பொதுவர் மரபையே அழித்தான். இருங்கோவேளை முறியடித்தான் (பட்டினம்.282-283). உறையூர்க் கோட்டையைப் புதுப்பித்தான்: ஏரி, குளம் வெட்டி உழவு பெருக்கி, புதுக்குடியிருப்புகளையும், கோயிலும் வகுத்தான் பட்டினம்.284-286) வெண்ணிப்போர் ஆற்றினான்"[31] என்று கா.அப்பாத்துரை கூறியுள்ளார்.*

*மூன்றாம் வெண்ணிப்போர் பற்றிப் பொருநராற்றுப்படையில் முடத்தாமக் கண்ணியார் குறிக்கும் அடிகளாவன :*

**இரும்பனம் போந்தைத் தோடும், கருஞ்சினை**
**அரவாய் வேம்பின் அம்குழைத் தெரியலும்**
**ஓங்கிருஞ் சென்னி மேம்பட மிலைந்த**
**இருபெரு வேந்தரும் ஒருகளத் தவிய**

**வெண்ணித் தாக்கிய வெருவரு நோன்தாள்,**

**கண்ணார் கண்ணிக் கரிகால் வளவன்**[32]

என்பதாகும். இங்கே, கரிகால்வளவன் பனம்பூமாலை அணிந்த சேர வேந்தனையும், வேப்பம் பூமாலை அணிந்த பாண்டிய வேந்தனையும் ஒருங்கே எதிர்த்துப் போர் நிகழ்த்தினான். இருபெரு வேந்தர்களும் களத்திலேயே வீழ்ந்துபட்டனர். இதன் பின்னரே கரிகாலன் தமிழகப் பேரரசன் ஆகியிருக்க வேண்டும்.

### 3.5.4. கடம்பின் பெருவாயில் போர்

கடம்பின் பெருவாயில் என்பது நன்னன் வேண்மான் ஆண்ட பாலி நாட்டின் ஒரு நகரம். அதுவே, நன்னன் தலைநகரமாகவும் இருத்தல் வேண்டும். இந்நாடு பூழிநாடு அதாவது தற்போதைய தென் கன்னட மாவட்டத்தை அடுத்துள்ள குடகு மாகாணம் ஆகும். கடம்பின் வாயில் போரில் நன்னனை எதிர்த்தவன் “பதிற்றுப்பத்தின் நான்காம் பத்திற்குரிய களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல் என்னும் சேர அரசனாவான். சேரருக்குரிய மணிமுடியை அவன் முடிசூட்டு விழாவின்போது முடிசூடாததால் அவன் களங்காய் கோத்த நார்முடி அணிந்திருக்க வேண்டுமென்றும் அது காரணமாகவே அப்பெயர் பெற்றானென்றும் உரையாசிரியர் அ.மா.பரிமணம் கூறியுள்ளார்.”[33]

களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரலின் தந்தை சேரலைஆதனென்றும் தாய் வேளாவிக்கோமான் மகளான பதுமன்தேவி என்றும் பதிற்றுப்பத்தின் நான்காம்பத்துப் பதிகம் கூறுகிறது. அவன் நீர் கொப்பளிக்கும் நேரி மலையை உடையவன்; 25 ஆண்டுகள் ஆட்சி செய்தவன்; முன்னும் பின்னும் ஆண்ட சேரர்களைப் போலவே வள்ளன்மை மிக்கவன். நான்காம் பத்தைப் பாடிய புலவர் காப்பியாற்றுக் காப்பியனார். அவருக்கு அவன் அப்பாட்டிற்குரிய பரிசாக நாற்பதாயிரம் பொற்காசும் நாட்டிற்பாதியும் அளித்தான். புலவர் பாதி அரசையும் அரசனிடமே விட்டு அவனிடம் அமைச்சரானார்.

களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல் பூழி நாட்டின் மீது படையெடுத்துச் சென்றான். பூழி நாடு என்பது இந்நாளைய சேரர் தாயகமான வடமலையாளத்துக்கு வடக்கேயுள்ள தென்கன்னட மாவட்டமே. அதன் ஒரு பகுதியே நன்னனின் பாலி நாடாகிய குடகுப்பகுதி. இப்பூழி நாட்டுப் படையெடுப்பின் ஒரு நிகழ்ச்சியே கடம்பின் வாயிற்போர். அதில் நார்முடிச் சேரல் பொன்னங்கண்ணியும் பொன்மாலையும் சூடிய நன்னனை வென்று அவன் தலையை வெட்டி வீழ்த்தினான். பொன்னால் அணிசெய்யப்பட்ட அவனுக்குரிய வாகை மரத்தை வேருடனும் கிளையுடனும் சிதைத்தான் என்பதைப் பின்வரும் அடிகளின் வாயிலாக அறியமுடிகிறது.

**பொன்அம் கண்ணிப் பொலந்தேர் நன்னன்**
**சுடர்வீ வாகைக் கடிமுதல் தடித்த**
**தார்மிகு மைந்தின் நார்முடிச் சேரல்[34]**

அகநானூற்றிலுள்ள பரணர் பாடல்களால் நார்முடிச் சேரல் படைத்தலைவன் ஆய் எயினன் என்றும் நன்னன் படைத்தலைவன் மிஞிலி என்றும் தெரிகிறது. சேரர் படைத்தலைவனாகிய ஆய் எயினன் நன்னன் படைத்தலைவனாகிய மிஞிலியின் வேற்போருக்கு ஆற்றாது போரில் சாய்ந்தான் என்பதனை,

**கடும்பரிக் குதிரை ஆஅய் எயினன்**
**நெடுந்தேர் மிஞினியொடு பொருதுகளம் பட்டெடன[35]**

**.............................................. ஒன்னார்**
**ஓம்புஅரண் கடந்த வீங்குபெருந் தானை**
**அடுபோர் மிஞிலி செருவிற்கு உடைஇ,**
**முருகுஉறழ் முன்பொடு பொருதுகளம் சிவப்ப**
**ஆஅய் எயினன் வீழ்ந்தென[36]**

என்பதனால் வெளிப்படுகிறது. களங்காய்க் கண்ணி நார்முடிச்சேரனால் நன்னன் முறியடிக்கப்பட்டு வீழ்ந்த போர் பெருந்துறைப்போர் என்று கல்லாடர் குறிக்கிறார். இதனை,

**--------------------------------------------------------- குடாஅது**

**இரும்பொன் வாகைப் பெருந்துறைச் செருவில்**

**பொலன்பூண் நன்னன் பொருதுகளத்து ஒழிய**

**வலம்படு கொற்றம் தந்த வாய்வாள்**

**களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல்![37]**

*என்பதனால் தெளிவுறுகிறது. "பெருந்துறைப் போர் என்பது கடம்பின் வாயில் பெருந்துறைப்போர் என்ற முறையில் கடம்பின் வாயிற் போருக்கே உரிய மற்றொரு பெயராய் இருத்தல் கூடும்."[38]*

## 3.6. காஞ்சித் திணைப் போர்

*காஞ்சித் திணை என்பது நிலையாமையை உணர்த்துவது. போரினால் ஏற்படும் அழிவைப் பாடுவதாகும்.*

### 3.6.1. கங்கைப் போர் II அல்லது குயிலாலயப் போர்

*சேரன் செங்குட்டுவனின் இரண்டாவது வடதிசைப் படையெடுப்பு எனச் சிலப்பதிகாரத்திலேயே இப்போர் மிகவும் விரிவுபட உரைக்கப்பட்டுள்ளது. படையெடுப்பிற்குக் காரணங்கள் இரண்டு. அவை : கண்ணகிக்குச் சிலைக்கான கல் கொணர்வது; வடதிசையரசர்களின் பாலகுமாரன் மக்களாகிய கனகனும், விசயனும் தமிழரசரை ஏளனமாகப் பேசியதே ஆகும்.*

*இதனால் சேரன் செங்குட்டுவன் ஒரு நெடுமொழி கூறிப் புறப்பட்டான். 'இந்த வடபுல ஆரிய அரசரை முறியடித்து அவர்கள் தலைமீதே கண்ணகிச் சிலைக்கான கல்லை ஏற்றிக் கொண்டுவருவேன் அப்படிச் செய்யாவிட்டால் நான் செங்கோலரசனல்ல!' என்று சீற்றத்துடன் எழுந்தான். குயிலாலயம் என்ற இடத்தில் ஆரிய அரசர்கள் பெரும் படையுடன் தமிழ்ப்படையை வந்து எதிர்த்தனர். கனக விசயர் தலைமையில் உத்தரன், விசித்திரன், உருத்திரன், பைரவன், சித்திரசிங்கன், தனுத்தரன், சுவேதன் ஆகிய பல அரசர்கள் தங்கள் படைகளுடன் வந்து குவிந்தார்கள்.*

போர் வெறிகொண்ட யானையைப்போல் சேரன் ஆரிய அரசர்களையும் கடை மாக்களையும் கொன்று களம் குவித்தான். அம்மன்னர் அவன் திசையில் திரும்ப அஞ்சினர். ஆரியப்படை குறையத் தமிழ்ப் படை அதைச் சூழ்ந்து நெருங்கியது. ஒரு பகல் எல்லைக்குள் அவ்வளவு பெருந்தொகையான படை வீரர்களைக் கூற்றுவன் கூடக் கொன்று குவிக்க முடியுமா! என்று வியந்து ஆரிய அரசர் மலைத்தனர். இறுதியில் படைகளெல்லாம் தோற்றபின் அவர்கள் சிவ வேடம் பூண்டு ஒளிந்தனர். இளங்கோவடிகள் மொழிகளில்,

**வாய்வாளா மையின் வண்தமிழ் இகழ்ந்த**
**காய்வேல் தடக்கைக் கனகனும் விசயனும்**
**ஐம்பத்திருவர் கடுந்தேராளரொடு**
**செங்குட்டுவன்தன் சினவலைப்படுதலும்**
**சடையினர் உடையினர் சாம்பற் பூச்சினர்**
**பீடிகைப் பீலிப்பெருநோன்பாளர்,**
**பாடு பாணியர் பல்இயத் தோளினர்**
**ஆடு கூத்தர் ஆகி எங்கணும்**
**ஏந்துவாள் ஒழியத் தாந்துறை போகிய**[39]

அறியலாம். மேலும், இப்போரைப் பற்றிப் பதிற்றுப்பத்துப் பதிகத்திலும் குறிக்கப்பட்டுள்ளது.

**கடவுள் பத்தினிக் கற்கோள் வேண்டிக்**
**கான்நவில் கானம் கணையிற் போகி,**
**ஆரிய அண்ணலை வீட்டிப் பேர்இசை**
**இன்பல் அருவிக் கங்கை மண்ணி;**
**இனம்தெரி பல்ஆன் கன்றொடு கொண்டு**[40]

என்பதனால் அறிய முடிகிறது. இவ்வெற்றியின் பயனாக வடக்கிலிருந்து பல ஆநிரைகளையும் கைக்கொண்டு வந்ததாக இப்பதிகம் குறிக்கிறது. எனவே வெட்சித் திணையிலும் போர் நிகழ்ந்ததை அறியமுடிகிறது.

### 3.7. பாடாண் திணைப் போர்

*பாடப்படும் ஆண்மகனது ஒழுகலாறுகளான வீரம், கல்வி, தறுகண், கொடை பற்றிப் பாடுவது பாடாண் திணை எனப்படும்.*

### 3.7.1. குளமுற்றத்துப் போர்

*கிள்ளிவளவன் செய்த போர்கள் பல என்பது பல பாடல்களால் விளங்குகிறது. இடம் குறிக்காமலே பல பாடல்கள் போர்களைக் குறிக்கின்றன. இவன் பகைவர் அரண்கள் பலவற்றை அழித்தவன்; அரசர் பொன் மகுடங்களைக் கொண்டு தனக்கு வீரக்கழலைச் செய்து கொண்ட வலியவன் என்பதை,*

**நீயே, பிறர்ஓம்புறு மறமன் எயில்**
**ஓம்பாது கடந்து அட்டவர்**
**முடிபுனைந்த பசும் பொன்னின்**
**அடிபொலியக் கழல் தைஇய**
**வல்லாளனை வயவேந்தே**[41]

*என்னும் புறநானூற்றுப் பாடல் மூலம் அறியலாம். எட்டுத் திசையும் எரி கொளுத்திப் பலகேடுகள் நிகழப் பகைவர் நாட்டை அழித்தான்; காற்றுடன் எரி நிகழ்த்தியவர் போன்ற செயலையுடைய போரில் மிக்கவன். வேந்தரது பாடி வீட்டின்கண் குருதிப் பரப்பின் கண்ணே யானையைக் கொன்று புலாலையுடைய போர்க் களத்தை உண்டாக்கிப் போர் செய்யும் படையை உடையவன்; மண்டிய போரில் எதிர்நின்று வெல்லும் படையையும் திண்ணிய தோள்களையும் உடையவன்; வாள் வீரரும் யானையும் குதிரையும் உதிரம் கொண்ட போர்க்களத்தில் மாய, நாடோறும் எதிர் நின்று கொன்று நமக்கு நல்விருந்தளித்தவன்; அப்படிப்பட்ட "கிள்ளிவளவன் பாண்டியரையும் சேரரையும் அவர்கள் நாட்டுக்குத் துரத்திச் சென்றிருக்க வேண்டும். சேர நாட்டின் குளமுற்றம் என்ற இடத்தில் நிகழ்ந்த ஒரு போரில் அவன் இறந்திருக்கலாம். குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் என்று*

பின்னாளில் அவனுக்கு வழங்கிய பெயர் இதனைக் காட்டுகிறது."[42] குளமுற்றம் ஒரு போர்க்களத்தின் பெயரன்று; சோழன் சென்று தங்கியிருந்த ஓர் இடப்பெயரே என்று கருதுபவரும் உண்டு.

### 3.7.2. தீவுப் போர்

கடற்கொள்ளைக்காரர் கடற்கரை அடுத்த ஒரு தீவில் கோட்டை கட்டி வாழ்ந்தனர். கடலே தமக்கு முழுநிறை பாதுகாப்பு அளிக்கும் என்று எண்ணினர். ஆனால் குட்டுவன் வீரர்கள் யானைமீது நின்று கடலகத்தில் இறங்கி வேல்களை வீசினர். இதனால் பகைவரின் பாதுகாப்பு உடைபட்டது. இதனை,

**பல்செருக் கடந்த கொல்களிற்று யானைக்**
**கோடுநரல் பௌவம் கலங்க வேலிட்டு**
**உடைதிரைப் பரப்பில் படுகடல் ஓட்டிய**
**வெல்புகழ் குட்டுவன் கண்டோர்[43]**

என்றும்

**கடும்பரிப் புரவி ஊர்ந்தநின்**
**படுந்திரைப் பனிக்கடல் உழந்த தாளே[44]**

**கெடலரும் பல்புகழ் நிலைஇ நீர்புக்குக்**
**கடலொடு உழந்த பணித்துறைப் பரதவ![45]**

என்ற அடிகளில் அவன் அஞ்சா நெஞ்சுடன் கடலகம் புகுந்து தன் எதிரிகளுடன் போரிட்ட பரதவன் (அ) கடல் மறவன் எனவும் பாராட்டப்படுகிறான்.

**பொங்கிரும் பரப்பிற் கடல் பிறக்கோட்டி[46]**

என்று சிலப்பதிகாரமும் இச்செயல் குறித்துள்ளது.

பதிற்றுப்பத்து ஐந்தாம்பத்தின் பதிகத்தால் செங்குட்டுவன் தந்தை வடநாட்டினருக்கு அச்சந்தரும் கொடியையுடைய நெடுஞ்சேரலாதன்

என்றும் அவன் தாய் சோழன் மகள் மணக்கிள்ளி என்றும் கூறச் சிலப்பதிகாரத்தில் செங்குட்டுவனின் தாயே கரிகாலன் மகள் நற்சோணை என்று கூறுகிறது. ஆனால், இரண்டும் ஒரே இளவரசிக்குரிய பெயர் என்றும் கொள்ளப்பட்டு வருகிறது.

### 3.8. பொதுவியல் திணைப் போர்

வெட்சி முதல் பாடாண் இறுதியாகவுள்ள ஒன்பது திணைகளுக்கும் பொதுவாய் உள்ளவற்றையும் அவற்றில் கூறாதனவற்றையும் கூறுவது பொதுவியல் திணை எனப்படும்.

### 3.8.1. கழுமலப் போர்

சோழன் செங்கணான் சேரமான் கணைக்கால் இரும்பொறையுடன் கழுமலத்தில் போர் புரிந்தான் என அறிகிறோம். கணைக்கால் இரும்பொறை, சோழனது குடவாயில் கோட்டத்தில் சிறைவைக்கப்பட்டதாகவும், நீர் கேட்ட போது சிறைக் காவலர் அவனை மதியாது காலந்தாழ்த்தியதால் அவன் தன்மான உணர்ச்சி கொண்டு உணவு, நீர் மறுத்து உயிர்விட்டான் என்றும் தமிழ் மரபு கூறுகிறது. ஆனால் கணைக்கால் இரும்பொறையின் பாடல் ஒன்று,

**குழவி இறப்பினும் ஊன்தடி பிறப்பினும்**
**'ஆள் அன்று' என்று வாளில் தப்பார்**
**தொடர்ப்படு ஞமலியின் இடர்ப்படுத்து இரீஇய**
**கேள்அல் கேளிர் வேளாண் சிறுபதம்**
**மதுகை இன்றி வயிற்றுத்தீத் தணியத்**
**தாம்இரந்து உண்ணும் அளவை**
**ஈன்ம ரோஇவ் வுலகத் தானே**[47]

என்பதால் அறியலாம். சேரமானை விடுவிப்பதற்காகப் பொய்கையார் என்னும் புலவர் கழுமலப் போர் பற்றிக் களவழி நாற்பது பாடல்களை இயற்றினார். ஆனால் களவழி இயற்றிய பொய்கையார் சங்க

இலக்கியத்திலேயே சேரன் கோக்கோதை மார்பனைப் பாடிய பொய்கையார் அல்லர் என்று வரலாற்றாசிரியர் பலர் மறுக்கின்றனர்.

இக்கருத்து பொருத்தமற்றது. செங்கணான் சங்ககாலத் தமிழகத்தின் கடைசிச் சோழனாயிருத்தல் வேண்டும். மேலும், இவன் எழுபது கோயில்களைக் கட்டியவன் என்பதால் சங்ககாலம் அன்று என்பது தெரிகிறது. ஆனால், சங்க காலத் தொடக்கத்திற்குப் பொருந்தும் கடைச் சங்கத்திற்குப் பொருந்தாது. எனவே, கடைச்சங்க காலமாக இருக்கலாம் என்றும் வரலாற்று ஆய்வாளர்கள் கருதினர்.

### 3.9. வஞ்சி, உழிஞைப் போர்

பகைவருடன் போர்த் தொடுத்தலும், பகைவரின் மதில் வளைத்தலும் வஞ்சி, உழிஞை ஆகும். அவ்வகைப் போர்கள் குறித்து இங்கு விளக்கப்படுகின்றது.

### 3.9.1. வியலூர்ப் போர்

சேரன் செங்குட்டுவனின் மற்றுமொரு போர் வியலூர்ப் போர். வியலூர் தஞ்சையில் உள்ள திருவிசலூர் என்று சிலர் கூறுவர். ஆனால்,

**கறிவளர் சிலம்பின் துஞ்சும் யானையின்**
**சிறுகுரல் நெய்தல் வியலூர் எறிந்தபின்**[48]

என்ற சிலப்பதிகார அடிகளால் அது பாலி (அ) குடகு நாட்டு வியலூரே என்று தெரிகிறது. மிளகு வளர்வதும், யானை மிகுதியாயுள்ளதும் ஒருங்கேயிருப்பது மேல்கரையிலேயேயாகும் என்று கா.அப்பாத்துரை கூறுகிறார். போருக்குப்பின் வியலூர் எரிக்கப்பட்டது என்று கூறியமையால் வஞ்சித் திணையாயிற்று. வியலூர் முற்றுகையைக் கிட்டத்தட்ட இதே சொற்களிலேயே பதிற்றுப்பத்துப் பதிகம் தருகிறது.

**உறுபுலி அன்ன வயவர் வீழச்**
**சிறுகுரல் நெய்தல் வியலூர் நூறி**[49]

என்பதினால் வியலூர் கோட்டை நகரம் என்று அறிகிறோம்.

### 3.10. உழிஞை, வாகைப் போர்

பகை மதில் வளைத்தும், போரில் வெற்றி பெற்றதும் பாடுவது உழிஞை, வாகைத் திணை ஆகும். அத்திணைப் போர் குறித்த சான்றுகள் எடுத்துக் காட்டப்படுகின்றன.

#### 3.10.1. நேரிவாயில் போர்

உழிஞை என்பது மாற்றான் மதிலை வளைத்தலைக் குறிக்கும். உழிஞைத் திணையில் அமைந்த போரான நேரிவாயில் போர் என்பது இன்றைய திருச்சிராப்பள்ளி நகரின் பகுதியாகும். இது பண்டைய உறையூரின் தெற்கு வாயில் அருகே அமைந்த ஊர் ஆகும். அதில் நடைபெற்ற போர் நேரிவாயில் போர். இது சோழர் அரசுரிமைக்காகவே எழுந்தது. சேரன் செங்குட்டுவனின் தாய், சோழர் குடிப்பிறந்தவள். ஆதலால் அரசுரிமை கோரிய கிள்ளிவளவன் அவன் மைத்துனனாய் இருந்தான். ஆனால் அதே அரசுரிமைக்கு வேறு ஒன்பது சோழர்குடி இளவல்கள் போட்டியிட்டுக் கிள்ளி வளவனுக்கு எதிராகக் கிளர்ந்தெழுந்தனர். செங்குட்டுவன் கிள்ளிவளவனை ஆதரித்து ஒன்பது இளவரசரையும் ஒருங்கே எதிர்த்து நின்று போரிட்டான்.

போர் ஒரே பகலில் நடைபெற்று முடிந்துவிட்டது. செங்குட்டுவன் ஒன்பது சோழ இளவல்களையும் களத்தில் வென்று முறித்தான். தன் மைத்துனன் கிள்ளிவளவனையே சோழமன்னனாக முடிசூட்டினான். மணிமேகலைக் காப்பியத்தில் இடம்பெறும் சோழன் இவனே. இப்போர் பற்றிப் பதிற்றுப்பத்துப் பதிகமும் சிலப்பதிகாரமும் விரித்துரைக்கின்றன.

**குஞ்சர ஒழுகை பூட்டி, வேந்திறல்**
**ஆராச் செருவின் சோழர்குடிக்கு உரியோர்**
**ஒன்பதின்மர் வீழ, வாயிற்புறந்து இறுத்து;**
**நிலைசெருவின் ஆற்றலை அறுந்து**[50]

என்று பதிற்றுப்பத்துப் பதிகமும்

**ஆர்புனை தெரியல் ஒன்பது மன்னரை**

**நேரி வாயில் நிலைச்செரு வென்று**[51]

*என்று சிலப்பதிகாரமும் கூறுகின்றன. மேலும் சிலப்பதிகாரத்தில், செங்குட்டுவனைப் புகழ்ந்து கூறும் முறையில் மாடலன்,*

**---------------------------------------------------------------- நின்**

**மைத்துன வளவன் கிள்ளியொடு பொருந்தா**

**ஒத்த பண்பினர் ஒன்பது மன்னர்**

**இளவரசு பொறாஅர், ஏவல் கேளார்,**

**வளநாடு அழிக்கும் மாண்பினர் ஆதலின்,**

**ஒன்பது குடையும் ஒரு பகல் ஒழித்து, அவன்**

**பொன்புனை திகிரி ஒருவழிப் படுத்தோய்!**[52]

*என்று இப்போரை விளக்கமாக எடுத்துரைத்துள்ளான்.*

### 3.10.2. ஆவூர்ப் போர்

*சோழன் நலங்கிள்ளி போர் வெறியும் இறுமாப்பும் தற்பெருமையும் உடையவன். பண்டைய சோழரைப் போலவே அவனிடம் சிறந்த நிலப்படையும் கடற்படையும் இருந்தன. அவற்றின் உதவியால் பழம் புகழ்க் கரிகாலனைப்போலத் தமிழகம் முழுவதும் வென்று வடபுலங்களையும் கீழடக்கிப் பேரரசனாக வேண்டும் என்ற பேரவா அவனுக்கு மிகுதியாயிருந்தது. சோணாட்டிலிருந்து வலஞ்சுற்றிப் புறப்பட்டுப் பாண்டிய நாட்டையும் சேரநாட்டையும் நீ வென்றுவிட்டதால் இனி வடக்கே படையெடுக்கக்கூடும் என்று வடதிசையரசர் நடுங்கினர் என்று கோவூர்கிழார் அவன் கால நிலையைச் சுட்டிக் காட்டுகிறார்.*

**குணகடல் பின்ன தாகக் குடகடல்**

**வேண்தலைப் புணரிநின் மான்குளம்பு அலைப்ப,**

**வலமுறை வருதலும் உண்டு'என்று அமைந்து.**

**நெஞ்சு நடுங்கு அவலம் பாயத்**

**துஞ்சாக் கண்ண, வடபுலத் தரசே![53]**

என்பதனால் அறியலாம். பேரவாவுடைய இந்த அரசனுக்கு அவன் ஆட்சியின் முற்பகுதி முழுவதும் அருகிலேயே எதிர்ப்பு இருந்தது. சோழர் குடியின் இளவரசனான நெடுங்கிள்ளி என்பவன் அவனுக்கெதிராக எழுந்து உறையூர், ஆவூர் ஆகிய நகரங்களைக் கைப்பற்றி ஆண்டு வந்தான். நலங்கிள்ளி பெரும் படைகளுடன் புறப்பட்டுச் சென்று அவனை அடக்கி ஒடுக்க முற்பட்டான்.

நலங்கிள்ளிக்கு மாவளத்தான் என்று ஒரு தம்பி உண்டு. நெடுங்கிள்ளிக் கெதிராகப் போரிடும்படி அவனை நலங்கிள்ளி அனுப்பினான். நெடுங்கிள்ளி அச்சமயம் கோவூரிலிருந்தான். மாவளத்தான் அந்நகரை முற்றுகையிட்டான். இம்முற்றுகை பற்றிய இரண்டு செய்திகள் நமக்குத் தெரிகின்றன. அவை,

இளந்தத்தன் என்னும் புலவர் நலங்கிள்ளியைப் பாடிமுடித்த பின்னர் நெடுங்கிள்ளியையும் பாட ஆவூர் வந்தார். அப்புலவரை நலங்கிள்ளியின் ஒற்றன் என்றெண்ணி நெடுங்கிள்ளி கொல்ல முற்பட்டான். கோவூர்கிழார் ஓடோடிச் சென்று புலவர்களின் நடுநிலையுரிமையை எடுத்துரைத்துப் புலவரைக் காத்தார் என்று புறப்பாடல் 47 வழியாக அறிய முடிகிறது.

ஆவூர் முற்றுகை, நாள் கணக்காக, வாரக் கணக்காக நீடித்தது. நெடுங்கிள்ளி வெளிவந்து போரிடாமல் கோட்டைக்குள்ளேயே அடைப்பட்டுக் கிடந்தான். இதனால் நகரத்தின் உள்ளிருந்த மக்களுக்கும் உயிரினங்களுக்கும் பெருத்த முட்டுப்பாடு ஏற்பட்டது. கோவூர்கிழார் மீண்டும் நெடுங்கிள்ளியிடம் சென்று வீர அறிவுரை தந்தார். ‘வீரமரபில் வந்தவன் நீ, குடிகள் வருந்த இப்படி அடைப்பட்டுக்கிடப்பது நன்றன்று. போர் புரிய விருப்பம் இருந்தால் ஆண்மையோடு வெளியே வந்து வெற்றி தேடு. இல்லாவிட்டால் நாட்டுக்குரியவனிடம் கோட்டையை விட்டுவிடு’ என்றார்.

**அறவை ஆயின், நினதெனத் திறத்தல்**
**மறவை ஆயின் போரொடு திறத்தல்**
**அறவையும் மறவையும் அல்லை ஆகத்,**
**திறவாது அடைத்த திண்ணிலைக் கதவின்**
**நீள்மதில் ஒருசிறை ஒடுங்குதல்**
**நாணுத்தக உடைத்து, இது காணுங்காலே**[54]

*எனும் பாடல்வழி நெடுங்கிள்ளி இச்சுடு சொற்களால் உளங்கிளறப் பெற்று வெளியே வந்து போரிட்டான். அவன் தோற்றுவிடவே, ஆவூரைத் துறந்துவிட்டு உறையூர் சென்று தங்கினான். சில நாட்களுக்குள் நலங்கிள்ளி அங்கும் வந்து முற்றுகை தொடங்கினான். ஆவூரில் நகருக்குள்ளிருந்து நாள்கள் கழித்தது போலவே, உறையூரிலும் நாள்கள் கடத்தினான். இந்தத்தடவை கோவூர்கிழார் நெடுங்கிள்ளிக்கு அறிவுரை கூறவில்லை, நலங்கிள்ளிக்கே கூறினார்.*

**இரும்பனை வெண்தோடு மலைந்தோன் அல்லன்;**
**கரும்சினை வேம்பின் தெரியலோன் அல்லன்;**
**நின்ன கண்ணியும் ஆர்மிடைத்தன்றே! நின்னோடு**
**பொருவோன் கண்ணியும் ஆர்மிடைந் தன்றே!**
**ஒருவீர் தோற்பினும், தோற்பதும் குடியே!**[55]

*என்பதனால், நீங்கள் இருவரும் சோழர் அத்திமாலை அணிந்தவர்களே; எவர் தோற்றாலும் தோல்வியறியாச் சோழர் குடிக்குத்தான் இகழ்ச்சி உண்டாகும் என்று கூறிப் புலவர், அவரிருவரையும் நண்பராக்கினார். ஆனாலும், இருவரும் மீண்டும் போர்களில் ஈடுபட்டனர். இப்போர்களில் ஒன்றே காரியாற்றுப்போர். இதே இடத்தில் பின்னும் போர்கள் நடந்ததால் இதை நாம் முதற்காரியாற்றுப் போர் எனச் சுட்டலாம்.*

### 3.11. வாகை, காஞ்சித்திணைப் போர்

*வெற்றியையும், நிலையாமையையும் எடுத்துரைக்கும் திணைப் போர் நிலைகள் இங்கு விளக்கப்படுகின்றன.*

### 3.11.1. தலையாலங்கானத்துப் போர்

தலையாலங்கானம் என்பது சோழநாட்டின் பகுதி. இது தற்காலத் தஞ்சை மாவட்டத்தைச் சேர்ந்த நன்னிலம் வட்டத்தில் உள்ள ஓர் ஊர். பிற்காலங்களில் இது தலையாலங்காடு என்று வழங்கிற்று. தேவாரத் தலங்களில் திருநாவுக்கரசரால் பாடப்பட்ட சிவநெறிக்குரிய ஒரு திருப்பதியாயிற்று.

சங்க இலக்கியக் காலப் போர்களிலே தலைசிறந்த பெரும் புகழ்ப்போர் தலையாலங்கானத்துப் போராகும். அப்போரின் புகழில் ஈடுபட்டு வியத்தகு வீரக்காட்சிகளையும் அதன் பேராரவாரத்தையும் அதன்பின் ஏற்பட்ட அமளி குமளிகளையும் கண்டும் கேட்டும் அவற்றை வருணனைகளாகவோ, உவமை, அடைமொழிகள் வாயிலாகவோ எடுத்தாளாத புலவர் அந்நாளில் இல்லை எனலாம். அரசுரிமை பெறும் சமயம், இரண்டாம் நெடுஞ்செழியன் வயதுவராத, முதிரா இளைஞனாயிருந்தான் என்பதை இடைக்குன்றூர்க்கிழார் பாடல் வாயிலாக,

**கிண்கிணி களைந்தகால் ஒண்கழல் தொட்டுக்**
**குடுமி களைந்தநுதல் வேம்பின் ஒண்தளிர்**
**நெடுங்கொடி உழிஞைப் பவரொடு மிலைந்து**[56]

என்பதனால் பாண்டி நாட்டைக் கைப்பற்றிவிட இதுவே தருணம் என்று மற்ற அரசர்களும் இரண்டு பேரரசர்களும் ஐந்து வேளிர்களும் சேர்ந்து ஒருங்கு திரண்டு தாக்கினார்கள். எதிர்த்த வேளிர்கள் திதியன், எழினி, எருமையூரன், இளங்கோ வேண்மாள், பொருநன் ஆகியவர்கள். பேரரசருள் இப்போரில் ஈடுபட்ட சேரன் யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை என்று அறிகிறோம். போரில் ஈடுபட்ட சோழன் இராசசூயம்வேட்ட பெருநற்கிள்ளி என்று சிலர் கூறியுள்ளனர். ஆனால், இது பொருத்தமற்றது. அவன் கிள்ளி வளவனாகவே இருத்தல் வேண்டும் என்று கூறலாம். ஏனெனில் தலையாலங்கானத்துக்கு முற்பட்ட கூடற்பறந்தலைப்போர் அவன்

முயற்சியேயாகும். தமிழ் தலைமயங்கிய தலையாலங்கானம் என்று இப்போர்க் களத்தைப் புலவர் குடபுலவியனார் பாடும் பாடல் வருமாறு,

**இமிழ்கடல் வளைஇய ஈண்டுஅகல் கிடங்கைத்**
**தமிழ்தலை மயங்கிய தலையாலங் கானத்து,**
**மன்னுயிர்ப் பன்மையும், கூற்றத்து ஒருமையும்**
**நின்னொடு தூக்கிய வெண்வேல் செழிய!**
**'இரும்புலி வேட்டுவன் பொறிஅறிந்து மாட்டிய**
**பெருங்கல் அடாரும் போன்ம் என விரும்பி,**
**முயங்கினேன் அல்லனோ யானே; மயங்கிக்**
**குன்றத்து இறுத்த குரீஇஇனம் போல,**
**அம்புசென்று இறுந்த அரும்புண் யானைத்**
**தூம்புடைத் தடக்கை வாயொடு துமிந்து,**
**நாஞ்சில் ஒப்ப நிலம்மிகைப் புரள**
**எறிந்துகளம் படுத்த ஏந்துவாள் வலத்தர்**
**எந்தையொடு கிடந்தோர்எம் புன்தலைப் புதல்வர்**[57]

என்கிறது. தமிழகத்து வீரம் முழுவதுமே போரில் ஈடுபட்டிருந்தது என்பதையும் இருபக்கத்தும் தமிழர்களே நிறைந்திருந்தாலும் எருமையூரன் முதலான வடுகர்களின் படைகளும் இடை கலந்திருந்தன என்பதையும் இது நினைவூட்டுகிறது. இத்தனை அரசர் பாண்டியனை எதிர்க்க ஒன்றுபட்டாலும் போர் நடைபெற்ற இடம் பாண்டிய நாடன்று, சோணாடே என்பது குறிப்பிடத்தக்கது. சோழனே கூட்டுறவின் இலக்கும் உறுப்பாகவும் தலைமை உறுப்பாகவும் இருந்தான் என்பதில் ஐயமில்லை.

படைதிரண்டு வருவதறிந்து பாண்டியன் முன்னேறிச் சென்று சோணாட்டில் தலையாலங்கானத்தருகே எதிரிகளைத் தாக்கியிருக்கக்கூடும்; அல்லது படையெடுத்த எதிரிகளை முறியடித்துத் துரத்திச் சென்று தலையாலங்கானத்தை அடைந்ததும் நெருங்கித் தாக்கியிருக்கக்கூடும். எவ்வாறாயினும் பாண்டியன் எழுவரையும் விஞ்சிய வீரமுடையவனாய் இருந்தான் என்பதை எளிதில் அறியலாம்.

“எதிரிகள் பல திசையினர்; ஆதலால் சோணாட்டில் தலையாலங் கானத்திலேயே அவர்கள் ஒருங்கே கூடிப் புறப்பட ஏற்பாடு செய்திருக்கவேண்டும். அவர்கள் கூடுமிடத்திலேயே நெடுஞ்செழியன் அவர்களைத் துணிவுடன் சென்றெதிர்த்தான் என்பதே பொருத்தமுடையதென்று தோன்றுகிறது.”[58]

போர் தொடங்கும் சமயம் பாண்டியன் எவ்வளவு இளைஞனாயிருந்தான் என்பதை இடைக்குன்றூர்க் கிழார் என்ற புலவர் (புறம்.77) பாடலின் வழியாக நமக்குப் படம்பிடித்துக் காட்டியுள்ளார். நெடுஞ்செழியன் படைகள் பெரியதாயிருந்தாலும் ஏழு படைகள் திரண்ட எதிரியின் படைப்பெருங்கடலை நோக்க, அது சிறியதாகவேயிருந்தது. எனவே, போரின் தொடக்கத்தில் எவரும் எதிரிகளின் வெற்றியை எதிர்பார்த்திருக்க முடியும். ஆனால் பாண்டியன் மதுரைவாயில் வெளியிலுள்ள பொய்கையில் குளித்துத் தாரும் கண்ணியும் படைக்கலங்களும் சூடிப் போர்க்களத்துக்கு வந்த சமயம் அவனுடனிருந்த இடைக்குன்றூர்க்கிழார் ‘எதிரிகள் எத்தனைபேர் பிழைத்தார்களோ’ என்றே குறிக்கிறார்.

**மூதூர் வாயில் பனிக்கயம் மண்ணி**
**மன்ற வேம்பின் ஒண்குழை மலைந்து**
**தெண்கிணை முன்னர்க் களிற்றின் இயலி**
**வெம்போர்ச் செழியனும் வந்தனன்; எதிர்ந்த**
**வம்ப மள்ளரோ, பலரே,**
**எஞ்சுவர் கொல்லோ பகல்தவச் சிறிதே![59]**

என்பதனால் வெளிப்படுகிறது. இளையன் என்று தன்னை ஏளனமாகக் கருத, வெற்றி தமதே என்ற இறுமாப்புடன் படையெடுத்த எதிரிகளைக் கண்டு பாண்டியன் கடுஞ்சினம் கொண்டான். ‘அவர்களைச் சிதறடித்து அவர்கள் முரசங்களைக் கைக்கொள்வேன், கொள்ளாவிட்டால் தான் கொடுங்கோலனாகுக. புலவர் என்னைப் பாடா தொழிக. இரவலர்க்கு

*ஈயாத பண்புடையவனாகுக!' என்று வஞ்சினம் கூறுகிறான். இவ்வஞ்சினம் அவனே இயற்றிய ஒரு புறப்பாடலாக நமக்குக் காட்சிதருகிறது எனலாம்.*

**நகுதக் கனரே நாடுமீக் கூறுநர்**

**இளையன் இவன்என உளையக் கூறிப்**

**-----------------------------------------------------------------------**

**சிறுசொற் சொல்லிய சினங்கெழு வேந்தரை**

**அரும்சமம் சிதையத் தாக்கி முரசமொடு**

**ஒருங்குஅகப் படேஎன் ஆயின்..........**

**குடிபழி தூற்றும் கோலேன் ஆகுக!**

**----------------------------------------------------------------**

**புலவர் பாடாது வரைக என் நிலவரை!**

**------------------------------------------------------------------**

**இரப்போர்க்கு ஈயா இன்மையான் உறவே**[60]

*"இவ்வாறு பகைவர் எழுவரையும் வெற்றி கொண்டமையாலே தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டிய நெடுஞ்செழியன் என அழைக்கப்பட்டான்"*[61] *என்கிறார் அரங்க. இராமலிங்கம்.*

### 3.12. வாகை, பொதுவியல் திணைப் போர்

*வெற்றியையும் பொதுமை நிலையையும் எடுத்துக்காட்டும் போர்கள் இங்கே விளக்கப்படுகின்றது.*

#### 3.12.1. வெண்ணிப் போர் - II அல்லது வெண்ணிப் பறந்தலைப் போர்

*வெண்ணிப் பெருவெளியில் நடந்த இப்போர் சேரமன்னன் பெருஞ்சேரலாதனுக்கும் சோழ மன்னன் கரிகாலனுக்கும் இடையே நடைபெற்றது. வெண்ணிப் பறந்தலை என்னும் இடத்தில் நடைபெற்ற போர் கோரமான போராயிருந்திருக்க வேண்டும் என்று புறநானூற்றுப் பாடல் ஒன்று கூறுகிறது. இதனை,*

**மண்முழா மறப்பப் பண்யாழ் மறப்ப,**

**இருங்கட் குழிசி கவிழ்ந்து இழுது மறப்பச்**

**சுரும்புஆர் தேறல் சுற்றம் மறப்ப,**

**உழவர் ஓதை மறப்ப, விழவும்**

**அகலுள் ஆங்கண் சீறூர் மறப்ப..........**

**புறப்புண் நாணி, மறத்தகை மன்னன்**

**வாள் வடக்கு இருந்தனன்............**[62]

*என்னும் பாடலால் முரசு முழங்கவில்லை, யாழ் இசையை மறந்தது. அகன்ற பால் வட்டில்கள் பாலின்றி வறண்டு கிடக்கின்றன. சுறுசுறுப்பான தேனீக்கள் திரட்டிய தேனை இப்போது தீண்டுவாரில்லை. உழவர் கழனிகளில் உழுதலைத் தவிர்த்தனர். ஊர்ப்புற வெளிகள் விழாவயரும் கூட்டங்கள் இன்றி வெறிச்சென்றிருந்தன. சேரமான் பெருஞ்சேரலாதனும் கரிகாலனும் நேருக்கு நேர் இறுதிவரை போரிட்டதில் பெருஞ்சேரலாதன் மார்பில் வேல் பாய்ந்தது. மார்பில் மட்டுமின்றி முதுகிலும் புண்பட்டுவிட்டது. முதுகில் புண் என்பது பொதுவாகக் கோழையின் சின்னம். இங்கே சேரன் புண் இத்தகையதல்ல ஆயினும் அவச் சொல்லுக்கு இடமேற்பட்டது கண்டு, போரை நிறுத்தி வடக்கிருந்து உயிர்விடத் துணிந்தான் என்கிறார் கழாத்தலையார் என்னும் புலவர்.*

*இப்போரில் கரிகாலனின் வெற்றியையும் சேரமான் பெருஞ்சேரலாதனின் மான உணர்வையும் வெண்ணிக்குயத்தியார் என்னும் பெண்பாற் புலவர்,*

**களிஇயல் யானைக் கரிகால் வளவ,**

**சென்றுஅமர்க் கடந்த நின் ஆற்றல் தோன்ற**

**வென்றோய், நின்னினும் நல்லன் அன்றே,**

**கலிகொள் யாணர் வெண்ணிப் பறந்தலை**

**மிகப்புகழ் உலக மெய்திப்**

**புறப்புண் நாணி வடக்கு இருந்தோனே**[63]

*என்னும் புறப்பாட்டின் மூலம் எடுத்துரைக்கிறார்.*

**தொகுப்புரை**

'சங்க இலக்கியத்தில் போர்' எனும் தலைப்பின்வழி பெறப்பட்ட ஆய்வு முடிவுகள் தொகுப்புரையாக இங்கே இடம்பெறுகின்றன.

- மனித வரலாற்றில் ஒவ்வொரு காலக்கட்டத்திலும் ஒவ்வோர் இயல்பு போற்றப்படுவதுண்டு. சங்க கால மக்கள் அகம், புறம் ஆகிய இரு பொருட்களையும் சிறப்பாகப் போற்றினர். அவற்றுள் அகம் என்பது காதலையும், புறம் என்பது வீரத்தையும் முதன்மையாகக் கொண்டது.

- சங்க காலத்தில் மறம் சிறப்பாகப் போற்றப்பட்டது. ஆகவே, எண்ணற்ற போர்கள் நடந்தன. அதில் அரசர்களான சோழர் புரிந்த போர்கள், சேரர் புரிந்த போர்கள், பாண்டியன் புரிந்த போர்கள் மற்றும் குறுநிலமன்னர்கள் மற்றும் படைத்தளபதிகள் புரிந்த போர்கள் ஆகியவை எடுத்துக்காட்டப்பட்டுள்ளன.

- சங்ககாலத்தில் நடைபெற்ற போர்கள் திணை அடிப்படையில் பகுத்துப் பார்க்கப்பட்டு, மண்ணாசையின் காரணமாக நிகழ்ந்த வஞ்சித் திணைப் போர்களாகக் காரியாற்றுப்போர் II, திருக்கோவலூர் போர் I, திருக்கோவலூர் போர் II நடைபெற்றதையும் அறியமுடிகிறது.

- காஞ்சி என்பது நிலையாமையாகிய அழிவை உணர்த்துவது. காஞ்சித் திணைப் போராக மோகூர்ப் போர் நடைபெற்றதும் அறியமுடிகிறது.

- மாற்றான் மதில் வளைத்தலான உழிஞைத் திணைப் போர்களாக மோகூர்ப் போர், சோழன் தித்தன், கட்டிக்குமிடையே நடைபெற்ற போர், இடும்பில், கொடுகூர் வெற்றிகள், வெண்ணில் போர், தகடூர்ப் போர், கூடற்பறந்தலைப் போர், கங்கைப் போர் நடைபெற்றதையும் அறியமுடிகிறது.

- இருபடைகளும் தம்முள் மாறுபட்டு எதிர் எதிர் நின்று போர் புரிதலான தும்பைத் திணைப் போர்களாகச் சோழன்

பெருவிறல்கிள்ளி, குடக்கோ நெடுஞ்சேரலாதனுக்கும் இடையே நடைபெற்ற போர், வடபுலக் கங்கைப்போர், காரியாற்றுப் போர், கொங்கர் செங்களம் போர் நடைபெற்றதையும் அறியமுடிகிறது.

- வென்றவனது சிறப்பினைக் கூறுவதாக அமைந்த வாகைத்திணைப் போர்களான வாகைப் பறந்தலைப் போர், தகடூர்ப் போர், கானப் பேரெயில் அழிவு, கானப் பேரெயில் போர், வெண்ணில் போர் III, நடைபெற்றதையும் அறியமுடிகிறது.
- பாடப்படும் ஆண் மகனது ஒழுகலாறுகளைக் கூறுவதுமான பாடாண் திணைக்குரிய குளமுற்றத்துப் போர் நடைபெற்றதை அறியமுடிகிறது.
- போர்க்களத்தில் நடைபெறும் பொதுச் செய்திகளை எடுத்து இயம்பும் பொதுவியல் திணைப் போர்களாகக் கழுமலப் போர் நடைபெற்றதை அறியமுடிகிறது.
- உழிஞை, வஞ்சித் திணை வியலூர்ப் போர்கள் நடைபெற்றதையும் இதில் மண்ணாசையால் உந்தப்பட்டு இரு அரசர்கள் இடையே நிலவிய மதில் போட்டியை காணமுடிகிறது.
- உழிஞை, வாகைத் திணைப் போரான நேரிவாயில் போர் நடை பெற்றதை அறியமுடிகிறது.
- வாகை, வெட்சித் திணைப் போரான கடம்பின் பெருவாயில் போர் நடை பெற்றதை அறியமுடிகிறது.
- வாகை, வஞ்சித் திணைப் போர்களாக ஆவூர்ப் போர் ஆகியன மண்ணாசையால் உந்தப்பட்டு இரு அரசர்கள் இடையே நிலவிய கடும் போட்டியில் வெற்றிபெற்றமையை விளக்குகிறது.
- வாகை, காஞ்சித் திணைப் போர்களாகத் தலையாலங்கானத்துப் போர் நடைபெற்றதும் அறியமுடிகிறது. அதில் வெற்றிபெற்ற அரசனது நிலையையும் தோற்ற நாட்டின் நிலையையும் ஒருசேர அறியமுடிகிறது.

- வாகை, உழிஞைத்திணைப் போராக வெண்ணிப் போர் III இல் மதிலை வளைத்த அரசன் வெற்றி பெற்றதைக் காண்கிறோம்.
- வாகை, தும்பைத் திணைப்போராகக் கடம்பின் பெருவாயில் போரின்வழி இரு படைகளும் தம்முள் மாறுபட்டு எதிர் எதிர் நின்று போர் புரிதலில் வெற்றி பெற்றவரது சிறப்பினைக் காணமுடிகிறது.
- உழிஞை, பாடாண் திணைப் போர்களாகச் சேரமான் செங்குட்டுவனின் போர்கள் மூலம் மாற்றான் மதில் வளைத்தலும் வெற்றி பெற்ற அரசனது சிறப்பினையும் அறியமுடிகிறது.
- பொதுவியல், வாகைத் திணைப் போர்களாக வெண்ணிப் போர் - II வெண்ணிப் பறந்தலைப் போர் வழி வெற்றி பெற்ற அரசன் நிலை மற்றும் பொதுவான செய்திகளை ஒருங்கே காணமுடிகிறது.
- சங்க இலக்கியத்தில் இருபத்தேழு போர்கள் இனம் காணப்பட்டுள்ளன. அவற்றில் திணை அடிப்படையான போரில் உழிஞைத் திணைப் போர்களே மிகுதியாக இடம்பெற்றுள்ளன.

**இயல் - மூன்று**

**சான்றெண் விளக்கம்**

1. *புறம். பா.312;:5-6*
2. *கா. அப்பாத்துரை, தென்னாட்டுப் போர்க்களங்கள், ப.82*
3. *மா. இராசமாணிக்கனார், சோழர் வரலாறு, ப.23*
4. *புறம். பா.262*
5. *புறம். பா.259*
6. *கா. அப்பாத்துரை, தென்னாட்டுப் போர்க்களங்கள், ப.135*
7. *மணி.19. சிறைக்கோட்டம் அறக்கோட்டம் ஆக்கிய காதை, 119-127*
8. *புறம். பா.36:6-13*
9. *கா. அப்பாத்துரை, தென்னாட்டுப் போர்க்களங்கள், ப.137*
10. *பதிற். பா.44:10-17*
11. *அகம். பா.226:13-17*
12. *பதிற்.5.பதிகம்.9*
13. *சிலப்பதிகாரம், 28.நடுகல் காதை : 118*
14. *பதிற்.5.பதிகம்: வ. 11-12*
15. *அகம்.பா. 246:8-14*
16. *பதிற்.8 பதிகம், பா.1-9*
17. *பதிற்.78:8-9*
18. *கா.அப்பாத்துரை, தென்னாட்டுப் போர்க்களங்கள், ப.138*
19. *மேலது, ப.125*
20. *அகம், பா.116:13-18*
21. *அகம். பா.186:14-17*
22. *அகம். பா.346:19-25*
23. *புறம். பா.63:1-11*
24. *புறம். பா.62*
25. *சிலப்பதிகாரம், 25. காட்சிக்காதை: 160-162*
26. *கா.அப்பாத்துரை, தென்னாட்டுப் போர்க்களங்கள், ப.123*

27. சிலப்பதிகாரம், 25. காட்சிக்காதை: 152-155

28. அகம். பா. 125:16-22

29. கா.அப்பாத்துரை, தென்னாட்டுப் போர்க்களங்கள், ப.89

30. புறம். பா:21:5-6

31. கா.அப்பாத்துரை, தென்னாட்டுப் போர்க்களங்கள், ப.91

32. பொருநர். பா.143-148

33. அ.மா.பரிமளம், பதிற்றுப்பத்து, ப.127

34. பதிற். பா.40:14-16

35. அகம். பா.148:7-8

36. அகம். பா.181:3-7

37. அகம். பா.199:18-22

38. கா.அப்பாத்துரை, தென்னாட்டுப் போர்க்களங்கள், ப.106

39. சிலப்பதிகாரம், 26 கால்கோள் காதை: 221 -229

40. பதிற். பா.5 பதிகம். 4-8

41. புறம்.பா. 40:1-5

42. மா. இராசமாணிக்கனார், சோழர் வரலாறு, ப.57

43. பதிற். பா.46:10-13

44. பதிற். பா.41:26-27

45. பதிற். பா.48:3-4

46. சிலப்பதிகாரம். 30 வரம்தரு காதை கட்டுரை. வ.12

47. புறம்.74

48. சிலப்பதிகாரம், 28. நடுகல் காதை, வ. 114-115

49. பதிற்.5 பதிகம். 10-11

50. பதிற்.5 பதிகம். 17-20

51. சிலப்பதிகாரம், 28. நடுகல் காதை, வ.116-117

52. சிலப்பதிகாரம், 27. நீர்ப்படைக் காதை, வ.117-123

53. புறம். பா.31:13-17

54. புறம். பா.44:11-15

55. புறம். பா.45:1-5

56. புறம். பா.77:1-3

57. புறம். பா.19:1-13

58. கா.அப்பாத்துரை, தென்னாட்டுப் போர்க்களங்கள், ப.128

59. புறம். பா.79

60. புறம். பா.72

61. அரங்க.ராமலிங்கம், சங்க இலக்கியத்தில் வேந்தர்கள், ப.127

62. புறம். பா.65

63. புறம். பா.66:3-8

**4.0 சங்ககாலச் சமுதாயப் போர் - உளவியல்**

தொன்மைக் காலத்தில் மக்கள் குழுக்குழுவாகக் கூடிவாழ்ந்தனர். தொன்மைக்கால மக்கள் தங்களைத் தற்காத்துக்கொள்ள மேற்கொண்ட முறையே பிற்காலத்தில் போராக மலர்ந்தது. மனிதர்கள் முதலில் விலங்குகளிடமிருந்தும் பின் வேற்றுக் குழுவினரிடமிருந்தும் சண்டையிட்டுத் தற்காத்துக் கொண்டனர். சண்டையிடுதல் என்பது உயிரின் அடிப்படைக் குணம். இச்சண்டையே நாளடைவில் போராக உருப்பெற்றது. போர் என்பது பல பேர் கூடித் தம் எதிரியைத் தாக்குவது அல்லது அழிப்பதாகும். போரின் போது சில வரைமுறைகளைக் கையாளுகின்றனர். எதிரியைத் தாக்க எவ்வாறு ஒன்று கூடுவது? எப்படித் தாக்குவது? எந்நேரத்தில் தாக்குவது? எப்போர் முறையைப் பின்பற்றுவது? என்றெல்லாம் சிந்தனை எழும். இச்சிந்தனை மனித மனத்தில் உதித்து நடத்தைக் கோலமாக வெளிப்படுகிறது. நடத்தை பற்றிய அறிவியலே உளவியலாகும்.

போர் உளவியல் என்பது திட்டமிட்ட முறையில் பரப்புரை உத்திகளைக் கையாண்டு, போர் இலக்குகளை நிறைவேற்றுதலின் பாற்படும். போர் என்பது நேரடியாக ஈடுபடுவோரையும் பொதுமக்களையும் உள்ளடக்கியது. அது உளவியல் அடிப்படையில் தன் இலக்குகளை நிறைவேற்றிக் கொள்ளும் முறையாக உள்ளது. இதற்கு ஊடகத்தின் பங்கு முதன்மையானது. இன்று ஊடகங்கள் பெற்ற இடத்தை அன்று பறை அறிவித்தல், முரசு அறிவித்தல், வீரர்களை அழைத்தல் போன்ற செயல்கள் வழி போர்ச் செய்திகள் மக்களுக்குச் சென்றடைந்தன. எனவே, சங்க இலக்கியங்களில் காணலாகும் போர்களில் உளவியல் உத்திகளைக் கையாண்டனர் என்பதை அறியலாம். வெட்சித் திணை முதல் பாடாண்திணை வரை புறத்திணைகளாகப் பகுத்து அந்தந்தத் திணைகளில் நடைபெறும் போர் பற்றியும் அதில் நடைபெறும் செயல்களாகத் துறைகளையும் வகுத்து அக்கால மக்களின் போர்ச் செயல்களை நம் கண்முன்

படம் பிடித்துக் காட்டியவர் தொல்காப்பியர். தொல்காப்பியத் திணைகளுக்குப் புறநானூறு, பதிற்றுப்பத்து, புறப்பொருள் வெண்பாமாலையில் உள்ள பாடல்களும் சான்றுகளாகக் காட்டப்பட்டுள்ளன.

சங்க இலக்கியத்தில் அறியலாகும் போர் முறைகள், போர் பற்றி நடக்கும் சம்பவங்கள் தொகுப்பாகத் தரப்பட்டுள்ளன. தவிர, சரியான போர் விதிகள் கூறப்படவில்லை. தமிழில் போர் இலக்கணம் கூறும் தனிநூல் ஒன்று இருப்பதாகத் தெரியவில்லை. மேலும் போர்க்களம் எது? யார் யாருக்கிடையில் நடைபெற்றது? அக்கால நிலை என்ன? போன்ற கேள்விகளுக்கு இன்றும் விடை காணப்படா போர்கள் உண்டு. எனவே போர் பற்றிய முழுமையான செய்திகள் திரட்டமுடியாத நிலையே நீடிக்கின்றது. கிடைத்த தரவுகளின் அடிப்படையில் போர் உளவியல் அணுகப்பட்டுள்ளதை அறியலாம்.

### 4.1. வெட்சித்திணைப் போர் உளவியல்

போருக்கான ஆயத்தமாக அமைவது வெட்சித்திணைப் போர். இது மன்னன் ஏவ அமர்தலைவன் போர் வீரர்களைத் திரட்டிக்கொண்டு எதிர் நாட்டின் ஆநிரைகளைக் கவர்ந்து வருவதைக் குறிக்கும். பின் ஆநிரைகளுக்கு உரியவர் மீட்டதையும் இதில் ஆராயலாம். தன் அரசன் ஆணையை ஏற்ற தலைவன் மேற்கொள்ளும் போர் வெட்சிப்போராகும். இதில் மக்களுக்கும் மாக்களுக்கும் தீங்கு விளைவிக்கக் கூடாது என்ற எண்ணத்தால் உந்தப்பட்டுப் போர் பற்றிய எண்ணத்தை ஏற்படுத்தும் விதமாகவும் உளவியல் பாங்கில் படை செல்லுகின்ற ஆரவாரம், நற்சொல்லை ஆராய்தல், பிறர் அறியாமல் ஒற்றாய்தல், சூழ்ந்தவர்களை அழித்தல், பசுக்கூட்டத்தைக் கவர்தல், அப்போது வரும் பகைவரோடு செய்யும் சண்டை, பசுக்கூட்டத்தைத் தம் நாட்டுக்குக் கொண்டு வருதல், பங்கிடுதல், கள்ளுண்டு மகிழ்தல் முதலானவை வெட்சித் திணைக்குரிய துறைகளாகும். இவையாவும் மக்களைப் போருக்குத் தயார்படுத்தும் விதமாக

அமைகின்றன. இங்கு வீரர்களின் ஆளுமையை வெளிப்படுத்தும் விதமாக அமைந்தபாடல்,

**செருப்புஇடைச் சிறுபரல் அன்னன்; கணைக்கால்**
**அவ்வயிற்று அகன்ற மார்பின், பைங்கண்,**
**குச்சின் நிரைத்த குரூஉமயிர் மோவாய்ச்,**
**செவிஇறந்து தாழ்தரும் கவுளன்; வில்லொடு,**
**யார்கொலோ அளியன் தானே? தேரின்**
**ஊர்பெரிது இகந்தன்றும் இலனே; காலைப்**
**புல்லாஇனநிரை செல்புறம் நோக்கிக்,**
**கையின் சுட்டிப் பைஎன எண்ணிச்**
**சிலையின் மாற்றி யோனே**[1]

என்னும் பாடலில் செருப்பின் இடையிலே அகப்பட்ட சிறுகல் செருப்பை அணிந்தவர்க்குத் தீராத வேதனையைத் தருவதுபோலப் பகைவர்க்குத் தீராத வேதனையைத் தருபவன் இவன். திரண்ட கால்களும் அழகிய அகன்ற மார்பும் பசுமையான கண்களும் குச்சுப்புல் நிரைத்தது போன்ற தாடியும் காதளவு பரந்து முன்னே தாழ்ந்த கன்னங்களும் உடையவன். வில்லோடு வரும் இவன் யாரோ காண்? எண்ணிப் பார்த்தால் ஊரைவிட்டுப் பலகாலம் சென்றிருந்தவனும் அல்லன். பிறருக்கு அஞ்சித் தனக்கு அரணாகக் காட்டிற் சென்று வாழ்பவனும் அல்லன். இன்று காலை தன் பகைவரின் ஆநிரை செல்லுமிடத்தைத் தன் கையினால் சுட்டி மெல்ல எண்ணிக் கொண்டிருந்தான். அடுத்து பகைவர்தம் ஆற்றலைத் தன்கைவில்லால் அழித்தும் வென்றான். பகைவரது ஏராளமான ஆநிரைகளையும் கைப்பற்றிக் கொண்டு வந்தான் என்று தனி வீரனின் ‘ஆளுமை’ வெளிப்படுத்தும் விதமாக அமைந்துள்ளதைக் காணமுடிகிறது.

போர் தொடுத்து வருபவரை எதிர்த்தல் என்பது நம் அனைவரிடமும் உள்ள இயல்புதான். தனக்கும் தன் சுற்றத்திற்கும் தீங்கு நேரும் போது எதிர்த்துச் செல்வது **பாதுகாத்தல்** என்னும் **இயல்பூக்க உளவியல்** செயலாகும். இது கரந்தைத் திணையின் உளவியலாக வெளிப்படுகின்றது.

### 4.2. வஞ்சித்திணைப் போர் உளவியல்

வஞ்சித்திணைப்போர் என்பது மண்ணாசையால் ஏற்படுவது. இது காழ்ப்புணர்ச்சி உளவியல் சார்ந்தது. வறுமையில் கிடந்து வாழ்வின் பயன் காணாத மக்கள், வளம் கொழிக்கும் நிலத்தாரின் நிறைவைக் காணும்தோறும் காழ்ப்புணர்வு மிகுந்து தமக்கும் அத்தன்மை வேண்டும் என்ற எண்ண மேலீட்டால் வஞ்சித் திணைப் போர் நிகழ்கிறது. மகள் மறுத்தலாலும் இப்போர் நடைபெறுவது உண்டு. அழகுமிக்க மகளைப் பெண்கேட்டு வரும் அரசனுக்கு, மகளைத் தர மறுப்பதால் காழ்ப்புணர்ச்சி கொண்டும் போர் நிகழ்வதால் இது காழ்ப்புணர்ச்சி உளவியல் சார்ந்தது. இதனை,

**வள்ளியோர்ப் படர்ந்து, புள்ளின்போகி,**
**‘நெடிய’ என்னாது, சுரம்பல கடந்து**
**வடியா நாவின் வல்லாங்குப் பாடிப்,**
**பெற்றது மகிழ்ந்து, சுற்றம் அருந்தி,**
**ஓம்பாது உண்டு, கூம்பாது வீசி,**
**வரிசைக்கு வருந்தும் இப்பரிசில் வாழ்க்கை**
**பிறர்க்குத் தீது அறிந் தன்றோ? இன்றே; திறப்பட**
**நண்ணார் நாண, அண்ணாந்து ஏகி,**
**ஆங்கு இனிது ஒழுகின் அல்லது, ஓங்கு புகழ்**
**மண் ஆள் செல்வம் எய்திய**
**நும்ஓர் அன்ன செம்மலும் உடைத்தே**[2]

என்னும் பாடலில் பழமரத்தை நாடிச் செல்லும் பறவை இனம் போல நீண்ட அரிய வழி பல கடந்து தமக்கு வழங்கும் வள்ளலை நாடிச் செல்வது பரிசிலர் வாழ்க்கை. அவர்கள் தம் திறமைக்கு ஏற்பப் பாடிப் பரிசு பெறுவர். தாம் பெற்ற பரிசைத் தம்சுற்றத்திற்கு வழங்கும் இயல்புடையவர்கள். பிறருக்குக் கொடுமை செய்ய அறியாதவர். ஏனெனில் கல்வியால் தம்முடன் மலைத்தவர்களையும் நாணச் செம்மாந்து நடப்பவர்கள். எங்கும் இனிய

*ஒழுக்கமுடையவர்கள். வேந்தே அப்படி இருக்க உங்களை எதிர்க்க மாட்டார் என்று கூறி மன்னனைத் தடுப்பதிலிருந்து பகைவர் மேல் கொண்ட காழ்ப்புணர்ச்சியால் இளந்தத்தன் என்னும் புலவரின் மீது கொலை வெறியுடன் தாக்க முற்பட்டதை அறியமுடிகிறது. இது காழ்ப்புணர்ச்சி உளவியல் சார்ந்தது.*

**4.3. உழிஞைத்திணைப் போர் உளவியல்**

*உழிஞைத் திணை என்பது மாற்றான் மதிலை வளைத்தலைக் குறிக்கும். வீரமேலீட்டினால் எதிரியை அழிக்க அவர்களின் அரண்களை முற்றுகை இட்டு வெற்றிபெறும் போராகத்தான் உள்ளது. இது மனவெழுச்சியின் பாற்பட்டது. மாற்றான் தன் மதிலை முற்றுகை இட அதனை எதிர்த்துப் போர் புரிவது நொச்சி. இது தற்காத்தல் என்ற உளவியல் உத்தியைச் சார்ந்தது. இதனை,*

**பருத்தி வேலிச் சீறூர் மன்னன்**
**உழுத்துஅதர் உண்ட ஓய்நடைப் புரவி,**
**கடல்மண்டு தோணியில், படைமுகம் போழ,**
**நெய்ம்மிதி அருந்திய, கொய்சுவல் எருத்தின,**
**தண்ணடை மன்னர், தாருடைப் புரவி,**
**அணங்குடை முருகன் கோட்டத்துக்**
**கலம்தொடா மகளிரின் இகழ்ந்துநின் றவ்வே**[3]

*என்னும் பாடலில் பருத்தி வேலி சூழ்ந்த சிறந்த ஊருக்குரிய மன்னனின் கொழுத்த நடையையுடைய குதிரையானது கடலைக் கிழித்துச் செல்லும் தோணியைப்போலப் பகைவர் படைமுகத்தைக் கிழித்துச் செல்லப் பகைவர் குதிரைகள் எல்லாம் முருகர் கோயில் புகுதற்கு அஞ்சும் தூய்மையற்றார்போலப் பகைவரின் குதிரைகள் அஞ்சி நின்றன எனக் கூறுவதிலிருந்து தன்னை எதிர்த்தவரைத் தானும் மிக வலிமையுடன் மோதியதால் தற்காத்தல் உளவியல் இதில் இடம் பெற்றுள்ளது.*

### 4.4. தும்பைத்திணைப் போர் உளவியல்

இருதரப்பு வேந்தர்களும் பரந்துபட்ட போர்க்களத்தில் போர் புரிதல் தும்பைத் திணையாகும். இது வெற்றி அல்லது தோல்வியை நோக்கிய போராக இருப்பதால் போரின் இறுதி நிலையை உணர்த்துவதாகும். இப்போர் உளவியலில் செயற்படுத்துதல் என்ற உத்தியை உணர்த்துகிறது. இதனை,

**இன்கடுங் கள்ளின் ஆமூர் ஆங்கண்,**
**மைந்துடை மல்லன் மதவலி முருக்கி,**
**ஒரு கால் மார்பு ஒருகால் ஒதுங்கின்றே;**
**வருதார் தாங்கிப் பின்ஒதுங்கின்றே**
**நல்கினும் நல்கான் ஆயினும், வெல் போர்ப்**
**பொரல் அருந் தித்தன் காண்கதில் அம்ம**
**இருதலை ஒசிய எற்றிக்,**
**களம் புகு மல்லற் கடந்தடு நிலையே**[4]

என்னும் பாடலில் ஆமூரில் வாழும் வலிமையுடைய மல்லனை எதிர்த்து அழித்துநின்றான் பெருநற்கிள்ளி. இப்போரில் பெருநற்கிள்ளி மல்லனின் மார்பின் மீது ஒரு காலும் மற்றொரு காலை மல்லனின் முதுகின் பின்னரும் வைத்திருந்தான் என்று போர் புரியும் காட்சியை வருணித்துள்ளார் இது செயல்படுத்துதல் என்ற உளவியல் உத்தியைக் காட்டுகிறது.

### 4.5. வாகைத்திணைப் போர் உளவியல்

இது வெற்றி பெற்ற நாட்டு மன்னன் மற்றும் வீரர்களின் மகிழ்ச்சியையும் வெற்றிக்குக் காரணமானவர்களின் வீரத்தை வெளிப்படுத்துவதாகவும் போரின் முடிவாகவும் அமைகிறது. வீரத்தை நிலை நாட்டல் என்ற தன்மையில் குழு ஆளுமையை வெளிப்படுத்துவதாக அமைகிறது. இதனை,

**அரைசு பட அமர் உழக்கி,**

**உரை செல முரசு வெளவி,**

**முடிந் தலை அடுப்ப அக,**

**புனற்குருதி உலைக் கொளீஇ,**

**தொடித்தோள் துடுப்பில் துழந்த வல்சியின்,**

**அடுகளம் வேட்ட அடுபோர்ச் செழிய!**

**ஆன்ற கேள்வி அடங்கிய கொள்கை,**

**நான்மறை முதல்வர் சுற்றம் ஆக,**

**மன்னர் ஏவல் செய்ய,**

**மன்னிய வேள்வி முற்றிய வாய்வாள் வேந்தே![5]**

*என்னும் பாடல் பகை அரசர்கள் விழுமாறு போர்க்களத்தில் திரிந்தாய்! புகழ் பரவுமாறு அவர்தம் முரசுகளைக் கவர்ந்தாய்! பகைவர்தம் முடித்தலைகளை அடுப்புப்போல அமைத்து இரத்தமாகிய உலைநீரில் வீரவளையணிந்த தோளைத் துடுப்பாகக் கொண்டு துழாவி உணவு சமைத்தாய்! போர்க்களத்தில் கொல்லும்படி போர் செய்தாய்! என்று வீரர்களின் திறம்படக் குழுவாகச் செயல்பட்டதால் ஆளுமையை வெளிப்படுத்திப் போர் செய்ததைப் படம் பிடித்துக் காட்டுகிறது.*

## 4.6. காஞ்சித்திணைப் போர் உளவியல்

*இது போரின் அழிவுகளை எடுத்துரைக்கும் பகுதி. தொல்காப்பியர் காஞ்சி என்றால் நிலையாமை என்று பொருள் தருகிறார். எனவே போரின் முடிவும் மாறும் தன்மை கொண்டது. இன்று வெற்றிபெற்றவன் பின் வரும் போரில் தோற்கலாம் என்ற நியதியை உணர்த்துவதாக உள்ளது. அழிவு நம் மனதைப் பாதிக்கும். அழிவைக் கண்டு இரங்காத மனமும் இல்லை. எனவே உணர்வு சார்ந்த இயல்பூக்க உளவியல் பாற்பட்டது. இதனை,*

**மடங்கலின் சினைஇ மடங்கா உள்ளத்து**

**அடங்காத தானை வேந்தர் உடங்கு இயைந்து**

**என்னொடு பொருதும் என்ப; அவரை**

**ஆரமர் அலறத் தாக்கித் தேரொடு**

**அவர்ப்புறம் காணேன் ஆயின், சிறந்த**

**பேரமர் உண்கண் இவளினும் பிரிக[6]**

*என்பதனால் சிங்கம்போலச் சீறிவரும் பகைவர்களை அழிப்பேன். அவ்வாறு அழிக்கவில்லை என்றால் என் தேவியான இவளைப் பிரிவேனாகுக! எனச் சினப்பதிலிருந்து அழிவு நேரும் என்பது தெளிவாகுகிறது. ஒரு வேளை நான் பகைவரை அழிக்கத் தவறினால் என் தலைவியைப் பிரிவேன் என்று உரைப்பதில் இருந்து நிலையாமை உணர்த்தப்படுகிறது. இது உணர்வு சார்ந்த இயல்பூக்கத்தைச் சார்ந்தது என்பதை உணர்த்துகின்றது.*

### 4.7. பாடாண் திணைப் போர் உளவியல்

*பாடப்படும் ஆண்மகனது ஒழுகலாறு என்று பொருள். போர் புரிந்த அரசன், வீரர் ஆகியோரின் போர்த்திறத்தைப் புகழ்ந்து பாடுவதாகும். தங்களைப் பிறர் புகழவேண்டும் என்ற எண்ணம் மனிதர்களுக்கு உண்டு. ‘புகழுக்கு மயங்காத பேரும் உண்டோ’ என்ற பொன்மொழியே புகழின் மீது மனிதனுக்கு இருக்கும் மோகத்தை உணர்த்துகிறது. எனவே இதுவும் இயல்பூக்கத்தில்* (Self - assertion) *உளவியல் பாங்குகொண்டது. இதனை,*

**புறவின் அல்லல் சொல்லிய, கறையடி**

**யானை வாண்மருப் பெறிந்த வெண்கடைக்**

**கோல்நிலை துலாஅம் புக்கோன் மருக**

**ஈதல்நின் புகழும் அன்றே; சார்தல்**

**ஒன்னார் உட்கும் துன்னரும் கடுந்திறல்**

**தூங்கெயில் எறிந்தநின் ஊங்கனோர் நினைப்பின்,**

**அடுதல்நின் புகழும் அன்றே; கெடுவின்று,**

**மறங்கெழு சோழர் உறந்தை அவையத்து,**

**அறம்நின்று நிலையிற் றாகலின், அதனால்**

**முறைமைநின் புகழும் அன்றே; மறமிக்கு,**

**எழுசமம் கடந்த எழுவுறழ் திணிதோள்,**
**கண்ணார் கண்ணிக் கலிமான் வளவ!**
**யாங்கனம் மொழிகோ யானே; ஓங்கிய**
**வரையளந் தறியாப் பொன்படு நெடுங்கோட்டு**
**இமயம் சூட்டிய எம் விற்பொறி,**
**மாண்வினை நெடுந்தேர், வானவன் தொலைய**
**வாடா வஞ்சி வாட்டும்நின் – பீடுகெழு நோன்தாள் பாடுங் காலே?**[7]

*என்னும் பாடலில் புறாவினது துன்பத்தைத் தீர்க்கத் தானே துலை ஏறி அமர்ந்த இரக்க உணர்வு கொண்ட செம்பியனின் மரபினன் நீ! ஆதலால் ஈகைக்குணம் கொண்டிருத்தல் உனக்குப் புகழன்று! தூங்கெயில் அழித்து வென்ற உன் முன்னோர்களை நினைத்தால் நீ போரில் வெற்றி கொள்வது கூட உனக்குப் புகழன்று! குற்றமற்ற வீரம் செறிந்த உறையூர் அவையிடத்தே அறம் என்றும் நிலைபெற்றிருக்கும்! ஆதலால் நீ முறைமையைச் செய்வதால் நினக்குப் புகழ்தருவதன்று. இமயத்தில் வில்பொறித்த சேரனின் கருவூர்க் கோட்டையை அழித்தாய். இம்முயற்சியை நான் எவ்வாறு புகழ்வேன்! வலிமையான தோளை உடையவனே! கண்களுக்கு இனிய மாலை அணிந்தவனே! நீயே என்று புகழ்வதால்* (Self - assertion) *இப்பாடலில் உளவியல் பாங்கு புலப்படுகிறது.*

### 4.8. சங்ககாலப் போர் உளவியல்

*சங்ககால மன்னர்கள் எந்தெந்தக் காரணங்களுக்காகப் போர் புரிந்தனர் என்பதை இப்பகுதி விளக்கும். மேலும், போருக்கான உளவியல் கூறுகளை எடுத்துரைத்து விளக்கப்படுகின்றது.*

#### 4.8.1. திருக்கோவலூர்ப் போர்

*வஞ்சித்திணையில் அமைந்த இப்போர் காழ்ப்புணர்ச்சி காரணமாக அமைந்தது. கிள்ளிவளவனுக்கும் மலையமான் காரிக்கும் நேரடியான பகை இல்லை. நெடுங்கிள்ளிக்கோ அல்லது சோழரின் வேறு எதிரிக்கோ உதவிய*

காரணத்தால் கிள்ளிவளவன் காரியை எதிர்த்தான். அதன் விளைவாகப் போரில் காரி கொல்லப்பட்டான். இருந்தும் காரியின் மீது கிள்ளிவளவனுக்குப் பகை தீராது போகவே அவனது மகன்களைக் கொல்ல முற்பட்ட செயல் கிள்ளியின் காழ்ப்புணர்ச்சி காரணமாகவே நடந்த செயலாகும். எனவே உணர்வு (Emotion) சார்ந்த இயல்பூக்கம் வெளிப்படுகின்றது.

### 4.8.2. திருக்கோவலூர்ப் போர் II

அதியன் தன் நாட்டை விரிவுபடுத்தும் எண்ணத்துடன் கோவலூர் மீது படையெடுத்துச் சென்று வெற்றிகண்டான். இது இயல்பூக்கத்தில் திரட்டூக்கம் (Acquisition) நிகழ்ந்த போராகும். தன் நாட்டை விரிவுபடுத்த வேண்டும் என்ற உணர்வே போருக்குக் காரணமாக அமைந்ததை அறியமுடிகின்றது.

### 4.8.3. மோகூர்ப் போர்

பழையன் செங்குட்டுவனை எதிர்த்து அழித்து வருவதாக வஞ்சினம் கூறிக்கொண்டு போருக்குச் சென்றான். இது சினவூக்கம் (Pugnacity) ஆகும்.

### 4.8.4. உறையூர்ப் போர்

உறையூரை அரசாண்ட தித்தனுக்கும் வடுகவேந்தனான கட்டிக்கும் இடையில் போர் மூண்டது. தித்தன் கோட்டையில் எழுப்பிய போர் முரசு ஒலியைக் கேட்டு எதிரிகள் ஓடினர் எனப் பாடியதிலிருந்து தித்தன் போருக்கு முன் முரசு ஒலித்த வீரனின் வலிமையை அறிந்து போரைத் தவிர்த்தல் என்பது உளவியல் உத்தியாகும். இது போரின் ஆயத்தத் தன்மை மிக வலிமையாக இருந்ததைக் காட்டுகிறது. இது போர் பற்றிய எண்ணத்தை எதிரிக்கு அறிவித்து ஒருவித அச்சத்தை ஏற்படுத்தும் உளவியல் எனக் கருதப்படுகிறது.

#### 4.8.5. இடும்பில் போர்

சேரன் செங்குட்டுவன் இடும்பில் நகரைச் சுற்றி வளைத்து அதில் வெற்றி பெற்றான் என்பதால் தற்காத்தல் உளவியலில் செயல்படுத்துதல் என்ற உளவியல் சார்ந்தது என அறியமுடிகிறது.

#### 4.8.6. கொடுகூர்ப் போர்

சேரன் செங்குட்டுவன் அடுத்ததாகக் கொடுகூர் நகரையும் சுற்றி வளைத்து அதிலும் வெற்றி பெற்றான். இந்தக் கொடுகூரும் இடும்பிலூரும் ஆற்றின் எதிரெதிர்க் கரையில் இருந்த ஊர்களாகும். எனவே இப்போரும் தற்காத்தல் உளவியலில் செயல்படுத்துதல் என்ற உளவியல் சார்ந்தவை என்பதைத் தெரிந்துகொள்ள முடிகின்றது.

#### 4.8.7. வெண்ணில் போர் அல்லது வாயிற்போர்

வெண்ணில் என்ற இடத்தில் நடைபெற்ற போரில் கரிகாலனின் போர்த் திறம் கண்டு எதிரிகள் அஞ்சி ஓடினர். எனவே இது இயலாமையின் வெளிப்பாடாகத் தத்தம் பொருள்களைக் களத்திலேயே போட்டுவிட்டு ஓடினர். இது கரிகாலனது ஆளுமையை வெளிப்படுத்துகிறது.

#### 4.8.8. தகடூர்ப் போர்

காரி, பெருஞ்சேரல் இரும்பொறை இருவரும் சேர்ந்து அதியமானின் தகடூர் மீது போர் தொடுத்தனர். அதியமானுக்கு ஓரி துணைநின்றான். சேரன் அஞ்சாது அவர்களைக் களத்தில் வீழ்த்தினான். இது சேரனின் வீரத்தை வெளிப்படுத்துகிறது. எதிரிகள் பலர் உடன் வந்தாலும் அவர்களை அழிக்கும் உள்ள உறுதி படைத்தவனாகச் சேரன் இருந்தான் என அறியமுடிகிறது. எனவே சேரனின் ஆளுமை இப்போரில் வெளிப்படுகிறது.

#### 4.8.9. கூடற்பறந்தலைப் போர்

பாண்டியனை எதிர்த்த சேர, சோழர்கள் போர்க்களத்தில் தோல்வியடைந்து தங்கள் முரசுகளை எடுத்துச் செல்லநேரமின்றி ஓடினர்

எனப் பாடல் வழி அறிய முடிகிறது. இதில் பாண்டியனது போர்ச் சிறப்பையும் அதனைக் கண்ட சேர, சோழனின் வாழத்தூண்டும் இயல்பூக்கத்தையும் காணமுடிகிறது.

### 4.8.10. கங்கைப்போர் II அல்லது குயிலாலயப் போர்

சேரன் செங்குட்டுவன், வடபுல அரசர்கள் தமிழக அரசர்களை இழிவாகப் பேசியதால் வெகுண்டெழுந்து வஞ்சினம் கூறிப் போர்புரிந்து அவர்களின் பெண்கள் தலைமுடியைக் கயிறாகக் கொண்டு கண்ணகி சிலை வடிக்கக் கல் கொணர்ந்தான் என அறிவதில் இருந்து சேரனின் உணர்வூக்கம் அறியமுடிகிறது.

### 4.8.11. சோழன் பெருவிறல்கிள்ளிக்கும் குடக்கோ நெடுஞ்சேரலாதனுக்கும் இடையே நடைபெற்ற போர்

சோழன் பெருவிறல்கிள்ளிக்கும் குடக்கோ நெடுஞ்சேரலாதனுக்கும் இடையே நடைபெற்ற போரில் இரு வேந்தரும் சமவலிமையுடன் மோதியதைப் பாடியதால் இப்போர், உளவியலில் தற்காத்தலில் செயல்படுத்துதல் உத்தி சார்ந்திருக்கின்றது.

### 4.8.12. வடபுலக் கங்கைப் போர்

சேரன் செங்குட்டுவன் தன் அன்னையைக் கங்கையில் நீராட்டுவதற்காகச் சென்றான். ஆரிய அரசர்கள் திரண்டுவந்து அவன் போக்கைத் தடுத்துப் போர்புரிந்தனர். சேரன் அவர்களை வென்று வெற்றியை நிலைநாட்டினான். இது பாதுகாத்தல் என்ற இயல்பூக்கத்தை வெளிப்படுத்துகின்றது.

### 4.8.13. கொங்கர் செங்களப் போர்

கொங்கு நாட்டில் எழுந்த கிளர்ச்சிகளைச் சேரன் செங்குட்டுவன் அடக்கினான். சேரனை எதிர்த்துச் சோழரும் பாண்டியரும் கொங்கர்க்கு ஆதரவாகப் போருக்கு வந்தனர். செங்குட்டுவன் அனைவரையும்

போர்க்களத்தில் தோற்கடித்து வெற்றி பெற்றான். இது செங்குட்டுவனின் ஆளுமையை எடுத்துக்காட்டுகிறது.

### 4.8.14. வாகைப் பறந்தலைப் போர்

வெற்றி என்பது அனைவராலும் பெறமுடியாத ஒன்று. சிறப்புடன் செயல்படுபவர்க்கு வெற்றி கிட்டும். கரிகாலன் தன்னை எதிர்த்து வந்த ஒன்பது மன்னரையும் ஒருசேரக் களத்தில் எதிர்த்து வாகை சூடினான். எனவே கரிகாலனது ஆளுமையை இப்போர் வெளிப்படுத்துகிறது.

### 4.8.15. கானப் பேரெயில் போர்

பாண்டியன் உக்கிரப்பெருவழுதிக்கும் குறுநில மன்னனான வேங்கை மார்பனுக்கும் இடையில் நடைபெற்ற போரில் வேங்கை மார்பனது தருக்கை அழித்துப் பாண்டியன் வெற்றி பெற்றான். ஆணவத்தால் பகைவரை ஏளனமாகப் பேசிய வேங்கை மார்பன் அழிந்தான். எதிரியின் திறமையைக் குறைத்துத் தான் வலிமை பெற்றவன் என்ற இறுமாப்பைப் பாண்டியன் அழித்தான். இதன்வழி தற்பெருமை அழிவுக்குக் காரணம் என அறியமுடிகிறது. இது உணர்ச்சி சார்ந்த இயல்பூக்கம் ஆகும்.

### 4.8.16. வெண்ணிப் போர்

கரிகாலன் பிறப்புக்கு முன்பே அரசுரிமை பெற்றான். சிறுவயதில் அமைச்சர்கள் வியக்கும் வண்ணம் நரை முடித்து முறை செய்தவன். வெண்ணி என்ற இடத்தில் நடைபெற்ற போரில் சேரனையும் பாண்டியரையும் ஒருங்கே முறியடித்த வீரன் என்று கரிகாலனது ஆளுமைப் பண்பு வெளிப்படுவதைக் காணமுடிகிறது.

### 4.8.17. குளமுற்றத்துப் போர்

போரில் வெற்றி பெற்ற மன்னன் மற்றும் வீரர்களைப் புலவர் புகழ்வதால் மேலும் மேலும் பல போர் புரிந்து வெற்றிபெற வேண்டும் என்ற உணர்வு மன்னனுக்கும் வீரர்களுக்கும் ஏற்படுகிறது. பல போர்களில்

மன்னர்களும் வீரர்களும் ஈடுபட்டாலும் ஆளுமை மிக்கவரே வெற்றி பெறமுடியும். எனவே குளமுற்றத்துப் போரில் கிள்ளிவளவனது ஆளுமை வெளிப்படுகிறது.

### 4.8.18. கழுமலப் போர்

சோழன் செங்கணானுக்கும் சேரன் இரும்பொறைக்கும் இடையில் கழுமலம் என்ற இடத்தில் நடந்த போரில் செங்கணான் வெற்றி பெற்றான். தோல்வி அடைந்த இரும்பொறை மானம் பெரிதென்று பகைவரின் காவலில் நீரருந்தாது உயிர் துறந்தான் என்று சோழனின் பாடல் வழி அறிவதிலிருந்து மான உணர்ச்சி பெரிதென்ற எண்ணத்தால் தூண்டப்பட்டு இறந்ததால் போரின் விளைவால் இரும்பொறைக்கு ஏற்பட்ட உணர்வு காரணம் என அறியமுடிகிறது. எனவே இப்போர் உணர்ச்சி சார்ந்த இயல்பூக்கத்தின் பாற்படுகின்றது.

### 4.8.19. வியலூர்ப் போர்

சேரன் செங்குட்டுவன் புரிந்த போர்களில் வியலூர்ப் போரும் ஒன்று. இது தஞ்சை மாவட்டத்தில் உள்ள திருவியலூரைக் குறிக்கும். இங்கு நடைபெற்ற கோட்டைப் போரில் வெற்றி பெற்றதால் செயல்படுத்துதல் என்ற உளவியல் தற்காத்தலை இதன்வழி அறியமுடிகிறது.

### 4.8.20. நேரிவாயில் போர்

சேரன் செங்குட்டுவனின் தாய் சோழர் குடிப்பிறந்தவள். எனவே கிள்ளிவளவன் சேரனின் மைத்துனன். கிள்ளிவளவனுக்கும் சோழர் குடி இளவல்கள் ஒன்பது பேருக்கும் இடையில் அரசுரிமைப் போட்டி நடைபெற்றது. அதில் சேரன் கிள்ளிவளவனுக்குச் செங்குட்டுவன் துணைபுரிந்ததால் இப்போர் உணர்வூக்கத்தால் நிகழ்ந்தது எனத் தெரிகின்றது.

#### 4.8.21. ஆவூர்ப் போர்

நலங்கிள்ளிக்கும் நெடுங்கிள்ளிக்கும் இடையில் நடைபெற்ற போர் ஆவூர்ப் போர். நலங்கிள்ளியின் வீரத்தைக் கண்டு நெடுங்கிள்ளி போர்புரியாமல் கோட்டையை அடைத்துக் கொண்டு வாரக் கணக்காக, மாதக் கணக்காக அமைதி காத்தான். அப்போது கோவூர்கிழார் வீரனாக இருந்தால் போருக்கு வா, கோழையாக இருந்தால் நாட்டுக்கு உரியவனிடம் நாட்டை ஒப்படைத்து விடு, என்று நெடுங்கிள்ளியிடம் கூறுவதிலிருந்து இப்போர் உணர்ச்சி சார்ந்த இயல்பூக்க உளவியல் நிகழ்ந்த போராகும் என்றறியலாம்.

#### 4.8.22. தலையாலங்கானத்துப் போர்

பாண்டியன் நெடுஞ்செழியனை எதிர்த்து இரண்டு பேரரசர்களும், ஐந்து வேளிர்களும் சேர்ந்து சிறுவனாக இருக்கும் பாண்டியனை எளிதில் வீழ்த்தி விடலாம் எனத் தருக்குடன் களம் கண்டனர். பாண்டியன் தான் ஒருவனாகவே இருந்து வஞ்சினம் கூறிக்கொண்டு அவர்கள் அனைவரையும் தோற்கடித்தான் என அறிவதிலிருந்து பாண்டியனின் ஆளுமை வெளிப்படுகிறது.

#### 4.8.23. கடம்பின் பெருவாயில் போர்

களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரலாதன் நன்னனின் பூழி நாட்டின் மீது போர் தொடுத்தான். இப்போரில் நார்முடிச்சேரலாதன் வெற்றி பெற்றான். இது போரூக்கத்தால் நடைபெற்ற போராகும்.

#### 4.8.24. தீவுப் போர்

சேரன் செங்குட்டுவன் கடற்கரையை அடுத்த தீவில் கோட்டை கட்டி வாழும் கடற்கொள்ளையர்களை அழித்து வெற்றி கொண்டான். வட நாட்டு அரசர்களும் அஞ்சும்படி போர் புரியும் தலைமை கொண்டவனாக விளங்கினான். எனவே இப்போர் செங்குட்டுவனின் ஆளுமையை வெளிப்படுத்துகிறது.

#### 4.8.25. காரியாற்றுப் போர்

மாவண்கிள்ளியின் புகழையும் நாட்டுவளத்தையும் கண்டு பொறாமை கொண்ட சேரரும் பாண்டியரும் வடபுல அரசர்களுடன் இணைந்து சோழ நாட்டின் மீது படை எடுத்தார்கள். இது காழ்ப்புணர்ச்சி உளவியலால் நிகழ்த்தப்பட்டுள்ளது.

#### 4.8.26. காரியாற்றுப் போர் - II

நெடுங்கிள்ளி, நலங்கிள்ளியுடன் தன் மடமையை விட்டு மூர்க்கத்தனமாகச் சோணாட்டின் வட எல்லையில் புரிந்த போர் காரியாற்றுப் போர். இது தும்பைத் திணையில் அடங்கும். இரு அரசர்களும் நேருக்கு நேர் சம வலிமையுடன் போர்புரிந்ததால் செயல்படுத்துதல் என்ற தற்காத்தல் உளவியல் இதில் வெளிப்படுகின்றது.

#### 4.8.27. வெண்ணிப் போர் - II

சேரமன்னன் நெடுஞ்சேரலாதனுக்கும் சோழ மன்னன் கரிகாலனுக்கும் இடையில் வெண்ணிப் பறந்தலை என்னும் இடத்தில் நடைபெற்ற கோரமான போராக இப்போர் புலவர்களால் வருணிக்கப்பட்டுள்ளது. நெடுஞ்சேரலாதனின் முதுகில் புண்பட்டதால் நாணி வடக்கிலிருந்து உயிர்துறந்தான். எனவே இது உணர்ச்சி சார்ந்த உளவியலாகும்.

### 4.9. போரினால் ஏற்படும் சமூகப் பின்விளைவுகள்

போர், காலங்காலமாக நடைபெறும் ஒன்றாகும். சங்க காலத்தில் போர் நடைபெற்றதை இலக்கியங்களின் வாயிலாக அறியமுடிகிறது. போரினால் ஏற்படும் விளைவுகளும் அதனால் மனிதமனம் அடையும் துயர்களும் எண்ணிலடங்காதவை. மனித வாழ்க்கையில் ஏற்படும் ஏமாற்றங்கள், தோல்விகள், போராட்டங்கள் உளத்தைப் பாதிக்கின்றன. இவை உளத்தின் அமைதியைச் சீர்குலைக்கின்றன.

"மனித வாழ்க்கையில் உளநலத்தைப் பாதிக்கும் உளநலச் சிக்கல்கள் எழுகின்றன. அவை முறையே உள முறிவு, உளப் போராட்டம், உள இறுக்கம் என்பனவாகும். இந்நிலையில் உளம் தன்னைத் தானே பாதுகாக்க மேற்கொள்ளும் முயற்சிகளை உளவியலாளர் தற்காப்பு இயங்குமுறை (Defence Mechanism) என்பர்."[8]

### 4.9.1. உளநலச் சிக்கல்கள் (Problems Adjustments)

மனம் தெளிவற்ற நிலையில் இருக்கும்போது மனத்தில் ஏற்படும் போராட்டம் உளச் சிக்கலை உண்டாக்கும். எனவேதான் "மனநலம் மன்னுயிர்க்கு ஆக்கம் இனநலம் எல்லாப் புகழும் தரும்"[9] என்கிறார் திருவள்ளுவர். உளநலத்தை எவ்விதப் பாதிப்பும் இன்றிப் பாதுகாத்தல் எளிய செயலன்று. நம் உடலின் தேவைகள் நிறைவதால் மட்டும் உளம் நிறைவடைந்து விடுவதில்லை. "உளத்தின் தேவைகளே மக்களின் வாழ்க்கையில் கவலையை வளர்க்கின்றன. அதுபோல் உளத்தின் அமைதியும் தெளிவுமே மக்களுக்கு உண்மையின்பத்தைத் தருகின்றன"[10] என்கிறார் து.சிவராஜ். இத்தகைய உளநலத்தைச் சிதைக்கும் சிக்கல்களை உளவியலாளர் மூவகைப்படுத்துகின்றனர். அவை, "உள முறிவு (Frustration), உளப் போராட்டம் (Conflict), உளஇறுக்கம் (Pressures)"[11] என்பனவாகும்.

### 4.9.2. உள முறிவு (Frustration)

ஒவ்வொரு மனிதனிடமும் பலவித எண்ணங்கள் தோன்றுகின்றன. அந்த எண்ணத்தின் அடிப்படையில் செயல்கள் நிகழும்போது ஏற்படும் சிக்கல்கள் உளத்தைப் பாதிக்கின்றன. இதனால் உளமுறிவு ஏற்படுகிறது. எனவே, "உள முறிவு என்பது விரும்பிய இலக்கினை அடைவதில் நேரும் தடைகளாலோ, குறுக்கீடுகளாலோ நேரிதான தேவை ஒன்று இன்மையாலோ விளைவதாகும் என உளவியலாளர் விளக்குவர். ஓர் அழுத்தமான தேவையும் அதனை எய்தி நிறைவுற இயலாத உணர்வும்

உடனியையும்போது நேரும் அனுபவமே உள்ள முறிவு"[12] என்கிறார் து.சிவராஜ். இதன் மூலம் உள முறிவானது எண்ணியதை எய்த முடியாத நிலையில் தோன்றும் மனநிலை என்று கொள்ளலாம்.

- உள முறிவின் வகைகள்

- "எளிய முறிவுகள்
- சூழ்நிலைத் தடைகள்
- உள - உடல் குறைகள்
- பொருள்நிலை முறிவு
- சமூகநிலை முறிவு, மரணம்"[13]

ஆகியவை.

"பொதுவான கண்ணோட்டத்தில் மனமுறிவுகளை உளவியலார் மூவகைப்படுத்துவர். அவை :

- நிராசை அல்லது ஆசாபந்தம்
- இடையூறு அல்லது கட்டுப்பாடு
- புறத்தாக்கம் அல்லது உடலுக்காவது உளத்துக்காவது வருத்தமோ துன்பமோ உண்டாகக்கூடியதாகப் புறத்தேயிருந்து தாக்குதல்"[14] என்கிறார் து.சிவராஜ்.

இத்தகைய உள்ளச் சிக்கல்கள் மூலம் மனிதர்களிடம் உள்ளமுறிவு தோன்றுகிறது எனலாம்.

#### 4.9.3. சமூகநிலை மனமுறிவு

சங்க காலத்தில் வாழ்ந்த புலவர்கள் மக்கள் மீதும் அரசர் மீதும் அக்கறையும் அன்பும் கொண்டவர்களாக விளங்கினர். அதனால் போரில் ஏற்படும் இழப்புகளைக் கண்டு பொறுக்க இயலாமல் தம் உளத்து உணர்வுகளை வெளியிட்டனர். இதன் காரணமாக வேந்தர்களுக்கு அறிவுரையும் கூறினர்.

சான்றோர் வளமுடன் சிறப்புற்று இருப்பதையே விரும்பினர். மக்கள் அனைவரும் துன்பம் இன்றி மன்னனின் செங்கோல் ஆட்சியால்

மகிழ்ச்சியுடன் வாழவேண்டும் எனவும் எண்ணினர். எனவே, புலவர்களின் இத்தகைய விருப்பத்தில் தடைகளோ அல்லது குறுக்கீடுகளோ ஏற்படும்போது அவர்களிடம் மனமுறிவு தோன்றுகிறது. போரினால் வளம் மிக்க ஊர்களும் வலிமைமிக்க படைகளும் பாழ்பட்டு அழிகின்றன.

இதன் காரணமாகச் சமுதாயத்தின் அவலநிலையைக் கண்டு புலவர்கள் மனமுறிந்து வருந்தினர் என்பதை,

**தாயில் தூவாக் குழவி போல**
**ஓவாது கூவுநின் உடற்றியோர் நாடே**[15]

என்று பரணர் பாடலால் அறியலாம். சோழன் உருவப்பஃறேர் இளஞ்சேட் சென்னியைப் பார்த்துப் பரணர் இவ்வாறு கூறுகிறார். நின்னுடன் பகைத்துப் போர் செய்த நாடு மன்னனை இழந்து தாயின்றி அழும் குழந்தை போன்று வாடுகின்றது என்கிறார். இப்புலவர் சமுதாயத்தின் மீதுள்ள பற்றின் காரணமாக மனமுறிந்து பாடுகின்றார். இதனைப் போன்று, கருங்குழலாதனார் என்னும் புலவர்,

**எல்லையும் இரவும் எண்ணாய் பகைவர்**
**ஊர்சுடு விளக்கத்து அழுவிளிக் கம்பலைக்**
**கொள்ளை மேவலை ஆகலின், நல்ல**
**இல்ல ஆகுபவால்  இயல்தேர் வளவ!**
**தண்புனல் பரந்த பூசல் மண்மறுத்து**
**மீனில் செறுக்கும் யாணர்ப்**
**பயன்திகழ் வைப்பின் பிறர்அகன்தலை நாடே**[16]

என்று பாடுகிறார். பகலும் இரவும் என எண்ணாமல் பகைவர் நாட்டைத் தீயிட்டு அழித்தாய், அதனால் அந்நாடுகள் நல்ல பொருட்களை விளைவிக்கக்கூடிய தன்மையினை இழந்தன என்று கூறி மனமுருகுகிறார். புலவர்களின் விருப்பம் நாடு வளமுடன் திகழவேண்டுமென்பது. ஆனால் அவ்விருப்பத்திற்குப் போர் தடையாக இருப்பதை எண்ணி புலவர் மனமுடைந்து வருந்துகிறார்.

*சங்க காலச் சமுதாயத்தில் பெண்களும் ஓர் அங்கமாவர். போரினால் பெண்களின் நிலை கண்டு மனமுறிந்த புலவர் கழாத்தலையார்,*

**அறத்தின் மண்டிய மறப்போர் வேந்தர்**
**தாம்மாய்ந் தனரே: குடைதுளங் கினவே;**
**பன்னூறு அடுக்கிய வேறுபடு பைஞ்ஞிலம்**
**இடம்கெட ஈண்டிய வியன்கண் பாசறைக்**
**களம்கொளற்கு உரியோர் இன்றித் தெறுவர**
**உடன்வீழ்ந் தன்றால் அமரே; பெண்டிரும்**
**பாசடகு மிசையார் பனிநீர் மூழ்கார்**
**மார்பகம் பொருந்தி ஆங்கமைந் தனரே**[17]

*என்று பாடுகிறார். இரு பெரும்படை வீரர்களும் போர்க்களத்தில் மாய்ந்தனர். அதனால் அவர்தம் பெண்டிர் பசிய கீரைகளை உண்ணாமலும் குளிர்ந்த நீரில் மூழ்காமலும் தம் கணவர்களுடன் உயிர் துறந்தனர். இத்தகு நிலையை எண்ணி மனமுறிந்து இனி நாடும் என்னவாகுமோ? என்கிறார். எனவே மக்களின் வளமிக்க வாழ்க்கைக்குப் போரே தடையாக இருப்பதை எண்ணிப் புலவர்களிடம் சமூக நிலை மனமுறிவு தோன்றியது எனலாம். இதனைப் போன்றே மற்றொரு பாடல்,*

**உறுசெறுநர் புலம்புக்கு அவர்**
**கடிகாவின் நிலைதொலைச்சி**
**இழிபுஅறியாப் பெருந்தண்பணை**
**குரூஉக்கொடிய எரிமேய**
**நாடெனும்பேர் காடாக**
**ஆசேந்தவழி மாசேப்ப**
**ஊரிருந்தவழி பாழாக**[18]

*என்று தொன்று தொட்டு வந்த பகைவர் நிலத்தில் புகுந்து அவர் காவல் சோலைகளை அழித்தாய். வளம் குன்றுதலை அறியாத பெரிய மருதநிலங்களைக் கொடிய நெருப்பூட்டினாய். நாடென்ற பெயரைக்*

காடாக்கினாய் என்று பகை நாட்டின் அழிவுக்கு இரங்கிச் சமூக மனமுறிவு கொள்கிறார் என்பதை அறியலாம்.

### 4.9.4. மரணம்

போரால் நேரும் அழிவுகளும் மரணங்களும் மனத்தைத் தாக்கிச் சீர்குலைப்பன. மனித இழப்புகளில் மிகப் பெரியது மரணமாகும். இத்தகைய ஈடு செய்ய இயலாத இழப்பால் மனித மனம் எளிதில் ஆறுவதில்லை. மரணம் மனித வாழ்வின் அவலமாகக் கருதப்படுகிறது. தன் கணவனின் மரணத்திற்காக மன முறிவுற்றுக் கதறும் பெண்ணைத் தாயங்கண்ணனார் என்னும் புலவர்,

**களரி பரந்து கள்ளி போகிப்**
**பகலும் கூவும் கூகையொடு பேழ்வாய்**
**ஈம விளக்கில் பேஎய் மகளிரொடு**
**அஞ்சுவந் தன்றுஇம் மஞ்சுபடு முதுகாடு**
**நெஞ்சுஅமர் காதலர் அழுத கண்ணீர்**
**என்புபடு சுடலை வெண்ணீ றுஅவிப்ப**
**எல்லார் புறனும் தான்கண்டு உலகத்து**
**மன்பதைக் கெல்லாம் தானாய்த்**
**தன்புறம் காண்போர்க் காண்புஅறி யாதே**[19]

என்று பாடுகிறார். காடு படர்ந்து, கள்ளி மிகுந்து பகற்பொழுதின் கண் கூவும் கூகையாலும் பிணஞ்சுடும் தீயாலும் பேய் மகளிராலும் சூழப்பட்ட சுடுகாடு அச்சத்தை அளிக்கிறது. அத்தகைய மயானத்தில் தன் காதலன் இறந்ததால் காதலி கண்ணீர் வடிக்கிறாள். அக்கண்ணீரானது பிணத்தின் இடையேயுள்ள வெண்ணிய சாம்பலை நனைத்தது. இதனால் விரும்பிய தலைவர்களை இழந்த மனங்கள் புலம்பித் தவிக்கின்றன. எனவே மரணத்தினால் மக்களிடையே உளமுறிவு தோன்றுவதை இப்பாடல் விளக்குகிறது. இதைப் போன்றே பரணர் என்னும் புலவர்,

**கடும்பரிக் குதிரை ஆஅய் எயினன்**

**நெடுந்தேர் மிஞிலியொடு பொருது, களம்பட்டென**[20]

*என்று பாடுகிறார். விரைந்து ஓடும் குதிரைப் படையினை உடைய ஆஅய் எயினன், பெரிய தேரில் வந்து பொருத மிஞிலியோடு போரிட்டு இறக்க, அதனைக் காணமுடியாப் பறவைகளின் வருத்தத்தைப் பதிவு செய்துள்ளார். மரணத்தைத் தாங்காத தன் மனவுணர்வினைப் பறவையின் மீது ஏற்றித் தனது மனமுறிவை வெளிப்படுத்தியுள்ளார்.*

### 4.9.5. உளப்போராட்டம் (Mental Conflict)

*ஒருவனது மனம் சரியான முடிவெடுக்கும் நிலையில் இல்லாதபோது மனக்குழப்பம் ஏற்படுகிறது. உளத்தின் இந்த நிலை தனிப்பட்ட ஒருவனுடைய செயலைத் தடுத்து நிறுத்துகிறது. மனிதனின் எண்ணத்திற்கு ஏற்பவே அவன் செயல்களும் அமைகின்றன. அவனை இன்பமாகவும் துன்பமாகவும் வைத்துக் கொள்வது மனம். அம்மனத்தில் பல போராட்டங்கள் எழுகின்றன. அப்போராட்டங்கள் மனக்குலைவினாலும் கவலைகளினாலும் தோன்றுகின்றன. தனக்கும், தன்னைச் சுற்றியிருப்பவர்களுக்கும் தன்னை நெருங்கியவர்களுக்கும் ஏற்படும் தீய செயலினால் மனம் பாதிக்கப்பட்டுப் போராட்டம் ஏற்படுகிறது.*

*“மனப் போராட்டம் மனமுறிவினால் ஏற்படுகிறது என்றும், மனமுறிவு மனப்போராட்டத்தால் விளைகிறது என்றும் கூறலாம். இதன் மூலம் மனமுறிவும் மனப் போராட்டமும் ஒன்றோடொன்று தொடர்புடையவை ஆகும். எனவே, இரண்டு சமவலிவுடைய ஊக்கிகள்* (Motives) *பூர்த்தி பெற இயலாது. ஒன்று மற்றொன்றுக்குத் தடையாக இருப்பதன் காரணமாக ஏற்படும் உளநிலையே உளப்போராட்டம்”*[21] *என்கிறார் து. சிவராஜ்.*

*“உளப் போராட்டத்தைக் கர்ட்லீவின் எனும் உளவியல் அறிஞர் மூவகைப்படுத்தியுள்ளார். அவை:*

- அணுகுதல் - அணுகுதல் போராட்டம் (Approach - Approach Conflict)
- அணுகுதல் - விலகுதல் போராட்டம் (Approach - Avoidance Conflict)
- விலகுதல் - விலகுதல் போராட்டம் (Avoidance - Avoidance Conflict)

என்பனவாகும்.''[22]

### 4.9.5.1. அணுகுதல் - அணுகுதல் போராட்டம் (Approach - Approach Conflict)

''விரும்பத் தகுந்த இரண்டு அல்லது இரண்டுக்கு மேற்பட்ட மன மாற்றங்களிடையே நிகழலாகும் போட்டியை உள்ளடக்கியதே அணுகுதல் - அணுகுதல் போராட்டம் என உளவியல் விளக்குகிறது. விரும்பத் தகுந்த இரண்டு இலக்குகளை ஒரே நேரத்தில் அடைய முயல்வதால் ஏற்படும் உள்ள நிலையே இத்தகைய உளப் போராட்டம்''[23] என்று உளவியலாளர் கருதுகின்றனர். இத்தகைய உளப் போராட்டம் புறநானூற்றில் புலவர் ஒருவருக்கு ஏற்படுகிறது. இதனை,

**விளங்குபொன் எறிந்த நலங்கிளர் பலகையொடு**
**நிழல்படு நெடுவேல் ஏந்தி ஒன்னார்**
**ஒண்படைக் கடுந்தார் முன்புதலைக் கொண்மார்**
**நசைதர வந்தோர் நசைபிறக் கொழிய**
**வசைபட வாழ்ந்தோர் பலர்கொல்? புரைஇல்**
**நற்பனுவல் நால்வேதத்து**
**அருஞ்சீர்த்திப் பெருங்கண்ணுறை**
**நெய்ம்மலி ஆவுதி பொங்கப் பன்மாண்**
**வீயாச் சிறப்பின் வேள்வி முற்றி**
**யூபம் நட்ட வியன்களம் பலகொல்?**
**யாபல கொல்லோ? பெரும! வார் உற்று**[24]

என்று பாண்டியன் பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதியை நெட்டிமையார் பாடுகிறார். பாண்டிய மன்னன் தன் வலிமைமிக்க படைகளைக் கொண்டு போரில் பல பகைமன்னர்களைப் புறமுதுகிட்டு ஓடச் செய்கிறான். இவ்வாறு உன் போர் வன்மையால் தோற்கடித்த இகழ்ச்சியுடன் வாழும் மன்னர்கள் பலரோ?

இல்லையென்றால், குற்றமற்ற நல்ல அறநூல்களிலும், நான்கு வகை வேதங்களிலும் கூறப்பெற்ற வேள்விகள் பல நடத்தினாய், அவ்வேள்வியினால் நட்ட யாகசாலைத் தூண்கள் பலவோ? எனப் புலவர் மன்னனைப் பார்த்து வியந்து கூறுகிறார்.

எனவே புலவரிடம் இருநிலைப்பட்ட அணுகுதல், அணுகுதல் போராட்டமாகத் தோன்றுகிறது. அவை போரினால் தோற்றோடிய பகை மன்னர்கள் பலரா? அல்லது புகழின் பொருட்டுச் செய்யப்பட்ட யாகசாலைத் தூண்கள் பலவா? இவற்றுள் எது பல? என்னும் உளப்போராட்டம் தோன்றுகிறது. எனவே இரண்டு விரும்பத் தகுந்த செயல்களில், ஒரே நேரத்தில் அடைய முயல்வதில் ஏற்படும் அணுகுதல் போராட்டம் தோன்றுகிறது.

போரினால் மேம்பட்டு விளங்கும் மன்னனிடம் புலவர் ஒருவர் பரிசில் பெற எண்ணுகிறார். அப்புலவரை மற்றொரு புலவர் ஆற்றுப்படுத்தும்போது சேரமான் கோக்கோதையைக் கண்டாயானால்,

**கோதை மார்பில்; கோதை யானும்**
**கோதையைப் புணர்ந்தோர் கோதை யானும்,**
**மாக்கழி மலர்ந்த நெய்த லானும்**
**கள்நா றும்மே கானலம் தொண்டி**
**அஃதுஎம் ஊரே; அவன்எம் இறைவன்;**
**அன்னோற் படர்தி ஆயின் நீயும்**

**எம்மும் உள்ளுமோ முதுவாய் இரவல**

**அமர்மேம் படூஉம் காலைநின்**

**புகழ்மேம் படுநனைக் கண்டனம் எனவே[25]**

என்று பொய்கையார் பாடுகிறார். அதாவது நீ போரில் மேம்பட்டு விளங்கும்போது, நின் புகழை உயர்த்திக் கூறுகையில் கோதையான் சூடியமாலையானும் அவனைக் கூடிய மகளிரின் மாலையானும் கருநிறத்தில் மலர்ந்த நெய்தலானும் தேன்மணம் பெருகும் கடற்கரைத் தொண்டிமாநகர் எனது ஊர் அக்கோதையான் எம்தலைவன் என்று புகழ்கையில் அவனது மாலை, அவன்கூடும் மகளிர் மாலை மற்றும் கடற்கரை மாநகர் என்று எதைப் புகழ்வது என அணுகுதல் அணுகுதல் போராட்டத்தில் ஆட்பட்டுப் பரிசில் நிரம்பப் பெற்றுக் கொள் என்கிறார். இத்தகைய வலியவன் போரைச் செய்து நால்வகை நிலங்களையும் உடையவன் என்பதைப் புறப்பாடல் தருகிறது.

**நாடன் என்கோ? ஊரன் என்கோ?**

**பாடிமிழ் பனிக்கடல் சேர்ப்பன் என்கோ?**

**யாங்கனம் மொழிகோ ஓங்குவாள் கோதையை?**

**புனவர் தட்டை புடைப்பின் அயலது**

**இறங்குகதிர் அலமரு கழனியும்**

**பிறங்குநீர்ச் சேர்ப்பினும் புள்ஒருங்கு எழுமே[26]**

ஆதலால் உயர்த்திய வாளையுடைய கோக்கோதையைக் குறிஞ்சி நிலத்தை உடையவனாதலால் ‘நாடன்’ என்பதா? நெய்தல் நிலத்தை உடையவனாதலால் ‘சேர்ப்பன்’ என்பதா? மருதநிலத்தைக் கொண்டவனாதலால் ‘ஊரன்’ என்பதா? என்னும் அணுகுதல் - அணுகுதல் போராட்டம் புலவரிடம் தோன்றுகிறது. இங்கே மூன்று இணையான வலிமையுடைய தன்மைகளுள் எவற்றை அணுகுவது என்னும் அணுகுதல் - அணுகுதல் போராட்டம் தோன்றுகிறது. இதனைப் போன்றே, வேந்தன் பகையரசனின் மகளை விரும்பி மணம்புரியப் பெண் கேட்கிறான். தந்தை

*மகளைக் கொடுக்க மறுக்கிறான். இதன் பொருட்டுப் போர் நடைபெற்றது. மன்னன் மணமா! மரணமா! என்னும் உளப் போராட்டத்தைக் கொண்டு போர் தொடங்குகிறான் என்பதை,*

**சுணங்கணி வனமுலை யவளொடு நாளை**
**மணம்புகு வைகல் ஆகுதல் ஒன்றோ,**
**ஆர்அமர் உழக்கிய மறம்கிளர் முன்பின்**
**நீள்இலை எஃகம் அறுத்த உடம்பொடு**
**வாரா உலகம் புகுதல் ஒன்றெனப்**
**படைதொட் டனனே குருசில்; ஆயிடைக்,**
**களிறு பொரக் கலங்கிய தண்கயம் போலப்**
**பெருங்கவின் இழப்பது கொல்லோ,**
**மென்புல வைப்பின்இத் தண்பணை ஊரே![27]**

*என்று பரணர் பாடுகிறார். இப்போரில் ஈடுபடும் மன்னனிடம் இருநிலைப்பட்ட உளப்போராட்டம் தோன்றுகிறது. அவை போரில் வெற்றி பெற்றால் மறக்குடி மகளிரொடு மணம். இல்லையென்றால் மறப் பெருமை தோன்ற மரணம் என்னும் அணுகுதல் - அணுகுதல் போராட்டமாகத் தோன்றுகிறது.*

**மாண்டனை பலவே போர்மிகு குருசில்நீ**
**மாதிரம் விளக்குஞ் சால்புமஞ் செம்மையும்**
**முத்துடை மருப்பின் மழகளிறு பிளிற**
**மிக்கெழு கடுந்தார் துய்த்தலைச் சென்று**
**துப்புத்துவர் போகப் பெருங்கிளை யுவப்ப**
**ஈந்தான் றானர் விடனுடை வளனும்,**
**துளங்குகுடி திருத்திய வலம்படு வென்றியும்**
**எல்லா மெண்ணி னிடுகழங்கு தபுந[28]**

*என்று போர்த் தொழிலில் விளங்கும் தலைவா! பல குணங்களாய் மாட்சிமைப் பட்டுத் திகழ்கின்றாய்! திசைகளை விளங்கச் செய்யும் சால்பும்*

நடுநிலைமையும் முத்துக்கள் கொண்ட கொம்புடைய இளைய ஆண்யானை பிளிறப் போர் விருப்பம் மிகுந்து எழும் தூசிப்படை பகைவர் நாட்டில் சென்று வலிமையில் உயர்ந்து நிற்கவும் பாணர் சுற்றம் மகிழ்ச்சியடையுமாறு கொடுத்தலால் நிறைந்தும் குறையாத செல்வவளமும் தன்னால் தளர்ந்து வருந்திய குடிமக்களைத் திருத்தி, மேலும் பல வெற்றிகள் உண்டாவதற்குக் காரணமாகிய வெற்றியும் ஆகிய உன்னுடைய பல குணங்களையும் எண்ணிப் புகுந்ததால் அவற்றை எண்ணுவதற்காக இடப்படும் எண்ணிக்கை போதாததாக அமையும் என்று அணுகுதல், அணுகுதல் போராட்டம் கொள்கின்றார். இதேபோன்று,

**உறலுறு குருதிச் செருக்களம் புலவக்**
**கொன்றமர்க் கடந்த வெந்திறற் றடக்கை**
**வென்வேற் பொறைய னென்றலின் வெருவர**
**வெப்புடை யாடூஉச் செத்தனென் மன்யான்**
**நல்இசை நிலைஇய நனந்தலை யுலக**
**தில்லோர் புன்கண் டீர நல்கும்**
**நாடல் சான்ற நயனுடை நெஞ்சிற்**
**பாடுநர் புரவல னாடுநடை யண்ணல்,**
**கழைநிலை பெறாஅக் குட்டத் தாயினும்**
**புனல்பாய் மகளி ராட வொழிந்த**
**பொன்செய் பூங்குழை மீமிசைத் தோன்றும்**
**சாந்துவரு வானி நீரினும்**
**தீந்தண் சாயலன் மன்ற தானே**[29]

என்பதால் இளஞ்சேரல் என்னும் சேரவேந்தன், அச்சம் உண்டாகும்படி நிலத்தில் சிந்திய குருதியின் மிகுதியால், போர்க்களம் புலால் நாற்றம் வீசப் பகைவர்களைக் கொன்று போரினை வென்ற பெருமை மிக்க கையினையும் வெற்றி வேலினையுடைய பொறையன் என்று பலரும் கூறினர். அவ்வாறு பலரும் கூறியதால் சேரலாதனை வெம்மையானவன் என்று எண்ணினேன்.

ஆனால், இப்போது விரிந்த உலகில் புகழை நாட்டுவதற்காக வறியவர்களின் வறுமை நீக்க நிரம்பக் கொடுக்கும் அறத்தை ஆராயும் அன்புடைய நெஞ்சினையும் வெற்றி உண்டாக்கும் ஒழுக்கத்தையும் கொண்ட அண்ணலாகிய அவ்வேந்தன் பாடி வருவோனைப் புரத்தல் வல்லவனாக உள்ளான். மேலும், அவன் ஓடக்கோல் அண்டாத ஆழமுடைய இடத்திலும் நீரில் பாய்ந்தாடும் மகளிர் காதிலிருந்து கழன்று விழுந்த பொன்னாலாகிய காதணிகள், நீரின் மேலிருந்து பார்க்கத் தெளிவாகத் தெரியுமாறு தெளிந்த நீர் கொண்டதும், சந்தன மரங்களை அடித்துக் கொண்டு வருவதுமான வானி என்னும் ஆற்றின் நீரினைக் காட்டிலும் மென்மையுடையவனாக விளங்குகின்றான் என்று அணுகுதல், அணுகுதல் போராட்டம் கொள்கிறார். இதனைப் போன்றே,

**வயவர் வீழ வாளரின் மயக்கி**
**இடங்கவர் கடும்பி னரசுதலை பனிப்பக்**
**கடம்புமுத றடிந்த கடுஞ்சின வேந்தே**
**தாரணி யெருத்தின் வாரல் வள்ளுகிர்**
**அரிமான் வழங்குமஞ் சாரற் பிறமான்**
**தோடுகொ ளின்நிரை நெஞ்சதிர்ந் தாங்கு**
**முரசுமுழங்கு நெடுநக ரரசுதுயி லீயாது**
**மாதிரம் பனிக்கும் மறம்வீங்கு பல்புகழ்**
**கேட்டற் கினிதுநின் செல்வம் ....................**

**..................................................................**

**றொல்பசி யழந்த பழங்கண் வீழ**
**எஃகுபோழ்ந் தறுத்த வானிணக் கொழுங்குறை**
**மையூன் பெய்த வெண்ணெல் வெண்சோறு**
**நளையமை கள்ளின் றேறலொடு மாந்தி**
**நீர்ப்படு பருந்தி னிருஞ்சிற கன்ன**
**நிலம்தின் சிதாஅர் களைந்த பின்றை**
**நூலாக் கலிங்கம் வாலரைக் கொளீஇ**

-----------------------------------------------------------------

**நுகர்தற் கினிதுநின் பெருங்கலி மகிழ்வே**[30]

என்ற பாடலில் குமட்டூர்க் கண்ணனார் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனது வீரமானது மாலை போலப் பிடரி மயிரினையும் நீண்ட கூரிய நகங்களையுமுடைய சிங்கம் நடமாடும் மலைச் சாரலில் பிற விலங்கினக் கூட்டங்கள் நெஞ்சு நடுங்கி வாழும். அதுபோல அதிரும் முரசு பொருந்திய அரண்மனைகளுள் இருந்து, நால்திசைகளிலுமுள்ள அரசர்கள் கண் துயிலாமல் நெஞ்சம் நடுங்குவர். இந்த வீரத்தால் பலர்புகழ்வது கேட்பதற்கு இனிமையாக உள்ளது என அணுகுதலும் அதே போன்று பல நாள் தொடர்ந்து வருந்திய பசித்துன்பத்தை நீக்கும்படி அரிவாளால் அறுத்த தசைத்துண்டங்களான ஆட்டிறைச்சியைக் கலந்து சமைத்த வெண்சோற்றினை உண்ணச் செய்வாய்; மலர் அரும்புகள் இட்டிச் செய்த கள்தெளிவைப் பருகச்செய்வாய். மழையில் நனைந்த பருந்தின் கரிய சிறகு போன்று மண் அரித்து மாசுடைய கந்தலாடையை நீக்கிப் பட்டு இழையால் நெய்த ஆடையினை அணியச்செய்வாய். இந்தக் கொடைத்தன்மை நுகர்தலுக்கு இனிமையானது என்று அணுகுதல் - அணுகுதல் போராட்டம் கொள்கிறார் என்பதை அறியமுடிகிறது. இதனைப் போன்றே,

**அவ்வாய் வளர்பிறை சூடிச் செவ்வாய்**
**அந்தி வானத்து ஆடுமழை கடுப்ப,**
**வெண்கோட்டு இரும்பிணம் குருதி ஈர்ப்ப,**
**ஈர் – ஐம்பதின்மரும், பொருது, களத்து அவிய,**
**பேர்அமர்க் கடந்த கொடுஞ்சி நெடுந்தேர்**
**ஆராச் செருவின் ஐவர் போல,**
**அடங்காத் தானையோடு உடன்று மேல்வந்த**
**ஒன்னாத் தெவ்வர் உலைவிடத்து ஆர்த்து,**
**கச்சியோனே, கைவண் தோன்றல்,**
**நச்சிச் சென்றோர்க்கு ஏமம் ஆகிய**
**அளியும் தெறலும் எளிய ஆகலின்**[31]

என்று தொண்டைமான் இளந்திரையன் போர்க்களத்தில் இரத்த ஆறு ஓடியது. அது பார்ப்பதற்குச் சிவந்த வானம் போன்று தோன்றியது. அவ்வானத்தின் மேகங்கள் அசைவதுபோல் யானையின் பிணங்கள் இரத்த வெள்ளத்தில் அசைந்து கொண்டிருந்தன. யானையின் கொம்புகள் சிவந்த வானத்தில் தோன்றும் பிறைபோன்று இருந்தன. இப்போர்க்களம் பாரதப் போர்க்களம்போல் காட்சியளித்தது. இப்பெரும் போர்க்களத்தில் இளந்திரையன் பகைவர்களை வென்று அவர்களுடைய கொடுஞ்சி என்னும் உறுப்புடைய தேரைக் கவர்ந்து வருகிறான். மிகப்பெரிய சேனையைக் கொண்டு எதிர்த்தவரை அழித்து ஆரவாரம் செய்வான். அத்தகையவன் கச்சியில் இருந்தான். அவன் பிறருக்குக் கொடுப்பதில் மிகுந்த வள்ளல் தன்மையுடையவன் மற்றும் தன்னை நாடி வருபவர்களுக்குப் பாதுகாப்பானவன் என அவனது போர்த்திறம் மற்றும் அருளுடைய தன்மை கண்டு அணுகுதல், அணுகுதல் போராட்டம் கொள்கிறார். இதனைப் போன்று,

**பொன்னும் துகிரும் முத்தும் மன்னிய**
**மாமலை பயந்த காமரு மணியும்**
**இடைபடச் சேய ஆயினும் தொடைபுணர்ந்து**
**அருவிலை நன்கலம் அமைக்கும் காலை,**
**ஒருவழித் தோன்றியாங்கு என்றும் சான்றோர்**
**சான்றோர் பாலர் ஆப**
**சாலார் சாலார் பாலரா குபவே**[32]

என்பதால் கண்ணாகனார் பிசிராந்தையாரை நோக்கிப் பாடுகையில் பொன்னும் பவளமும் முத்தும் உயர்ந்த மலையில் தோன்றும் மாணிக்கம் ஆகிய பொருட்கள் தொலைவில் தோன்றினாலும் மதிப்புமிக்க மாலையாகத் தொடுக்கும்போது அவை நெருங்குவதுபோலச் சான்றோர் தொலைவில் இருந்தாலும் இணைந்தே செயல்படுவர் என அணுகுதல் போக்கும் உயர்விலார் என்றும் உயர்விலாரையே நெருங்கி இருப்பர் என

*அணுகுதல் போக்கும் மக்களிடம் காணப்படும் தன்மைக்கு ஏற்பவே நட்பு அமையும் என அணுகுதல் அணுகுதல் மனப்போராட்டத்தை தம் பாடலில் பதித்துள்ளார்.*

### **4.9.5.2. அணுகுதல் - விலகுதல் போராட்டம்** (Approach - Avoidance Conflict)

*உளத்தின் நோக்கமும் ஊக்கமும் மனிதனைச் செயல்படுத்துகின்றன. இதன் காரணமாக இரு வகையான நிகழ்வுகள் தோன்றுகின்றன. எனவே "அணுகுதல் - விலகுதல் போராட்டம் என்பது ஓர் இலக்கினை அணுகவும் விலகவும் தூண்டும் வலுவான போக்குகள் ஒரே நேரத்தில் நிலவுவதே அணுகுதல் - விலகுதல் போராட்டம் எனப்படும். ஓர் இலக்கினை அடைவதில் நேர்நிலையான தூண்டல் ஒன்றும் எதிர்மறையான தூண்டல் ஒன்றும் செயல்படுகின்றன. அப்போது அந்த இலக்கினை அணுகுவதா, விலகுவதா என்னும் போராட்டம் தோன்றுகிறது"[33] என்கிறார் து. சிவராஜ்.*

*புறநானூற்றில் பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியை நெட்டிமையார் என்னும் புலவர் பாடுகையில் மனப்போராட்டத்திற்கு ஆட்படுகின்றார்.*

**பாணர் தாமரை மலையவும், புலவர்**
**பூநுதல் யானையொடு புனைதேர் பண்ணவும்,**
**அறனோ மற்றிது விறல்மாண் குடுமி?**
**இன்னா ஆகப் பிறர்மண் கொண்டு**
**இனிய செய்திநின் ஆர்வலர் முகத்தே[34]**

*என்று பாண்டியா! நீ நின் பகைமண்ணைக் கைப்பற்றி அவர்களுக்குப் பல இன்னல்களைத் தருகிறாய். ஆனால் உன்னுடைய பரிசிலரிடம் இனியவனாக இருக்கின்றாய். இவ்வாறு செய்தல் அறனாகுமா எனப் புலவர் விலகுதல் அணுகுதல் மனப்போராட்டம் கொள்கிறார். இதனைப் போன்று சோழன் நெடுங்கிள்ளி இப்போராட்டத்திற்கு ஆட்படுகின்றான்*

என்பதைக் கோவூர்கிழார் என்னும் புலவர் பாடுகிறார். சோழன் நெடுங்கிள்ளியின் மதிலைச் சோழன் நலங்கிள்ளி முற்றுகை இடுகிறான். சோழன் நலங்கிள்ளியின் படை வலிமையைக் கண்டு போரிடவும் எழாமல், தோல்வியை ஏற்றுக்கொள்ளவும் மனமின்றித் தவிக்கிறான். இதன் காரணமாகப் போரினை அணுகவும் முடியாமல், விலக்கவும் முடியாமல் உளப்போராட்டம் அவனிடம் தோன்றியதால் முற்றுகைப் போராட்டம் நீடித்தது எனலாம்.

போரின் முடிவில் இளைஞரும் முதியோருமாகிய எஞ்சிய வீரர்கள் பலரும் தமக்குரிய இடத்தை அடைகின்றனர். ஆனால் தன் கணவர் போர்க்களத்திலிருந்து வராததைக் கண்ட வீரனின் மனைவி போர்க்களம் நோக்கிப் புறப்படுகிறாள். அங்கே, மார்பில் புண்பட்டு இறந்து கிடந்த தன் கணவனின் உடலைக் கண்டு,

**இளையரும் முதியரும் வேறுபுலம் படர**
**எடுப்ப எழாஅய் மார்பம்மண் புல்ல**
**இடைச்சுரத்து இறுத்த மள்ள விளர்த்த**
**வளைஇல் வறுங்கை ஓச்சிக் கிளையுள்**
**இன்னன் ஆயினன் இளையோன் என்று**
**நின்உரை செல்லும் ஆயின், மற்று**
**முன்னூர்ப் பழுனிய கோளி ஆலத்துப்**
**புள்ளார் யாணர்த் தற்றே என்மகன்**
**வளனும் செம்மலும் எமக்கென நாளும்**
**ஆனாது புகழும் அன்னை**
**யாங்கா குவள்கொல் அளியள் தானே**[35]

என்பதனால் உன் மார்பு மண்ணில் பட வீழ்ந்து கிடக்கின்றாய். நான் உன்னை எழுப்பவும் எழாமல் உயிரற்றுக் கிடக்கின்றாய். எனவே நீ இறந்துபட்ட செய்தியைச் சொன்னால் உன் அன்னை என்ன ஆவாளோ என்னும் அணுகுதல் போராட்டமும் மகன் மேல் தன் உயிரையே

வைத்திருக்கும் அத்தாய் இறந்து போகவும் கூடும். இப்பொழுது நான் என்ன செய்வேன் என்று கூறும் போது விலகுதல் போராட்டமாகவும் இது அமைகிறது. மரணம் காரணமாக மறக்குடி மகளிடம் அணுகுதல் - விலகுதல் போராட்டம் தோன்றியது எனலாம்.

வீரன் ஒருவன் போர்க்களத்திலே இறந்து விடுகிறான். செய்தியறிந்த அவன் மனைவி போர்க்களம் நோக்கிச் செல்கிறாள். அவ்வீரனின் உடலைக் கண்ட மனைவி வளையல் இல்லாத வெறுங்கையைத் தலைமேல் வைத்துக் கொண்டு புலம்புகிறாள் என்பதைப் பின்வரும் பாடலால் அறியலாம்.

**என்திறத்து அவலம் கொள்ளல் இனியே**
**வல்லார் கண்ணி இளையர் திளைப்ப**
**நகாஅல்என வந்த மாறே, எழாநெல்**
**பைங்கழை பொதிகளைந் தன்ன விளர்ப்பின்**
**வளையில் வறுங்கை ஓச்சிக்**
**கிளையுள் ஒய்வலோ, கூறுநின் உரையே**[36]

எனும் பாடலில் இருவகையான உளப்போராட்டம் அப்பெண்ணிடம் தோன்றுகிறது. அவை, கணவனின் இறப்பிற்கு மனம் வருந்தி இனி உன் சுற்றத்தார்க்கு எவ்வாறு இதனைத் தெரிவிப்பேன் என்பதால் அணுகுதல் போராட்டமும் இனியாது செய்வேன்? எனக் கதறி அழும்போது விலகுதல் போராட்டமும் தோன்றுகின்றன. எனவே இருவகையான தூண்டல்களால் எவற்றை அணுகுவது, விலக்குவது என்னும் உள்ளப்போராட்டம் அப்பெண்ணிடம் தோன்றியது. இதனைப் போன்று,

**அரிமான் வழங்குஞ் சாரல், பிறமான்**
**தோடுகொள் இளநிரை நெஞ்சு அதிர்ந்தாங்கு,**
**முரசு முழங்கு நெடுநகர் அரசு துயிலீயாது,**
**மாதிரம் பனிக்கும் மறம் வீங்கு பல்புகழ் –**
**கேட்டற்கு இனிது; நின்செல்வம்; கேட்டொறும்**[37]

*மலை போலப் பிடரி மயிரினையும் நீண்ட கூரிய நகங்களையுடைய சிங்கம் நடமாடும் மலைச் சாரலில் பிற விலங்கினக் கூட்டங்கள் நெஞ்சு நடுங்கி வாழும். அதுபோல அதிரும் முரசு பொருந்திய அரண்மனைகளுள் இருந்து நால்திசைகளிலுள்ள அரசர்கள் கண் துயிலாமல் நெஞ்சம் நடுங்குவர் எனக் குமட்டூர்க் கண்ணனார் இமயவரம்பனது வீரம் அவர்தம் எதிரிகளுக்கு அச்சத்தைத் தருகிறது என்று விலகுதலும் அவன் நாட்டு மக்களுக்குச் சிறந்த பாதுகாவலன் என அணுகுதல் விலகுதல் போராட்டத்தைப் படம் பிடித்துக் காட்டுகிறார். மற்றொரு பாடலான,*

**தொறுந்த வயல் ஆரல் பிறழ்ந்தவும்,**
**ஏறுபொருத செறு உழாது வித்துநவும்,**
**கரும்பின் பாத்திப் பூத்த நெய்தல்**
**இருங்குண் எருமை நிரை தடுக்குநவும்,**
**கலிகெழு துணங்கை ஆடிய மருங்கின்**
**வளைதலை மூதா ஆம்பல் ஆர்நவும்,**
**ஒலிதெங்கின், இமிழ் மருதின்,**
**புனல் வாயில் பூம்பொய்கைப்**
**பாடல் சான்ற பயம்கெழு; வைப்பின்,**
**நாடு கவின் அழிய நாமம் தோற்றிக்;**
**கூற்று அடூஉ நின்ற யாக்கை போல,**
**நீ சிவந்து இறுத்த நீர்அழி பாக்கம்**
**விரிபூங் கரும்பின் கழனி புல்லென,**
**திரிகாய் விடத்தரொடு கார் உடைபோகிக்**
**கவைத் தலைப் பேய்மகள் கழுது ஊர்ந்து இயங்க**[38]

*என்று பெருமை மிக்க வேந்தே! நின் பகைவர் நாடுகளில் ஆட்டுக் கிடைகட்டிய வயல்கள் நீர் நிரம்பியமையால் ஆரல்மீன் பிறழும் இடங்களாகவும் எருதுகள் சண்டையிட்டமையால் உழ வேண்டாமல் சேறாகி, விதைக்கும் இடங்களாகவும் கரும்பு வளரும் பாத்தியில் பூத்த*

*நெய்தல் பெரிய கண்களையுடைய எருமைகளை வேற்றிடம் செல்லவிடாது தடுக்குமிடங்களாகவும் ஆயின. அப்பேர்பட்ட நாடுகள் அழகு கெடும்படியும் மக்கள் அச்சம் தோன்றும்படியும் செய்து, நீ சினந்து சென்று முற்றிகையிட்டமையால் வெள்ளத்தால் அன்றி அழிவுபடாத அந்நாட்டு ஊர்களின் அழிவைக் கண்டு அணுகுதல் விலகுதல் மனப்போராட்டம் கொள்கிறார் புலவர். இதனைப் போன்றே,*

**நகைவர்க்கு அரணம் ஆகிப் பகைவர்க்குச்**
**சூர்நிகழ்ந் தற்றுநின் தானை,**
**போர்மிகு குருசில் நீ மாண்டனை பலவே**[39]

*எனும் வரிகளில் களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரலாதனே! நீ உனது சேனை, உன்னிடம் நட்பாக உள்ளவர்களுக்குப் பாதுகாப்பாக அமைகின்றது என்று அணுகுதலும் அதே சமயம் பகைவர்களுக்கு அஞ்சத் தக்க தெய்வம் வருத்தம் செய்தாற் போல விளங்குகின்றாய்! என்று விலகுதல் போராட்டமும் காப்பியாற்றுக் காப்பியனார் கொள்கிறார். மற்றொரு பாடலான,*

**கார்மழை முன்பின் கைபரிந்து எழுதரும்**
**வான்பறைக் குருகின் நெடுவரி பொற்பக்**
**கொல்களிறு மிடைந்த பல்தோல் தொழுதியொடு**
**நெடுந்தேர் நுடங்குகொடி அவிர்வரப் பொலிந்து**
**செலவுபெரிது இனிதுநின் காணு மோர்க்கே;**
**இன்னாது அம்மஅது தானே பன்மா**
**நாடுகெட எருக்கி நன்கலம் தரூஉம்நின்**
**போர்அரும் கடுஞ்சினம் எதிர்த்து**
**மாறுகொள் வேந்தர் பாசறை போர்க்கே**[40]

*என்பதனால் வேந்தே, உன்னைக் காண்கின்றவர்களுக்கு உனது படை செல்லும் செலவு, கார் கால மேகக் கூட்டத்திற்கு முன்னர் எப்போதாவது ஒழுங்கு குலைந்து செல்லும் வெண்சிறகுடைய கொக்குகளின் நெடிய*

வரிசையினைப் போலக் களிறுகள் நெருங்கிய கிடுகுப் படையின் தொகுதியொடு, தேர்களின் உச்சியில் அசையும் கொடிகள் ஒளிவீசிப் பொலிவு பெற்று விளங்க, மிக்க இன்பம் பயக்கும் என அணுகுதலும் பகைவர் நாடுகள் பலபடியாகக் கெடும்படி செய்து, அதனால் பெற்ற அணிகலன்களைப் பிறர்க்கு வழங்கும் உன்னுடைய மிக்க சினத்தினை ஏற்று மாறுபாடு கொண்டுள்ள அரசரின் பாசறையிலுள்ள வீரர்களுக்கு, அந்தச் செலவு துன்பம் பயக்கும் என்று விலகுதல் போராட்டம் கொள்கிறார் பெருங்குன்றூர் கிழார் என்பதையும் அறியமுடிகிறது.

**அறையும் பொறையும் மணந்த தலைய,**
**எண் நாள் திங்கள் அனைய கொடுங் கரைத்**
**தெள் நீர்ச் சிறுகுளம் கீள்வது மாதோ**
**கூர்வேல் குவைஇய மொய்ம்பின்**
**தேர்வண் பாரி தண் பறம்பு நாடே![41]**

எனும் பாடலில் பாரி கூரிய வேலையுடையவன்; திரண்ட தோள் உடையவன்; தேரினைக் கொடையாக அளிக்கும் இயல்பினன்; என வேள்பாரி இருந்த காலத்து அவன் நாடு இருந்த இன்பநிலையையும் கண்டு அணுகுதலும் பின்பு அவன் இறந்ததால் குளிர்ந்த நாடு பாறையும், சிறுதலைகளையும் கொண்டு எட்டாம் நாள் பிறைபோலும் வளைந்த கரைகளையுடைய தெளிந்த நீரையுடைய சிறுகுளம் பாதுகாப்பார் இல்லாமல் உடைந்து அழிவதுபோல் பல்வகைக் குடிகள் நிறைந்த பாரியால் காக்கப்பட்ட பறம்பு நாடு பாழாவதைக் கண்டு புலவர் மனம் வருந்தி விலகுதலும் என அணுகுதல் விலகுதல் போராட்டம் அடைவதை அறியமுடிகிறது.

### 4.9.5.3. விலகுதல் - விலகுதல் போராட்டம் (Avoidance - Avoidance Conflict)

"இரண்டு விரும்பத்தகாத இலக்குகளில் ஏதாவது ஒன்றை அடைந்தே ஆக வேண்டிய நிலையை விலகுதல் - விலகுதல் உளப் போராட்டம்"[42]

*என்கிறார் து.சிவராஜ். இத்தகைய போராட்டம் புறநானூற்றில் மறக்குடி மகளிர் ஒருத்திக்கு ஏற்படுகிறது என்பதை,*

**'ஐயோ' எனின், யான் புலிஅஞ் சுவலே;**
**அணைத்தனன் கொளினே, அகன்மார்பு எடுக்க  வல்லேன்;**
**என்போல் பெருவிதிர்ப் புறுக நின்னை**
**இன்னாது உற்ற அறனில் கூற்றே;**
**நிரைவளை முன்கை பற்றி,**
**வரைநிழல் சேர்கம் நடத்திசிற் சிறிதே[43]**

*என்று வன்பரணர் பாடுகிறார். போர்க்களத்தில் வீரன் மரணம் அடைந்தான். பிணத்தைக் காணவந்த மனைவி தன் கணவனின் நிலை கண்டு கதறி அழ முற்படுகிறாள். ஆனால் அருகே காடு என்பதால் புலி வந்து பிணத்தைத் தின்று விடுமோ என்று அஞ்சுகிறாள். அதனால் கணவனை விட்டுச் செல்லவும் மனமின்றி, எடுத்துச் செல்லவும் இயலாமல் கலங்குகின்றாள். எனவே, இருவகையான விலகுதல் போராட்டத்திலிருந்து ஏதாவது ஒன்றை அடைய வேண்டும் என்பதால் தன் கணவனின் உடலை நடத்துவது போன்று எடுத்துச் செல்ல விரும்பும் நிலையில் இத்தகைய உளப்போராட்டத்திற்கு ஆட்படுகின்றமை புலப்படுகிறது. இதனைப் போன்றே மாமூலனார் என்னும் புலவர்,*

**கரிகால் வளவனொடு வெண்ணிப் பறந்தலைப்**
**பொருதுபுண் நாணிய சேரலாதன்**
**அழிகள மருங்கின் வாள்வடக்கு இருந்தென,**
**இன்னா இன்உரை கேட்ட சான்றோர்[44]**

*என்பதனால் சோழன் கரிகால் பெருவளத்தானுடன் வெண்ணிப் பறந்தலையில் போர் செய்து புறப்புண்பட்டமைக்காக நாணி வடக்கிலிருந்து பெருஞ்சேரலாதன் உயிர்விடத் துணிந்ததைக் கேட்ட அவனது சான்றோர்கள் அவனோடே தாமும் இறக்க வேண்டும் என்று*

*ஆற்றாமையால் வாழவிரும்பாது விலகுதல் விலகுதல் போராட்டம் கொண்டதைப் பாடியுள்ளார். மற்றொரு பாடலான,*

**வலம்படு முரசின் சேர லாதன்**
**முந்நீர் ஓட்டிக் கடம்புஅறுத்து, இமயத்து**
**முன்னோர் மருள வணங்குவில் பொறித்து**
**நல்நகர் மாந்தை முற்றத்து ஒண்ணார்**
**பணிதிறை தந்த பாடுசால் நன்கலம்**
**பொன்செய் பாவை வயிரமொடு ஆம்பல்**
**ஒன்றுவாய் நிறையக் குவைஇ, அன்றுஅவன்**
**நிலம்தினத் துறந்த நிதியத்து அன்ன**[45]

*என்பதால் பல போர்களில் வெற்றி பெற்று வெற்றி முரசு கொட்டிய சேரலாதன் கடல் தீவில் வாழும் கடம்பர்களை வென்று அவர்களது காவல் மரமாகிய கடம்ப மரத்தை வெட்டினான். வடதிசை மன்னர்களை வென்று, இமயமலையில் தனது வில் இலச்சினையைப் பதித்தான். பகைவர் கப்பமாக அளித்த மதிப்புயர்ந்த பொன் நகைகளுடன் பொற்பாவை, வயிரங்கள் முதலியவற்றை ஆம்பல் என்னும் பேரெண் அளவில் குவித்துப் புதைத்து வைத்தான். அதை அவனோ பிறரோ எடுக்காமல் போகவே அது மண்ணில் கலந்தது அதைப்போன்றே நிதியை, ஒரே நாளில் ஈட்டினாலும் பழி வரும்படி நடத்தலாகாது என்று விலகுதல் விலகுதல் மனப்போராட்டம் கொள்கிறார். இதனைப் போன்று,*

**இளந்துணைப் புதல்வர் நல்வளம் பயந்த**
**வளம்கெழு குடைச்சூல் அடங்கிய கொள்கை**
**ஆன்ற அறிவின் தோன்றிய நல்இசை**
**ஒண்ணுதல் மகளிர் துனித்த கண்ணினும்**
**இரவலர் புன்கண் அஞ்சும்**
**புரவுஎதிர் கொள்வனைக் கண்டனம் வரற்கே**[46]

*என்று இளையராய்த் துணையாகும் புதல்வர்களைப் பெற்றவர்களும் சிறந்த சிலம்பு, அடங்கிய கற்பு, நிறைந்த அறிவு, விளங்கும் புகழ், ஒளிமிக்க நெற்றி ஆகியவற்றைக் கொண்டவர்களாகிய காதல் மகளிரின் மிக்க புலவியால், சினத்துப் பார்க்கும் பார்வைக்கு அஞ்சுவதனினும் மேலாக, இரவலர்களின் வறுமைத் துயர் கண்டு அஞ்சும் தன்மையுடைவன் என்று புலவர் விலகுதல் விலகுதல் மனப்போராட்டம் கொள்வதை அறியமுடிகிறது.*

### 4.9.5.4. உள இறுக்கம் (Pressure)

*மனிதனிடம் உள முறிவும் உளப் போராட்டமும் "எவ்வகைத் தீர்வுமின்றி நெடுங்காலம் தொடருமானால் உணர்வியல் சார்ந்த முற்றிய விறைப்பு நிலை* (Tension) *தோன்றும். அந்நிலையே உள இறுக்கம்* (Stress) *என உளவியலாளர் குறிப்பர். உளம் முறிவுற்ற நிலையிலும் போராட்டம் மிக்க நிலையிலும் சில எதிர்மறையான உளக்கிளர்ச்சிகள்* (Emotion) *தோன்றுகின்றன. அவற்றுள் மூன்றினைச் சிறப்பாக உளவியலாளர் குறிக்கின்றனர். அவை, 1.சினம்* (Anger), *2.அச்சம்* (Fear), *3.கவலை* (Anxiety)"[47] *என்கிறார் து. சிவராஜ்.*

*இதன்படி நோக்கினால், பாரி என்னும் வள்ளல் மகள் மறுத்தல் காரணமாக மூவேந்தர்களின் வஞ்சனையால் போரில் கொல்லப்படுகின்றான். இதனால் அவரது நண்பரும் புலவருமாகிய கபிலர் கவலை அடைகின்றார். பிறகு பாரி மகளிரை மணம் செய்விப்பதன் பொருட்டு இருங்கோவேளிடம் அவ்விருவரையும் அழைத்துச் செல்கிறார். அப்போது அம்மன்னன் மூவேந்தர்களிடம் கொண்ட அச்சத்தால் பாரியின் மகள்களை ஏற்க மறுக்கிறான்.*

*எனவே, கபிலர் பாரியின் மரணத்தால் தோன்றிய உள்ள முறிவினாலும் பாரி மகளிர் வாழ்வை எண்ணிக் கலங்கும் உளப் போராட்டத்தாலும் சினக்க நேரிடுகிறது என்பதை,*

**நும்போல் அறிவின் நுமருள் ஒருவன்**
**புகழ்ந்த செய்யுள் கழாஅத் தலையை**

**இகழ்ந்தனன் பயனே இயல்தேர் அண்ணல்**
**எவ்வி தொல்குடிப் படீஇயர்; மற்றிவர்**
**கைவண் பாரி மகளிர் என்றவென்**
**தேற்றாப் புன்சொல் நோற்றிசிற் பெரும[48]**

என்று கபிலர் பாடுகிறார். புலவர் அச்சினத்திலும் இருங்கோவேளின் குடிப்பெருமையையும் கொடைத்தன்மையையும் எடுத்துரைக்கிறார். பின்னர் உன் போன்ற உன் குடிப்பிறந்த அறிவுடைய ஒருவன் என் போன்ற புலவனை அவமதித்தான். அதனால் பெருந்துயரம் அடைந்தான். எனவே பாரி மகளிர் பற்றிக் கூறிய எனது தெளிவற்ற சொற்களையும் பொறுத்துக் கொள்க என்று கூறி, உள இறுக்கம் அடைகிறார். அம்மன்னன் அளித்த பரிசைச் சினத்துடன் மறுக்கிறார். பாரி இறந்ததால் ஏற்பட்ட கவலையினால் உள முறிவும் பாரி மகளிரின் எதிர்கால வாழ்க்கையை எண்ணிய நிலையில் உளப் போராட்டமும் கபிலரிடம் ஏற்படுகின்றன. இதன் காரணமாக உள இறுக்கம் தோன்றியது எனலாம்.

பாண்டியன் மாறன் வழுதி எனும் மன்னன் புகழ்மிகுதி உடையவன். அவனது போர்ப்படைகள் இடையறாது போர் புரியும் தன்மையுடையன. பயன்தரும் நீர், தீ, காற்று ஆகியன தன் அளவில் மிகுமானால் அழிவு நேரும் அவற்றைப் போன்று சினம் மிகுமாயின் போர் மேற்கொள்பவன் வழுதி என்பதை,

**நீர்மிகின் சிறையும் இல்லை; தீமிகின்**
**மன்னுயிர் நிழற்றும் நிழல் இல்லை;**
**வளிமிகின் வலியும் இல்லை; ஒளிமிக்கு**
**அவற்றோர்; அன்ன சினப்போர் வழுதி,**
**தண்தமிழ் பொதுஎனப் பொறாஅன் போரெதிர்ந்து**
**கொண்டி வேண்டுவன் ஆயின், கொள்கெனக்**
**கொடுத்த மன்னர் நடுக்கற் றனரே;[49]**

என்பதனால் தமிழ்நாடு மூவேந்தர்க்குப் பொதுவானது என்ற சொல்லைக் கேட்டு மாறன் வழுதி சினக்கின்றான். அவன் மனத்தில் தமிழ்நாடு தனக்கு மட்டுமே உரிமையுடையதாக இருக்க வேண்டும் எனவும், பிற மன்னர்கள் நாட்டின் மீது உரிமை கொண்டாடக்கூடாது எனவும் எண்ணுகின்றான். இதனால் தமிழ்நாடு தனக்கு மட்டுமே உரிமையுடையதா? பிறருக்கும் உரிமையுடையதா? என்னும் உளப்போராட்டம் வழுதியின் மனதில் உளஇறுக்கத்தை உண்டாக்குகிறது. இவ்வுள இறுக்கமே சினமாகத் தோன்றிப் போருக்கு வழி வகுக்கிறது.

**நீயே, புறவின் அல்லல் அன்றியும் பிறவும்**
**இடுக்கண் பலவும் விடுத்தோன் மருகனை;**
**இவரே, புலன்உழுது உண்மார் புன்கண் அஞ்சித்**
**தமதுபகுத்து உண்ணும் தண்நிழல் வாழ்நர்**
**களிறுகண்டு அழூஉம் அழாஅல் மறந்த**
**புன்தலைச் சிறாஅர் மன்றுமருண்டு நோக்கி**
**விருந்திற் புன்கணோ உடையர்**
**கேட்டனை ஆயின்நீ வேட்டது செய்ம்மே**[50]

என்பதனால் கோவூர்கிழார் பாடலில் கிள்ளி வளவனைப் பார்த்து அறிவால் உழவுசெய்து கொடையுணவுண்டு வாழும் புலவர்களின் துயருக்கு அஞ்சித் தம் பொருளைப் பகுத்து வழங்கும் இரக்க வாழ்வினர். இருந்தும் தற்பொழுது அச்சத்தால் பகைவனான மலையமானின் இளந்தலைச் சிறுவரை யானையைக் கொண்டு இடரச்செய்வது அழகல்ல எனவும், அறிவுரை கூறுவதிலிருந்து மன்னவனின் அச்சவுணர்வு வெளிப்பாடாகத்தான் இந்நிகழ்வு அமைவதைக் காணமுடிகிறது.

### 4.10. உளத் தற்காப்பு இயங்கு முறைகள் (Defence Mechanism)

மனித வாழ்க்கை பல சிக்கல்களைக் கொண்டது. அவற்றால் உள முறிவு, உளப் போராட்டம், உள இறுக்கம் முதலானவை உளநலத்தைப் பாதிக்கின்றன. “இச்சமயங்களில் தற்காப்பு இயங்குமுறை செயல்படத்

தொடங்கி மனிதனின் அகத்தைப் (Ego) பாதுகாக்கிறது. இவையே தற்காப்பு இயங்குமுறை உருவாகும் சூழல்”[51] என்கிறார் து. சிவராஜ்.

தற்காப்பு இயங்கு முறைகளைப் பலவகையாகப் பகுக்கின்றனர். அவை :

“ஒடுக்கம் (Repression), உணர்வொதுக்கம் (Isolation of Affect), பின்னோக்கம் (Regression), பொதுமையாக்கம் (Generalisation), துறப்பமைவு (Resignation), ஈடுசெய்தல் (Compensation), தன்முகத் திருப்பம் (Turning Against the Self), செயற்படுதல் (Acting Out), எதிர்வினையமைப்பு (Reaction Formation), இடமாற்றம் (Displacement)”[52] என்பனவாகும்.

### 4.10.1. ஒடுக்கம் (Repression)

உளப் போராட்டமும் இறுக்கமும் மிக்க சூழல்களில் மனிதர் சிலர் துன்பங்களோ, குறைபாடுகளோ இருப்பதாக ஏற்றுக் கொள்ள மறுப்பர். “மனிதர்கள் தங்களுடைய அனுபவங்கள் பயமுள்ளவையாகவோ, வெட்கப்படக் கூடியவையாகவோ இருக்குமானால் அவற்றை மறந்துவிட வேண்டும் என்ற மனப்போக்குடையவர்களாக இருக்கின்றார்கள் என்பது பொதுவான உளவியல் உண்மையாகும். இப்போக்கை ‘ஒடுக்கம்’ (Repression) எனப் ப்ராய்ட் கூறுகிறார்.”[53]

வேள் எவ்வி என்னும் வள்ளல், பெருவீரன். ஆனால் போரில் எதிர்பாராத விதமாக இறந்து விடுகிறான். அவன் மீது அன்பும் பெருமதிப்பும் கொண்டவர் புலவர் வெள்ளெருக்கிலையார். இப்புலவர், வள்ளல் ஆற்றல் வாய்ந்தவன் என்பதால் புறப்புண்பட்டு இறந்ததை நம்ப மறுக்கிறார் என்பதை இப்புறப்பாடல் உரைக்கிறது.

**பொய்யா கியரோ பொய்யா கியரோ**
**பாவடி யானை பரிசிலர்க்கு அருகாச்**
**சீர்கெழு நோன்தாள் அகுதைகண் தோன்றிய**

**பொன்புனை திகிரியில் பொய்யா கியரோ**

**இரும்பாண் ஒக்கல் தலைவன் பெரும்பூண்**

**போரடு தானை எவ்வி மார்பின்**

**எஃகுறு விழுப்புண் பலவென**

**வைகுறு விடியல் இயம்பிய குரலே[54]**

என்னும் பாடலின் மூலம், புலவரின் உள் மனத்தின் ஒடுக்குதல் தன்மை புலப்படுகிறது. வேள்எவ்வி அகுதை ஆற்றல் மிக்கவன். இவனிடம் பொன்னால் ஆன சக்கரம் ஒன்று இருந்ததால், இவனை வெல்லுவது அரிது என்ற கருத்து எங்கும் பரவியிருந்தது. ஒரு போரில் அவன் இறந்தான். அதனால், அவன் சக்கரத்தின் புகழ் பொய்யானது. அதுபோல் எவ்வி மறைந்தான் என்ற சொல்லும் பொய்யாகிப் போகுமாறு புலவர் விரும்புகிறார். எனவே வள்ளல் இறந்தது பொய்யாக இருக்கக் கூடாதா? என்று புலவரின் மனம் தவிக்கின்றது. இதனால் உண்மைநிலையை ஏற்க விரும்பாத உளத்தின் ஒடுக்கமே இப்பாடலின் வெளிப்படையாக அமைகிறது. தனக்குத் துன்பத்தைத் தரக்கூடிய உண்மையை ஏற்க மறுத்தலும் அந்த உண்மையைத் தவிர்ப்பதும் உளத்தின் ஒடுக்குதல் தன்மையாகும் என்பதை அறிந்துகொள்ள முடிகின்றது.

**இல்லா கியரோ, காலை மாலை**

**அல்லா கியர்யான் வாழும் நாளே**

**நடுகல் பீலி சூட்டி, நாரரி**

**சிறுகலத்து உகுப்பவும் கொள்வன் கொல்லோ**

**கோடுயர் பிறங்குமலை கெழீஇய**

**நாடுடன் கொடுப்பவும் கொள்ளா தோனே[55]**

என்கிறார் ஔவையார். அதியமான் போரினால் இறந்த பிறகு தாம் வாழும் நாள்கள் பயனற்றன எனக் கருதுகிறார் ஔவையார். உளம், அதியமானின் மரணத்தை ஏற்றுக் கொண்டாலும் அத்துயரத்திலிருந்து விடுபடவும் இத்தகு ஒடுக்குதல் தன்மை அவசியமாகிறது. மேலும் தன்னைத் தானே

அமைதிப்படுத்திக்கொள்ள அதியமான் இல்லாத நாள்கள் தாம் வாழா நாள்கள்போலக் கழியும் என்று தன் உளத்தை ஒடுக்குகிறார்.

### 4.10.2. உணர்வொதுக்கம் (Isolation of Affect)

"விரும்பத் தகாத துன்பச் சூழலை மறுக்கவும் ஒடுக்கவும் உளம் விழைகின்றது. அது இயலாமல் போகுமானால் அனுபவத்தையும் உணர்ச்சியையும் பிரித்துக் கொண்டு அனுபவத்தை மட்டும் ஏற்றுக் கொண்டு அதனோடு இயைந்த உணர்வுகளிலிருந்து உளம் ஒதுக்கம் பெறும் செயல்முறை தோன்றுகிறது.

நனவிலி மனத்தின் உள்துடிப்பினைச் சார்ந்த கருத்தையும் அதற்கேற்ற உணர்வினையும் தன்னியக்கமாகவும், தன்னியல்பாகவும், பிரித்தலையும் அதனால் அக்கருத்தும் அதற்கிணையான உணர்வும் மட்டும் அறநிலைக்கு வர அனுமதித்தலையும் உணர்வொதுக்கம் (Isolation of Affect)"[56] என்று து. சிவராஜ் கூறுகிறார்.

நம்பி நெடுஞ்செழியன் என்னும் மன்னன் போரில் இறக்கிறான். புலவர் பேரெயில் முறுவலார் அவனது மரணச் செய்தியைக் கேட்டு மிகவும் வருந்துகிறார். பின்னர் உள்ளம் தெளிந்து நம்பி நெடுஞ்செழியன் உடல் நிலையற்றது. அவனது புகழ் என்றும் நிலையானது என்பதை உணர்கிறார். அதனால் அவனது இறப்பை நினைந்து வருந்தாமல், அவன் புகழை நினைத்துப் போற்றுகிறார் என்பதை,

**வேந்துடையவையத்து ஓங்குபுகழ் தோற்றினன்;**

**------------------------------------------------------------------**

**இடுக ஒன்றோ, சுடுக ஒன்றோ,**

**படுவழிப் படுகஇப் புகழ்வெய்யோன் தலையே[57]**

என்பதனால், மன்னன் தான் வாழ்ந்த நாளில் செய்ய வேண்டிய கடமைகள் அனைத்தையும் செய்து முடித்தான். அதனால் இப்புகழை அடைந்தவன் தலையை வாளால் பிளந்தாலும் அன்றி, தீயால் எரித்தாலும் என்ன?

என்கிறார். மன்னனின் இறப்பால் ஏற்படும் துன்பத்தை ஒதுக்கி வைத்துவிட்டு, அவனது அழியாத புகழை நினைந்து இறுமாந்துகிறார்.

அதியமான் நெடுமான் அஞ்சியின் மரணமும், அவனது உடல் நெருப்பில் அழிவதும் ஔவையாரின் உளத்தைப் பெரிதும் பாதிக்கின்றன. இதனை,

**எரிபுனக் குறவன் குறையல் அன்ன**
**கரிபுற விறகின் ஈம ஒள்ளழல்**
**குறுகினும் குறுகுக; குறுகாது சென்று**
**விசும்புற நீளினும் நீள்க; பசுங்கதிர்த்**
**திங்கள் அன்ன வெண்குடை**
**ஒண்ஞாயிறு அன்னோன் புகழ்மா யலவே**[58]

எனும் பாடல்வழி நோக்கினால், அதியமானின் உடல் நெருப்பால் அழிந்தால் என்ன? அவனின் புகழ் மாயாது நிற்கும் தன்மையுடையது என்ற எண்ணத்தின் விளைவே ஆகும். எனவே வள்ளலின் இறப்பு நேர்வித்த உணர்வை ஒதுக்கி, உடல் அழியும் தன்மையுடையது. புகழ் நிலையானது என்கிறார். இதனால் உணர்வொதுக்கம் என்னும் உளப்போக்கு ஔவையாரிடம் தோன்றியதைக் காண முடிகிறது.

### 4.10.3. பின்னோக்கம் (Regression)

இன்று தான் எதிர்ப்பட்டுள்ள மனப்போராட்டங்களில் இருந்து விடுபட ஒருவன் தன்னையும் அறியாமல், வளர்ச்சிப் படிகளில் கீழிறங்கிச் சிறுகுழந்தைபோல் செயல்படுதல் பின்னோக்கம் எனப்படும். இப்பின்னோக்கம் ஒருவனது எல்லாச் செயல்களிலோ அல்லது ஒரு வாழ்க்கைத் துறையில் எழும் பிரச்சினையைப் பொறுத்தோ எழக்கூடும். "வாழ்வில் விரும்பத் தகாத நிகழ்ச்சிகள் நிகழும் போதும், விருப்பங்கள் முறிவுற்று உளப் போராட்டம் மிகும் போதும், உளம் தன்னையறியாமல் இறந்த காலத்தின் இயல்பிற்குச் சென்று விடுகிறது. இத்தகைய நிலையைப்

*பின்னோக்கம் என்கிறார் து.சிவராஜ்."*[59] *ஒவ்வொரு மனிதனும் தனது துன்பக் காலத்தில், கடந்த கால இன்பத்தை நினைந்து ஆறுதல் பெறுவது போற்றத்தக்கதாகும்.*

*இதன்படி கபிலர் போரில் பாரி இறந்தபின் பாரியின் மகளிர் ஈச்சமரத்திலிருந்து உதிர்ந்த சருகுகளின் மீதேறி உப்பு வண்டிகளை எண்ணி விளையாடுவதைக் கண்டு மனம் இரங்குகிறார். இதனை,*

**தீநீர்ப் பெருங்குண்டு சுனைப்பூத்த குவளைக்**
**கூம்புஅவிழ் முழுநெறி புரள்வரும் அல்குல்**
**ஏந்தெழில் மழைக்கண் இன்னகை மகளிர்**
**புல்மூசு கவலைய முள்மிடை வேலிப்**
**பஞ்சி முன்றில் சிற்றில் ஆங்கண்**
**பீரை நாறிய சுரைஇவர் மருங்கின்**
**ஈத்திலைக் குப்பை ஏறி உமணர்**
**உப்பொய் ஒழுகை எண்ணுப மாதே!**
**நோகோ யானே! தேய்கமா காலை!**[60]

*என்று கபிலர் பாரி மகளிரின் வளமான வாழ்க்கை நிலையை எண்ணி வறுமை நிலைக்கு இரங்குகிறார்.*

*மேலும், போரினால் தன் தந்தையையும் நாட்டையும் இழந்த பாரி மகளிர்,*

**அற்றைத் திங்கள் அவ்வெண் நிலவின்**
**எந்தையும் உடையேம்; எம் குன்றும் பிறர்கொளார்;**
**இற்றைத் திங்கள் இவ்வெண் நிலவின்,**
**வென்றுஎறி முரசின் வேந்தரெம்**
**குன்றும் கொண்டார்; யாம் எந்தையும் இலமே**[61]

*என்பதனால் மூவேந்தரும் முற்றியிருந்த வெண்ணிலா காயும் அன்றைய மாதத்தில், எம்தந்தையும் இருந்தார்; எம்மலையும் எங்களுக்கு*

*உரிமையுடையதாக இருந்தது, இன்று எம்மலையையும் இழந்தோம், என்று பின்னோக்கி எண்ணுகின்றனர். எனவே வறுமையுற்ற சூழலில் வளமைமிக்க நாள்களை நினைத்தல் ஒருவகையான பின்னோக்கமாகும். இதனைப் போன்றே,*

**அழல்மலி தாமரை ஆம்பலொடு மலர்ந்து**
**நெல்லின் செறுவில் நெய்தல் பூப்ப,**
**அரிநர் கொய்வாள் மடங்க, அறைநர்**
**தீம்பிழி எந்திரம் பத்தல் வருத்த,**
**இன்றோ அன்றோ, தொன்றுஓர் காலை**
**நல்லமன்; அளிய தாம்எனச் சொல்லிக்**
**காணுநர் கைபுடைத்து இரங்க**
**மானா மாட்சிய மாண்டன பலவே**[62]

*என்பதனால் இமயவரம்பன் படை எடுப்புக்கு முன் அவன் பகை நாள்கள், நீர்நிலைகளெல்லாம் தீயினைப் போன்ற தாமரை மலர்கள் ஆம்பல் மலரோடு பூக்கவும் நெல் அறுப்பதற்குரிய அரிவாளின் வாய் தாள்களின் பருமனால் கூர் மழுங்கவும் கரும்பு வெட்டி, பின் சாறு பிழியும் எந்திரம் சாறு தொடர்ந்து பாய்வதால் அதன் பந்தல் வருந்துவதுமாக முன்பு ஒரு காலத்தில் நல்லவையாக இருந்தது. ஆனால் இன்று அவ்வாறு இல்லை என்று கூறிக் காண்பவர்கள் இரங்கும் விதமாகக் குமட்டூர்க் கண்ணனார் பின்னோக்கம் கொள்கிறார். இதைப் போன்று,*

**போர்எதிர் வேந்தர் தார்அழிந்து ஓராலின்,**
**மருது இமிழ்ந்து ஓங்கிய நளிஇரும் பரப்பின்**
**மணல்மலி பெருந்துறைத் ததைந்த காஞ்சியொடு**
**முருக்குத் தாழ்பு எழிலிய நெருப்புஉறழ் அடைகரை**
**நந்து நாரையொடு செவ்வரி உகளும்**
**கழனி வாயில் பழனப் படப்பை**
**அழல்மருள் பூவின் தாமரை வளைமகள்**

**குறாஅது மலர்ந்த ஆம்பல்**

**ஆறாஅ யாணர்அவர் அகன்தலை நாடே**[63]

என்பதனால் உன் பகைவர் நாடுகள் பறவைகள் தங்கி ஒலிக்கும்படி மருத மரங்கள் உயர்ந்து விளங்க, குளிர்ந்த பெரும் பரப்புடைய மணமிக்க துறையிடத்தே சிதைந்த காஞ்சி மரங்களோடு முருங்க மரங்களும் தாழப் பெற்று அழகுடையனவாய் விளங்கின. மேலும் அவை அத்தகைய அழகிய ஆடை கரையினையும் சங்குபோல் வெளுத்த நாரைகளும் செவ்வரி நாரைகளும் தாவித் திரியும் கழனி வாயிலையும் நீர் நிறைந்த வயல்களையும் தோட்டங்களையும் தீயைப்போல மலர்ந்த தாமரைகளையும் மகளிர் பறிக்காததால் மலர்ந்து விளங்கும் ஆம்பல் மலர்களையும் புதுவருவாயினையும் கொண்டு விளங்கின. இப்போது நீ படை எடுத்துச் சென்றதால் பகைவர் தூசிப்படை கெட்டழிந்து ஓடிற்று. அதனால் அந்நாடுகள் வழிச் செல்வோர் இல்லாமையால் இடங்கள் கெடும்படி புல்மிகுந்து அழகு இழந்த வழிகளை உடையவாயின எனப் புலவர் பகைநாட்டின் அழிவுக்கு இரங்கிப் பின்னோக்கம் கொள்கிறார். மற்றொரு பாடலில்,

**தேஎர்பரந்த புலம் ஏஎர்பரவா,**
**களிறுஆடியபுலம் நாஞ்சில்ஆடா,**
**மத்துரறியமனை இன்னியம் இமிழா,**
**ஆங்குப், பண்டுநற்கு அறியுநர் செழுவளம் நினைப்பின்**
**நோகோ யானே, நோதக வருமே;**
**பெயல்மழை புரவுஇன்று ஆகி வெய்துஉற்று**
**வலம்இன்று அம்ம காலையது பண்புஎனக்**
**கண்பனி மலிர்நிறை தாங்கிக் கையுடையூ**
**மெலிவுடை நெஞ்சினர் சிறுமை கூரப்**
**பீர்இவர் வேலிப் பாழ்மனை நெருஞ்சிக்**
**காடுஉறு கடுநெறி ஆக மன்னிய;**

**முருகுஉடன்று கறுத்த கலிஅழி மூதூர்**

**உரும்புஇல் கூற்றத்து அன்னநின்**

**திருந்துதொழில் வயவர் சீறிய நாடே**[64]

*என்பதனால் கூற்றுவனைப்போலப் போர்த்தொழில் வல்ல உன் வீரர்கள் சிதைத்த பகை நாடு முன்பு முருகப்பெருமான் மாறுபட்டுச் சினத்த பழைமையான ஊர்போல அழிந்தது. உன்னுடைய வீரர் சீறுவதற்கு முன்பு இருந்த நிலையைக் கூறுவதாயின் அங்குத் தேர் பரவிச் சென்ற வயல்கள், பின்பு ஏர்களைக் கொண்டு உழவேண்டாவாயின. பன்றிகள் அகழ்ந்த நிலப்பகுதிகள், பின்பு கலப்பைகளைப் பூட்டி உழவேண்டாவாயின. தயிர் கடையும் மத்துகள் ஒலித்த இல்லங்களில் இசைக்கருவிகளின் இன்னிசைகள் கேட்கவில்லை.*

*அந்த வளமிக்க நாட்டில் இப்போது, மழை பெய்து, பாதுகாத்தல் இல்லாமையால், கதிரவன் வெப்பம் மிகுதலால் நாடு நமக்கு நன்மை பயக்குமாறு இல்லை. இது காலத்தின் இயல்பு என்று மக்கள் தம் நெஞ்சக் குமுறலைப் பதித்த பாலைக் கௌதமனார் பின்னோக்கம் கொண்டதைக் காணமுடிகிறது. மற்றொரு பாடலில்,*

**சிதைந்தது மன்றநீ சிவந்தனை நோக்கலின்**

**தொடர்ந்த குவளைத் தூநெறி அடைச்சி**

**அலர்ந்த ஆம்பல் அகமடி வையர்**

**கரியல்அம் சென்னிப் பூஞ்செய் கண்ணி**

**அரியல் ஆர்கையர் இனிதுகூடு இயவர்**

**துறைநணி மருதம் ஏறித் தெறுமார்**

**எல்வளை மகளிர் தெளிவிளி இசைப்பின்**

**பழனக் காவில் பசுமயில் ஆலும்,**

**பொய்கை வாயில் புனல்பொரு புதவின்**

**நெய்தல் மரபின் நிரைகள் செறுவின்**

**வல்வாய் உருளி கதுமென மண்ட**

**அள்ளல் பட்டுத் துள்ளுபு துரப்ப**

**நல்எருது முயலும் அளறுபோகு விழுமத்துச்**

**சாகாட் டாளர் கம்பலை அல்லது**

**பூசல் அறியா நல்நாட்டு**

**யாணர் அறாஅக் காமரு கவினே**[65]

*என்பதனால் சேரனின் பகைவர் நாட்டில் வளையல் அணிந்த மகளிர், புறவிதழை ஒடித்த குவளைப் பூவினைக் கூந்தலில் செறியச் சூடி, மலர்ந்த ஆம்பலின் இதழால் செய்த தழையுடையை அணிந்தவர்களாய், வயலில் படியும் பறவைகளை ஓட்டுவதற்குத் தெளிந்த ஒலியை எழுப்புவர். அதனைக் கேட்டுச் சுருங்கிய கூந்தலை உடைய தலையும் பூக்களால் செய்த கண்ணியைக் கொண்டு, கள் உண்ணும் இயல்புடையவராய் இனிய இசைக்கருவிகளை வைத்தவர்கள் தங்கும் நீர்த்துறையின் அருகில் உள்ள மருத மரத்தில் ஏறி, வயல்களை அடுத்துள்ள சோலைகளில், பசிய தோகையுடைய மயில்கள் ஆரவாரம் செய்யும். மேலும் அந்நாட்டின் பொய்கை நீர் பாயும் நெய்தல் நிலத்தில் மலர்சூழ்ந்த பாதையில் செல்லும் வண்டின் உருளை சேற்றில் புதைந்ததால் வண்டியோட்டுநர் எழுப்பும் பேரொலியைத் தவிரப் போர் பற்றிய பிற ஆரவாரங்களை அறியாத நல்ல நாடாகும். நீ சினத்ததால் அழிந்துபட்டதான அந்நாட்டின் அழிவை எண்ணிப் பின்னோக்கம் கொள்கிறார் பாலைக் கௌதமனார். இதனைப் போன்று, போர்க்களத்திலே மன்னன் ஒருவன் களிறுகளைத் தன்னுடைய வலிமையால் வீழ்த்துகிறான். இதனால் அவன் மார்பில் விழுப்புண் ஏற்படுகிறது. அதைப் பொருட்படுத்தாமல் மீண்டும் போர் புரிகிறான். இக்காட்சியைக் கண்ட புலவர் அவ்வீரனின் இளமை வாழ்வை நினைத்துப் பார்க்கிறார்.*

**பால்கொண்டு மடுப்பவும் உண்ணான்; ஆகலில்,**

**செறாஅது ஓச்சிய சிறுகோல் அஞ்சியொடு**

**உயவொடு வருந்தும் மன்னே; இனியே**

**புகர்நிறம் கொண்ட களிறுஅட்டு ஆனான்,**

**முன்னாள் வீழ்ந்த உரவோர் மகனே;**

**உண்ணிலென் என்னும், புண்ணொன்று அம்பு**

**மான்உளை யன்ன குடுமித்**

**தோல்மிசைக் கிடந்த புல்அணலோனே[66]**

என்னும் பாடலால் போரில் பகைவர்கள் அஞ்சும்படி போர் செய்த இம்மன்னன், சிறுவயதில் பாலுண்ணப் பிடிவாதம் பிடித்த சிறுவனா? என எண்ணி வியக்கிறார். இதன் மூலம் முதுமைக் காலத்தின்போது ஏற்படும் வேதனையை எண்ணி, இளமைக் காலச் செயலால் மனம் மகிழ்கிறது. இதுவும் ஒருவகையான தற்காப்பு முறையேயாகும்.

### 4.10.4. பொதுமையாக்கம் (Generalisation)

பொதுமையாக்கம் என்பது "மனமுறிவும் போராட்டமும் மிக்க சூழலில் சரியான சிந்தனை முறை அமைவதில்லை. அப்போது தோன்றும் சிந்தனைகளில் பல தவறுகள் ஏற்பட வாய்ப்புண்டு. தவறான சிந்தனை வகைகளுள் இரண்டு குறிக்கத்தக்கன என உளவியலாளர் கூறுவர்.

- தற்புனைவுச் சிந்தனை
- சார்பெண்ணச் சிந்தனை

என்ற இவ்விரண்டின் அடிப்படையிலும் பொதுமையாக்க (Generalisation) எண்ணம் ஏற்படுதல் உண்டு"[67] என்கிறார் து. சிவராஜ்.

#### 4.10.4.1. தற்புனைவுச் சிந்தனை

சோழன் நலங்கிள்ளியிடமிருந்து நீங்கி இளந்தத்தன் என்னும் புலவன் சோழன் நெடுங்கிள்ளியை அடைந்தார். புலவர்கள் கொடைத்தன்மையுடைய மன்னர்களை நாடிப் பொருள் பெறுதல் இயல்பு. அவ்வாறே இளந்தத்தனும் நெடுங்கிள்ளியை நாடினார். ஆனால் 'ஒற்றன்' எனத் தவறாக எண்ணி அப்புலவனைக் கொல்லத் துணிந்தான். அப்பொழுது புலவனைக் கொல்லாதவாறு நெடுங்கிள்ளியைத் தடுத்து நிறுத்துகிறார் கோவூர்கிழார் என்னும் புலவர். இதனை,

**வரிசைக்கு வருந்தும்இப் பரிசில் வாழ்க்கை;**

**பிறர்க்குத் தீதறிந் தன்றோ இன்றே, திறப்பட,**

**நண்ணார் நாண அண்ணாந் தேகி**

**ஆங்கினிது ஒழுகின் அல்லது ஓங்குபுகழ்**

**மண்ஆள் செல்வம் எய்திய**

**நும்மோர் அன்ன செம்மலும் உடைத்தே[68]**

என்று பாடுகிறார். ஏற்கெனவே ஆவூரில் நடைபெற்ற முற்றுகை காரணமாகச் சோழன் நெடுங்கிள்ளி மனமுறிவுற்று இருந்தான். இச்சூழலில் உறையூரிலும் போர் புரிய நலங்கிள்ளி ஒற்றனை அனுப்பியுள்ளான் என்று தவறாக நினைத்து இளந்தத்தனைக் கொல்ல முற்படுகிறான். இச்செயல் மன்னனின் உள்ள முறிவு மற்றும் உள்ளப் போராட்டத்தால் ஏற்பட்ட தற்புனைவுச் சிந்தனை என அறிந்துகொள்ள முடிகின்றது.

### 4.10.4.2. சார்பெண்ணச் சிந்தனை

குமணன் என்னும் வள்ளல் வரையாது வழங்கும் பண்புடையவன். அவனது தம்பி இளங்குமணன். அவன் தீயவர்களுடன் கொண்டிருந்த நட்பினால் அண்ணன் மீது கோபம் கொண்டு அரியணையில் அமரத் திட்டமிட்டான். இளங்குமணனின் மனம் உணர்ந்த குமணன், ஒரு குடியில் பிறந்த இருவரும் போர் செய்வது இழிவான செயல் என்பதை உணர்ந்தான். அதனால் ஆட்சியைத் தன் தம்பியிடம் ஒப்படைத்து விட்டுக் காட்டில் வாழ்கிறான். இளங்குமணன் மீண்டும் தீயவர்களின் தூண்டுதலால், தன் அண்ணன் படைகளைத் திரட்டிக்கொண்டு போர் செய்து மீண்டும் ஆட்சிக்கு வரக்கூடும் என்னும் அச்சத்தால் குமணனைக் கொல்ல முற்படுகிறான். எனவே, குமணன் தலையைக் கொண்டு வருபவருக்குப் பரிசளிப்பதாகவும் முரசறிவிக்கிறான். அப்பொழுது குமணனிடம் பரிசில் பெற முதிரமலைக்கு வந்த பெருந்தலைச் சாத்தனார், நாட்டில் நிகழ்ந்த செய்தியறிந்து மனவருத்தம் அடைகிறார். பின்னர்க் காட்டில் இருந்த குமணனிடம் சென்று, தன் வறுமைநிலையை எடுத்துரைத்துப் பாடுகிறார்.

**மன்னா உலகத்து மன்னுதல் குறித்தோர்**
**தம்புகழ் நிறீஇத் தாம்மாய்ந் தனரே;**
**துன்அருஞ் சிறப்பின் உயர்ந்த செல்வர்**
**இன்மையின் இரப்போர்க்கு ஈஇயாமையில்**
**தொன்மை மாக்களின் தொடர்பு அறியலரே;**
**தாள்தாழ் படுமணி இரட்டும் பூநுதல்**
**ஆடியல் யானை பாடுநர்க்கு அருகாக்**
**கேடில் நல்லிசை வயமான் தோன்றலைப்**
**பாடி நின்றனென் ஆகக் கொன்னே**
**பாடுபெறு பரிசிலன் வாடினன் பெயர்தலென்**
**நாடிழந் ததனினும் நனிஇன் னாதுஎன**
**வாள்தந் தனனே தலைஎனக்கு ஈயத்**
**தன்னிற் சிறந்தது பிறிதொன்று இன்மையின்**
**ஆடுமலி உவகையொரு வருவல்**
**ஓடாப் பூட்கை நின் கிழமையோற் கண்டே**[69]

*என்று பெருந்தலைச் சாத்தனார் பாடுகிறார். குமணன் தன்னிடத்துப் பொருள் இல்லையென்றாலும் தன் தலைக்குச் சிறந்த பரிசு இருப்பதை எண்ணிப் பார்க்கிறான். அதனால், தன் தலையை வெட்டிச் சென்று இளங்குமணனிடம் கொடுத்துப் பரிசில் பெறுக என்கிறான். இத்தகைய கொடுமைக்குக் காரணமானவன் இளங்குமணன். அவனுடைய தீய நட்பினாலும் அறிவுரைகளாலும் ஆட்சியின் மீது பற்றுக் கொள்கிறான். இதனால் மனக்குழப்பம் ஏற்பட்டு மனப் போராட்டமும் தோன்றுகிறது. அப்பொழுது இளங்குமணனிடம் சார்ந்திருந்த தீயவர்களால், சரியான சிந்தனை அமையாமல் சார்பெண்ணச் சிந்தனை இளங்குமணனிடம் தோன்றியது எனலாம். இத்தவறான சார்பெண்ணச் சிந்தனையால், குமணனைக் கொல்லவும் மனம் தூண்டப்படுகிறது என்பதை அறியமுடிகின்றது.*

### **4.10.5. துறப்பமைவு** (Resignation)

*மனம் முறிவை மாற்றுவதற்குக் கையாளக் கூடிய மாற்று வழிகளில் துறப்பமைவும் ஒன்று. அதாவது "நமக்குத் தோல்வி அல்லது, கவலை உண்டாகக் கூடிய சூழ்நிலையிலிருந்து விலகி அல்லது பின்னடைந்து செல்வதன் மூலம் நம் உளத்திற்கு ஏற்படும் அபாயத்தைக் குறைக்கச் சில சமயங்களில் முயல்கிறோம் என்பது துறப்பமைவு என்னும் உளவியல் கருத்தாகும்."*[70]

*தன் நாட்டின் மீது மற்றொரு மன்னன் படையெடுக்க முற்படும்போது, அந்நாட்டரசன் தூது அனுப்பிப் போரை நிறுத்துவது போர் அறமாகும். ஔவையார், அதியமான் நெடுமான் அஞ்சிக்காகத் தொண்டைமானிடம் போரைத் துறப்பதற்காகத் தூது செல்கிறார். அதியமான் தன்னுடைய வீரமுணர்ந்தும் தொண்டைமானின் தோல்வியை எண்ணியும் தூதுவிடுத்தான். ஔவையார் தொண்டைமானிடம்,*

**இவ்வே, பீலி அணிந்து, மாலை சூட்டிக்**
**கண்திரள் நோன்காழ் திருத்தி நெய்அணிந்து**
**கடியுடை வியன்நக ரவ்வே; அவ்வே**
**பகைவர்க் குத்திக் கோடுநுதி சிதைந்து**
**கொல்துறைக் குற்றில மாதோ; என்றும்**[71]

*என்று கூறித் தொண்டைமானின் படைக்கலங்களைப் புகழ்ந்ததுபோலப் பழித்தும் அதியமானைப் பழித்தது போலப் புகழ்ந்தும் போரினை நிறுத்துகிறார். இதன் பொருட்டுப் போரினால் ஏற்படும் அபாயம் தவிர்க்கப்படுகிறது.*

*சேரமான் நெடுஞ்சேரலாதனுக்கு மார்பிடை வேல் பாய்ந்து முதுகு வழியாக ஊடுருவியதால் முதுகில் புறப்புண் ஏற்படுகிறது. புறப்புண் ஏற்பட்டதால் நாணி வடக்கிருந்து உயிர் விடுகிறான். இம்மரணம் மக்கள் மனதில் கவலையை ஏற்படுத்துகிறது.*

**மண்முழா மறப்பப் பண்யாழ் மறப்ப**

**இருங்கண் குழிசி கவிழ்ந்து இழுது மறப்பச்**

**சுரும்பார் தேறல் சுற்றம் மறப்ப**

**உழவர் ஓதை மறப்ப விழவும்**

**அகலுள் ஆங்கண் சீறூர் மறப்ப**

**உவவுத் தலை வந்த பெருநாள் அமையத்து**

**இருசுடர் தம்முள் நோக்கி ஒருசுடர்**

**புன்கண் மாலை மலைமறைந் தாங்குத்**

**தன்போல் வேந்தன் முன்பு குறித்து எறிந்த**

**புறப்புண் நாணி மறத்தகை மன்னன்**

**வாள்வடக்கு இருந்தனன் ஈங்கு**

**நாள்போல் கழியல ஞாயிற்றுப் பகலே**[72]

*என்கிறார் கழாத்தலையார். மன்னன் வடக்கிருந்து உயிர் துறந்ததால் பாணர்கள் முழவையும் யாழையும் மறந்தனர். பெரிய இடமுடைய பானையும் பாலின்மையால் கவிழ்ந்து நெய்கடையும் ஓசையை மறந்தது. தம்முடைய உறவினர்கள் மதுவுண்ணுதலை மறந்தனர். உழவர் உழவுத் தொழில் செய்யாது நீங்கினர். அகன்ற தெருவுடைய சிற்றூர்கள் விழாவினை மறந்தன. இவ்வாறு மன்னன் உயிர் துறந்த கவலையால் வாழ்வின் பல துறைகளில் உள்ளோர் தம் செயலை மறக்கின்றனர். இவை தற்காலிகமாகத் தம் செயல்களை மறக்கக் கூடிய துறப்பமைவு ஆகும்.*

*சோழன் நலங்கிள்ளி என்னும் மன்னன் தன் படைவலிமையால் இடையறாது போர் செய்யும் பண்புடையவன் என்பதை,*

**நல்இசை வேட்டம் வேண்டி வெல்போர்ப்**

**பாசறை அல்லது நீஒல் லாயே;**

**நுதிமுகம் மழுங்க மண்டி ஒன்னார்**

**கடிமதில் பாயும்நின் களிறடங் கலவே;**

**போர்எனில் புகலும் புனைகழல் மறவர்**

**காடிடைக் கிடந்த நாடு நனிசேய**

**செல்வேம் அல்லேம் என்னார்; கல்லென்**

**விழவுடை ஆங்கண் வேற்றுப் புலத்து இறுத்துக்**

**குணகடல் பின்ன தாகக் குடகடல்**

**வெண்தலைப் புணரிநின் மான்குளம்பு அலைப்ப**

**வலமுறை வருதலும் உண்டென்று அலமந்து,**

**நெஞ்சு நடுங்கு அவலம் பாயத்**

**துஞ்சாக் கண்ண வடபுலத்து அரசே[73]**

என்று கோவூர்கிழார் பாடுகிறார். சோழன் நலங்கிள்ளி போர் வேட்கையால், மாளிகையில் தங்க உடன்படாமல் பாசறையில் தங்கும் இயல்பினன். அவனது யானைக் கூட்டமும் தன்முனை மழுங்க, பகைவரின் காவலரண் மீது பாயும் தன்மையுடையன. அவனுடைய படை வீரர்களும் போரென்றால் பூரித்து எழும் பண்புடையவர்கள். வலிமைமிக்க சோழன் நலங்கிள்ளி தென்திசை நாடுகளையெல்லாம் வென்றுவிட்டு, பின்னர் வடதிசைக்கும் போர் புரிய வருவான் என்று வடபுலத்து அரசர்கள் மனம் நடுங்குகின்றனர். போரினால் கவலை கொண்டு உறங்காத கண்களையுடையவர்களாகவும் வடபுலத்து அரசர்கள் விளங்குகின்றனர். இச்செயல் தமக்கு ஏற்படக்கூடிய தோல்வியினால் கவலை கொண்டு தூக்கத்தைத் துறப்பதாக உள்ளது.

இதே போன்று பாண்டியன் கூடகாரத்துத் துஞ்சிய மாறன் வழுதியும் வடபுலத்து அரசர்களிடம் போர் மேற்செல்லும்போது,

**வடபுல மன்னர் வாட அடல் குறித்து**

**இன்னா வெம்போர் இயல்தேர் வழுதி[74]**

என்று மருதன் இளநாகனார் பாடுகின்றார், அதாவது, புலியெழுந்ததுபோல மாறன் வழுதி போர் செய்ய எழுந்ததால், வட புல மன்னர் தன் நிலையை எண்ணிக் கவலை கொள்வர். போரினால் ஏற்படக் கூடிய அழிவை

*எண்ணிப் பகைமன்னர்கள் தம்முடைய நிம்மதியைத் துறப்பது இதில் தெரிகிறது.*

*மறக்குடி மகள் ஒருத்தி, தன் கணவனுடன் சுரத்திடை வந்து கொண்டிருந்தாள். அப்போது உண்டாகிய போரில் கணவன் விழுப்புண் பட்டு உயிர் கொடுத்துப் புகழ் கொண்டான். அதனால் தனிமையுற்ற அவள் ஊர்க்குயவனை நோக்கித் தனக்கும் சேர்த்து அகன்ற தாழியைச் செய்வாயாக என்கிறாள். இதனை,*

**கலம்செய் கோவே கலம்செய் கோவே**
**அச்சுடைச் சாகாட்டு ஆரம் பொருந்திய**
**சிறுவெண் பல்லி போலத் தன்னொடு**
**சுரம்பல வந்த எமக்கும் அருளி**
**வியன்மலர் அகன்பொழில் ஈமத் தாழி**
**அகலி தாக வனைமோ**
**நனந்தலை மூதூர்க் கலம்செய் கோவே**[75]

*என்று தலைவன் இறந்த கவலையிலிருந்து விடுபட, தானும் தன் கணவனுடன் இறந்து விடுகிறேன் என்று புலம்புகிறாள். இவை நிரந்தரமாகக் கவலையிலிருந்து விடுபடக் கூடிய துறப்பமைவு செயலாக நடைபெற்றதை அறியமுடிகிறது.*

*போரின் காரணமாக வீரன் ஒருவன் இறந்து விடுகிறான். அதைக் கண்ட மனைவி புலம்பித் தவிக்கின்றாள். கணவன் இறந்தபின், அவன் மீதுள்ள அன்பின் காரணமாக மனைவி கைம்மை நோன்பு ஏற்கின்றாள் என்பதை,*

**கூந்தல் கொய்து குறுந்தொடி நீக்கி**
**அல்லி உணவின் மனைவியோடு இனியே**
**புல்லென் றனையால் வளங்கெழு திருநகர்**
**வான்சோறு கொண்டு தீம்பால் வேண்டும்**

**முனித்தலைப் புதல்வர் தந்தை**

**தனித்தலைப் பெருங்காடு முன்னிய பின்னே**[76]

*என்று தாயங்கண்ணியார் பாடுகிறார். கணவன் இறந்ததால் மனமுறிவுற்ற பெண் தன் கூந்தலைக் களைந்தும் சிறிய வளையலை நீக்கியும் அல்லியரிசியாகிய உணவை உண்கிறாள். இத்தகைய செயல் கணவன் இறந்த கவலையாலும் அவன் மீதுள்ள பற்றின் காரணமாகவும் நேர்ந்த துறப்பமைவு முறையாகும். கணவன் உயிரையே துறந்தான். அவனுக்காக ஒரு பெண் தன்னுடைய இன்பத்தைத் துறப்பது தன்மனதை ஆறுதல் படுத்துவதாக உள்ளது.*

### 4.10.6. ஈடு செய்தல் (Compensation)

*தன்னிடம் காணப்படும் ஒரு குறைபாட்டிற்கு ஈடு செய்யும் வகையில் தன் சக்தி முழுவதையும் வேறொன்றில் செலுத்தி வெற்றி பெறுதல் போன்றது அல்லது ஒரு துறையில் ஏற்படும் மன முறிவைப் போக்க வெறொரு துறையில் அதிக அளவு ஈடுபடுவது. இதனை உளவியலாளர் "ஒன்றைச் சாதிக்க இயலாத சூழலில் ஏமாற்றமும் முறிவும் கவலையும் உற்ற உள்ளம் பிறிதொன்றைச் சாதிக்க முயல்கின்றது. உளத்தின் இவ்வியல்பு ஈடுசெய்தல் (Compensation)"[77] என்றார் து. சிவராஜ்.*

*கபிலர் என்னும் புலவர் பாரி இறந்த பின் அவனது பறம்பு மலையின் வளம், கொடைச்சிறப்பு, வீரம் முதலானவற்றை மிகுதியாகப் பாடுகிறார். பாரியின் இறப்பு புலவர் உளத்தை வெகுவாகப் பாதிக்கிறது. அதை ஈடு செய்யும் பொருட்டுப் பாரி மகளிரை அழைத்துச் செல்லும்போது, பாரிக்குப் பதிலாகப் பறம்பை வணங்கிச் செல்கின்றனர்.*

**மட்டுவாய் திறப்பவும் மைவிடை வீழ்ப்பவும்,**

**அட்டுஆன்று ஆனாக் கொழுந்துவை ஊன்சோறும்**

**பெட்டாங்கு ஈயும் பெருவளம் பழுனி**

**நட்டனை மன்னோ முன்னே; இனியே,**

**பாரி மாய்ந்தெனக் கலங்கிக் கையற்று**

**நீர்வார் கண்ணேம் தொழுதுநிற் பழிச்சிச்**

**சேறும் வாழியோ பெரும்பெயர்ப் பறம்பே[78]**

*என்று பாரிக்குப் பதிலாகப் பறம்பு மலையின் சிறப்பைப் போற்றுகிறார் என்பதை,*

**ஈண்டுநின் றோர்க்கும் தோன்றும்; சிறுவரை**

**சென்றுநின் றோர்க்கும் தோன்றும். மன்ற;**

**களிறுமென்று இட்ட கவளம் போல**

**நறவுப்பிழிந்து இட்ட கோதுஉடைச் சிதறல்**

**வார் அசும்பு ஒழுகும் முன்றில்**

**தேர்வீ சிருக்கை, நெடியோன் குன்றே[79]**

*என்று பாடுவதிலிருந்து பாரிக்கு ஈடாகப் பறம்புமலை அவர் நினைவில் தெரிகிறது. பறம்பு மலையை வாழ்த்தினாலே பாரியை வாழ்த்தியதாகத் தோன்றும் மனநிலையை, கபிலரின் ஈடு செய்யும் உளத்தன்மையைக் காட்டுகிறது.*

*போர்க்களத்தில் வீரமரணம் அடைந்த மறவர்களுக்கு நடுகல் வைப்பது மரபு. இந்நடுகல்லானது, மறவர்களின் இழப்பை ஈடுசெய்வதன் காரணமாக நடப்படுகிறது. அன்புடையவரின் இறப்பால் நேரும் இழப்பை ஈடு செய்து கொள்ளும் போக்கை நடுகல் காட்டுகிறது. இதைப்போன்று,*

**பலர்க்கு நிழலாகி உலகமீக் கூறித்**

**தலைப்போ கன்மையில் சிறுவழி மடங்கி**

**நிலைபெறு நடுகல் ஆகியக் கண்ணும்**

**இடம் கொடுத்து அளிப்ப மன்ற உடம்போடு**

**இன்னுயிர் விரும்பும் கிழமைத்**

**தொன்னட்பு உடையார் முழைச் செலினே[80]**

கோப்பெருஞ்சோழனே உயிருடன் இருக்கையில் பலருக்கும் நிழல் தரும் இனியனாக உயர்ந்தோனாக இருந்தாய்; இறந்தபின் சிறிய வழியிடத்தில் அடங்கி என்றும் நிலைபெறும் நடுகல்லாகினாய். இன்றும் தம்மைச் சேர்ந்தோர்க்குத் தக்க இடம் கொடுத்து உதவுகின்றாய்; கொடைத்தன்மைக்கு உறுதியாய் நின்றாய் என அவரது புகழுக்கு நடுகல்லின் தன்மையை ஈடாக்கியுள்ளார் என்பதனை,

**களிறுபொரக் கலங்கும் கழல்முள் வேலி**
**அரிதுஉண் கூவல் அங்குடிச் சீறூர்**
**ஒலிமென் கூந்தல் ஒள்நுதல் அரிவை**
**நடுகல் கைதொழுது பரவும் ஒடியாது**[81]

என்பதனால் இறந்தவர்க்கு ஈடாகவும் தெய்வத்திற்குச் சமமாகவும் நினைத்து நடுகல் வழிபாடு பின்பற்றப்பட்டது. இவை மனதை ஆறுதல் படுத்தும் ஒரு தற்காப்பு முறையாகும்.

### 4.10.7. தன்முகத் திருப்பம் (Turning against the Self)

“மனமுறிவைத் தவிர்க்கவும், தணிக்கவும் வேண்டிப் பிறரை உளத்தாலும் உடலாலும் தாக்குதல் உண்டு. மாறாக அத்தாக்குதல் வேகத்தைத் தன் மீதே திருப்பிக் கொள்ளுதல் ஒரு தற்காப்பு இயங்குமுறையாகும். தன்முகத் திருப்பம் (Turning against the Self) என்னும் உளநலத் தற்காப்பு இயங்கு முறையைத் தன்னியக்கமான நனவிலி முறையால் பிற மனிதர் மேலுள்ள வெறுப்பைத் தன்முகமாய்த் திருப்பிக் கொள்ளல்”[82] என்கிறார் து. சிவராஜ்.

போர்க்களத்திலே இறந்த வீரனின் மனைவி தன் கணவனின் பிரிவை எண்ணி வருந்துகிறாள். இதனால் மனமுறிவு ஏற்பட்டுத் தன்னையே அழித்துக் கொள்ளத் துணிகிறாள் என்பதை,

**இவண்உறை வாழ்க்கையோ அரிதே; யானும்**
**மண்ணுறு மழித்தலைத் தெண்ணீர் வாரத்**

**தொன்றுதாம் உடுத்த அம்பகைத் தெரியல்**
**சிறுவெள் ஆம்பல் அல்லி உண்ணும்**
**கழிகல மகளிர் போல,**
**வழிநினைந் திருத்தல் அதனினும் அரிதே**[83]

என்று மாறோக்கத்து நப்பசலையார் பாடுகிறார். கணவன் இறந்ததால் ஏற்பட்ட உள்ளத்தாக்கம் காரணமாக உடல் மெலிந்து காணப்படுகிறாள். கணவனின்றி வாழ்வது அரிது எனப் புலம்பித் தவிக்கிறாள். உள்ளப் பாதிப்பைத் தாங்கிக் கொள்ள இயலாமல் தன்னை அழிக்க முற்படும் தன்முகத்திருப்பமும் ஒரு தற்காப்பு முறையாகும்.

சேரமான் கணைக்கால் இரும்பொறை, சோழன் செங்கணானோடு திருப்போர்ப்புறம் என்னும் இடத்தில் போர் புரிந்தான். அப்போது குடவாயில் கோட்டத்துச் சிறையில் கோச்செங்கணானால், கணைக்கால் இரும்பொறை சிறைப்படுத்தப்படுகிறான். சிறையில் இருக்கும்போது ஏற்பட்ட நீர் வேட்கையால் சேரமான் சிறைக்காவலரிடம் நீர் கேட்கிறான். ஆனால் காவலர் அவனை மதிக்காமல் காலம் தாழ்த்திக் கொடுத்த நீரை அருந்தாமல் உயிர் விடுகிறான் என்பதை,

**குழவி இறப்பினும், ஊன்தடி பிறப்பினும்**
**'ஆள் அன்று' என்று வாளில் தப்பார்**
**தொடர்ப்படு ஞமலியின் இடர்ப்படுத்து இரீஇய**
**கேள்அல் கேளிர் வேளாண் சிறுபதம்**
**மதுகை இன்றி வயிற்றுத்தீத் தணியத்**
**தாம்இரந்து உண்ணும் அளவை**
**ஈன்ம ரோஇவ் வுலகத் தானே**[84]

என்பதனால் பிள்ளை இறந்து பிறந்தாலும், தசைப் பிண்டமாகப் பிறந்தாலும் அவற்றையும் ஆள் என்று கருதி வாளால் அறுத்து அடக்கம் செய்வர். அதுபோலப் போரில் பகைவர் வாளினால் விழுப்புண்பட்டு இறக்காமல் அரசர் உயிர் பிழைத்தால், சங்கிலியால் பிணிக்கப்பட்ட நாய் போல விலங்கு

பூட்டித் துன்புறுத்துவர் பகைவர். அத்தகைய பண்பு கொண்ட பகைவரிடம் நீரை இரந்துண்ண மாட்டோம் என்று மானமுடன் உயிர்துறக்கிறான். இங்குச் சேரமான், பகைவரின் இழிவான செயலைக் கண்டு எதிர்க்க இயலாமல் மனம் தவிக்கிறான். இத்தகைய உளத் தவிப்பு வெறுப்பை உண்டாக்குகிறது. எனவே பகைவர் மேலுள்ள வெறுப்பைத் தன்முகமாகத் திருப்பிக் கொண்டு உயிர் விடுகிறான்.

மேலும், "மன உரமின்மையால் தாக்குதல் இயல்பு தன் மீதே திரும்புதலின் இறுதிநிலை தற்கொலையாகும்"[85] என்பது உளவியல் கருத்து. கோப்பெருஞ்சோழனின் மகன்கள் அரசுரிமைக்காகத் தந்தையை எதிர்க்கத் துணிகின்றனர். இச்செயல்களினால் மன்னனின் மனம் முறிகிறது. எனவே வடக்கிருந்து உயிர்விடத் துணிகின்றான். இதனை,

**நினைக்கும் காலை மருட்கை உடைத்தே;**
**எனைப்பெருஞ் சிறப்பினோடு ஈங்கிது துணிதல்[86]**

என்னும் இந்நிகழ்ச்சி மன்னன் உரமின்மையால் தன் உயிரையே போக்கிக் கொள்ளும் தன்முகத் திருப்பமாக அமைகிறது. அதுபோல், பெருங்கோப்பெண்டு என்பவள் கணவன் இறப்பைத் தாங்க முடியாமல் தீப்பாய்ந்து விடுகிறாள். இவ்வகையான தற்கொலை முயற்சியும் ஒருவகையான தன்முகத்திருப்பமே என்பது புலப்படுகின்றது.

### 4.10.8. செயற்படுத்துதல் (Acting Out)

"அடக்கி மறைத்தல், ஒடுக்குதல் ஆகியன உளப்போக்கிற்கு நேரெதிரான செயற்படுத்துதல் அல்லது வெளிப்படுத்துதல் (Acting Out) ஆகும். செயற்படுத்துதல் போக்கில் முறையற்ற பாலுணர்வுகள், பகை உணர்வுகள், தாக்குதல் உணர்வுகள் முதலியவற்றை மறுக்கவும், அடக்கவும் மாற்றவும் முடியாமல் அவற்றை வெளிப்படையான நடத்தையாக்கிக் கொள்ளுதலும் உண்டு"[87] என்கிறார் து.சிவராஜ்.

போர் மேற்செல்வதற்குப் பல காரணங்கள் உண்டு. அவற்றுள் மகள் மறுத்தல் காரணமும் ஒன்று. மறக்குடியில் பிறந்த மகளை மன்னர் பலர் பெண் கேட்கின்றனர். அவளது தந்தை மகளைக் கொடுக்க மறுக்கின்றார். இதனால் போர் ஏற்படுகிறது என்பதை,

**வேட்ட வேந்தனும் வெஞ்சினத் தினனே;**
**கடவன கழிப்பிவள் தந்தையும் செய்யான்;**
**ஒளிறுமுகத்து ஏந்திய வீங்குதொடி மருப்பின்**
**களிறும் கடிமரம் சேரா; சேர்ந்த**
**ஒளிறுவேல் மறவரும் வாய்மூழ்த் தனரே;**
**இயவரும் அறியாப் பல்லியம் கறங்க**
**அன்னோ, பெரும்பேறு உற்றன்றுஇவ் அருங்கடி மூதூர்**[88]

என்று பரணர் பாடுகிறார். மகட்கொடை மறுத்தலால் ஊரின் வளமும் நலமும் அழிகின்றன என்கிறார். மேலும் மறைத்தல், ஒடுக்குதல் தன்மைக்கு எதிரான முறையற்ற பாலுணர்வுகள் வெளிப்படுத்தப்படுகின்றன.

போரில் வெற்றி பெற்ற வேந்தன் தன் வெற்றிக்குப் பிறகு பகைவர் நாட்டைத் தீயிட்டுப் பாழாக்குவான் என்பதை,

**மயங்குவள்ளை மலராம்பல்**
**பனிப்பகன்றைக் கனிப்பாகல்**
**கரும்பல்லது காடறியாப்**
**பெருந்தண்பணை பாழாக**
**ஏம நன்னாடு ஒள்ளெரி ஊட்டினை**[89]

என்று பாண்டரங்கண்ணனார் பாடுகிறார். கலந்த வள்ளையையும் மலர்ந்த ஆம்பலையும் குளிர்ச்சியையுடைய பகன்றையையும் பழத்தையுடைய பாகற்காயும், கொண்ட கரும்பல்லது பிறிது கண்டறியாத பகைவரது மருத நிலத்தைச் சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி தீயிட்டு அழிக்கின்றான்.

மேலும் போரில் தோல்வியுற்ற பகைவரின் அரண்களை அழித்து அவர் வாழுமிடங்களைக் கழுதை பூட்டிய ஏரால் உழுதும், விளைந்து பயன்தரும் நன் நிலங்களில் தம் குதிரைகளையும், தேர்களையும் நடத்திச் சென்றும் பாழ் செய்வர் என்பதை,

**வெள்வாய்க் கழுதைப் புல்இனம் பூட்டி,**
**வெள்ளை வரகும் கொள்ளும் வித்தும்**[90]

என்றும்,

**வெளிறில் நோன்காழ்ப் பணைநிலை முனைஇக்**
**களிறுபடிந்து உண்டெனக் கலங்கிய துறையும்**
**கார்நறுங் கடம்பின் பாசிலைத் தெரியல்**
**சூர்நவை முருகன் சுற்றத்து அன்னநின்**
**கூர்நல் அம்பில் கொடுவில் கூளியர்**
**கொள்வது கொண்டு கொள்ளா மிச்சல்**
**கொள்பதம் ஒழிய வீசிய புலனும்**
**வடிநவில் நவியம் பாய்தலின் ஊர்தொறும்**
**கடிமரம் துளங்கிய காவும் நெடுநகர்**
**வினைபுனை நல்இல் வெவ்எரி இறைப்பக்**
**களைஎரி உரறிய மருங்கும் நோக்கி**[91]

என்று கல்லாடனார் பாடுகிறார். நிலம், செல்வம் போன்றவற்றின் பொருட்டுப் பகைவருடன் போர்புரிதல் இயல்பான செயல்; ஆனால் போரிட்டு வெற்றி பெற்ற பின்பும் பகைவர் நாட்டு நல்நிலங்களைப் பாழ்படுத்துதல் மன்னர்களின் வெறிச்செயலைக் காட்டுகிறது. இது போன்ற நிகழ்ச்சிகள் வெற்றி பெற்ற வேந்தனின் வரம்பு மீறிய பகையுணர்வையும் முறையற்ற தாக்குதல் உணர்வையும் வெளிப்படுத்துகின்றன.

**மண்டுஅமர் அட்ட மதனுடை நோன்தாள்**
**வெண்குடை விளக்கும் விறல்கெழு வேந்தே**

**பொங்குநீர் உடுத்தஇம் மலர்தலை உலகத்து**

**நின்தலை வந்த இருவரை நினைப்பின்**

**தொன்றுஉறை துப்பின்நின் பகைஞரும் அல்லர்**

**அமர்வெம் காட்சியொடு மாறுஎதிர் எழுந்தவர்**

**நினையும் காலை நீயும் மற்றவர்க்கு**

**அனையை அல்லை அடுமான் தோன்றல்**

**பரந்துபடு நல்லிசை எய்தி மற்றுநீ**

**உயர்ந்தோர் உலகம் எய்திப் பின்னும்**

**ஒழித்த தாயம் அவர்க்குரித் தன்றே**[92]

*என்று புல்லாற்றூர் எயிற்றியனார் கோப்பெருஞ்சோழனைப் பாடுகையில் உன்னை எதிர்த்துப் போர்புரிபவர்கள் உன் இருமக்கள். அதனால் போரினை விட்டு ஒழிக. உனக்குப் பின் உன் செல்வம் மற்றும் அரசுரிமை அவர்களுக்குரியது. நீ அவர்களை எதிர்த்து வென்றாலும் அதன் பயன் எதிரிகளுக்குத்தான் அன்றி உனக்கில்லை, என்று போர் தவிர்க்கப் பாடல் பாடுகிறார். இதில் அரசன் தன்மக்களை எதிர்த்தல் என்பது ஏற்கமுடியாத செயல். இருந்தும் போர் மேற்கொள்ளுதல் என்பது மனப்போராட்டத்தின் வெளிப்பாடான செயல்படுத்துதல் என அறியமுடிகிறது.*

### **4.10.9. எதிர்வினையமைப்பு** (Reaction Formation)

*எதிர்வினை அமைப்பு என்பது “ஏற்க இயலாத உந்துதல்களை அல்லது உணர்ச்சிகளைத் தன்னியக்கமான நனவிலி மனப் போக்கினால் நேரெதிர் நிலை மனப்பான்மைகள், நடத்தைகள், உணர்ச்சிகளாக மாற்றிக் கொள்ளுதல் என்பதாகும். மிக வலிமையாக உணரப்பட்ட உள்துடிப்புக்கு எதிரான ஒரு மனப்பாங்கை நிலை நிறுத்துவதுதான் எதிர்வினை அமைப்பில் உள்ள முக்கியச் செயல்முறையாகும்”[93] என்கிறார் து.சிவராஜ்.*

*போரினால் கிள்ளி வளவன் இறந்து விடுகிறான். அதைக் கண்டு ஐயூர் முடவனார் வளவனின் புகழுக்குரிய உடம்பை வைத்துப் பாதுகாக்கும் வகையில் பெரிய தாழியைச் செய்க எனக் குயவனிடம் கூறுகின்றார்.*

இதனை,

**கலம்செய் கோவே, கலம்செய் கோவே?**

**இருள்திணிந் தன்ன குரூஉத்திரள் பரூஉப்புகை**

**அகல்இரு விசும்பின் ஊன்றும் சூளை**

**நனந்தலை மூதூர்க் கலம்செய் கோவே,**

**அளியை நீயே! யாங்கா குவைகொல்**[94]

என்று புலவர் மன்னனின் இறப்பிற்கு வருந்தாமல், பெருந்தாழி செய்யும் குயவனைக் கண்டு இரங்குகிறார். இறப்பினால் ஏற்படும் துயர உணர்ச்சிக்கு வருந்தாமல், அதற்கு எதிர்வினை அமைப்பாகிய செயலுக்கு வருந்துகிறார். முடமோசியார் என்னும் புலவர் வள்ளல் ஆய் அண்டிரன் இறந்தபோது,

**திண்தேர் இரவலர்க் கீத்த தண்தார்,**

**அண்டிரன் வரூஉம் என்ன, ஒண் தொடி**

**வச்சிரத் தடக்கை நெடியோள் கோயிலுள்,**

**போர்ப்புறு முரசம் கறங்க**

**ஆர்ப்பெழுந் தன்றால் விசும்பி னானே**[95]

என்கிறார். ஆய் அண்டிரன் இறப்பால் இந்திரன் கோவிலில் முரசு ஒலிக்கிறது. வானத்தில் உள்ள இந்திரனே வரவேற்கும் ஆரவாரம் கேட்கிறது என்று கூறுகிறார். இறப்பிற்காக வருந்துவதை மறந்து, மன்னன் இறந்தால் வானுலகமே அவனை இன்புற்று வரவேற்கிறது என்று எண்ணி மகிழ்கிறார். இச்செயல் புலவரின் எதிர்வினைத் தன்மையை வெளிப்படுத்துவதாக உள்ளது.

### 4.10.10. இடமாற்றம் (Displacement)

இடமாற்றம் என்னும் தற்காப்பு வழியமைப்பு முறை நனவிலி மனத்தின் உந்துதல்களால் முளைவிடும் ஓர் அச்சுறுத்தலை வேறு ஒரு புறச்சூழல் மனிதர், பொருள், விலங்கு ஆகியவற்றோடு இணைத்துவிடுதல் ஆகும் என்கிறார் கி.நாகராஜன்.

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் இறந்தபோது ஆடுதுறை மாசாத்தனார் கூற்றுவனைப் பழிக்கின்றார். கூற்றுவனே! ஓர் உழவன் விதை நெல்லைச் சமைத்து உண்பது போல் வளவனின் உயிரை உண்டாய், அதனால் நீ அறிவற்றவன் என்பதை,

**நனிபே தையே நயனில் கூற்றம்**
**விரகுஇன் மையின் வித்தட்டு உண்டனை**
**இன்னும் காண்குவை நன்வாய் ஆகுதல்**
**ஒளிறுவாள் மறவரும் களிறும் மாவும்**
**குருதியங் குரூஉப் புனல்பொருகளத் துஒழிய**
**நாளும் ஆனான் கடந்தட்டு என்றுநின்**
**வாடுபசி அருத்திய பழிதீர் ஆற்றல்**
**நின்னோர் அன்ன பொன்னியல் பெரும்பூண்**
**வளவன் என்னும் வண்டுமூசு கண்ணி**
**இனையோற் கொண்டனை யாயின்**
**இனியார் மற்றுநின் பசிதீர்ப் போரே[96]**

என்பதனால் வளவன் வாழ்ந்திருந்தால் பல போர்களில், பல உயிர்களை உனக்கு, உணவாகக் கொடுத்திருப்பான். வலிமையுடைய வீரனை நீ உட்கொண்டாய், இனி உன் பசியைத் தீர்க்கப் போவது யார்? என்று வினவுகிறார். இதனால் புகழுடைய மன்னனை நாடு இழந்தது எனக் கருதாமல், அதனைக் கூற்றுவனின் பேரிழப்பாகப் புலவர் கூறுகிறார். நனவிலி மனத்தின் உந்துதலால் எண்ணவோட்டத்தில் இடம் பெயர்தல் என்னும் தற்காப்பு இயங்குமுறையாக அமைகிறது என்பதை அறியமுடிகிறது. இதைப்போன்று,

**நீயிழந் தனையே அறனில் கூற்றம்**
**வாழ்தலின் வரூஉம் வயல்வளன் அறியான்**
**வீழ்குடி உழவன் வித்துண் டாஅங்கு**
**ஒருவன் ஆருயிர் உண்ணாய் ஆயின்**

**நேரார் பல்லுயிர் பருகி**

**ஆர்குவை மன்னோ அவன் அமரடு களத்தே**[97]

*என்று அரிசில் கிழார் எழினியைப் பாடுகையில், அறமற்ற கூற்றுவனே நீயே மற்றவர்களைக் காட்டிலும் மிக இழந்தவனானாய்! வருங்கால வாழ்வுக்கு வழியின்றி எப்படி வறிய உழவன் தன் விதைநெல்லை ஆக்கி உண்பதால் தன் எதிர்கால வாழ்வை இழந்தவனாவானோ அதுபோல நீயும் ஒப்பற்ற எழினியின் அரிய உயிரை நீ உண்டமையால் எதிர்காலத்தில் பகைவர்களை அழிக்க வகையற்றவனானாய்! என எழினியின் அழிவு கூற்றுவனது அழிவாகவே புலவர் எண்ணுவது நனவிலி மனத்தின் உந்துதலால் எண்ணவோட்டத்தில் இடம் பெயர்தல் எனும் தற்காப்பு இயங்குமுறையாக அமைகிறது என்பதை அறியமுடிகிறது.*

### 4.11. இரக்கவுணர்வு (Sympathy)

*மனிதனின் இயல்பான பண்புகளுள் ஒன்று இரக்கம். இவ்விரக்க உணர்வானது சமூகச் சூழ்நிலையால், துன்பங்களை அனுபவித்த மனிதனிடமும் சமூகத்தின் மீது பற்றுடன் செயல்படும் மனிதர்களிடமும் தோன்றுகிறது. இந்த இரக்க உணர்வே பிறர்க்கு உதவும் மனிதநேயப் பண்பையும் அன்பினையும் தோற்றுவிக்கிறது.*

*சமூக நலன் மீதுள்ள பற்றின் காரணமாகச் சங்க காலப் புலவர்கள் போரின் அழிவிற்காக இரங்குகின்றனர் என்பதை,*

**எனைப்பல் யானையும் அம்பொடு துளங்கி**

**விளைக்கும் வினையின்றிப் படைஒழிந் தனவே;**

**விறல் புகழ் மாண்ட புரவி எல்லாம்**

**மறத்தகை மைந்தரொடு ஆண்டுப்பட்டனவே;**

**தேர்தர வந்த சான்றோர் எல்லாம்**

**தோல்கண் மறைப்ப ஒருங்குமாய்ந் தனரே;**

**விசித்துவினை மாண்ட மயிர்க்கண் முரசம்**

**பொறுக்குநர் இன்மையின் இருந்துவிளிந் தனவே;**

**சாந்து அமை மார்பில் நெடுவேல் பாய்ந்தென**

**வேந்தரும் பொருதுகளத் தொழிந்தனர்; இனியே**

**என்னா வதுகொல் தானே; கழனி[98]**

*என்று பரணர் பாடுகின்றார். வளம் மிக்க படைகள் அழிந்தன. மறவர்களும் தம் நிலையிழந்து வீழ்ந்து கிடக்கின்றனர். மேலும், சான்றோர்களும் இரு பெருவேந்தர்களும் மாய்ந்து கிடக்கின்றனர். இதைக் கண்டு புலவர் போரில் மன்னர்கள் இறந்தபோது அவர்களது அழகும் வளமும் மிக்க நாடுகள், இனி என்னாகுமோ என வருந்துகிறார். இவை சமூகத்தின் பால் புலவரிடையே எழுந்த இரக்கவுணர்வாகும்.*

*மருதனிள நாகனார் என்னும் புலவர் வரப்போகும் போரை நினைத்துத் தன் சுற்றத்திற்காக இரங்குகிறார் என்பதை,*

**ஈதல் ஆனான் வேந்தே; வேந்தர்க்குச்**

**சாதல் அஞ்சாய் நீயே; ஆயிடை**

**இருநில மிளிர்ந்திசின் ஆஅங்கு ஒருநாள்**

**அருஞ்சமம் வருகுவ தாயின்**

**வருந்தலும் உண்டென் பைதலம் கடும்பே[99]**

*என்பதனால் வலிமையுடைய அரசன் போர் வந்தால் சாதலுக்கும் அஞ்சமாட்டான் என்பதை அறிந்த புலவர் அப்படி ஒரு நாள் போர் வருமாயின் நீ போருக்குப் புறப்பட்டு விடுவாய். அதனால் பசித்துன்பத்தையுடைய என் சுற்றம் வருந்த நேரும். அதனால் இப்பொழுதே பரிசிலை வழங்கிவிடு என்று கூறுகிறார். இத்தகைய இரக்கவுணர்வு தனக்காகவும் தன் சமூகத்தின் மீதுள்ள பற்றின் காரணமாகவும் எழுந்ததே ஆகும்.*

*சங்க காலச் சமூகத்தில் பெண்களும் சிறப்பிடம் பெற்று விளங்கினர். புலவர்கள் போரினால் ஏற்படும் அழிவைக் கண்டு இரங்குவதோடு*

*மட்டுமல்லாமல் அப்போரிலே கணவனை இழந்த பெண்களின் நிலை எண்ணியும் வருந்துகின்றனர் என்பதை,*

**அளிய தாமே சிறுவெள் ளாம்பல்,**
**இளையம் ஆகத்தழையா யினவே, இனியே**
**பெருவளக் கொழுநன் மாய்ந்தெனப் பொழுதுமறுத்து**
**இன்னா வைகல் உண்ணும்**
**அல்லிப் படூஉம் புல்லா யினவே**[100]

*என்று ஒக்கூர் மாசாத்தியார் பாடுகிறார். போரில் கணவன் இறந்த பிறகு கூந்தலைக் களைந்தும் கை வளையல்கள் இன்றியும் காணப்படுகின்றாள். மேலும் உண்ணும் வேளை தவறியும் இரவு நேரத்தில் தனிமையில் வாடும் பொழுதும் அல்லியிடத்து உண்டான புல்லரிசியை உண்பதைக் கண்டும் புலவர் வருந்துகிறார். எனவே இச்செயல்கள் இரங்கத்தக்கன என்கிறார். கைம்மை நோன்பினால் ஒரு பெண் வருந்துவதை எண்ணி அவளது நிலைக்காகப் புலவரும் இரங்குகிறார். இதனை,*

**ஒலித்தலை விழவின் மலியும் யாணர்**
**நாடுகெழு தண்பணை சீறினை, ஆதலின்**
**குடதிசை மாய்ந்து குணமுதல் தோன்றிப்**
**பாய்இருள் அகற்றும் பயம்கெழு பண்பின்**
**ஞாயிறு கோடா நன்பகல் அமயத்துக்**
**கவலை வெண்நரி கூஉம்முறை பயிற்றிக்**
**கழல்கண் கூகைக் குழறுகுரல் பாணிக்**
**கருங்கண் பேய்மகள் வழங்கும்**
**பெரும்பாழ் ஆகும்மன் அளிய தாமே!**[101]

*என்பதனால் பல்யானைச் செல்கெழுகுட்டுவனை எதிர்த்த மிகுகின்ற புதுவருவாய்கொண்ட வளமுடையது பகைவர் நாடு. அந்த நாட்டிலுள்ள மருத நிலங்கள், நீ பகைத்ததால் மேல்திசையில் மறைந்து கீழ்த்திசையில் தோன்றுவதும், பயன்மிக்கதுமான ஞாயிறு சாயாத நல்ல*

*உச்சிக்காலத்திலும் பலவாறு பிரியும் கவர்ந்த வழிகளிலுள்ள வெள்ளை நரிகள் ஊளையிடப் பதுங்கிய கண்களுடைய கூகையின் குழறலாகிய தாளத்திற்கேற்பக் கடுங்கண்பேய் மகள் ஆடும்படி பாழாகும் எனப் பகை நாட்டின் அவலநிலைகண்டு பாலைக் கௌதமனார் இரக்கங்கொள்கிறார். மற்றொரு பாடலில்,*

**மாஆடியபுலன் நாஞ்சில் ஆடா,**
**கடாஅம் கென்னிய கடுங்கண் யானை**
**இனம்பரந்தபுலம் வளம்பரப்பு அறியா,**
**நின்படைஞர், சேர்ந்த மன்றம்கழுதை போகி**
**நீ உடன்றோர் மன்எயில் தோட்டி வையா**
**கடுங்கால் ஒற்றலின் கடர்சிறந்து உருத்துப்**
**பசும்பீசிர் ஒள்அழல் ஆடிய மருங்கின்**
**ஆண்தலை வழங்கும் கான்உணங்கு கடுநெறி**
**முளைஅகன் பெரும்பாழ் ஆக மன்னிய,**
**உரும்உறழ்பு இரங்கும் முரசின் பெருமலை**
**வரைஇழி அருவியின் ஒளிறுகொடி நுடங்கக்**
**கடும்பரிக் கதழ்சிறகு அகைப்பநீ**
**நெடும்தேர் ஓட்டியபிறர் அகன்தலை நாடே**[102]

*என்பதனால் சேர அரசனான செல்கெழுகுட்டுவனின் படை, இடியினைப் போல முழங்கும் முரசுகளோடு, பெரிய மலைச்சாரலின் பக்கத்தில், பாய்ந்து இறங்கும் அருவிகளைப் போலக் கொடிகள் அசையவும் குதிரையாகிய விரிந்த சிறகினை விரிக்கவுமாக உனது பெரிய தேரைப் பகைவர் நாட்டின் அகன்ற இடத்தில் செலுத்தினாய். அதனால் உன் படையிலுள்ள குதிரைகள் சென்றுபோர் புரிந்த பகை நாட்டு வயல்கள், கலப்பைகள் கொண்டு உழ வேண்டாவாயின. மதநீர் பெருகிய தலையினையுடைய உன் யானைக் கூட்டம் பரவிய வயல்கள் வளங்கள் பெறுவதை அறியாவாயின என்கிறார்.*

*கடிய காற்று வீசியதால், தீச்சுடர் மிகத் தோன்றி வெதுப்ப, தீக்கொழுந்துகள் பரவிய பக்கங்களோடு கூடியனவும் ஆண்தலை என்னும் பறவை திரியும் தீங்குகொண்ட வழிகளை உடையனவாகவும் ஆறலைக் கள்வர் வழிசெல்வாரை வருத்தும் இடங்களுடையனவாகவும் ஆகிய பாழிடங்களாக அழிந்தன எனப் பகைநாட்டின் அழிவுக்கு இரங்கும் நிலை இப்பாடல் வழி காணமுடிகிறது. இதைப் போன்று,*

**தேஎர்பரந்த புலம் ஏஎர்பரவா,**
**களிறுஆடியபுலம் நாஞ்சில்ஆடா,**
**மத்துஉரறியமனை இன்னியம் இமிழா,**
**ஆங்குப், பண்டுநற்கு அறியநர் செழுவளம் நினைப்பின்**
**நோகோ யானே, நோதக வருமே;**
**பெயல்மழை புரவுஇன்று ஆகி வெய்துஉற்று**
**வலம்இன்று அம்ம காலையது பண்புஎனக்**
**கண்பனி மலிர்நிறை தாங்கிக் கையுடையூ**
**மெலிவுடை நெஞ்சினர் சிறுமை கூரப்**
**பீர்இவர் வேலிப் பாழ்மனை நெருஞ்சிக்**
**காடுஉறு கடுநெறி ஆக மன்னிய;**
**முருகுஉடன்று கறுத்த கலிஅழி மூதூர்**
**உரும்புஇல் கூற்றத்து அன்னநின்**
**திருந்துதொழில் வயவர் சீறிய நாடே**[103]

*என்பதனால், நின் பகை நாடு உன்னுடைய வீரர் சீறுவதற்கு முன்பு இருந்த நிலையைக் கூறுவதாயின் அங்குத் தேர் பரவிச் சென்ற வயல்கள், பின்பு ஏர்களைக் கொண்டு உழவேண்டாவாயின. பன்றிகள் அகழ்ந்த நிலப்பகுதிகள், பின்பு கலப்பைகள் பூட்டி உழவேண்டாவாயின. தயிர் கடையும் மத்துகள் ஒலித்த இல்லங்களின் இசைக்கருவிகளின் இன்னிசை கேட்கவில்லை.*

அந்த வளமிக்க நாட்டில் இப்போது, மழை பெய்து, பாதுகாத்தல் இல்லாமையால் கதிரவன் வெப்பம் மிகுதலால் நாடு நமக்கு நன்மை பயக்குமாறு இல்லை. இது காலத்தின் இயல்பு என்று மக்கள் தம் நெஞ்சுக் குமுறலைக் கேட்ட பாலைக் கௌதமனார் கொண்ட இரக்கத்தை இப்பாடலில் காணமுடிகிறது.

**வாழா மையின் வழிதவக் கெட்டு**

**பாழா யினநின் பகைவர் தேஎம்**[104]

என்பதனால் பாண்டியனின் சொல் கேட்டு வாழாததனால் பகைவர் நாடுகள் தம் இயற்கை வளங்கள் இழந்து அழியும் நிலை ஏற்பட்டதே என மாங்குடி மருதனார் இரக்கங்கொள்கிறார் என்பதை அறியமுடிகிறது.

## 4.12. இயல்பூக்கம்

மனிதன் உடல் அடிப்படையில், பரம்பரையாகப் பெற்று வந்துள்ள ஒரு வகைத் தூண்டுதல் குணங்களும் நோக்கங்களும் இதன் அடிப்படையில் அமைகின்றன.

“சிக்மெண்ட் ப்ராய்ட் என்ற உளவியல் அறிஞர் இயல்பூக்கத்தை இரண்டாகப் பிரிக்கிறார். அவை,

- வாழத்தூண்டும் இயல்பூக்கம் (Life Urges)
- சாகத்தூண்டும் இயல்பூக்கம் (Death Urges)”[105]

இவை இரண்டுமே மனித வாழ்க்கையை அலைக்கழிக்கின்றன எனலாம்.

### 4.12.1. சாகத்தூண்டும் இயல்பூக்கம் (Death Urges)

சோர்வுற்ற, நம்பிக்கையற்ற மனநிலையில் தோன்றும் இயல்பூக்கம் சாகத்தூண்டும் இயல்பூக்கம் ஆகும். இது சலிப்பு, ஆசை நிறைவேறாமை, ஏமாற்றம், தோல்வி, பழிக்கு நாணுதல், தாழ்வு மனப்பான்மை போன்றவற்றால் உந்தப்படுகிறது.

*போரில் தன் கணவனை இழந்த நிலையில் பெருங்கோப்பெண்டு என்பவள் தீப்பாய நினைக்கின்றாள். இதனை,*

**பல்சான் றீரே, பல்சான் றீரே,**
**செல்கெனச் செல்லாது ஒழிகென விலக்கும்**
**பொல்லாச் சூழச்சிப் பல்சான் றீரே,**
**அணில்வரிக் கொடுங்காய் வாள்போழ்ந்து இட்ட**
**காழ்போல் நல்விளர் நறுநெய் தீண்டாது**
**அடையிடைக் கிடந்த கைபிழி பிண்டம்**
**வெள்எள் சாந்தொடு புளிப்பெய் தட்ட**
**வேளை வெந்தை வல்சி யாகப்**
**பரற்பெய் பள்ளிப் பாயின்று வதியும்**
**உயவற் பெண்டிரேம் அல்லேம் மாதோ**
**பெருங்காட்டுப் பண்ணிய கருங்கோட்டு ஈமம்**
**நுமக்குஅரி தாகுக தில்ல எமக்குஎம்**
**பெருந்தோள் கணவன் மாய்ந்தென அரும்புஅற**
**வள்ளிதழ் அவிழ்ந்த தாமரை**
**நள்ளிரும் பொய்கையும் தீயும்ஓர் அற்றே[106]**

*என்னும் பாடலால் அறியலாம். பலராகிய சான்றோரே! உன் தலைவன் இறந்தான். அவனுடன் நீயும் இறக்கக் கூடாது என்று கூறும் சான்றோர்களே! கணவனை இழந்த பெண்கள் ஏற்கும் இத்தகைய கைம்மை நோன்பை ஏற்று வருந்தும் பெண்டிராக விளங்க மாட்டேன். அதைவிடத் தீப்பாய்ந்து உயிரை விடுதல் சிறந்தது என்று கூறுவதன் மூலம் கணவன் இறந்த துயரத்தினாலும் ஏமாற்றத்தினாலும் சாகத்தூண்டும் இயல்பூக்கம் அப்பெண்ணிடம் தோன்றுகிறது எனலாம். இதைப் போன்றே மாமூலனார் என்னும் புலவர்,*

**நோற்றோர் மன்ற தாமே கூற்றம்**
**கோள்உற விளியார், பிறர் கொளவிளிந் தோர்என[107]**

என்று பாடுகிறார். பயனின்றி வாழ்ந்து மடிவதைவிடப் பிறர்க்கு உதவியாக வாழ்ந்து மடிவதே மேல் என்ற முடிவிற்கு வரச் சாகத்தூண்டும் இயல்பூக்கமே காரணமாக அமைகிறது.

### 4.12.2. போரூக்கம் (Pugnacity)

'மக்டூகலின்' கொள்கைப்படி ஒவ்வோர் இயல்பூக்கச் செயலிலும் குறிப்பிட்ட ஒருமனவெழுச்சி உண்டு. இம்மனவெழுச்சிய அவ்வியல்பூக்கத்தினைச் செயல்படுத்தும் அதுபோன்றே போரூக்கமும் 'சினம்' எனும் மனவெழுச்சியால் உந்தப்படுகிறது.

"போர்கள் போரூக்கத்தால் ஏற்படுபவை. பணம், பெண், நிலம், முதலிய நாட்டத்திற்கு இடையூறு ஏற்பட்டால் இவ்வூக்கம் தூண்டப்படுகிறது"[109] என்கிறார் நா.வேதமணி மானுவேல்.

சங்க காலம் "களிறெறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே"[109] என்று வீரத்தைக் கடமையாகப் போற்றிய காலம். போரூக்க மிகுதியால் வீரர்கள் காடுகள் நிறைந்த வழியிடை ஆயினும் பகை நாடு சென்று போர்புரிய விரும்பினர். இதனை,

**போர்எனில் புகலும் புனைகழல் மறவர்**
**காடிடைக் கிடந்த நாடு நனிசெய**
**செல்வேம் அல்லேம் என்னார்; கல்லென**[110]

என்று கோவூர்கிழார் பாடுகிறார். வீரமிகுதியாலும் பகை நாட்டைத் தனதாக்கிக் கொள்ள வேண்டும் என்னும் ஊக்க மிகுதியாலும், எழுந்த போரூக்கமாகும் இது. தமையனைப் பகைவன் கொன்று விடுகிறான். இச்செயலைக் கண்ட வீரன், அரிசில் கிழாரின் புறப்பாட்டில், முந்திய நாள் நடைபெற்ற போரில்,

**கொடுங்குழை மகளிர் கோதை சூட்டி**
**நடுங்குபனி களைஇயர் நார்அரி பருகி**
**வளிதொழில் ஒழிக்கும் வண்பரிப் புரவி**

**பண்ணற்கு விரைதி, நீயே; நெருநை**

**எம்முன் தப்பியோன் தம்பியொடு ஓராங்கு**

**நாளைச் செய்குவென் அமரெனக் கூறி**[111]

*என்பதனால் அவன் தம்பியையும் ஒருசேர எதிர் கொண்டு நாளை போர் செய்வேன் என்று சினந்து கூறுகிறான். இதன்படி நோக்கினால் பழிவாங்கத் தூண்டும் உந்துதலும் சினம் என்னும் மனவெழுச்சி நிலையும் போரூக்கத்திற்கு வழி வகுப்பது தெரிகிறது.*

*மகள் மறுத்தல் காரணமாகவும் சங்க காலத்தில் போர் நடைபெற்றது. மகள் வேண்டி வந்த பேரரசன் மகளை வழங்காமையால் சினம் கொண்டு போருக்குப் புறப்பட்டான். எனவே அழகிய பெண் காரணமாகப் போரினால் இவ்வூர் அழியப்போகின்றது என்பதை,*

**நுதிவேல் கொண்டு நுதல்வியர் துடையாக்**

**கடிய கூறும் வேந்தே; தந்தையும்**

**நெடிய அல்லது பணிந்துமொழி யலனே;**

**இஃதுஇவர் படிவம் ஆயின், வையெயிற்று**

**அரிமதர் மழைக்கண் அம்மா அரிவை**

**மரம்படு சிறுதீப் போல**

**அணங்கா யினள் தான் பிறந்த ஊர்க்கே**[112]

*என்று மருதனிள நாகனார் பாடுகிறார். எனவே பெண்மீது ஏற்பட்ட நாட்டத்தில் இடையூறு நிகழ்ந்ததால் போரூக்கம் மேலிட்டுப் போர் நடைபெற்றது எனலாம்.*

**'இவன் யார்?' என்குவை ஆயின், இவனே**

**புலிநிறக் கவசம் பூம் பொறி சிதைய**

**எய் கணை கிழித்த பகட்டு எழில் மார்பின்,**

**மறலி அன்ன களிற்று மிசையோனே;**

**களிறே, முந்நீர் வழங்கு நாவாய் போலவும்**

**பன்மீன் நாப்பண் திங்கள் போலவும்,**

**சுறவினத்து அன்ன வானோர் மொய்ப்ப,**

**மரீஇயோர் அறியாது, மைந்த பட்டன்றே;**

**நோய் இவன் ஆகிப் பெயர்கதில் அம்ம!**

**பழன மஞ்ஞை உருத்த பீலி**

**கழனி உழவர் சூட்டொடு தொகுக்கும்,**

**கொழுமீன், விளைந்த கள்ளின்,**

**விழு நீர் வேலி நாடு கிழவோனே**[113]

*என்னும் பாடலால் சேரமான் அந்துவஞ்சேரல் இரும்பொறை இடம் பகை கொண்ட கிள்ளி கருவூரிடத்திற்கு யானை மீது ஏறி, தன்படையுடன் போரிட வருகின்றான். அவனது வருகையை அரசனிருக்கும் மாடத்தில் நின்று இரும்பொறையுடன் காண்கிறார் புலவர். அப்பொழுது கிள்ளி பெருமிதத்துடன் யானையின் மீது எமன் ஊர்ந்து வருவதுபோலச் சினத்துடன் வரும் காட்சியை வருணிக்கிறார். இது கிள்ளிவளவனது போரூக்கத்தை விளக்குகிறது.*

### 4.13. பிறழ்நிலை உளவியல் (Abnormal Psychology)

*இயல்புக்கு ஒவ்வாத நடத்தை வெளிப்பாட்டைக் குறிப்பது. இதனை உளவியல் அறிஞர்கள் "நனவிலி மனப் போக்கினால் எதிர்நிலையான மனப்பான்மைகள், நடத்தைகள், உணர்ச்சிகளாக மாற்றுவது பிறழ்நிலை உளவியலாகும்"*[114] *என்கின்றனர். மரணத்தை எவராலும் இயல்பாக ஏற்றுக்கொள்ள முடியாது. ஆனால் சங்ககாலப் போர்க்களத்தில் நேரும் மரணம் விரும்பிப் பெறத்தக்க ஒன்றாக வரவேற்கப்பட்டது. தங்கள் பிள்ளைகள் போரில் இறந்து விட்டால் இயல்பாக ஒரு தாய் அச்செய்தியைக் கேட்டு புலம்பித் தவிப்பாள்; கண்ணீர் விட்டுக் கதறுவாள். ஆனால் புறநானூற்றில் காணப்படும் தாய், பிள்ளையின் மரணத்திற்காக மகிழ்கிறாள் என்பதை,*

**மீன்உண் கொக்கின் தூவி அன்ன**

**வால்நரைக் கூந்தல் முதியோள் சிறுவன்**

**களிறு எறிந்து பட்டனன் என்னும் உவகை**
**ஈன்ற ஞான்றினும் பெரிதே; கண்ணீர்**
**நோன்கழை  துயல்வரும் வெதிரத்து**
**வான்பெயத் தூங்கிய சிதரினும் பலவே**[115]

*என்று பூங்கண் உத்திரையார் பாடுகிறார். போர்க்களத்தில் தன் மகன் களிறெறிந்து பட்டான் எனக் கூறக் கேட்ட தாய் கண்ணீர் சிந்தாமல் மகிழ்ச்சி அடைகிறாள்.*

*மற்றொரு தாய், போர்க்களத்திலே மகன் மார்பில் புறப்புண்பட்டு இறந்தான் என்பதைக் கேட்டு மகிழ்வது தெரிகிறது.*

**நரம்பெழுந்து உலறிய நிரம்பா மென்தோள்**
**முளரி மருங்கின் முதியோள் சிறுவன்**
**படை அழிந்து மாறினன் என்றுபலர் கூற**
**மண்டமர்க்கு உடைந்தனன் ஆயின் உண்ட என்**
**முலை அறுத் திடுவென் யான் எனச் சினைஇக்**
**கொண்ட வாளொடு படுபிணம் பெயராச்**
**செங்களம் துழவுவோள் சிதைந்து வேறாகிய**
**படுமகன் கிடக்கை காணூஉ**
**ஈன்ற ஞான்றினும் பெரிது வந்தனளே**[116]

*என்பதனால் தன் மகனின் இறப்பிற்கு வருந்தாமல் அவன் புறப்புண்பட்டு மரணம் அடைந்திருந்தால் அவன் பாலுண்ட தன் மார்பகத்தை அறுத்தெறிவேன் என்று போர்க்களம் நோக்கிப் புறப்படுகின்றாள் ஒரு தாய். பின்னர் வாளால் உண்டான விழுப்புண் மிக்க உடலைக் கண்டு மகிழ்ந்து கண்ணீர் வடிக்கின்றாள்.*

*போர்க் காலச் சமுதாயத்தில் புலி போன்ற மகனைப் பெற்ற தாய் அவனது வீரச்சிறப்பையே பெரிதும் விரும்புதல் இயல்பாக இருந்தது. பெண்ணொருத்தி மறக்குடி மகளிரைப் பார்த்து உன் மகன் எங்கு*

இருக்கின்றான் எனக் கேட்கிறாள். அதற்கு அத்தாய் தன் மகன் போர்க்களத்திலே போரிடச் சென்றுள்ளான் என்பதை,

**சிற்றில் நல்தூண் பற்றி நின்மகன்**
**யாண்டுஉள னோஎன வினவுதி; என்மகன்**
**யாண்டுஉளன் ஆயினும் அறியேன் ஓரும்;**
**புலி சேர்ந்து போகிய கல்அளை போல**
**ஈன்ற வயிறோ இதுவே;**
**தோன்றுவன் மாதோ போர்க்களத் தானே**[117]

என்று வீரமிகுதியால் கூறுகிறாள். ஒக்கூர் மாசாத்தியார் என்னும் புலவர் பாடலில் அமையும் கணவனும், தமையனும், தந்தையும் இழந்த நிலையில் ஆதரவாக இருக்கும் ஒரே மகனையும், இழக்கத் துணியும் மூதின் மகளிர் இயல்பு மாறுபட்டதாகிறது. இதனை,

**இன்றும், செருப்பறை கேட்டு விருப்பு உற்று மயங்கி**
**வேல்கைக் கொடுத்து வெளிதுவிரித்து உடீஇப்**
**பாறுமயிர்க் குடுமி எண்ணெய் நீவி**
**ஒருமகன் அல்லது இல்லோள்,**
**செருமுகம் நோக்கிச் செல்கென விடுமே**[118]

என்னும் பாடல் இளம் பிள்ளையையும் போருக்கு அனுப்பும் தாய், மகனின் வீரமரணத்தில் மகிழும் தாயாக விளங்குகிறாள். இத்தகைய மறப்பெண்களின் வீரச்செயல் எதிர்நிலை மனப்பான்மையால் நிகழும் பிறழ்நிலை உளவியலாக வெளிப்படுகிறது.

இவைபோன்று, புறநானூற்றுப் போர் நிகழ்ச்சிகளால் பழந்தமிழ் மக்களின் உளங்கள் பெரிதும் பாதிக்கப்பட்டிருக்கின்றன. எனவே மனபாதிப்பால் வேந்தர்கள், வள்ளல்கள், புலவர்கள், வீரர்கள், மூதின் மகளிர் முதலானோரிடம் உளச்சிக்கல்கள் ஏற்படுகின்றன. இத்தகைய சிக்கல்களிலிருந்தும் குழப்பங்களிலிருந்தும் விடுபடத் தற்காப்பு

நடத்தைகளை மேற்கொள்கின்றனர். இது போன்ற உளவியல் அணுகுமுறைகளால், சங்ககால மக்களின் வாழ்க்கை இயல்புகளின் உண்மைகளை அறிந்துகொள்ள முடிகின்றது.

**தொகுப்புரை**

'சங்ககாலப் போர் உளவியல் நோக்கு' எனும் இந்த இயலின்வழி பெறப்பட்ட ஆய்வு முடிவுகள் தொகுப்புரையாக இடம் பெறுகின்றன.

- போர் உளவியல் என்பது திட்டமிட்ட முறையில் பரப்புரை உத்திகளைக் கைக்கொண்டு போர் இலக்குகளை நிறைவேற்றுதலின் பாற்படும்.
- போருக்கான ஆயத்தமாக அமைவது வெட்சித் திணைப்போர். இது மன்னன் ஏவ அமர்தலைவன் போர் வீரர்களை திரட்டிக்கொண்டு எதிர் நாட்டின் ஆநிரைகளைக் கவர்ந்து வருவதையும் ஆநிரைகளுக்கு உரியவர் மீட்டதையும் வெட்சி எனத் தொல்காப்பியம் கூறும். இதில் கவர்ந்து வருவது வீரனின் ஆளுமை என்னும் உளவியலாகும். ஆநிரைகளை மீட்பதை தன் சுற்றத்திற்குத் தீங்கு நேரும்போது எதிர்த்துச் செல்வது பாதுகாத்தல் என்னும் இயல்பூக்க உளவியலாகும்.
- மண்ணாசையால் ஏற்படும் போர் வஞ்சித்திணைப் போர். இது காழ்ப்புணர்ச்சி உளவியல் சார்ந்தது. வறுமையில் கிடந்து வாழ்வின் பயன் காணாத மக்கள், வளம் கொழுக்கும் நிலத்தாரின் நிறைவைக் காணும் தோறும் காழ்ப்புணர்ச்சி மிகுதல் உண்டு.
- மாற்றான் மதிலை வளைத்தலைக் குறிக்கும் வீரமேலீட்டினால் எதிரியை அழிக்க அவர்களின் அரண்களை முற்றுகையிட்டு வெற்றிபெறுதலும் மதிலைப் பாதுகாத்தலும் உழிஞைத் திணை எனப்படும். இதில் மதிலை வளைத்தலே செயல்படுத்துதல் என்ற உத்தியாகும். எதிர்த்தல் தற்காத்தல் என்ற உளவியல் பாற்படும்.

- இருதரத்து வேந்தர்களும் பரந்துபட்ட போர்க்களத்தில் போர்புரிதல் தும்பையாகும். இது செயற்படுத்துதல் என்ற உளவியல் உத்தியை உணர்த்துகிறது.

- வாகை என்பது வெற்றிபெற்ற நாட்டு மன்னன் மற்றும் வீரர்களின் மகிழ்ச்சியையும் வெற்றியையும் குறிக்கும். இது ஆளுமைத் தன்மையால் நிகழ்வதாகும்.

- போரின் அழிவுகளை எடுத்துரைக்கும் பகுதி காஞ்சியாகும். இது நிலையாமையை உணர்த்துவதால் உணர்வு சார்ந்த இயல்பூக்க உளவியலாகும்.

- பாடாண் திணைப் போர் என்பது பாடப்படும் ஆண் மகனது ஒழுகலாறு என்றும், போர்புரிந்த அரசன், வீரர் ஆகியோரின் போர்த்திறத்தைப் புகழ்ந்து பாடுவதாலும் தங்களைப் பிறர் புகழவேண்டும் என்ற பொன்மொழியே புகழின் மீது மனிதனுக்கு இருக்கும் மோகத்தைக் காட்டுவதாலும் இது இயல்பூக்க உளவியலாகும்.

- திருக்கோவலூர்ப் போர் கிள்ளிவளவனின் உணர்வு சார்ந்த இயல்பூக்கத்தால் நிகழ்ந்த போராகும்.

- திருக்கோவலூர் போர் - II அதியனின் திரட்டூக்கமாகும்.

- மோகூர்ப்போர் பழையனின் சின ஊக்கத்தால் நிகழ்ந்த போர்.

- உறையூர்ப் போர் வடுகவேந்தனது அச்சத்தைப் புலப்படுத்துகிறது.

- இடும்பில் போர் சேரன் செங்குட்டுவனின் செயல்படுத்தல் என்ற உளவியல் சார்ந்தது.

- சேரன் செங்குட்டுவன் நடத்திய மற்றொரு போர் கொடுகூர்ப்போர். இது இடும்பில் எதிர்க்கரையில் உள்ள நகரத்தைச் சுற்றிவளைத்து வெற்றி கண்டதால் செயல்படுத்துதல் என்ற உளவியலாகும்.

- கரிகாலனது பேராற்றலை எதிர்க்க முடியாமல் களத்திலே கருவிகளும் வெண்குற்றக்குடையும் விட்டுவிட்டு எதிரிகள் அஞ்சி ஓடியதால் கரிகாலனது ஆளுமையைக் காட்டுவதாக வெண்ணிப்போர் அமைகிறது.
- தகடூர்ப்போர் : பெருஞ்சேரன் இரும்பொறை அதியமானின் தகடூர் மீது போர்தொடுத்து வெற்றி பெற்றான். இதில் சேரனது ஆளுமை புலப்படுகிறது.
- கூடற்பறந்தலைப் போரில் பாண்டியனை எதிர்த்த சேர, சோழர்கள் போர்க்களத்தில் தோல்வியடைந்து தங்கள் முரசுகளை எடுத்துச் செல்ல நேரமின்றி ஓடினர். இது சேர, சோழனின் வாழத்தூண்டும் இயல்பூக்கத்தை உணர்த்துகிறது.
- கங்கைப்போர் II அல்லது குயிலாலயப் போர் என்பது சேரன் செங்குட்டுவன் வடபுல அரசர்கள் தமிழக அரசர்களை இழிவாகப் பேசியதால் வெகுண்டு போர்புரிந்ததால் உணர்வூக்கத்தால் எழுந்த போராகும்.
- வடபுலக் கங்கைப்போரானது சேரன் செங்குட்டுவன் தன் அன்னையைக் கங்கையில் நீராட்டுவதற்காகச் சென்றபோது ஆரிய அரசர்கள் திரண்டுவந்து அவன் மீது போர்த்தொடுத்தனர். சேரன் செங்குட்டுவன் தன் அன்னையைப் பாதுகாக்கப் போர் புரிந்தான். எனவே இது பாதுகாத்தல் சார்ந்த உளவியலாகும்.
- கொங்கர் செங்களப்போர் என்பது சேரன் செங்குட்டுவன் புரிந்த போராகும். சேரனை எதிர்த்து சோழரும் பாண்டியரும் கொங்கர்க்கு ஆதரவாகப் போருக்கு வந்தும் சேரன் செங்குட்டுவன் வெற்றி பெற்றான். இது சேரனது ஆளுமையை வெளிப்படுத்துகிறது.
- வாகைப் பறந்தலைப் போர் என்பது கரிகாலன் தன்னை எதிர்த்து வந்த ஒன்பது மன்னரையும் ஒருசேரக் களத்தில் எதிர்த்து வாகை சூடியதால் கரிகாலனது ஆளுமையை வெளிப்படுத்துகிறது.

- கானப்பேரெயில் அழிவு, கானப்பேரெயில் போர் என்பது பாண்டியன் உக்கிரப்பெருவழுதிக்கும் குறுநில மன்னன் வேங்கைமார்பனுக்கும் இடையில் நடைபெற்ற போர். வேங்கை மார்பனது ஆணவத்தை அழிக்க முற்பட்ட உக்கிர பெருவழுதிக்கு ஏற்பட்ட மானவுணர்வு போருக்குக் காரணமாக அமைகிறது. எனவே இது உணர்வு சார்ந்த இயல்பூக்கமாகும்.

- வெண்ணி என்ற இடத்தில் நடைபெற்ற போரில் சேரனையும் பாண்டியரையும் ஒருங்கே வீழ்த்தினான் கரிகாலன். இப்போர் கரிகாலனது ஆளுமையை வெளிப்படுத்துகிறது.

- குளமுற்றத்துப் போரில் கிள்ளிவளவன் பாண்டியரையும் சேரரையும் காட்டுக்குத் துரத்திச் சென்றிருக்க வேண்டும் என்று இராசமாணிக்கனார் கருதுகிறார். கிள்ளிவளவனது ஆளுமையைப் புறநானூற்றுப் பாடல் 40 வெளிப்படுத்துகிறது.

- கழுமலப்போர் : சோழன் செங்கணானுக்கும் சேரன் இரும்பொறைக்கும் இடையில் கழுமலம் என்ற இடத்தில் நடந்த போரில் சோழன் வெற்றி பெற்றான். சேரன் இரும்பொறை மானஉணர்வு பெரிதென்று சிறையில் உண்ணாமல் உயிர் துறந்தான். இது சேரனது உணர்வு சார்ந்த இயல்பூக்கத்தை வெளிப்படுத்துகிறது.

- வியலூர்ப் போரில் சேரன் செங்குட்டுவன் வியலூரின் கோட்டையில் நடந்த போரில் வெற்றி பெற்றான். இது செயல்படுத்துதல் என்ற உளவியலில் தற்காத்தல் உத்தியாகும்.

- சேரன் செங்குட்டுவன் தனது மைத்துனன் சோழன் கிள்ளிவளவனுக்கும் சோழர்குடி இளவல்கள் ஒன்பது பேருக்கும் இடையில் நடந்த நேரிவாயில் போரில் சேரன் செங்குட்டுவன் வெற்றிபெற்று தனது மைத்துனனுக்கு அரசுரிமை பெற்றுத் தந்தார். எனவே இப்போர் புரிதலுக்கு உணர்வூக்கமே அடிப்படையாக அமைகிறது.

- ஆவூர்ப்போர் நலங்கிள்ளிக்கும் நெடுங்கிள்ளிக்கும் இடையில் நடைபெற்ற போர். இப்போரின்போது நெடுங்கிள்ளி போரினைத் தவிர்த்து கோட்டைக்குள் அடைபட்டுக் கிடந்தார். கோவூர்கிழாரின் சொல்லைக் கேட்டுப் போருக்குப் புறப்பட்டான். எனவே இது உணர்வு சார்ந்த இயல்பூக்கமாகும்.

- தலையாலங்கானத்துப் போரில் பாண்டியன் நெடுஞ்செழியன் எதிர்த்த இரண்டு பேரரசர்களும் ஐந்து வேளிர்களும் சேர்ந்து சிறுவனாக இருக்கும் பாண்டியனைத் தாக்க, பாண்டிய நெடுஞ்செழியன் வெற்றி பெற்றான். எனவே இது பாண்டியனது ஆளுமையை வெளிப்படுத்துகிறது. கடம்பின் பெருவாயில் போரில் நார்முடிச் சேரனுக்கும் நன்னனுக்கும் இடையில் நடந்த இப்போர் போரூக்கத்தால் நிகழ்ந்த போராகும்.

- தீவுப் பகுதியில் சேரன் செங்குட்டுவன் கடற்கொள்ளையர்களே அஞ்சும்படி போர் புரிந்து வெற்றிபெற்றான். எனவே செங்குட்டுவனது ஆளுமை புலப்படுகிறது. காரியாற்றில் நடந்த இப்போர் மாவண்கிள்ளியின் புகழையும் நாட்டுவளத்தையும் கண்டு பொறாமை கொண்ட சேரரும் பாண்டியரும் வடபுல அரசர்களுடன் இணைந்து சோழன் மீது படை எடுத்ததால். இது காழ்ப்புணர்ச்சி சார்ந்த உளவியலாகும்.

- காரியாற்றுப் போர் II நெடுங்கிள்ளியும் நலங்கிள்ளியும் மூர்க்கத்தனமாக இரு அரசர்களுக்கும் நேருக்கு நேர் நின்று சம வலிமையுடன் போர்புரிந்ததால் இது செயல்படுத்துதல் என்ற தற்காத்தல் உளவியலாகும்.

- வெண்ணிப்போர் II சேரமன்னன் நெடுஞ்சேரலாதனுக்கும் சோழமன்னன் கரிகாலனுக்கும் இடையில் நடைபெற்ற கோரமான போராகவும் புலவர்களால் கூறப்பட்டுள்ளது. நெடுஞ்செழியன்

*முதுகில் புண்பட்டதால் நாணி வடக்கிருந்து உயிர்துறந்ததால் உணர்வு சார்ந்த உளவியலாகும்.*

- *மனம் தெளிவற்ற நிலையில் இருக்கும்போது மனத்தில் ஏற்படும் போராட்டம் உளச்சிக்கலை உண்டாக்கும். இவை மூவகைப்படும். அவை உளமுறிவு, உளப்போராட்டம், உளஇறுக்கம் என்பனவாகும்.*

- *மக்கள் அனைவரும் இன்பமாக வாழவே புலவர்கள் விரும்புவர். இத்தகைய விருப்பத்திற்கு இடையூறு அல்லது குறுக்கீடுகளோ ஏற்படும்போது அவர்களிடம் மனமுறிவு தோன்றுகிறது. இவ்வாறு சமூகத்தின் மீதான தனது மனமுறிவினைப் பரணர் பாடல் 4 இல் சோழன் உருவப்பஃறேர் இளஞ்சேட் சென்னியிடம் தனது மனமுறிவினை வெளிப்படுத்தியுள்ளார். அதேபோன்று புறம் - 7, புறம் - 62, மதுரைக்காஞ்சி - வரி 152 - 158 - லும் சமூக முறிவு வெளிப்படுவதை அறியமுடிகின்றது.*

- *மனப்போராட்டம் மனமுறிவினால் ஏற்படுகிறது என்றும் மனமுறிவு மனப்போராட்டத்தால் விளைகிறது என்றும் கூறலாம். இதன் மூலம் மனமுறிவும் மனப்போராட்டமும் ஒன்றோடொன்று தொடர்பு உடையவை ஆகும். இரண்டு சமவலிமையுடைய ஊக்கிகள் பூர்த்திபெற இயலாது. ஒன்று மற்றொன்றுக்குத் தடையாக இருப்பதன் காரணமாக ஏற்படும் உளநிலையே உளப்போராட்டமாகும். இதன் வகைகள் மூன்று. அவை, அணுகுதல் - அணுகுதல் போராட்டம், அணுகுதல் - விலகுதல் போராட்டம், விலகுதல் - விலகுதல் போராட்டம் எனலாம்.*

- *விரும்பத் தகுந்த இரண்டு அல்லது இரண்டுக்கு மேற்பட்ட மனமாற்றங்களிடையே நிகழலாகும் போட்டியை உள்ளடக்கியதே அணுகுதல் - அணுகுதல் போராட்டம். புறம்.15 இல் பாண்டியன் பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதியை நெட்டிமையார் பாடலிலும், புறம்.48 பொய்கையார் பாடலிலும், புறம்.49, 218, 341 பாடல்களிலும், பதிற்றுப்பத்து 32, 86, 12 மற்றும்*

பெரும்பாணாற்றுப்படை 412 - 422 வரிகளில் அணுகுதல் - அணுகுதல் மனப்போராட்டம் வெளிப்படுகிறது.

- அணுகுதல் - விலகுதல் போராட்டம் என்பது ஓர் இலக்கினை அணுகவும் விலகவும் தூண்டும் வலிமையான போக்குகள் ஒரே நேரத்தில் நிலவுவதேயாகும்.
- புறநானூற்றின் (12) பாடலில் பாண்டியன் பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதியை நெட்டிமையார் பாடிய பாடலில் எதிர்எதிர் இலக்குகள் போராட்டத்தைக் காணலாம். அவ்வாறே புறம்.254, 118, 253, பதிற்றுப்பத்து 12, 13, 31, 83 பாடல்களிலும் அணுகுதல் - விலகுதல் மனப்போராட்டத்தைக் காணமுடிகிறது.
- இரண்டு விரும்பத்தகாத இலக்குகளில் ஏதாவது ஒன்றை அடைந்தே ஆக வேண்டிய நிலையை விலகுதல் - விலகுதல் உளப்போராட்டம் என்பர். இது புறம் 255, அகம்.55, 127, பதிற்றுப்பத்து 57 பாடல்களில் வெளிப்படுகிறது.
- மனிதனிடம் உளமுறிவும், உளப்போராட்டமும் எவ்வகைத் தீர்வுமின்றி நெடுங்காலம் தொடருமானால் உள்ள இறுக்கம் தோன்றும். புறம்.2, 46, 51 ஆகிய பாடல்களில் உள இறுக்கம் புலனாகிறது.
- மனித வாழ்க்கை பல வகைச் சிக்கல்களைக் கொண்டது. அவற்றால் ஏற்படும் உளமுறிவு, உளப்போராட்டம், உளஇறுக்கம் முதலானவை உளநலத்தைப் பாதிக்கின்றன. இச்சமயங்களில் தற்காப்பு இயங்குமுறை செயல்படத் தொடங்கி மனிதனின் அகத்தைப் பாதுகாக்கிறது. அவை மனிதர்கள் தங்களுடைய அனுபவங்கள் பயமுள்ளவையாகவோ, வெட்கப்படக் கூடியவையாகவோ இருக்குமானால் அவற்றை மறைத்திடவே எண்ணுவர். இது மனஒடுக்கமாகும்.

- வேள் எவ்வி என்னும் வள்ளல் பெருவீரன். போரில் எதிர்பாராத விதமாக இறந்துவிடுகிறான். ஆனால் புலவர் அச்செய்தி பொய்யாகக்கூடாதா என நம்ப மறுப்பதாகப் புறம் - 233 பாடல் புலப்படுத்துகிறது. மேலும், இதை 232 பாடலிலும் காணலாம்.

- விரும்பத்தகாத துன்பச்சூழலை மனிதமனம் ஏற்பதில்லை. அதனால் மனம் அனுபவத்தையும் உணர்ச்சியையும் பிரித்துக்கொண்டு அனுபவத்தை மட்டும் ஏற்று உணர்ச்சியை ஒடுக்குவது உணர்வொதுக்கமாகும். இத்தன்மை புறம்.239 பாடலில் நம்பி நெடுஞ்செழியன் போரில் இழந்தாலும் அவன் புகழ்நிலை கண்டு போற்றுகிறார். இதனைப் போன்று அதியமான் நெடுமான் அஞ்சி உடல் நெருப்பில் வெந்தாலும் அவன் புகழ் நிலைத்ததைக் கண்டு ஔவையார் இறுமாப்புக் கொள்கிறார். தான் எதிர்ப்பட்டுள்ள மனப் போராட்டங்களில் இருந்து விலகிட ஒருவன் தன் வளர்ச்சி நிலைகளில் கீழ் இறங்கி சிறு குழந்தைபோல் செயல்படுவது பின்னோக்கமாகும். இத்தன்மை புறம்.112, 116, 310, பதிற்றுப்பத்து 19, 23, 26, 27 ஆகிய பாடல்கள் பின்னோக்க உத்தியைக் கையாண்டுள்ளன. கபிலர் பாடலிலும் (116), பாரி மகளிர் பாடலிலும்கூட (113) புலப்படுகிறது.

- மனமுறிவுப் போராட்டம் மிக்க சூழலில் சரியான சிந்தனை முறை அமைவதில்லை. அப்போது தோன்றும் சிந்தனைகளில் பல தவறுகள் ஏற்பட வாய்ப்புண்டு. அவை, தற்புனைவுச் சிந்தனை, சார்பெண்ணச் சிந்தனை ஆகும். இதன் அடிப்படையில் பொதுமையாக்கம் தோன்றும். புறம்.76 பாடலில் சோழன் நலங்கிள்ளியிடம் பாடிப் பரிசு பெற்ற புலவன் இளந்தத்தன் நெடுங்கிள்ளியிடமும் பாடிப் பரிசு வாங்கச் சென்ற புலவனை ஒற்றன் எனத் தவறாக எண்ணிக் கொல்லத் துணிந்ததைக் கோவூர்கிழார் என்னும் புலவர் பாடியதிலும் தற்புனைவுச் சிந்தனை வெளிப்படுவதை அறியலாம்.

- *குமணன் என்னும் வள்ளல் வரையாது வழங்கும் பண்புடையவன். அவன் தம்பி இளங்குமணன் அண்ணன்மீதே பகைமைகொண்டு தீயநட்பினால் அண்ணனிடம் போருக்குச் செல்ல, குமணன் தன் நாட்டை இளங்குமணனுக்குக் கொடுத்துவிட்டுத் தான் காட்டுக்குச் செல்கிறான். இருந்தும் இளங்குமணன் தன் அண்ணன் தன்மீது மீண்டும் படை எடுத்து வரக்கூடும் என்று எண்ணி தீயநட்பினால் குமணன் தலையைக் கொய்து வருபவர்களுக்குப் பரிசளிப்பதாக அறிவித்தான். இதில் சார்பெண்ணச் சிந்தனைப் போக்கு புலப்படுகிறது.*

- *நமக்குத் தோல்வி அல்லது கவலை உண்டாகக்கூடிய சூழ்நிலையிலிருந்து விலகிச் செல்வதன் மூலம் உளமுறிவைத் தடுக்கலாம். இது துறப்பமைவு என்னும் உளவியல் உத்தியாகும். புறம்.98 பாடலை அதியமான் தன்னுடைய வீரமுணர்ந்தும் தொண்டைமானின் வலிமை அறிந்த ஔவையாரைத் தொண்டைமான் மீது தூது அனுப்பிப் போரினைத் தடுத்துக் கொள்கிறார். இதைப்போன்று புறம் 31, 52, 65, 256, 280 பாடல்கள் இவ்வுத்தியில் அமைந்துள்ளன.*

- *தன்னிடம் காணப்படும் ஒரு குறைபாட்டிற்கு ஈடு செய்யும் வகையில் தன் சக்தி முழுவதையும் வேறொன்றில் செலுத்தி வெற்றி பெறுவது ஈடு செய்தல் உத்தியாகும். கபிலர் என்னும் புலவர் பாரி இறந்தபின் அவனது பறம்புமலையின் வளம், கொடைச்சிறப்பு, வீரம் முதலானவற்றைப் பாடி பாரியின் இறப்பை மறக்க முயன்ற தன்மையை அவரது பாடலில் புறம் 113, 114, மேலும் 223, 306 பாடல்களில் அறியலாம்.*

- *மனமுறிவைத் தவிர்க்கவும் தணிக்கவும் வேண்டிப் பிறரை உளத்தாலும் உடலாலும் தாக்குதல் உண்டு. மாறாக, தாக்குதல் வேகத்தைத் தன் மீதே திருப்பிக் கொள்ளுதல் தன்முகத் திருப்பம் என்ற தற்காப்பு உத்தியாகும்.*

- புறம் 280 இல் போர்க்களத்திலே இறந்த வீரனின் மனைவி தன் கணவனின் பிரிவை எண்ணி வருந்துகிறார். இதனால் மனமுறிவு ஏற்பட்டுத் தன்னையே அழித்துக்கொள்ளத் துணிகிறார். இதைப்போன்று புறம்.74 பாடலிலும் தன்முகத்திருப்பல் உத்தியில் பாடலின் தன்மை அமைந்துள்ளது.

- அடக்கி மறைத்தல், ஒடுக்குதல் ஆகியன உளப்போக்கிற்கு நேரெதிரான செயற்படுத்துதல் அல்லது வெளிப்படுத்துதலாகும்.

- புறம் - 336 பாடலில் மகளைத் தர மறுத்ததனால் அந்நாட்டின் மீது படை எடுத்துச் சென்று தாக்கி ஊரின் வளமும், நலமும் அழிகின்ற தன்மையைப் பரணர் பாடியுள்ளார். இது செயல்படுத்துதல் என்ற உத்தியாகும். மேலும், புறம்.16, 23, 213, 392 பாடல்களிலும் இவ்வுத்தி வெளிப்படுகிறது.

- மனிதனின் இயல்பான பண்புகளுள் ஒன்று இரக்க உணர்வாகும். இதைப் புலவர்களிடம் காண முடிகிறது. வளமிக்க படைகள் அழிந்தன. மறவர் வீழ்ந்தனர். இருபெரு வேந்தர்களும் மாய்ந்தனர். இனி நாடு என்னாகுமோ என புறம்.63 பாடலில் பரணர் கவலை கொள்வதிலிருந்து சமூகத்தின் மீது உள்ள புலவரது இரக்கத்தைக் காணமுடிகிறது. இதைப்போன்று புறம்.139, 248, பதிற்றுப்பத்து 2, 5, 22, 26, மதுரைக்காஞ்சி 175 - 177 வரிகளில் இரக்க உணர்வு வெளிப்படுகிறது.

- இயல்புக்கு ஒவ்வாத நடத்தை வெளிப்பாட்டைக் குறிப்பது பிறழ்நிலை உளவியலாகும். புறம்.277 பாடலில் பூங்கண் உத்திரையால் போர்க்களத்தில் தன் மகன் களிறெறிந்துபட்டான் எனக் கேட்டதால் கண்ணீர் சிந்தாமல் மகிழ்ச்சி கொள்கிறார். இது பிறழ்நிலை உளவியல் பாற்படும். இதைப்போன்று புறம் 86, 278, 279 பாடலிலும் நெறிபிறழ் நடத்தை வெளிப்படுவதை அறியலாம்.

**இயல் - நான்கு**

**சான்றெண் விளக்கம்**

1. *புறம். பா.257:1-10*
2. *புறம். பா.47*
3. *புறம். பா.299*
4. *புறம். பா.80*
5. *புறம். பா.26:6-15*
6. *புறம். பா.71:1-6*
7. *புறம். பா.39*
8. *து. சிவராஜ், சங்க இலக்கியத்தில் உளவியல், ப.1*
9. *குறள், சிற்றினஞ்சேராமை, எண் 457*
10. *து. சிவராஜ், சங்க இலக்கியத்தில் உளவியல், ப.1*
11. *மேலது, ப.1*
12. *மேலது, ப.2*
13. *மேலது, ப.2*
14. *மேலது, ப.2*
15. *புறம். பா.4:18-19*
16. *புறம். பா.7:7-13*
17. *புறம். பா.62:7-14*
18. *மதுரை. வ. 152-158*
19. *புறம். பா.356*
20. *அகம்.பா. 148: 7-8*
21. *து. சிவராஜ், சங்க இலக்கியத்தில் உளவியல், ப.16*
22. *கி. நாகராஜன், கல்வி உளவியல், ப.330*
23. *து. சிவராஜ், சங்க இலக்கியத்தில் உளவியல், ப.17*
24. *புறம். பா.15:12-22*
25. *புறம். பா.48*
26. *புறம். பா.49:1-6*

27. *புறம். பா.341:11-19*

28. *பதிற். பா.32:1-8*

29. *பதிற். பா.86*

30. *பதிற். பா.12*

31. *பெரும். வ.412-422*

32. *புறம். பா.218*

33. *து. சிவராஜ், சங்க இலக்கியத்தில் உளவியல், ப.21*

34. *புறம். பா.12*

35. *புறம். பா.254*

36. *புறம். பா.253*

37. *பதிற். பா.12:5-9*

38. *பதிற். பா.13:1-15*

39. *பதிற். பா.31:33-35*

40. *பதிற். பா.83*

41. *புறம். பா.118*

42. *து. சிவராஜ், சங்க இலக்கியத்தில் உளவியல், ப.25*

43. *புறம். பா.255*

44. *அகம். பா.55:10-13*

45. *அகம். பா.127:3-10*

46. *பதிற். பா.57:10-15*

47. *து. சிவராஜ், சங்க இலக்கியத்தில் உளவியல், ப. 34*

48. *புறம். பா.202:11-16*

49. *புறம். பா.51:1-7*

50. *புறம். பா.46*

51. *து. சிவராஜ், சங்க இலக்கியத்தில் உளவியல், ப.59*

52. *மேலது, ப. 60*

53. *மேலது, ப.65*

54. *புறம். பா.233*

55. புறம். பா.232

56. து. சிவராஜ், சங்க இலக்கியத்தில் உளவியல், ப.73

57. புறம். பா.239:10-21

58. புறம். பா.231

59. து. சிவராஜ், சங்க இலக்கியத்தில் உளவியல், ப.18

60. புறம். பா.116:2-9

61. புறம். பா.112

62. பதிற். பா.19:20-27

63. பதிற். பா.23:17-25

64. பதிற். பா.26

65. பதிற். பா.27

66. புறம். பா.310

67. து. சிவராஜ், சங்க இலக்கியத்தில் உளவியல், ப.117

68. புறம்.பா. 47: 6-11

69. புறம்.பா. 165

70. து. சிவராஜ், சங்க இலக்கியத்தில் உளவியல், ப.127

71. புறம். பா.95:1-5

72. புறம். பா.65

73. புறம். பா.31:5-17

74. புறம். பா.52-:5-6

75. புறம். பா.256

76. புறம். பா.250:4-9

77. து. சிவராஜ், சங்க இலக்கியத்தில் உளவியல், ப.137

78. புறம். பா.113:1-7

79. புறம். பா.114

80. புறம். பா.223

81. புறம். பா.306:1-4

82. து. சிவராஜ், சங்க இலக்கியத்தில் உளவியல், ப.149

83. புறம். பா.280:10-15

84. புறம். பா.74

85. து. சிவராஜ், சங்க இலக்கியத்தில் உளவியல், ப.158

86. புறம். பா.217:1-2

87. து. சிவராஜ், சங்க இலக்கியத்தில் உளவியல், ப.175

88. புறம். பா.336:1-7

89. புறம், பா.16:13-17

90. புறம். பா.392:9-10

91. புறம். பா.23:1-11

92. புறம். பா.213:1-11

93. து. சிவராஜ், சங்க இலக்கியத்தில் உளவியல், ப.190

94. புறம். பா.228:1-5

95. புறம். பா.241

96. புறம். பா.227

97. புறம். பா.230

98. புறம். பா.63:1-1

99. புறம். பா.139:11-15

100. புறம். பா.248

101. பதிற். பா.22:30-38

102. பதிற். பா.25

103. பதிற். பா.26

104. மதுரை. வ:175-177

105. கு.பகவதி, திறனாய்வு அணுகுமுறைகள், ப.112

106. புறம். பா.246

107. அகம். பா.61:1-2

108. நா.வேதமணி மானுவேல், சமூக உளவியல், ப.75

109. புறம். 312:6

110. புறம். பா.31:9-11

111. புறம். பா.304:1-6

112. புறம். பா.349

113. புறம். பா.13

114. அ.பெசண்ட் கிரிப்பர் ராஜ், பிறழ்நிலை உளவியல், ப.2

115. புறம். பா.277

116. புறம். பா.278

117. புறம். பா.86

118. புறம். பா.279:8-11

# ஆய்வு முடிவுரை

- சங்க இலக்கியத்தில் போர் - உளவியல் அணுகுமுறை என்னும் இந்த ஆய்வுரையில் இயல்தோறும் கண்டறியப்பட்ட முக்கிய ஆய்வு முடிவுகள் தொகுப்புரைகளாக அந்தந்த இயல்களின் இறுதியில் தொகுத்துத் தரப்பெற்றுள்ளன. 'ஆய்வு முடிவுரை' என்னும் இப்பகுதியில் ஆய்வு முடிவுகளின் தன்மைகளும் போக்குகளும் இடம் பெற்றுள்ளன.

- இலக்கியம் என்பது மனித உணர்வுகளின் பிரதிபலிப்பு. அவை மனித மனத்தில் தோன்றியவையாகும். உளவியல் என்பது மனித இயல்பினையும் நடத்தையில் ஏற்படும் மாற்றத்தையும் அறிய உதவுகிறது.

- உளவியல் அறிவியல் கிரேக்கர்களின் காலத்தில் தோன்றியது. உளவியல் நூல் ஆன்மாவின் இயல்புகள் என்பதாகும்.

- பதினேழாம் நூற்றாண்டில் ரெனி தெக்கார்த்தே, லிப்னை, ஜான் லாக், ஜார்ஜ் பெர்கில், இமானுவேல் காண்ட் முதலானோரும் உளவியல் தத்துவங்களை வழங்கியுள்ளனர். அவை உளத்தின் இயல்புகள் பற்றியும் உளக்கூறுகள் பற்றியும் பேசுவதாக அமைகின்றன.

- உலகில் சிறப்புமிக்கனவாகப் போற்றப்படும் கவிதை (இலக்கியம்), இசை, நாட்டியம், ஓவியம், சிற்பம் முதலிய அழகுக் கலைகள் யாவுமே மனமுறிவின் வேற்றுருவங்களாகும் என்பது உளவியலாளர் சிக்மெண்ட் ஃப்ராய்டின் சித்தாந்தமாகும்.

- மனிதனிடம் தனிப்பட்ட ஒரு சக்தி உண்டு. மனிதனின் அனைத்து நடத்தைகளையும் இயல்பூக்கங்களே ஆக்குவிக்கின்றன என்று மக்டுகல் குறித்தார். இக்கொள்கை ஹார்மிக் கொள்கை (Harmism) எனப்பட்டது.

மனிதனிடம் பதினேழு வகை இயல்பூக்கங்கள் உள்ளவற்றைப் புலனுணர்வு, நடத்தை, உணர்வு என அடிப்படையில் மூன்றாகப் பிரித்துள்ளனர்.

- மனிதன் எவ்வளவுதான் தன்னலம் கருதுபவனாக வாழ்ந்தாலும் அவனிடமும் பிறவியிலேயே இயற்கையாக உதவுதல், பிறரை மகிழ்வித்தல் முதலானவற்றிற்குச் சில கொள்கை வித்துக்கள் காணப்படுகின்றன. இவற்றைச் சுமித்தின் (Smith) இரக்க உணர்வுக் கோட்பாடு (Sympathy) வெளிப்படுத்துகின்றது.
- மனித மனதில் ஏற்படும் சிக்கல்களையும் குழப்பங்களையும் அறிய உளவியலில் வாய்ப்புகள் கிடைக்கின்றன. அதன் மூலம் நம் வாழ்க்கைத் துன்பங்களுக்குரிய காரணங்களை அறிந்து, அவற்றைத் தீர்க்க நெறிபிறழ் கோட்பாடு (Abnormal Psychology) உதவுகிறது.
- புலவனின் கற்பனையில் தோன்றிய இலக்கியம், உளவியல் உத்தியுடன் ஒன்றிப்போகும்போது என்றும் வெற்றிபெறும்; அவ்வாறு வெற்றிபெற்ற இலக்கியங்களில் உளவியல் கூறுகள் உள்ளன என அறியலாம்.
- சங்க இலக்கியம் என்பது பதினெண்மேற்கணக்கு என்று கூறப்படும் பதினெட்டு நூல்களைக் கொண்டது. எட்டுத்தொகையில் அகப்புற இலக்கியமான ஒன்று பரிபாடல்; மற்றும் பத்துப்பாட்டில் ஒன்று நெடுநல்வாடை என இரண்டு நூல்களாகும்.
- எட்டுத்தொகையில் புறஇலக்கியங்களான புறநானூறும், பதிற்றுப்பத்தும், பத்துப்பாட்டில் ஆற்றுப்படை நூல்கள் ஐந்தும், மதுரைக்காஞ்சி ஒன்றுமாக மொத்தம் எட்டு நூல்களாகும். புறநானூற்றிலிருந்து சேர, சோழ, பாண்டியர் பற்றிய வரலாறு மற்றும் புலவர் வாழ்க்கையை அறியமுடிகிறது. மன்னர்களின் கல்வி, கொடை,

தருக்கண் மற்றும் மக்களின் புறவாழ்க்கையைப் படம்பிடித்துக் காட்டுவது இவ்விலக்கியமாகும். இதில் புறத்திணைகள் பதினொரு திணை பற்றிய பாடல் உள்ளது. உழிஞைத் திணைப்பாடல் மட்டும் இடம்பெறவில்லை.

- பதிற்றுப்பத்தில் சேரமன்னர்களின் வீரதீரச் செயல்கள் இடம்பெற்றுள்ளன. ஒவ்வொரு பத்தின் இறுதியிலும் பதிகம் ஒன்றுண்டு. பத்தின் வரலாற்றைக் கூறுவது பதிகமாகும். இதற்கு பழைய உரை ஒன்று உண்டு. பாடல்களின் முடிவில் துறை, வண்ணம், தூக்கு (இசை), பாடலின் பெயர் ஆகியவை குறிப்பிடப்பட்டுள்ளது.

- ஆற்றுப்படை நூல்களின்வழி அரசர்களிடையே நடைபெற்ற போர்கள் மற்றும் பாடல் பாடிய புலவனின் வாழ்க்கை நிலை, ஐவகை நிலங்களில் கிடைக்கும் உணவு வகைகளை அறியலாம். இது பயண இலக்கியமாகவும் திகழ்கிறது.

- புறநானூற்றின் வளர்ச்சியே மதுரைக்காஞ்சியாகும். இது நிலையாமையை உணர்த்தும் இலக்கியமாகத் திகழ்கிறது. உலகில் உள்ள நிலையற்ற பொருள்களைத் தேடுவதைக் காட்டிலும் நிலைத்த மதுரையின் மாண்பினையும் பாண்டிய படையெடுப்புகளையும் அறிவதாக அமைகிறது.

- புறம் பற்றி எழுந்த தனி இலக்கணமான புறப்பொருள் வெண்பாமாலை புறத்திணைகளைப் பன்னிரண்டாக விரித்துள்ளது.

- மனித நாகரிகத்தின் தொடக்கமே போராகத்தான் அமைகிறது. மனிதன் தொடக்ககாலத்தில் தன்னைத் தற்காத்துக்கொள்ள முற்பட்டபோதே போர்புரியத் தொடங்கினான். அவன் செய்த முதல் போர் விலங்குகளோடும், பின்பு மனிதனுடன் அமைந்தது.

- அரசுரிமைக்காக உருவப்பஃறேர் இளஞ்சேட்சென்னியின் மகன் கரிகாற்பெருவளத்தான் பகைவரின் காவலினின்று தப்பிச் சென்று

அரசுரிமையைப் பெறுவதற்காகப் போர் புரிந்தான் என பட்டினப்பாலை, பொருநராற்றுப்படை மூலம் அறிய முடிகின்றது.

- பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப்பெருவழுதி என்பானை நெட்டிமையார் பாடிய பாடலில் போரின் தவிர்க்கப்படுபவர்களாக பசு, பார்ப்பனர், பெண்டிர், நோய்வாய்ப்பட்டோர், வயது முதிர்ந்தவர் மக்களைப் பெறாதீர் என்பவர்கள்மீது என் அம்பு செல்லாது எனக் கூறியுள்ளார்.

- அகத்திணை அடிப்படையில் புறத்திணை அமைத்ததால்தான் நாம் அதனைப் புறத்திணை என்று கூறுவதற்கான காரணம் நச்சினார்க்கினியர், இளம்பூரணர் உரைகளில் கூறப்பட்டுள்ளன.

- வெட்சித்திணை என்பது நிரைகவர்தலாகும். இது குறிஞ்சிக்குப் புறமானது. இதன் துறையான நிமித்தம் பார்க்கும் வழக்கம் உண்டு என்று (புறம்.280:6-7) போருக்குச் செல்லும்முன் தூய மலர்களை நெல்லுடன் தூவிக் கைதொழுது விரிச்சி கேட்டு நிற்பதன் வழிக் காணலாம்.

- வஞ்சித்திணை என்பது மண்ணாசைக்காக நடக்கும் போராகும். இது முல்லையது புறமானது. இதன் துறையாகக் காவல் மரங்களை அழிப்பர் என்பது கல்லாடர் பாடலில் (புறம்.23:5-11) கூறியுள்ளார்.

- உழிஞைத்திணை என்பது மாற்றான் மதிலை வளைத்தலைக் குறிக்கும். இது அகத்திணையான மருதத்திற்குப் புறம்பானது. இதன் துறையாக நாள் பார்த்து வாளும் குடையும் புறப்படுதல் தொல்காப்பியப் பொருள் (நூ.69) உணர்த்தும். இது இலக்கியத்தில் திருமாவளவன் நல்ல நாளில் வாளையும் குடையையும் முரசையும் போக்கியதைப் புறம், சிலம்பு, வஞ்சி மாநகர் புக்க காதையில் கூறப்பட்டுள்ளது.

- படைச்செலவு என்னும் துறை பகைவர் நாட்டின் மீது படையெடுத்துச் செல்லும் வேந்தன் தன் அடையாளப் பூவைச் சூடிப் படையை

*அழைத்துச் செல்வதைப் பாடும். அவ்வாறு சென்ற படையினை (புறம்.228) பாடல் வேந்தனின் படைகள் தலை, இடை, கடை என வரிசை முறைப்படிச் சென்றதையும் முன்னர் சென்ற படைவீரர்கள் பனம் நுங்கினை உண்டனர். இடைச் சென்றவர்கள் பனம் பழத்தை உண்டனர். இறுதியில் சென்றவர் கிழங்கினைச் சுட்டுத் தின்றனர் என்று ஆலத்தூர் கிழார் கூறுகின்றார்.*

- *தும்பைத்திணை என்பது அதிரப்போர் புரிதலைக் குறிக்கும். இது அகத்திணையான நெய்தலுக்குப் புறம்பானது. இதன் துறையாக வீரரைப் போருக்கு அழைத்தமையைப் பதிற்றுப்பத்து (பாடல் - 84) வழி அறியலாம்.*

- *வாகைத்திணை என்பது வென்றவனது சிறப்பினைக் கூறுவது இது அகத்திணையான பாலைக்குப் புறம்பானது. இதன் துறையான பாசறை நிலை என்பது வேந்தர்கள் போர் மேற்கொண்டபொழுது பகை நாட்டில் நீண்ட நாள்கள் தங்க நேரிட்டது. வேந்தனும் அவனது படைகளும் தங்கிய இடத்தைப் பாசறை, கட்டூர் என இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன.*

- *பாசறை என்பது மதுரைக்காஞ்சி 231 வரியில் பார்வை பாசறை என்றும், பதிற்றுப்பத்து 84 பாடலில் பார்வற் பாசறை என்றும், நெடுநல்வாடை பாசறைத் தொழிலே என்றும் கூறுகிறது. கட்டூர் என்பதைப் பதிற்றுப்பத்து (68) வேறுபுலத்திறுத்த கட்டூர் என்கிறது.*

- *படையை வேந்தனின் திருமேனி எனச் செப்புகிறது சிலப்பதிகாரம். இப்பகை இரு வகைப்படும் அவை நிலப்படை, கடற்படை என்பவையாகும்.*

- *நிலப்படை என்பது காலாட்படை, குதிரைப்படை, யானைப்படை, தேர்ப்படை என்று நான்கு வகையான படைகளை வேந்தர்கள் போரில் பயன்படுத்துவதாகும். இந்நான்கு வகைப் படைகளும் சோழன்*

இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியைச் சூழ்ந்ததைப் புறப்பாடலில் உலோச்சனார் குறிப்பிடுகிறார்.

- போர்க்கருவிகளில் வேல் முதன்மை இடம் பெற்றுள்ளது. போர்க்களத்திலும், பாசறையிலும் வேலைப் புகழ்ந்து பாடும் மரபு உண்டு. போர்க் கருவிகளுள் வில், வாள் இவற்றைவிட வேலுக்கு முதன்மையான இடம் தந்தனர். போர் முனைக்கு எடுத்துச் செல்வதற்கு முன்பு வேலுக்கு வழிபாடு நடைபெற்றதைப் புறநானூற்றுப் பாடல் 332 எடுத்துரைக்கிறது.

- போருக்குச் செல்வதற்கு முன் வேந்தரும், வீரரும் வஞ்சினம் கூறுதல் மரபு. வேந்தர்களும் படைவீரர்களும் வஞ்சினம் கூறுவர். இதனை புறநானூற்றுப் பாடல் 304 இல் தன் முன்னோனைக் கொன்றவனை அவன் தம்பியோடு சேர்த்துக் கொல்லப் போவதாக மறவன் வஞ்சினம் கூறுவதை அறியலாம்.

- பாடாண்திணை என்பது பாடப்படும் ஆண் மகனது ஒழுகலாறுகளைக் கூறுவது. இது அகத்திணையான கைக்கிளைக்குப் புறம்பானது.

- போர்க்களத்தில் நடுநிலைமை என்பது உறவினர்கள் என்று பாராட்டாமல் தம்மை எதிர்த்து வரும் பகைநாட்டு வீரர்களுடன் போர் செய்வதும் படைவீரர் ஒருங்கே கூடித் தங்கியிருந்த கடல் போன்ற பாசறையிலிருந்து நீங்கிச் சென்று வேல் முதலிய படைக் கருவிகளைக் கொண்டு தம்மவர் அயலவர் என்று பாராமல் போர் செய்ததை புறம்.294 இல் பெருந்தலைச்சாத்தனார் பாடியுள்ளார்.

- வீரமரணம் அடைந்தவர்களுக்கு நடுகல் வைக்கும் மரபு இருந்தது என்றும், நடுகல்லில் வீரனின் பெயரும், பெருமையும், பெற்ற சிறப்புகளும் பொறிக்கப்பட்டன என்றும் தொல்.பொருள் (நூ.63), அகம் (67), புறம் (329) உரைக்கிறது. தொல்காப்பியர் வெட்சித்திணையில் குறிப்பிடும் செய்தி புறப்பொருள் வெண்பாமாலையில் பொதுவியலில் இடம் பெற்றுள்ளது.

- வெட்சித்திணை என்பது ஆநிரை கவர்வதும் மீட்பதும் என்று தொல்காப்பியம் கூறுகிறது. இது போருக்கான தொடக்கமாகப் பார்க்கப்படுகிறது.

- மண்ணாசையின் காரணமாக நிகழ்ந்த வஞ்சித் திணைப் போர்களாக காரியாற்றுப்போர் II, திருக்கோவிலூர் I, திருக்கோவிலூர் II, போர் நடைபெற்றதையும் அறியமுடிகிறது.

- காஞ்சித்திணை என்பது நிலையாமையாகிய அழிவை உணர்த்துவது. காஞ்சித் திணைப் போராக மோகூர்ப் போர் நடைபெற்றதையும் அறியமுடிகிறது.

- மாற்றான் மதில் வளைத்தலான உழிஞைத் திணைப் போர்களாக மோகூர்ப் போர், சோழன் தித்தன், கட்டிக்கு இடையே நடைபெற்ற போர், இடும்பில், கொடுகூர் வெற்றிகள், வெண்ணிப் போர், தகடூர்ப் போர், கூடற்பறந்தலைப் போர், கங்கைப் போர் நடைபெற்றதையும் அறியமுடிகிறது.

- இருபடைகளும் தம்முள் மாறுபட்டு எதிர் எதிர் நின்று போர் புரிதலான தும்பைத் திணைப் போர்களாகச் சோழன் பெருவிறல்கிள்ளி, குடக்கோ நெடுஞ்சேரலாதனுக்கும் இடையே நடைபெற்ற போர், வடபுலக் கங்கைப்போர், காரியாற்றுப் போர், கொங்கர் செங்களப் போர் நடைபெற்றதையும் அறியமுடிகிறது.

- வென்றவனது சிறப்பினைக் கூறுவதாக அமைந்த வாகைத்திணைப் போர்களான வாகைப் பறந்தலைப் போர், தகடூர்ப் போர், கானப் பேரெயில் அழிவு, கானப் பேரெயில் போர், வெண்ணில் போர் III, நடைபெற்றதையும் அறியமுடிகிறது.

- காஞ்சித்திணை என்பது நிலையாமையாகும். இது அகத்திணையான பெருந்திணைக்குப் புறம்பானது.

- பாடப்படும் ஆண் மகனது ஒழுகலாறுகளைக் கூறுவதுமான பாடாண் திணைக்குரிய குளமுற்றத்துப் போர் நடைபெற்றதையும் அறியமுடிகிறது.
- போர்க்களத்தில் நடைபெறும் பொதுச் செய்திகளை எடுத்து இயம்பும் பொதுவியல் திணைப் போர்களாகக் கழுமலப் போர் நடைபெற்றதையும் அறியமுடிகிறது.
- உழிஞை, வஞ்சித் திணை வியலூர்ப் போர்களையும் அறியமுடிகிறது. இதில் மண்ணாசையாலும் உந்தப்பட்டு இரு அரசர்கள் இடையே நிலவிய மதில் போட்டியைக் காணமுடிகிறது.
- உழிஞை, வாகைத் திணைப் போரான நேரிவாயில் போர் குறித்து அறியமுடிகிறது.
- வாகை, வெட்சித் திணைப் போரான கடம்பின் பெருவாயில் போர் நடை பெற்றதை அறியமுடிகிறது.
- வாகை, வஞ்சித் திணைப் போர்களாக ஆவூர்ப் போர் நடைபெற்றதும் மண்ணாசையால் உந்தப்பட்டு இரு அரசர்கள் இடையே நிலவிய கடும் போட்டியில் வெற்றிபெற்றமையையும் விளக்குகிறது.
- வாகை, காஞ்சித் திணைப் போர்களாகத் தலையாலங்கானத்துப் போர் நடைபெற்றதையும் அதில் வெற்றிபெற்ற அரசனது நிலையையும் தோற்ற நாட்டின் நிலையும் ஒருசேர அறியமுடிகிறது.
- வாகை, உழிஞைத்திணைப் போராக வெண்ணிப் போர் III நடைபெற்றதும் அதன்வழி மதிலை வளைத்த அரசன் வெற்றி பெற்றதையும் காண்கிறோம்.
- வாகை, தும்பைத் திணைப்போராகக் கடம்பின் பெருவாயில் போர் நடைபெற்றதும் இருபடைகளும் தம்முள் மாறுபட்டு எதிர் எதிர் நின்று போர் புரிதலில் வெற்றி பெற்றவரது சிறப்பினையும் காணமுடிகிறது.

- உழிஞை, பாடாண் திணைப் போர்களாகச் சேரமான் செங்குட்டுவனின் போர்கள் வழி மாற்றான் மதில் வளைத்தலும் வெற்றி பெற்ற அரசனது சிறப்பினையும் அறியமுடிகிறது.

- பொதுவியல், வாகைத் திணைப் போர்களாக வெண்ணிப் போர் - 11 வெண்ணிப் பறந்தலைப் போர் குறித்தும் வெற்றி பெற்ற அரசன் நிலை மற்றும் பொதுவான செய்திகளையும் ஒருங்கே காணமுடிகிறது.

- சங்க இலக்கியத்தில் இருபத்தேழு போர்கள் இனம் காணப்பட்டுள்ளன. அதில் உழிஞைத் திணைப் போர் மிகுதியாக காணப்பட்டுள்ளது.

- போர் உளவியல் என்பது திட்டமிட்ட முறையில் பரப்புரை உத்திகளைக் கைக்கொண்டு போர் இலக்குகளை நிறைவேற்றுதலின் பாற்படும்.

- போருக்கான ஆயத்தமாக அமைவது வெட்சித் திணைப்போர். இது மன்னன் ஏவ அமர்தலைவன் போர் வீரர்களைத் திரட்டிக்கொண்டு எதிர் நாட்டின் ஆநிரைகளைக் கவர்ந்து வருவதையும் ஆநிரைகளுக்கு உரியவர் மீட்டதையும் வெட்சி எனத் தொல்காப்பியம் கூறும். இதில் கவர்ந்து வருவது வீரனின் ஆளுமை என்னும் உளவியலாகும். ஆநிரைகளை மீட்பதைத் தன் சுற்றத்திற்கு தீங்கு நேரும்போது எதிர்த்துச் செல்வது பாதுகாத்தல் என்னும் இயல்பூக்க உளவியலாகும்.

- மண்ணாசையால் ஏற்படும் போர் வஞ்சித்திணைப் போர். இது காழ்ப்புணர்ச்சி உளவியல் சார்ந்தது. வறுமையில் கிடந்து வாழ்வின் பயன் காணாத மக்கள், வளம் கொழுக்கும் நிலத்தாரின் நிறைவைக் காணும் தோறும் காழ்ப்புணர்ச்சி மிகுதல் உண்டு.

- மாற்றான் மதிலை வளைத்தலைக் குறிக்கும் வீரமேலீட்டினால் எதிரியை அழிக்க அவர்களின் அரண்களை முற்றுகையிட்டு வெற்றிபெறுதலும் மதிலைப் பாதுகாத்தலும் உழிஞைத் திணை எனப்படும். இதுவே மதிலை வளைத்தல் செயல்படுத்துதல் என்ற உத்தியாகும். எதிர்த்தல் தற்காத்தல் என்ற உளவியல் பாற்படும்.

- இருதரத்து வேந்தர்களும் பரந்துபட்ட போர்க்களத்தில் போர்புரிதல் தும்பையாகும். இது செயற்படுத்துதல் என்ற உளவியல் உத்தியை உணர்த்துகிறது.

- வாகை என்பது வெற்றிபெற்ற நாட்டு மன்னன் மற்றும் வீரர்களின் மகிழ்ச்சியையும், வெற்றியையும் குறிக்கும். இது ஆளுமைத் தன்மையால் நிகழ்வதாகும்.

- போரின் அழிவுகளை எடுத்துரைக்கும் பகுதி காஞ்சியாகும். இது நிலையாமையை உணர்த்துவதால் உணர்வு சார்ந்த இயல்பூக்க உளவியலாகும்.

- பாடாண் திணைப் போர் என்பது பாடப்படும் ஆண் மகனது ஒழுகலாறு என்றும், போர்புரிந்த அரசன், வீரர் ஆகியோரின் போர்த்திறத்தைப் புகழ்ந்து பாடுவதாலும் தங்களைப் பிறர் புகழவேண்டும் என்ற பொன்மொழியே புகழின் மீது மனிதனுக்கு இருக்கும் மோகத்தைக் காட்டுகிறது என்பதாலும் இது இயல்பூக்க உளவியலாகும்.

- திருக்கோவலூர்ப் போர் கிள்ளிவளவனின் உணர்வு சார்ந்த இயல்பூக்கத்தால் நிகழ்ந்த போராகும்.

- திருக்கோவலூர் போர் - II அதியனின் திரட்டூக்கமாகும்.

- மோகூர்ப்போர் பழையனின் சினஊக்கத்தால் நிகழ்ந்த போர்.

- உறையூர்ப் போர் வடுகவேந்தனது அச்சத்தைப் புலப்படுத்துகிறது.

- இடும்பில் போர் சேரன் செங்குட்டுவனின் செயல்படுத்தல் என்ற உளவியல் சார்ந்தது.

- சேரன் செங்குட்டுவன் நடத்திய மற்றொரு போர் கொடுகூர்ப்போர். இது இடும்பில் எதிர்கரையில் உள்ள நகரத்தைச் சுற்றிவளைத்து வெற்றி கண்டதால் செயல்படுத்துதல் என்ற உளவியலை வெளிப்படுத்தி நிற்கின்றது.

- வெண்ணிப்போர் கரிகாலனது பேராற்றலை எதிர்க்க முடியாமல் களத்திலே கருவிகளும் வெண்கொற்றக்குடையும் விட்டு நீங்கி அஞ்சி ஓடியதால் கரிகாலனது ஆளுமையைக் காட்டுவதாக அமைகிறது.

- தகடூர்ப்போர் : பெருஞ்சேரன் இரும்பொறை அதியமானின் தகடூர் மீது போர்த்தொடுத்து வெற்றி பெற்றான். எனவே சேரனது ஆளுமை புலப்படுகிறது.

- கூடற்பறந்தலைப் போரில் பாண்டியனை எதிர்த்த சேர, சோழர்கள் போர்க்களத்தில் தோல்வியடைந்து தங்கள் முரசுகளை எடுத்துச் செல்ல நேரமின்றி ஓடினர். இது சேர, சோழனின் வாழத்தூண்டும் இயல்பூக்கத்தை உணர்த்துகிறது.

- கங்கைப்போர் II அல்லது குயிலாலயப் போர் என்பது சேரன் செங்குட்டுவன் வடபுல அரசர்கள் தமிழக அரசர்களை இழிவாகப் பேசியதால் வெகுண்டு போர்புரிதலைக் கூறுவதால் உணர்வூக்கத்தால் எழுந்த போராகும். வடபுலக் கங்கைப்போரானது சேரன் செங்குட்டுவன் தன் அன்னையைக் கங்கையில் நீராட்டுவதற்காகச் சென்றான். ஆனால் ஆரிய அரசர்கள் திரண்டுவந்து அவன் மீது போர்த்தொடுக்க சேரன் செங்குட்டுவன் தன் அன்னையைப் பாதுகாக்கப் போர் புரிந்தான். எனவே இது பாதுகாத்தல் சார்ந்த உளவியலாகும்.

- கொங்கர் செங்களப்போர் என்பது சேரன் செங்குட்டுவன் புரிந்த போராகும். சேரனை எதிர்த்துச் சோழரும் பாண்டியரும் கொங்கர்க்கு ஆதரவாகப் போருக்கு வந்தும் சேரன் செங்குட்டுவன் வெற்றி பெற்றான். இது சேரனது ஆளுமையை வெளிப்படுத்துகிறது.

- வாகைப் பறந்தலைப் போரில் கரிகாலன் தன்னை எதிர்த்து வந்த ஒன்பது மன்னரையும் ஒருசேரக் களத்தில் எதிர்த்து வாகை சூடினான். இது கரிகாலனது ஆளுமையை வெளிப்படுத்துகிறது.

- *கானப்பேரெயில் அழிவு, கானப்பேரெயில் போர் என்பது பாண்டியன் உக்கிரப்பெருவழுதிக்கும் குறுநில மன்னன் வேங்கை மார்பனுக்கும் இடையில் நடைபெற்ற போராகும். வேங்கை மார்பனது ஆணவத்தை அழித்து வென்றதால் உக்கிரப் பெருவழுதிக்கு ஏற்பட்ட மானவுணர்வு போருக்குக் காரணமாக அமைவதால் இது உணர்வு சார்ந்த இயல்பூக்கமாகும்.*

- *வெண்ணி என்ற இடத்தில் நடைபெற்ற போரில் சேரனையும், பாண்டியரையும் ஒருங்கே வீழ்த்தினான் கரிகாலன். இப்போர் கரிகாலனது ஆளுமையை வெளிப்படுத்துகிறது.*

- *கிள்ளிவளவன் பாண்டியரையும் சேரரையும் காட்டுக்குத் துரத்திச் சென்றிருக்க வேண்டும் என்று இராசமாணிக்கனார் குளமுற்றத்துப் போர் பற்றிக் குறிப்பிடுகிறார். கிள்ளிவளவனது ஆளுமையைப் புறநானூற்றுப் பாடல் 40 வெளிப்படுத்துகிறது.*

- *கழுமலப்போர் சோழன் செங்கணானுக்கும் சேரன் இரும்பொறைக்கும் இடையில் கழுமலம் என்ற இடத்தில் நடந்த போர். இதில் சோழன் வெற்றி பெற்றான். சேரன் இரும்பொறை மானஉணர்வு பெரிதென்று சிறையில் உண்ணாமல் உயிர் துறந்தான். இது சேரனது உணர்வு சார்ந்த இயல்பூக்கத்தை வெளிப்படுத்துகிறது.*

- *வியலூர்ப் போரில் சேரன் செங்குட்டுவன் வியலூரின் கோட்டையில் நடந்த போரில் வெற்றி பெற்றான். இது செயல்படுத்துதல் என்ற உளவியலில் தற்காத்தல் உத்தியாகும்.*

- *நேரிவாயில் : சேரன் செங்குட்டுவன் தனது மைத்துனன் சோழன் கிள்ளிவளவனுக்கும் சோழர்குடி இளவல்கள் ஒன்பது பேருக்கும் இடையில் நடந்த நேரிவாயில் போரில் சேரன் செங்குட்டுவன் வெற்றிபெற்று தனது மைந்தனனுக்கு அரசுரிமை பெற்றுத் தந்தார். எனவே இப்போர் புரிதலுக்கு உணர்வூக்கம் அடிப்படையில் அமைகிறது.*

- ஆவூர்ப்போர் நலங்கிள்ளிக்கும் நெடுங்கிள்ளிக்கும் இடையில் நடைபெற்ற போர். இப்போரின்போது நெடுங்கிள்ளி போரினைத் தவிர்த்துக் கோட்டைக்குள் அடைபட்டுக் கிடந்தார். கோவூர்கிழாரின் சொல்லைக் கேட்டு போருக்கு நெடுங்கிள்ளி புறப்பட்டான். எனவே உணர்வு சார்ந்த இயல்பூக்கமாகும்.

- தலையாலங்கானத்துப் போரில் பாண்டியன் நெடுஞ்செழியனை எதிர்த்த இரண்டு பேரரசர்களும், ஐந்து வேளிர்களும் சேர்ந்து சிறுவனாக இருக்கும் பாண்டியனைத் தாக்க பாண்டிய நெடுஞ்செழியன் வெற்றி பெற்றான். எனவே இது பாண்டியனது ஆளுமையை வெளிப்படுத்துகிறது. கடம்பின் பெருவாயில் போரில் நார்முடிச் சேரனுக்கும் நன்னனுக்கும் இடையில் நடந்த இப்போர் போரூக்கத்தால் நிகழ்ந்த போராகும்.

- தீவுப் பகுதியில் சேரன் செங்குட்டுவன் கடற்கொள்ளையர்களே அஞ்சும்படி போர் புரிந்து வெற்றிபெற்றான். எனவே செங்குட்டுவனது ஆளுமை இதில் புலப்படுகிறது. காரியாற்றில் நடந்த இப்போரில் மாவண்கிள்ளியின் புகழையும் நாட்டுவளத்தையும் கண்டு பொறாமை கொண்ட சேரரும் பாண்டியரும் வடபுல அரசர்களுடன் இணைந்து சோழன் மீது படை எடுத்ததால் இது காழ்ப்புணர்ச்சி சார்ந்த உளவியலாகும்.

- காரியாற்றின் II போரில் நெடுங்கிள்ளியும் நலங்கிள்ளியும் மூர்க்கத்தனமாக இரு அரசர்களுக்கும் நேருக்கு நேர் நின்று சம வலிமையுடன் போர்புரிந்ததால் இது செயல்படுத்துதல் என்ற தற்காத்தல் உளவியலாகும்.

- வெண்ணிப்போர் II சேரமன்னன் நெடுஞ்சேரலாதனுக்கும் சோழமன்னன் கரிகாலனுக்கும் இடையில் நடைபெற்ற கோரமான போராகப் புலவர்களால் கூறப்பட்டுள்ளது. நெடுஞ்செழியன் முதுகில்

புண்பட்டதால் நாணி வடக்கிருந்து உயிர்துறந்ததால் உணர்வு சார்ந்த உளவியலாகக் கருதப்படுகின்றது.

- மனம் தெளிவற்ற நிலையில் இருக்கும்போது மனத்தில் ஏற்படும் போராட்டம் உளச்சிக்கலை உண்டாக்கும். மக்கள் அனைவரும் இன்பமாக வாழவே புலவர்கள் விரும்புவர். இத்தகைய விருப்பத்திற்கு இடையூறு அல்லது குறுக்கீடு ஏற்படும்போது அவர்களிடம் மனமுறிவு தோன்றுகிறது. இவ்வகை சமூகத்தின் மீதான தனது மனமுறிவினைப் பரணர் பாடல் 4 இல் சோழன் உருவப்பஃறேர் இளஞ்சேட் சென்னியிடம் தனது மனமுறிவினை வெளிப்படுத்தியுள்ளார். அதேபோன்று புறம் 7, புறம் 62, மதுரைக்காஞ்சி வரி 152 - 158 - லும் சமூக முறிவு வெளிப்படுவதை அறியலாம்.

- மனப்போராட்டம் மனமுறிவினால் ஏற்படுகிறது என்றும் மனமுறிவு மனப்போராட்டத்தால் விளைகிறது என்றும் கூறலாம். இதன் மூலம் மனமுறிவும் மனப்போராட்டமும் ஒன்றோடொன்று தொடர்பு உடையவை ஆகும். இரண்டு சமவலிமையுடைய ஊக்கிகள் ஒன்று மற்றொன்றுக்குத் தடையாக இருப்பதன் காரணமாக ஏற்படும் உளநிலையே உளப்போராட்டமாகும். இதன் வகைகளாக மூன்று. அவை, அணுகுதல் - அணுகுதல் போராட்டம், அணுகுதல் - விலகுதல் போராட்டம், விலகுதல் - விலகுதல் போராட்டம் எனலாம்.

- விரும்பத் தகுந்த இரண்டு அல்லது இரண்டுக்கு மேற்பட்ட மனமாற்றங்களிடையே நிகழலாகும் போட்டியை உள்ளடக்கியதே அணுகுதல் - அணுகுதல் போராட்டம். புறம் - 15 இல் பாண்டியன் பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதியை நெட்டிமையர் பாடலிலும் புறம் - 48 பொய்கையார் பாடலிலும் புறம்.49, 218, 341 பாடல்களிலும், பதிற்றுப்பத்து 32, 86, 12 மற்றும் பெரும்பாணாற்றுப்படை 412 - 422 வரிகளில் அணுகுதல் - அணுகுதல் மனப்போராட்டம் வெளிப்படுகிறது.

- அணுகுதல் - விலகுதல் போராட்டம் என்பது ஓர் இலக்கினை அணுகவும் விலகவும் தூண்டும் வலிமையான போக்குகள் ஒரே நேரத்தில் நிலவுவதைக் குறிப்பதேயாகும்.

- புறநானூற்றின் (12) பாடலில் பாண்டியன் பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதியைப் பாடிய நெட்டிமையார் பாடலில் எதிர்எதிர் இலக்குகள் போராட்டத்தைக் காணலாம். அவ்வாறே புறம்.254, 118, 253, பதிற்றுப்பத்து 12, 13, 31, 83 பாடல்களில் அணுகுதல் விலகுதல் மனப்போராட்டத்தைக் காணமுடிகிறது.

- இரண்டு விரும்பத்தகாத இலக்குகளில் ஏதாவது ஒன்றை அடைந்தே ஆக வேண்டிய நிலையை விலகுதல் - விலகுதல் உளப்போராட்டம் என்பர். இது புறம் 255, அகம்.55, 127, பதிற்றுப்பத்து 57 பாடல்களில் வெளிப்படுகிறது.

- மனிதனிடம் உளமுறிவும் உளப்போராட்டமும் எவ்வகைத் தீர்வுமின்றி நெடுங்காலம் தொடருமானால் உள்ள இறுக்கம் தோன்றும். புறம்.2, 46, 51 ஆகிய பாடல்களில் உள இறுக்கம் புலனாகிறது.

- மனித வாழ்க்கை பல வகைச் சிக்கல்களைக் கொண்டது. அவற்றால் ஏற்படும் உளமுறிவு, உளப்போராட்டம், உளஇறுக்கம் முதலானவை உளநலத்தைப் பாதிக்கின்றன. இச்சமயங்களில் தற்காப்பு இயங்குமுறை செயல்படத் தொடங்கி மனிதனின் அகத்தைப் பாதுகாக்கிறது. அவை மனிதர்கள் தங்களுடைய அனுபவங்கள் பயமுள்ளவையாகவோ, வெட்கப்படக் கூடியவையாகவோ இருக்குமானால் அவற்றை மறைத்திட எண்ணுவர். இது மனஒடுக்கமாகும்.

- வேள் எவ்வி என்னும் வள்ளல் பெருவீரன். போரில் எதிர்பாராத விதமாக இறந்துவிடுகிறான். ஆனால் புலவர் அச்செய்தி பொய்யாகக்கூடாதா என நம்ப மறுப்பதாகப் புறம் - 233 பாடல் புலப்படுத்துகிறது. மேலும், இவ்வுத்தியை 232 பாடலிலும் காணலாம்.

- *விரும்பத்தகாத துன்பச்சூழலை மனிதமனம் ஏற்பதில்லை. அதனால் மனம் அனுபவத்தையும் உணர்ச்சியையும் பிரித்துக்கொண்டு அனுபவத்தை மட்டும் ஏற்று உணர்ச்சியை ஒடுக்குவது உணர்வொதுக்கமாகும். இத்தன்மை புறம்.239 பாடலில் நம்பி நெடுஞ்செழியன் போரில் இழந்தாலும் அவன் புகழ் நிலைக்கண்டு போற்றுகிறார். இதனைப் போன்று அதியமான் நெடுமான் அஞ்சி உடல் நெருப்பில் வெந்தாலும் அவன் புகழ் நிலைத்ததைக் கண்டு ஔவையார் இறுமாப்புக் கொள்கிறார். தான் எதிர்ப்பட்டுள்ள மனப் போராட்டங்களில் இருந்து விலகிட ஒருவன் தன் வளர்ச்சி நிலைகளில் கீழ் இறங்கி சிறு குழந்தைபோல் செயல்படுவது பின்னோக்கமாகும். இத்தன்மையில் அமைந்த புறம்.112, 116, 310, பதிற்றுப்பத்து 19, 23, 26, 27 ஆகிய பாடல்கள் பின்னோக்க உத்தியைக் கையாண்டுள்ளன. கபிலர் பாடலிலும் 116, பாரி மகளிர் பாடலிலும் (113) புலப்படுகிறது.*

- *மனமுறிவுப் போராட்டம் மிக்க சூழலில் சரியான சிந்தனை முறை அமைவதில்லை. அப்போது தோன்றும் சிந்தனைகளில் பல தவறுகள் ஏற்பட வாய்ப்புண்டு. அவை, தற்புனைவுச் சிந்தனை, சார்பெண்ணச் சிந்தனை ஆகும். இதன் அடிப்படையில் பொதுமையாக்கம் தோன்றும். புறம்.76 பாடலில் சோழன் நலங்கிள்ளியிடம் பாடிப் பரிசு பெற்ற புலவன் இளந்தத்தன் நெடுங்கிள்ளியிடமும் பாடிப் பரிசு வாங்கச் சென்றத் புலவனை ஒற்றன் என தவறாக எண்ணிக் கொல்லத் துணிந்ததைக் கோவூர்கிழார் என்னும் புலவர் பாடியதில் தற்புனைவுச் சிந்தனை வெளிப்படுவதை அறியலாம்.*

- *குமணன் என்னும் வள்ளல் வரையாது வழங்கும் பண்புடையவன். அவன் தம்பி இளங்குமணன் அண்ணன்மீதே பகைமைகொண்டு தீயநட்பினால் அண்ணன் மீதும் போருக்குச் செல்ல, குமணன் தன் நாட்டை இளங்குமணனுக்குக் கொடுத்துவிட்டுத் தான் காட்டுக்குச் செல்கிறான். இருந்தும் இளங்குமணன் தன் அண்ணன் தன்மீது மீண்டும்*

படை எடுத்து வரக்கூடும் என்று எண்ணி தீயநட்பினால் குமணன் தலையைக் கொய்து வருபவர்களுக்கு பரிசளிப்பதாக அறிவித்தான். இதில் சார்பெண்ணச் சிந்தனைப் போக்கு புலப்படுகிறது.

- நமக்குத் தோல்வி அல்லது கவலை உண்டாகக்கூடிய சூழ்நிலையிலிருந்து விலகிச் செல்வதன் மூலம் உளமுறிவைத் தடுக்கலாம். இது துறப்பமைவு என்னும் உளவியல் உத்தியாகும். புறம் 98 பாடலை அதியமான் தன்னுடைய வீரமுணர்ந்தும், தொண்டைமானின் வலிமை அறிந்த ஔவையாரைத் தொண்டைமான் மீது தூது அனுப்பிப் போரினைத் தடுத்துக் கொள்கிறார். இதைப்போன்று புறம்.31, 52, 65, 256, 280 பாடல்கள் இவ்வுத்தியில் அமைந்துள்ளன.

- தன்னிடம் காணப்படும் ஒரு குறைபாட்டிற்கு ஈடு செய்யும் வகையில் தன் சக்தி முழுவதையும் வேறொன்றில் செலுத்தி வெற்றி பெறுவது ஈடு செய்தல் உத்தியாகும். கபிலர் என்னும் புலவர் பாரி இறந்தபின் அவனது பறம்புமலையின் வளம், கொடைச்சிறப்பு, வீரம் முதலானவற்றைப் பாடி பாரியின் இறப்பை மறக்க முயன்ற தன்மையை அவரது பாடலில் புறம்.113, 114 மேலும் 223, 306 பாடல்களிலும் இவ்வுத்தியைக் காண முடிகின்றது.

- மனமுறிவைத் தவிர்க்கவும் தணிக்கவும் வேண்டிப் பிறரை உளத்தாலும் உடலாலும் தாக்குதல் உண்டு. மாறாக அத்தாக்குதல் வேகத்தைத் தன் மீதே திருப்பிக் கொள்ளுதல் ஒரு தற்காப்பு. இது தன்முகத் திருப்பம் என்ற உத்தியாகும்.

- புறம் - 280 இல் போர்க்களத்திலே இறந்த வீரனின் மனைவி தன் கணவனின் பிரிவை எண்ணி வருந்துகிறார். இதனால் மனமுறிவு ஏற்பட்டுத் தன்னையே அழித்துக்கொள்ளத் துணிகிறார். இதைப்போன்று புறம் 74 பாடலிலும் தன் முகத்திருப்பம் உத்தியில் பாடலின் தன்மை அமைந்துள்ளது.

- அடக்கி மறைத்தல், ஒடுக்குதல் ஆகியன உளப்போக்கிற்கு நேரெதிரான செயற்படுத்துதல் அல்லது வெளிப்படுத்துதலாகும். புறம் 336 பாடலில் மகளைத் தர மறுத்ததனால் அந்நாட்டின் மீது படை எடுத்துச் சென்று தாக்கி ஊரின் வளமும், நலமும் அழிகின்ற தன்மையைப் பரணர் பாடியுள்ளார். இது செயல்படுத்துதல் என்ற உத்தியாகும். மேலும், புறம் 16, 23, 213, 392 பாடலிலும் இவ்வுத்தி வெளிப்படுகிறது.

- மனிதனின் இயல்பான பண்புகளுள் ஒன்று இரக்க உணர்வாகும். இதைப் புலவர்களிடமும் காண முடிகிறது. வளமிக்க படைகள் அழிந்தன. மறவர் வீழ்ந்தனர். இருபெரு வேந்தர்களும் மாய்ந்தனர். இனி நாடு என்னாகுமோ எனப் புறம் - 63 பாடலில் பரணர் கவலை கொள்வதிலிருந்து சமூகத்தின் மீது உள்ள இரக்கத்தைக் காணமுடிகிறது. இதைப்போன்று புறம் 139, 248, பதிற்றுப்பத்து 22, 25, 26, மதுரைக்காஞ்சி 175 - 177 வரிகளிலும் இரக்க உணர்வு வெளிப்படுகிறது.

- இயல்புக்கு ஒவ்வாத நடத்தை வெளிப்பாட்டைக் குறிப்பது பிறழ்நிலை உளவியலாகும். புறம் 277 பாடலில் பூங்கண் உத்திரையால் போர்க்களத்தில் தன் மகன் களிறெறிந்து பட்டான் எனக் கேட்டதால் கண்ணீர் சிந்தாமல் மகிழ்ச்சி கொள்கிறார். இது பிறழ்நிலை உளவியல் பாற்படும். இதைப்போன்று புறம் 86, 278, 279 பாடலிலும் நெறிபிறழ் நடத்தை வெளிப்படுவதை அறியமுடிகின்றது.

மேற்கண்ட ஆய்வு முடிவுகளின்வழி சங்ககாலப் போர் நெறி முறைகளையும் அது நிகழ்வதற்குக் காரணமான உளவியல் பண்புகளையும் இந்த ஆய்வேடு வெளிப்படுத்தியுள்ளது. இதன்வழி ஆய்வுலகம் பல ஆய்வுப் பயன்களைப் பெறமுடியும்.

ஆய்வுப் போக்கில் பல தகவல்களை ஆய்வுக் குறித்துப் பார்க்கும்போது அத்தகவலின்வழி தமிழ் ஆய்வுக் களத்தில் இன்னும் பல ஆய்வுகளை மேற்கொள்ளலாம் என்பது தெரியவருகின்றது. அவ்வகையில் ஆய்வு என்பது முற்றுப்பெறாத ஒன்று. இந்த ஆய்வுத்

தலைப்பினையொட்டியும் பல்வேறு ஆய்வுக் களங்களை மேற்கொள்ளலாம். சங்க இலக்கியப் பாடல்களில் உள்ள துறைகளை எடுத்துக்கொண்டும் ஆய்வினை மேற்கொள்ளலாம். மேலும்,

சங்க இலக்கியத்தில் இயற்கை பற்றிய உளவியல்,

சங்க இலக்கியத்தில் தலைவி உளவியல்,

சங்க இலக்கியத்தில் கூற்று உளவியல்,

சங்க இலக்கியத்தின் படைப்பு உளவியல்

ஆகியவற்றை மேலாய்வுக்களங்களாக இந்த ஆய்வேடு பரிந்துரைக்கின்றது.

# துணைநூற்பட்டியல்

## முதன்மை ஆதாரங்கள்


*இரவிச்சந்திரன், தி.கு. – சிக்மண்ட் ஃப்ராய்ட் உளப்பகுப்பாய்வு அறிவியல், அலைகள் வெளியீட்டகம், சென்னை – 24, நான்காம் பதிப்பு – 2015.*

*இராமசுப்பிரமணியம், வ.த. – புறநானூறு (மூலமும் உரையும்), திருமகள் நிலையம், சென்னை – 600091, முதற்பதிப்பு 2000.*

*இளங்குமரன், இரா.புலவர் – புறநானூறு, கோவிலூர் மடாலயம், கோவிலூர் – 630 307, முதற்பதிப்பு – 2003.*

*சந்தானம், எஸ். – கல்வியில் மனவியல் சாந்தா பப்ளிஷர்ஸ், சென்னை – 600014, இரண்டாம் பதிப்பு – 2005.*

*சாமிநாதையர், உ.வே. – பத்துப்பாட்டு, உ.வே.சாமிநாதையர் நூல்நிலையம், சென்னை, மூன்றாம் பதிப்பு – 1931.*

*சாமிநாதையர், உ.வே. – பதிற்றுப்பத்து, உ.வே.சாமிநாதையர் நூல்நிலையம், சென்னை – 600090, ஒன்பதாம் பதிப்பு – 2011.*

*சாமிநாதையர், உ.வே. – புறநானூறு மூலமும் பழைய உரையும், உ.வே.சாமிநாதையர் நூல் நிலையம், சென்னை – 90, ஏழாம் பதிப்பு – 1971.*

*சுப்பிரமணியன், ச.வே. – பத்துப்பாட்டு, கோவிலூர் மடாலயம், கோவிலூர் – 630 307, முதற்பதிப்பு – 2003.*

*துரைசாமிப் பிள்ளை, சு.ஔவை.* – *புறநானூறு மூலமும் உரையும்*
*திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்,*
*திருநெல்வேலி, **1964.***

*பரிமணம், அ.மா.* – *பதிற்றுப்பத்து,*
*கோவிலூர் மடாலயம்,*
*கோவிலூர் – **630 307,***
*முதற்பதிப்பு – **2003.***

*பாலசுப்பிரமணியன், கு.வெ.* – *புறநானூறு,*
*நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்,*
*சென்னை – **98**, முதல் பதிப்பு – **2004.***

*பாலசுப்பிரமணியன், கு.வெ.* – *பத்துப்பாட்டு,*
*கோவிலூர் மடாலயம்,*
*கோவிலூர் – **630 307,***
*முதற்பதிப்பு – **2002***

*புலியூர்க்கேசிகன்* – *புறநானூறு,*
*U பப்ளிகேஷன்ஸ்,*
*மடிப்பாக்கம், சென்னை – **600 091.***
*முதற்பதிப்பு – **2012***

**துணைமை ஆதாரங்கள்**

*அப்பாத்துரை, கா.* – *தென்னாட்டுப் போர்க்களங்கள்,*
*மெய்யப்பன் பதிப்பகம்,*
*சிதம்பரம் – **608001,***
*முதல் பதிப்பு – **2013.***

*அறவாணன், க.ப. முனைவர்* – *அற்றை நாட்காதலும் வீரமும்*
*பாரி நிலையம்*
*சென்னை – **600 001,***
*முதல் பதிப்பு **1941***

*இராசமாணிக்கனார், மா.* – *சோழர் வரலாறு, மூன்று பாகங்கள்,*
*எஜுகேஷனல் பப்ளிஷிங் கம்பெனி,*
*சென்னை,*
*இரண்டாம் பதிப்பு – **1959.***

*இராமச்சந்திரன், சி. ஈ. – சங்ககால வரலாறு,*
*தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்,*
*சென்னை, பதிப்பாண்டு – **1977.***

*இராமலிங்கம், அரங்க. – சங்க இலக்கியத்தில் வேந்தர்கள்,*
*பாரதி புத்தகாலயம்,*
*சென்னை – **16,***
*பதிப்பாண்டு – **2006.***

*இராஜன், கா – தொல்லியல் நோக்கில் சங்ககாலம்,*
*உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,*
*சென்னை – **600 113,***
*முதல் பதிப்பு – **2004.***

*இராஜ்கௌதமன் – பாட்டும் தொகையும் தொல்காப்பியமும்*
*தமிழ்ச் சமூக உருவாக்கமும்,*
*தமிழினி பதிப்பகம், சென்னை – **600 014,***
*முதல் பதிப்பு – **2006.***

*இலக்குவன் – உளவியல் நிபுணர் கையேடு,*
*திருக்குறள் பதிப்பகம்,*
*சென்னை, பதிப்பாண்டு – **2003.***

*கனகசபை, வி. – ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு*
*முற்பட்ட தமிழகம்,*
*கா.அப்பாத்துரை, (மொ.ப)*
*கழகம், சென்னை, மூன்றாம் பதிப்பு – **1973.***

*கனகராஜையர், நா. – பாண்டிய மன்னர்,*
*இ.மா. கோபாலகிருஷ்ணக்கோன்,*
*மதுரை, பதிப்பாண்டு – **1930.***

*குருசாமி, ம.ரா.போ. – சங்ககாலம்,*
*குரு அச்சகம்,*
*சென்னை, இரண்டாம் பதிப்பு – **1874.***

*கேசவன், கோ. – மண்ணும் மனித உறவுகளும்,*
*சென்னை புக் ஹவுஸ்,*
*சென்னை, பதிப்பாண்டு – **1979.***

*கைலாசபதி, க.* – *பண்டைத் தமிழர் வாழ்வும் வழிபாடும், மக்கள் வெளியீடு, சென்னை, இரண்டாம் பதிப்பு* – ***1978.***

*கோவிந்தராசனார், சி.* – *சோழமன்னர் வரலாறு, செம்மியன் ஆன்சாம்பில் பப்ளிஷர்ஸ் திருச்சிராப்பள்ளி, இரண்டாம் பதிப்பு* – ***1971.***

*கோவிந்தராசனார், சி.* – *தமிழக வரலாற்றுச் செய்திகள், சாந்தி நூலகம், சென்னை, பதிப்பாண்டு* – ***1962.***

*கோவிந்தன், கா.* – *சங்ககால அரசர் வரிசை* – ***1,*** *சேரர் கழகம், சென்னை, பதிப்பாண்டு* – ***1954.***

*சண்முகம்பிள்ளை, மு.* – *தொல்காப்பியப் பொருளதிகாரம் இளம்பூரணர் உரை, முல்லைப் பதிப்பகம், மறுபதிப்பு* – ***2014.***

*சதாசிவப்பண்டாரத்தார், டி.வி.* – *பாண்டியர் வரலாறு, சங்கத்தமிழ்க் கழகம். சென்னை, ஒன்பதாம் பதிப்பு* – ***1977.***

*சாமிநாதையர், உ.வே.* – *புறப்பொருள் வெண்பாமாலை மூலமும் சாமுண்டி தேவநாயகரியற்றிய உரையும், கபீர் அச்சுக்கூடம், சென்னை, ஒன்பதாம் பதிப்பு* – ***1963.***

*சிவராஜ், து.* – *சங்க இலக்கியத்தில் உளவியல் சிவம் பதிப்பகம் வேலூர்* – ***632 002*** *முதல் பதிப்பு* – ***1994***

*சுந்தரமகாலிங்கம், பொ.* – *புறத்திணை விருந்து, சேகர் பதிப்பகம், சென்னை, பதிப்பாண்டு* – ***1977.***

*சுப்பிரமணியம், ச.வே.* – *தொல்காப்பியம் தெளிவுரை, மணிவாசகர் பதிப்பகம், சென்னை, எட்டாம் பதிப்பு – 2006.*

*சுப்பிரமணியன், ந.* – *சங்ககால வாழ்வியல், நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், சென்னை – 98, மூன்றாம் பதிப்பு – 2010.*

*சுப்பிரமணியன், மா.* – *சோழர்களின் அரசியல் கலாசார வரலாறு (பாகம் 1) தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை, பதிப்பாண்டு – 1978.*

*சோமசுந்தரனார், பொ.வே.* – *புறப்பொருள் வெண்பாமாலை திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிட்டெட், சென்னை – 18, பதிப்பாண்டு – 2002.*

*சோமசுந்தரனார், பொ.வே.* – *மணிமேகலை, கழகம் வெளியீடு, சென்னை, இரண்டாம் பதிப்பு – 1975.*

*ஞானசம்பந்தன், அ.ச.* – *இலக்கியக் கலை, திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், சென்னை – 18, மறுபதிப்பு – 2002.*

*தமிழண்ணல்* – *அகநானூறு, கோவிலூர் மடாலயம், கோவிலூர் – 630307, முதல் பதிப்பு – 2004.*

*துரைசாமிப்பிள்ளை, சு.ஔவை.* – *பண்டைநாளைச் சேரமன்னர் வரலாறு, திருவளர் பதிப்பகம், தூத்துக்குடி, நான்காம் பதிப்பு – 1968.*

*நச்சினார்க்கினியர் – தொல்காப்பியம், பொருளதிகாரம் உரை*
*கழகம் வெளியீடு,*
*சென்னை, இரண்டாம் பதிப்பு – **1958.***

*நடராசன், தி.சு – திறனாய்வுக் கலை*
***(**கொள்கைகளும் அணுகுமுறைகளும்**)***
*நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் **(**பி**)** லிட்,*
*சென்னை – **98**, நான்காம் பதிப்பு – **2008.***

*நாகராசன், வி.இ **(**உ.ஆ**)** – சங்க இலக்கியம் பத்துப்பாட்டு,*
*நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் **(**பி**)** லிட்,*
*சென்னை – **98**, மூன்றாம் பதிப்பு – **2007.***

*நாகராஜன், கி – கல்வி உளவியல்*
*இராஜம் பதிப்பகத்தார்*
*சாலிகிராமம், சென்னை – **600 093***
*நான்காம் பதிப்பு **2005***

*நாராயணன், ஆர்.எஸ். – பண்டைய இந்தியா பண்பாடும் நாகரிகமும் **(**மொ.ஆ**)***
*நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் **(**பி**)** லிட்,*
*சென்னை – **98**, மூன்றாம் பதிப்பு – **2008.***

*பக்தவத்சல பாரதி – சமூக பண்பாட்டு மானிடவியல்,*
***(**மிகச் சுருக்கமான அறிமுகம்**),***
*அடையாளம் வெளியீடு, கருப்பாநத்தம்*
*பதிப்பாண்டு – **2005.***

*பக்தவத்சல பாரதி – பண்பாட்டு மானிடவியல்,*
*மெய்யப்பன் பதிப்பகம்,*
*சிதம்பரம் – **608001,***
*நான்காம் பதிப்பு – **2009.***

*பக்தவத்சல பாரதி – மானிடவியல் கோட்பாடுகள்,*
*வல்லினம் பதிப்பகம்,*
*புதுவை – **8**, முதல் பதிப்பு – **2005.***

*பகவதி, கு. – திறனாய்வு அணுகுமுறைகள்,*
*உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,*
*சென்னை – 600 113, மறுபதிப்பு – 2007.*

*பாலசுப்பிரமணியன், சி. – தமிழ் இலக்கிய வரலாறு*
*மணமலர்ப் பதிப்பகம்*
*சென்னை*
*முப்பத்தி நான்காம் பதிப்பு – 2003*

*பாலுசாமி, நா. – தமிழக வேந்தர்,*
*ஏ.டி.எம். நாகலிங்கம் (ம) கம்பனி, மதுரை,*
*இரண்டாம் பதிப்பு – 1959.*

*மகாதேவன், கதிர். – நற்றிணை,*
*கோவிலூர் மடாலயம்,*
*கோவிலூர் – 630 307,*
*முதற்பதிப்பு – 2003.*

*வரதராசன், மு – தமிழ் இலக்கிய வரலாறு*
*சாகித்திய அக்காதெமி*
*சென்னை,*
*பதினாறாம் பதிப்பு – 2001*

*வித்தியானந்ததன், சு. – தமிழர் சால்பு, (சங்ககாலம்),*
*பாரி புத்தகப் பண்ணை, சென்னை,*
*இரண்டாம் பதிப்பு – 1971.*

*வெள்ளைவாரணன், க. – தொல்காப்பியப் புறத்திணை இயல் (உரைவளம்)*
*மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,*
*பதிப்புத்துறை, மதுரை – 21,*
*முதல் பதிப்பு – 1983.*

*வேங்கடசாமி நாட்டார், ந. மு. – மணிமேகலை,*
*பெத்தல் பிரிண்டர்ஸ்,*
*சென்னை – 96, பதிப்பாண்டு – 2013.*

*ஜெயம், அ – தமிழ் இலக்கிய வரலாறு*
*ஜனகா பதிப்பகம்*
*மேற்கு மாம்பலம்*
*சென்னை – 600 033*
*பதிப்பு ஆண்டு – 2012*

**நிகண்டுகள்**


| | | |
|---|---|---|
| *ஆறுமுக நாவலர், (பதி)* | – | *சூடாமணி நிகண்டு மூலமும் உரையும்*<br>*ஆறுமுகநாவலர், வி.அச்சகம்,*<br>*சென்னை, 13ஆம் பதிப்பு.* |
| *கதிரைவேற்பிள்ளை, நா.* | – | *தமிழ் அகராதி*<br>*சாரதா பதிப்பகம்,*<br>*சென்னை –14,*<br>*மூன்றாம் பதிப்பு – 2005.* |
| *கந்தையா, ந.சி* | – | *செந்தமிழ் அகராதி திரட்டு 22,*<br>*அமிழ்தம் பதிப்பகம்,*<br>*தியாகராய நகர்,*<br>*சென்னை – 17,*<br>*பதிப்பாண்டு – 2003.* |
| *கலைக்களஞ்சியம்* | – | *தொகுதி எட்டு,*<br>*தமிழ் வளர்ச்சிக் கழக வெளியீடு,*<br>*சென்னை, பதிப்பு ஆண்டு – 1961.* |
| *சிங்காரவேலு முதலியார்* | – | *அபிதான சிந்தாமணி,*<br>*சீதை பதிப்பகம்,*<br>*சென்னை – 600 005,*<br>*பத்தாவது பதிப்பு – 2012.* |
| இணையம் | - | en.m.wikipedia.org<br>tamilaivugal.org<br>www.valaitamil.com<br>www.kalaikalanjiam.com |

# சங்க இலக்கியத்தில் போர் - உளவியல் அணுகுமுறை

**முனைவர் (Ph.D.) பட்டத்திற்காகத்**
**தமிழ்நாடு திறந்தநிலைப் பல்கலைக்கழகத்திற்கு**
**அளிக்கப்பெறும் ஆய்வேடு**


ஆய்வாளர்
**வா.க.கவிதா**
எம்.ஏ., எம்ஃபில்., எம்.எட்.,

**(Enrolment No : 13140850008/PhD/Tamil)**

ஆய்வு நெறியாளர்
**முனைவர் சு.பாலசுப்பிரமணியன்**
எம்.ஏ.(தமிழ்), எம்.ஏ.(இதழியல்), பி.எட்., பிஎச்.டி.,
பேராசிரியர் மற்றும் இயக்குநர்
தமிழியல் மற்றும் பண்பாட்டுப் புலம்
தமிழ்நாடு திறந்தநிலைப் பல்கலைக்கழகம்
சென்னை – 600015






**தமிழியல் மற்றும் பண்பாட்டுப் புலம்**
தமிழ்நாடு திறந்தநிலைப் பல்கலைக்கழகம்
எண் 577, அண்ணாசாலை, சைதாப்பேட்டை
சென்னை – 600015

திருவள்ளுவர் ஆண்டு 2052 – நவம்பர் – 2021

# ஆய்வு முடிவுரை

- *சங்க இலக்கியத்தில் போர் - உளவியல் அணுகுமுறை என்னும் இந்த ஆய்வுரையில் இயல்தோறும் கண்டறியப்பட்ட முக்கிய ஆய்வு முடிவுகள் தொகுப்புரைகளாக அந்தந்த இயல்களின் இறுதியில் தொகுத்துத் தரப்பெற்றுள்ளன. 'ஆய்வு முடிவுரை' என்னும் இப்பகுதியில் ஆய்வு முடிவுகளின் தன்மைகளும் போக்குகளும் இடம் பெற்றுள்ளன.*

- *இலக்கியம் என்பது மனித உணர்வுகளின் பிரதிபலிப்பு. அவை மனித மனத்தில் தோன்றியவையாகும். உளவியல் என்பது மனித இயல்பினையும் நடத்தையில் ஏற்படும் மாற்றத்தையும் அறிய உதவுகிறது.*

- *உளவியல் அறிவியல் கிரேக்கர்களின் காலத்தில் தோன்றியது. உளவியல் நூல் ஆன்மாவின் இயல்புகள் என்பதாகும்.*

- *பதினேழாம் நூற்றாண்டில் ரெனி தெக்கார்த்தே, லிப்னை, ஜான் லாக், ஜார்ஜ் பெர்கில், இமானுவேல் காண்ட் முதலானோரும் உளவியல் தத்துவங்களை வழங்கியுள்ளனர். அவை உளத்தின் இயல்புகள் பற்றியும் உளக்கூறுகள் பற்றியும் பேசுவதாக அமைகின்றன.*

- *உலகில் சிறப்புமிக்கனவாகப் போற்றப்படும் கவிதை (இலக்கியம்), இசை, நாட்டியம், ஓவியம், சிற்பம் முதலிய அழகுக் கலைகள் யாவுமே மனமுறிவின் வேற்றுருவங்களாகும் என்பது உளவியலாளர் சிக்மெண்ட் ஃப்ராய்டின் சித்தாந்தமாகும்.*

- *மனிதனிடம் தனிப்பட்ட ஒரு சக்தி உண்டு. மனிதனின் அனைத்து நடத்தைகளையும் இயல்பூக்கங்களே ஆக்குவிக்கின்றன என்று மக்டுகல் குறித்தார். இக்கொள்கை ஹார்மிக் கொள்கை (*Harmism*) எனப்பட்டது.*

மனிதனிடம் பதினேழு வகை இயல்பூக்கங்கள் உள்ளவற்றைப் புலனுணர்வு, நடத்தை, உணர்வு என அடிப்படையில் மூன்றாகப் பிரித்துள்ளனர்.

- மனிதன் எவ்வளவுதான் தன்னலம் கருதுபவனாக வாழ்ந்தாலும் அவனிடமும் பிறவியிலேயே இயற்கையாக உதவுதல், பிறரை மகிழ்வித்தல் முதலானவற்றிற்குச் சில கொள்கை வித்துக்கள் காணப்படுகின்றன. இவற்றைச் சுமித்தின் (Smith) இரக்க உணர்வுக் கோட்பாடு (Sympathy) வெளிப்படுத்துகின்றது.

- மனித மனதில் ஏற்படும் சிக்கல்களையும் குழப்பங்களையும் அறிய உளவியலில் வாய்ப்புகள் கிடைக்கின்றன. அதன் மூலம் நம் வாழ்க்கைத் துன்பங்களுக்குரிய காரணங்களை அறிந்து, அவற்றைத் தீர்க்க நெறிபிறழ் கோட்பாடு (Abnormal Psychology) உதவுகிறது.

- புலவனின் கற்பனையில் தோன்றிய இலக்கியம், உளவியல் உத்தியுடன் ஒன்றிப்போகும்போது என்றும் வெற்றிபெறும்; அவ்வாறு வெற்றிபெற்ற இலக்கியங்களில் உளவியல் கூறுகள் உள்ளன என அறியலாம்.

- சங்க இலக்கியம் என்பது பதினெண்மேற்கணக்கு என்று கூறப்படும் பதினெட்டு நூல்களைக் கொண்டது. எட்டுத்தொகையில் அகப்புற இலக்கியமான ஒன்று பரிபாடல்; மற்றும் பத்துப்பாட்டில் ஒன்று நெடுநல்வாடை என இரண்டு நூல்களாகும்.

- எட்டுத்தொகையில் புறஇலக்கியங்களான புறநானூறும், பதிற்றுப்பத்தும், பத்துப்பாட்டில் ஆற்றுப்படை நூல்கள் ஐந்தும், மதுரைக்காஞ்சி ஒன்றுமாக மொத்தம் எட்டு நூல்களாகும். புறநானூற்றிலிருந்து சேர, சோழ, பாண்டியர் பற்றிய வரலாறு மற்றும் புலவர் வாழ்க்கையை அறியமுடிகிறது. மன்னர்களின் கல்வி, கொடை,

தருக்கண் மற்றும் மக்களின் புறவாழ்க்கையைப் படம்பிடித்துக் காட்டுவது இவ்விலக்கியமாகும். இதில் புறத்திணைகள் பதினொரு திணை பற்றிய பாடல் உள்ளது. உழிஞைத் திணைப்பாடல் மட்டும் இடம்பெறவில்லை.

- பதிற்றுப்பத்தில் சேரமன்னர்களின் வீரதீரச் செயல்கள் இடம்பெற்றுள்ளன. ஒவ்வொரு பத்தின் இறுதியிலும் பதிகம் ஒன்றுண்டு. பத்தின் வரலாற்றைக் கூறுவது பதிகமாகும். இதற்கு பழைய உரை ஒன்று உண்டு. பாடல்களின் முடிவில் துறை, வண்ணம், தூக்கு (இசை), பாடலின் பெயர் ஆகியவை குறிப்பிடப்பட்டுள்ளது.

- ஆற்றுப்படை நூல்களின்வழி அரசர்களிடையே நடைபெற்ற போர்கள் மற்றும் பாடல் பாடிய புலவனின் வாழ்க்கை நிலை, ஐவகை நிலங்களில் கிடைக்கும் உணவு வகைகளை அறியலாம். இது பயண இலக்கியமாகவும் திகழ்கிறது.

- புறநானூற்றின் வளர்ச்சியே மதுரைக்காஞ்சியாகும். இது நிலையாமையை உணர்த்தும் இலக்கியமாகத் திகழ்கிறது. உலகில் உள்ள நிலையற்ற பொருள்களைத் தேடுவதைக் காட்டிலும் நிலைத்த மதுரையின் மாண்பினையும் பாண்டிய படையெடுப்புகளையும் அறிவதாக அமைகிறது.

- புறம் பற்றி எழுந்த தனி இலக்கணமான புறப்பொருள் வெண்பாமாலை புறத்திணைகளைப் பன்னிரண்டாக விரித்துள்ளது.

- மனித நாகரிகத்தின் தொடக்கமே போராகத்தான் அமைகிறது. மனிதன் தொடக்ககாலத்தில் தன்னைத் தற்காத்துக்கொள்ள முற்பட்டபோதே போர்புரியத் தொடங்கினான். அவன் செய்த முதல் போர் விலங்குகளோடும், பின்பு மனிதனுடன் அமைந்தது.

- அரசுரிமைக்காக உருவப்பஃறேர் இளஞ்சேட்சென்னியின் மகன் கரிகாற்பெருவளத்தான் பகைவரின் காவலினின்று தப்பிச் சென்று

அரசுரிமையைப் பெறுவதற்காகப் போர் புரிந்தான் என பட்டினப்பாலை, பொருநராற்றுப்படை மூலம் அறிய முடிகின்றது.

- பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப்பெருவழுதி என்பானை நெட்டிமையார் பாடிய பாடலில் போரின் தவிர்க்கப்படுபவர்களாக பசு, பார்ப்பனர், பெண்டிர், நோய்வாய்ப்பட்டோர், வயது முதிர்ந்தவர் மக்களைப் பெறாதீர் என்பவர்கள்மீது என் அம்பு செல்லாது எனக் கூறியுள்ளார்.

- அகத்திணை அடிப்படையில் புறத்திணை அமைத்ததால்தான் நாம் அதனைப் புறத்திணை என்று கூறுவதற்கான காரணம் நச்சினார்க்கினியர், இளம்பூரணர் உரைகளில் கூறப்பட்டுள்ளன.

- வெட்சித்திணை என்பது நிரைகவர்தலாகும். இது குறிஞ்சிக்குப் புறமானது. இதன் துறையான நிமித்தம் பார்க்கும் வழக்கம் உண்டு என்று (புறம்.280:6-7) போருக்குச் செல்லும்முன் தூய மலர்களை நெல்லுடன் தூவிக் கைதொழுது விரிச்சி கேட்டு நிற்பதன் வழிக் காணலாம்.

- வஞ்சித்திணை என்பது மண்ணாசைக்காக நடக்கும் போராகும். இது முல்லையது புறமானது. இதன் துறையாகக் காவல் மரங்களை அழிப்பர் என்பது கல்லாடர் பாடலில் (புறம்.23:5-11) கூறியுள்ளார்.

- உழிஞைத்திணை என்பது மாற்றான் மதிலை வளைத்தலைக் குறிக்கும். இது அகத்திணையான மருதத்திற்குப் புறம்பானது. இதன் துறையாக நாள் பார்த்து வாளும் குடையும் புறப்படுதல் தொல்காப்பியப் பொருள் (நூ.69) உணர்த்தும். இது இலக்கியத்தில் திருமாவளவன் நல்ல நாளில் வாளையும் குடையையும் முரசையும் போக்கியதைப் புறம், சிலம்பு, வஞ்சி மாநகர் புக்க காதையில் கூறப்பட்டுள்ளது.

- படைச்செலவு என்னும் துறை பகைவர் நாட்டின் மீது படையெடுத்துச் செல்லும் வேந்தன் தன் அடையாளப் பூவைச் சூடிப் படையை

*அழைத்துச் செல்வதைப் பாடும். அவ்வாறு சென்ற படையினை (புறம்.228) பாடல் வேந்தனின் படைகள் தலை, இடை, கடை என வரிசை முறைப்படிச் சென்றதையும் முன்னர் சென்ற படைவீரர்கள் பனம் நுங்கினை உண்டனர். இடைச் சென்றவர்கள் பனம் பழத்தை உண்டனர். இறுதியில் சென்றவர் கிழங்கினைச் சுட்டுத் தின்றனர் என்று ஆலத்தூர் கிழார் கூறுகின்றார்.*

- *தும்பைத்திணை என்பது அதிரப்போர் புரிதலைக் குறிக்கும். இது அகத்திணையான நெய்தலுக்குப் புறம்பானது. இதன் துறையாக வீரரைப் போருக்கு அழைத்தமையைப் பதிற்றுப்பத்து (பாடல் - 84) வழி அறியலாம்.*

- *வாகைத்திணை என்பது வென்றவனது சிறப்பினைக் கூறுவது இது அகத்திணையான பாலைக்குப் புறம்பானது. இதன் துறையான பாசறை நிலை என்பது வேந்தர்கள் போர் மேற்கொண்டபொழுது பகை நாட்டில் நீண்ட நாள்கள் தங்க நேரிட்டது. வேந்தனும் அவனது படைகளும் தங்கிய இடத்தைப் பாசறை, கட்டூர் என இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன.*

- *பாசறை என்பது மதுரைக்காஞ்சி 231 வரியில் பார்வை பாசறை என்றும், பதிற்றுப்பத்து 84 பாடலில் பார்வற் பாசறை என்றும், நெடுநல்வாடை பாசறைத் தொழிலே என்றும் கூறுகிறது. கட்டூர் என்பதைப் பதிற்றுப்பத்து (68) வேறுபுலத்திறுத்த கட்டூர் என்கிறது.*

- *படையை வேந்தனின் திருமேனி எனச் செப்புகிறது சிலப்பதிகாரம். இப்பகை இரு வகைப்படும் அவை நிலப்படை, கடற்படை என்பவையாகும்.*

- *நிலப்படை என்பது காலாட்படை, குதிரைப்படை, யானைப்படை, தேர்ப்படை என்று நான்கு வகையான படைகளை வேந்தர்கள் போரில் பயன்படுத்துவதாகும். இந்நான்கு வகைப் படைகளும் சோழன்*

இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியைச் சூழ்ந்ததைப் புறப்பாடலில் உலோச்சனார் குறிப்பிடுகிறார்.

- போர்க்கருவிகளில் வேல் முதன்மை இடம் பெற்றுள்ளது. போர்க்களத்திலும், பாசறையிலும் வேலைப் புகழ்ந்து பாடும் மரபு உண்டு. போர்க் கருவிகளுள் வில், வாள் இவற்றைவிட வேலுக்கு முதன்மையான இடம் தந்தனர். போர் முனைக்கு எடுத்துச் செல்வதற்கு முன்பு வேலுக்கு வழிபாடு நடைபெற்றதைப் புறநானூற்றுப் பாடல் 332 எடுத்துரைக்கிறது.

- போருக்குச் செல்வதற்கு முன் வேந்தரும், வீரரும் வஞ்சினம் கூறுதல் மரபு. வேந்தர்களும் படைவீரர்களும் வஞ்சினம் கூறுவர். இதனை புறநானூற்றுப் பாடல் 304 இல் தன் முன்னோனைக் கொன்றவனை அவன் தம்பியோடு சேர்த்துக் கொல்லப் போவதாக மறவன் வஞ்சினம் கூறுவதை அறியலாம்.

- பாடாண்திணை என்பது பாடப்படும் ஆண் மகனது ஒழுகலாறுகளைக் கூறுவது. இது அகத்திணையான கைக்கிளைக்குப் புறம்பானது.

- போர்க்களத்தில் நடுநிலைமை என்பது உறவினர்கள் என்று பாராட்டாமல் தம்மை எதிர்த்து வரும் பகைநாட்டு வீரர்களுடன் போர் செய்வதும் படைவீரர் ஒருங்கே கூடித் தங்கியிருந்த கடல் போன்ற பாசறையிலிருந்து நீங்கிச் சென்று வேல் முதலிய படைக் கருவிகளைக் கொண்டு தம்மவர் அயலவர் என்று பாராமல் போர் செய்ததை புறம்.294 இல் பெருந்தலைச்சாத்தனார் பாடியுள்ளார்.

- வீரமரணம் அடைந்தவர்களுக்கு நடுகல் வைக்கும் மரபு இருந்தது என்றும், நடுகல்லில் வீரனின் பெயரும், பெருமையும், பெற்ற சிறப்புகளும் பொறிக்கப்பட்டன என்றும் தொல்.பொருள் (நூ.63), அகம் (67), புறம் (329) உரைக்கிறது. தொல்காப்பியர் வெட்சித்திணையில் குறிப்பிடும் செய்தி புறப்பொருள் வெண்பாமாலையில் பொதுவியலில் இடம் பெற்றுள்ளது.

- வெட்சித்திணை என்பது ஆநிரை கவர்வதும் மீட்பதும் என்று தொல்காப்பியம் கூறுகிறது. இது போருக்கான தொடக்கமாகப் பார்க்கப்படுகிறது.
- மண்ணாசையின் காரணமாக நிகழ்ந்த வஞ்சித் திணைப் போர்களாக காரியாற்றுப்போர் II, திருக்கோவிலூர் I, திருக்கோவிலூர் II, போர் நடைபெற்றதையும் அறியமுடிகிறது.
- காஞ்சித்திணை என்பது நிலையாமையாகிய அழிவை உணர்த்துவது. காஞ்சித் திணைப் போராக மோகூர்ப் போர் நடைபெற்றதையும் அறியமுடிகிறது.
- மாற்றான் மதில் வளைத்தலான உழிஞைத் திணைப் போர்களாக மோகூர்ப் போர், சோழன் தித்தன், கட்டிக்கு இடையே நடைபெற்ற போர், இடும்பில், கொடுகூர் வெற்றிகள், வெண்ணிப் போர், தகடூர்ப் போர், கூடற்பறந்தலைப் போர், கங்கைப் போர் நடைபெற்றதையும் அறியமுடிகிறது.
- இருபடைகளும் தம்முள் மாறுபட்டு எதிர் எதிர் நின்று போர் புரிதலான தும்பைத் திணைப் போர்களாகச் சோழன் பெருவிறல்கிள்ளி, குடக்கோ நெடுஞ்சேரலாதனுக்கும் இடையே நடைபெற்ற போர், வடபுலக் கங்கைப்போர், காரியாற்றுப் போர், கொங்கர் செங்களப் போர் நடைபெற்றதையும் அறியமுடிகிறது.
- வென்றவனது சிறப்பினைக் கூறுவதாக அமைந்த வாகைத்திணைப் போர்களான வாகைப் பறந்தலைப் போர், தகடூர்ப் போர், கானப் பேரெயில் அழிவு, கானப் பேரெயில் போர், வெண்ணில் போர் III, நடைபெற்றதையும் அறியமுடிகிறது.
- காஞ்சித்திணை என்பது நிலையாமையாகும். இது அகத்திணையான பெருந்திணைக்குப் புறம்பானது.

- பாடப்படும் ஆண் மகனது ஒழுகலாறுகளைக் கூறுவதுமான பாடாண் திணைக்குரிய குளமுற்றத்துப் போர் நடைபெற்றதையும் அறியமுடிகிறது.
- போர்க்களத்தில் நடைபெறும் பொதுச் செய்திகளை எடுத்து இயம்பும் பொதுவியல் திணைப் போர்களாகக் கழுமலப் போர் நடைபெற்றதையும் அறியமுடிகிறது.
- உழிஞை, வஞ்சித் திணை வியலூர்ப் போர்களையும் அறியமுடிகிறது. இதில் மண்ணாசையாலும் உந்தப்பட்டு இரு அரசர்கள் இடையே நிலவிய மதில் போட்டியைக் காணமுடிகிறது.
- உழிஞை, வாகைத் திணைப் போரான நேரிவாயில் போர் குறித்து அறியமுடிகிறது.
- வாகை, வெட்சித் திணைப் போரான கடம்பின் பெருவாயில் போர் நடை பெற்றதை அறியமுடிகிறது.
- வாகை, வஞ்சித் திணைப் போர்களாக ஆவூர்ப் போர் நடைபெற்றதும் மண்ணாசையால் உந்தப்பட்டு இரு அரசர்கள் இடையே நிலவிய கடும் போட்டியில் வெற்றிபெற்றமையையும் விளக்குகிறது.
- வாகை, காஞ்சித் திணைப் போர்களாகத் தலையாலங்கானத்துப் போர் நடைபெற்றதையும் அதில் வெற்றிபெற்ற அரசனது நிலையையும் தோற்ற நாட்டின் நிலையும் ஒருசேர அறியமுடிகிறது.
- வாகை, உழிஞைத்திணைப் போராக வெண்ணிப் போர் III நடைபெற்றதும் அதன்வழி மதிலை வளைத்த அரசன் வெற்றி பெற்றதையும் காண்கிறோம்.
- வாகை, தும்பைத் திணைப்போராகக் கடம்பின் பெருவாயில் போர் நடைபெற்றதும் இருபடைகளும் தம்முள் மாறுபட்டு எதிர் எதிர் நின்று போர் புரிதலில் வெற்றி பெற்றவரது சிறப்பினையும் காணமுடிகிறது.

- உழிஞை, பாடாண் திணைப் போர்களாகச் சேரமான் செங்குட்டுவனின் போர்கள் வழி மாற்றான் மதில் வளைத்தலும் வெற்றி பெற்ற அரசனது சிறப்பினையும் அறியமுடிகிறது.

- பொதுவியல், வாகைத் திணைப் போர்களாக வெண்ணிப் போர் - 11 வெண்ணிப் பறந்தலைப் போர் குறித்தும் வெற்றி பெற்ற அரசன் நிலை மற்றும் பொதுவான செய்திகளையும் ஒருங்கே காணமுடிகிறது.

- சங்க இலக்கியத்தில் இருபத்தேழு போர்கள் இனம் காணப்பட்டுள்ளன. அதில் உழிஞைத் திணைப் போர் மிகுதியாக காணப்பட்டுள்ளது.

- போர் உளவியல் என்பது திட்டமிட்ட முறையில் பரப்புரை உத்திகளைக் கைக்கொண்டு போர் இலக்குகளை நிறைவேற்றுதலின் பாற்படும்.

- போருக்கான ஆயத்தமாக அமைவது வெட்சித் திணைப்போர். இது மன்னன் ஏவ அமர்தலைவன் போர் வீரர்களைத் திரட்டிக்கொண்டு எதிர் நாட்டின் ஆநிரைகளைக் கவர்ந்து வருவதையும் ஆநிரைகளுக்கு உரியவர் மீட்டதையும் வெட்சி எனத் தொல்காப்பியம் கூறும். இதில் கவர்ந்து வருவது வீரனின் ஆளுமை என்னும் உளவியலாகும். ஆநிரைகளை மீட்பதைத் தன் சுற்றத்திற்கு தீங்கு நேரும்போது எதிர்த்துச் செல்வது பாதுகாத்தல் என்னும் இயல்பூக்க உளவியலாகும்.

- மண்ணாசையால் ஏற்படும் போர் வஞ்சித்திணைப் போர். இது காழ்ப்புணர்ச்சி உளவியல் சார்ந்தது. வறுமையில் கிடந்து வாழ்வின் பயன் காணாத மக்கள், வளம் கொழுக்கும் நிலத்தாரின் நிறைவைக் காணும் தோறும் காழ்ப்புணர்ச்சி மிகுதல் உண்டு.

- மாற்றான் மதிலை வளைத்தலைக் குறிக்கும் வீரமேலீட்டினால் எதிரியை அழிக்க அவர்களின் அரண்களை முற்றுகையிட்டு வெற்றிபெறுதலும் மதிலைப் பாதுகாத்தலும் உழிஞைத் திணை எனப்படும். இதுவே மதிலை வளைத்தல் செயல்படுத்துதல் என்ற உத்தியாகும். எதிர்த்தல் தற்காத்தல் என்ற உளவியல் பாற்படும்.

- இருதரத்து வேந்தர்களும் பரந்துபட்ட போர்க்களத்தில் போர்புரிதல் தும்பையாகும். இது செயற்படுத்துதல் என்ற உளவியல் உத்தியை உணர்த்துகிறது.

- வாகை என்பது வெற்றிபெற்ற நாட்டு மன்னன் மற்றும் வீரர்களின் மகிழ்ச்சியையும், வெற்றியையும் குறிக்கும். இது ஆளுமைத் தன்மையால் நிகழ்வதாகும்.

- போரின் அழிவுகளை எடுத்துரைக்கும் பகுதி காஞ்சியாகும். இது நிலையாமையை உணர்த்துவதால் உணர்வு சார்ந்த இயல்பூக்க உளவியலாகும்.

- பாடாண் திணைப் போர் என்பது பாடப்படும் ஆண் மகனது ஒழுகலாறு என்றும், போர்புரிந்த அரசன், வீரர் ஆகியோரின் போர்த்திறத்தைப் புகழ்ந்து பாடுவதாலும் தங்களைப் பிறர் புகழவேண்டும் என்ற பொன்மொழியே புகழின் மீது மனிதனுக்கு இருக்கும் மோகத்தைக் காட்டுகிறது என்பதாலும் இது இயல்பூக்க உளவியலாகும்.

- திருக்கோவலூர்ப் போர் கிள்ளிவளவனின் உணர்வு சார்ந்த இயல்பூக்கத்தால் நிகழ்ந்த போராகும்.

- திருக்கோவலூர் போர் - II அதியனின் திரட்டூக்கமாகும்.

- மோகூர்ப்போர் பழையனின் சினஊக்கத்தால் நிகழ்ந்த போர்.

- உறையூர்ப் போர் வடுகவேந்தனது அச்சத்தைப் புலப்படுத்துகிறது.

- இடும்பில் போர் சேரன் செங்குட்டுவனின் செயல்படுத்தல் என்ற உளவியல் சார்ந்தது.

- சேரன் செங்குட்டுவன் நடத்திய மற்றொரு போர் கொடுகூர்ப்போர். இது இடும்பில் எதிர்கரையில் உள்ள நகரத்தைச் சுற்றிவளைத்து வெற்றி கண்டதால் செயல்படுத்துதல் என்ற உளவியலை வெளிப்படுத்தி நிற்கின்றது.

- வெண்ணிப்போர் கரிகாலனது பேராற்றலை எதிர்க்க முடியாமல் களத்திலே கருவிகளும் வெண்கொற்றக்குடையும் விட்டு நீங்கி அஞ்சி ஓடியதால் கரிகாலனது ஆளுமையைக் காட்டுவதாக அமைகிறது.

- தகடூர்ப்போர் : பெருஞ்சேரன் இரும்பொறை அதியமானின் தகடூர் மீது போர்த்தொடுத்து வெற்றி பெற்றான். எனவே சேரனது ஆளுமை புலப்படுகிறது.

- கூடற்பறந்தலைப் போரில் பாண்டியனை எதிர்த்த சேர, சோழர்கள் போர்க்களத்தில் தோல்வியடைந்து தங்கள் முரசுகளை எடுத்துச் செல்ல நேரமின்றி ஓடினர். இது சேர, சோழனின் வாழத்தூண்டும் இயல்பூக்கத்தை உணர்த்துகிறது.

- கங்கைப்போர் II அல்லது குயிலாலயப் போர் என்பது சேரன் செங்குட்டுவன் வடபுல அரசர்கள் தமிழக அரசர்களை இழிவாகப் பேசியதால் வெகுண்டு போர்புரிதலைக் கூறுவதால் உணர்வூக்கத்தால் எழுந்த போராகும். வடபுலக் கங்கைப்போரானது சேரன் செங்குட்டுவன் தன் அன்னையைக் கங்கையில் நீராட்டுவதற்காகச் சென்றான். ஆனால் ஆரிய அரசர்கள் திரண்டுவந்து அவன் மீது போர்த்தொடுக்க சேரன் செங்குட்டுவன் தன் அன்னையைப் பாதுகாக்கப் போர் புரிந்தான். எனவே இது பாதுகாத்தல் சார்ந்த உளவியலாகும்.

- கொங்கர் செங்களப்போர் என்பது சேரன் செங்குட்டுவன் புரிந்த போராகும். சேரனை எதிர்த்துச் சோழரும் பாண்டியரும் கொங்கர்க்கு ஆதரவாகப் போருக்கு வந்தும் சேரன் செங்குட்டுவன் வெற்றி பெற்றான். இது சேரனது ஆளுமையை வெளிப்படுத்துகிறது.

- வாகைப் பறந்தலைப் போரில் கரிகாலன் தன்னை எதிர்த்து வந்த ஒன்பது மன்னரையும் ஒருசேரக் களத்தில் எதிர்த்து வாகை சூடினான். இது கரிகாலனது ஆளுமையை வெளிப்படுத்துகிறது.

- *கானப்பேரெயில் அழிவு, கானப்பேரெயில் போர் என்பது பாண்டியன் உக்கிரப்பெருவழுதிக்கும் குறுநில மன்னன் வேங்கை மார்பனுக்கும் இடையில் நடைபெற்ற போராகும். வேங்கை மார்பனது ஆணவத்தை அழித்து வென்றதால் உக்கிரப் பெருவழுதிக்கு ஏற்பட்ட மானவுணர்வு போருக்குக் காரணமாக அமைவதால் இது உணர்வு சார்ந்த இயல்பூக்கமாகும்.*

- *வெண்ணி என்ற இடத்தில் நடைபெற்ற போரில் சேரனையும், பாண்டியரையும் ஒருங்கே வீழ்த்தினான் கரிகாலன். இப்போர் கரிகாலனது ஆளுமையை வெளிப்படுத்துகிறது.*

- *கிள்ளிவளவன் பாண்டியரையும் சேரரையும் காட்டுக்குத் துரத்திச் சென்றிருக்க வேண்டும் என்று இராசமாணிக்கனார் குளமுற்றத்துப் போர் பற்றிக் குறிப்பிடுகிறார். கிள்ளிவளவனது ஆளுமையைப் புறநானூற்றுப் பாடல் 40 வெளிப்படுத்துகிறது.*

- *கழுமலப்போர் சோழன் செங்கணானுக்கும் சேரன் இரும்பொறைக்கும் இடையில் கழுமலம் என்ற இடத்தில் நடந்த போர். இதில் சோழன் வெற்றி பெற்றான். சேரன் இரும்பொறை மானஉணர்வு பெரிதென்று சிறையில் உண்ணாமல் உயிர் துறந்தான். இது சேரனது உணர்வு சார்ந்த இயல்பூக்கத்தை வெளிப்படுத்துகிறது.*

- *வியலூர்ப் போரில் சேரன் செங்குட்டுவன் வியலூரின் கோட்டையில் நடந்த போரில் வெற்றி பெற்றான். இது செயல்படுத்துதல் என்ற உளவியலில் தற்காத்தல் உத்தியாகும்.*

- *நேரிவாயில் : சேரன் செங்குட்டுவன் தனது மைத்துனன் சோழன் கிள்ளிவளவனுக்கும் சோழர்குடி இளவல்கள் ஒன்பது பேருக்கும் இடையில் நடந்த நேரிவாயில் போரில் சேரன் செங்குட்டுவன் வெற்றிபெற்று தனது மைந்தனனுக்கு அரசுரிமை பெற்றுத் தந்தார். எனவே இப்போர் புரிதலுக்கு உணர்வூக்கம் அடிப்படையில் அமைகிறது.*

- ஆவூர்ப்போர் நலங்கிள்ளிக்கும் நெடுங்கிள்ளிக்கும் இடையில் நடைபெற்ற போர். இப்போரின்போது நெடுங்கிள்ளி போரினைத் தவிர்த்துக் கோட்டைக்குள் அடைபட்டுக் கிடந்தார். கோவூர்கிழாரின் சொல்லைக் கேட்டு போருக்கு நெடுங்கிள்ளி புறப்பட்டான். எனவே உணர்வு சார்ந்த இயல்பூக்கமாகும்.

- தலையாலங்கானத்துப் போரில் பாண்டியன் நெடுஞ்செழியனை எதிர்த்த இரண்டு பேரரசர்களும், ஐந்து வேளிர்களும் சேர்ந்து சிறுவனாக இருக்கும் பாண்டியனைத் தாக்க பாண்டிய நெடுஞ்செழியன் வெற்றி பெற்றான். எனவே இது பாண்டியனது ஆளுமையை வெளிப்படுத்துகிறது. கடம்பின் பெருவாயில் போரில் நார்முடிச் சேரனுக்கும் நன்னனுக்கும் இடையில் நடந்த இப்போர் போரூக்கத்தால் நிகழ்ந்த போராகும்.

- தீவுப் பகுதியில் சேரன் செங்குட்டுவன் கடற்கொள்ளையர்களே அஞ்சும்படி போர் புரிந்து வெற்றிபெற்றான். எனவே செங்குட்டுவனது ஆளுமை இதில் புலப்படுகிறது. காரியாற்றில் நடந்த இப்போரில் மாவண்கிள்ளியின் புகழையும் நாட்டுவளத்தையும் கண்டு பொறாமை கொண்ட சேரரும் பாண்டியரும் வடபுல அரசர்களுடன் இணைந்து சோழன் மீது படை எடுத்ததால் இது காழ்ப்புணர்ச்சி சார்ந்த உளவியலாகும்.

- காரியாற்றின் II போரில் நெடுங்கிள்ளியும் நலங்கிள்ளியும் மூர்க்கத்தனமாக இரு அரசர்களுக்கும் நேருக்கு நேர் நின்று சம வலிமையுடன் போர்புரிந்ததால் இது செயல்படுத்துதல் என்ற தற்காத்தல் உளவியலாகும்.

- வெண்ணிப்போர் II சேரமன்னன் நெடுஞ்சேரலாதனுக்கும் சோழமன்னன் கரிகாலனுக்கும் இடையில் நடைபெற்ற கோரமான போராகப் புலவர்களால் கூறப்பட்டுள்ளது. நெடுஞ்செழியன் முதுகில்

புண்பட்டதால் நாணி வடக்கிருந்து உயிர்துறந்ததால் உணர்வு சார்ந்த உளவியலாகக் கருதப்படுகின்றது.

- மனம் தெளிவற்ற நிலையில் இருக்கும்போது மனத்தில் ஏற்படும் போராட்டம் உளச்சிக்கலை உண்டாக்கும். மக்கள் அனைவரும் இன்பமாக வாழவே புலவர்கள் விரும்புவர். இத்தகைய விருப்பத்திற்கு இடையூறு அல்லது குறுக்கீடு ஏற்படும்போது அவர்களிடம் மனமுறிவு தோன்றுகிறது. இவ்வகை சமூகத்தின் மீதான தனது மனமுறிவினைப் பரணர் பாடல் 4 இல் சோழன் உருவப்பஃறேர் இளஞ்சேட் சென்னியிடம் தனது மனமுறிவினை வெளிப்படுத்தியுள்ளார். அதேபோன்று புறம் 7, புறம் 62, மதுரைக்காஞ்சி வரி 152 - 158 - லும் சமூக முறிவு வெளிப்படுவதை அறியலாம்.

- மனப்போராட்டம் மனமுறிவினால் ஏற்படுகிறது என்றும் மனமுறிவு மனப்போராட்டத்தால் விளைகிறது என்றும் கூறலாம். இதன் மூலம் மனமுறிவும் மனப்போராட்டமும் ஒன்றோடொன்று தொடர்பு உடையவை ஆகும். இரண்டு சமவலிமையுடைய ஊக்கிகள் ஒன்று மற்றொன்றுக்குத் தடையாக இருப்பதன் காரணமாக ஏற்படும் உளநிலையே உளப்போராட்டமாகும். இதன் வகைகளாக மூன்று. அவை, அணுகுதல் - அணுகுதல் போராட்டம், அணுகுதல் - விலகுதல் போராட்டம், விலகுதல் - விலகுதல் போராட்டம் எனலாம்.

- விரும்பத் தகுந்த இரண்டு அல்லது இரண்டுக்கு மேற்பட்ட மனமாற்றங்களிடையே நிகழலாகும் போட்டியை உள்ளடக்கியதே அணுகுதல் - அணுகுதல் போராட்டம். புறம் - 15 இல் பாண்டியன் பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதியை நெட்டிமையர் பாடலிலும் புறம் - 48 பொய்கையார் பாடலிலும் புறம்.49, 218, 341 பாடல்களிலும், பதிற்றுப்பத்து 32, 86, 12 மற்றும் பெரும்பாணாற்றுப்படை 412 - 422 வரிகளில் அணுகுதல் - அணுகுதல் மனப்போராட்டம் வெளிப்படுகிறது.

- அணுகுதல் - விலகுதல் போராட்டம் என்பது ஓர் இலக்கினை அணுகவும் விலகவும் தூண்டும் வலிமையான போக்குகள் ஒரே நேரத்தில் நிலவுவதைக் குறிப்பதேயாகும்.

- புறநானூற்றின் (12) பாடலில் பாண்டியன் பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதியைப் பாடிய நெட்டிமையார் பாடலில் எதிர்எதிர் இலக்குகள் போராட்டத்தைக் காணலாம். அவ்வாறே புறம்.254, 118, 253, பதிற்றுப்பத்து 12, 13, 31, 83 பாடல்களில் அணுகுதல் விலகுதல் மனப்போராட்டத்தைக் காணமுடிகிறது.

- இரண்டு விரும்பத்தகாத இலக்குகளில் ஏதாவது ஒன்றை அடைந்தே ஆக வேண்டிய நிலையை விலகுதல் - விலகுதல் உளப்போராட்டம் என்பர். இது புறம் 255, அகம்.55, 127, பதிற்றுப்பத்து 57 பாடல்களில் வெளிப்படுகிறது.

- மனிதனிடம் உளமுறிவும் உளப்போராட்டமும் எவ்வகைத் தீர்வுமின்றி நெடுங்காலம் தொடருமானால் உள்ள இறுக்கம் தோன்றும். புறம்.2, 46, 51 ஆகிய பாடல்களில் உள இறுக்கம் புலனாகிறது.

- மனித வாழ்க்கை பல வகைச் சிக்கல்களைக் கொண்டது. அவற்றால் ஏற்படும் உளமுறிவு, உளப்போராட்டம், உளஇறுக்கம் முதலானவை உளநலத்தைப் பாதிக்கின்றன. இச்சமயங்களில் தற்காப்பு இயங்குமுறை செயல்படத் தொடங்கி மனிதனின் அகத்தைப் பாதுகாக்கிறது. அவை மனிதர்கள் தங்களுடைய அனுபவங்கள் பயமுள்ளவையாகவோ, வெட்கப்படக் கூடியவையாகவோ இருக்குமானால் அவற்றை மறைத்திட எண்ணுவர். இது மனஒடுக்கமாகும்.

- வேள் எவ்வி என்னும் வள்ளல் பெருவீரன். போரில் எதிர்பாராத விதமாக இறந்துவிடுகிறான். ஆனால் புலவர் அச்செய்தி பொய்யாகக்கூடாதா என நம்ப மறுப்பதாகப் புறம் - 233 பாடல் புலப்படுத்துகிறது. மேலும், இவ்வுத்தியை 232 பாடலிலும் காணலாம்.

- விரும்பத்தகாத துன்பச்சூழலை மனிதமனம் ஏற்பதில்லை. அதனால் மனம் அனுபவத்தையும் உணர்ச்சியையும் பிரித்துக்கொண்டு அனுபவத்தை மட்டும் ஏற்று உணர்ச்சியை ஒடுக்குவது உணர்வொதுக்கமாகும். இத்தன்மை புறம்.239 பாடலில் நம்பி நெடுஞ்செழியன் போரில் இழந்தாலும் அவன் புகழ் நிலைக்கண்டு போற்றுகிறார். இதனைப் போன்று அதியமான் நெடுமான் அஞ்சி உடல் நெருப்பில் வெந்தாலும் அவன் புகழ் நிலைத்ததைக் கண்டு ஔவையார் இறுமாப்புக் கொள்கிறார். தான் எதிர்ப்பட்டுள்ள மனப் போராட்டங்களில் இருந்து விலகிட ஒருவன் தன் வளர்ச்சி நிலைகளில் கீழ் இறங்கி சிறு குழந்தைபோல் செயல்படுவது பின்னோக்கமாகும். இத்தன்மையில் அமைந்த புறம்.112, 116, 310, பதிற்றுப்பத்து 19, 23, 26, 27 ஆகிய பாடல்கள் பின்னோக்க உத்தியைக் கையாண்டுள்ளன. கபிலர் பாடலிலும் 116, பாரி மகளிர் பாடலிலும் (113) புலப்படுகிறது.

- மனமுறிவுப் போராட்டம் மிக்க சூழலில் சரியான சிந்தனை முறை அமைவதில்லை. அப்போது தோன்றும் சிந்தனைகளில் பல தவறுகள் ஏற்பட வாய்ப்புண்டு. அவை, தற்புனைவுச் சிந்தனை, சார்பெண்ணச் சிந்தனை ஆகும். இதன் அடிப்படையில் பொதுமையாக்கம் தோன்றும். புறம்.76 பாடலில் சோழன் நலங்கிள்ளியிடம் பாடிப் பரிசு பெற்ற புலவன் இளந்தத்தன் நெடுங்கிள்ளியிடமும் பாடிப் பரிசு வாங்கச் சென்றத் புலவனை ஒற்றன் என தவறாக எண்ணிக் கொல்லத் துணிந்ததைக் கோவூர்கிழார் என்னும் புலவர் பாடியதில் தற்புனைவுச் சிந்தனை வெளிப்படுவதை அறியலாம்.

- குமணன் என்னும் வள்ளல் வரையாது வழங்கும் பண்புடையவன். அவன் தம்பி இளங்குமணன் அண்ணன்மீதே பகைமைகொண்டு தீயநட்பினால் அண்ணன் மீதும் போருக்குச் செல்ல, குமணன் தன் நாட்டை இளங்குமணனுக்குக் கொடுத்துவிட்டுத் தான் காட்டுக்குச் செல்கிறான். இருந்தும் இளங்குமணன் தன் அண்ணன் தன்மீது மீண்டும்

*படை எடுத்து வரக்கூடும் என்று எண்ணி தீயநட்பினால் குமணன் தலையைக் கொய்து வருபவர்களுக்கு பரிசளிப்பதாக அறிவித்தான். இதில் சார்பெண்ணச் சிந்தனைப் போக்கு புலப்படுகிறது.*

- *நமக்குத் தோல்வி அல்லது கவலை உண்டாகக்கூடிய சூழ்நிலையிலிருந்து விலகிச் செல்வதன் மூலம் உளமுறிவைத் தடுக்கலாம். இது துறப்பமைவு என்னும் உளவியல் உத்தியாகும். புறம் 98 பாடலை அதியமான் தன்னுடைய வீரமுணர்ந்தும், தொண்டைமானின் வலிமை அறிந்த ஔவையாரைத் தொண்டைமான் மீது தூது அனுப்பிப் போரினைத் தடுத்துக் கொள்கிறார். இதைப்போன்று புறம்.31, 52, 65, 256, 280 பாடல்கள் இவ்வுத்தியில் அமைந்துள்ளன.*

- *தன்னிடம் காணப்படும் ஒரு குறைபாட்டிற்கு ஈடு செய்யும் வகையில் தன் சக்தி முழுவதையும் வேறொன்றில் செலுத்தி வெற்றி பெறுவது ஈடு செய்தல் உத்தியாகும். கபிலர் என்னும் புலவர் பாரி இறந்தபின் அவனது பறம்புமலையின் வளம், கொடைச்சிறப்பு, வீரம் முதலானவற்றைப் பாடி பாரியின் இறப்பை மறக்க முயன்ற தன்மையை அவரது பாடலில் புறம்.113, 114 மேலும் 223, 306 பாடல்களிலும் இவ்வுத்தியைக் காண முடிகின்றது.*

- *மனமுறிவைத் தவிர்க்கவும் தணிக்கவும் வேண்டிப் பிறரை உளத்தாலும் உடலாலும் தாக்குதல் உண்டு. மாறாக அத்தாக்குதல் வேகத்தைத் தன் மீதே திருப்பிக் கொள்ளுதல் ஒரு தற்காப்பு. இது தன்முகத் திருப்பம் என்ற உத்தியாகும்.*

- *புறம் - 280 இல் போர்க்களத்திலே இறந்த வீரனின் மனைவி தன் கணவனின் பிரிவை எண்ணி வருந்துகிறார். இதனால் மனமுறிவு ஏற்பட்டுத் தன்னையே அழித்துக்கொள்ளத் துணிகிறார். இதைப்போன்று புறம் 74 பாடலிலும் தன் முகத்திருப்பம் உத்தியில் பாடலின் தன்மை அமைந்துள்ளது.*

- அடக்கி மறைத்தல், ஒடுக்குதல் ஆகியன உளப்போக்கிற்கு நேரெதிரான செயற்படுத்துதல் அல்லது வெளிப்படுத்துதலாகும். புறம் 336 பாடலில் மகளைத் தர மறுத்ததனால் அந்நாட்டின் மீது படை எடுத்துச் சென்று தாக்கி ஊரின் வளமும், நலமும் அழிகின்ற தன்மையைப் பரணர் பாடியுள்ளார். இது செயல்படுத்துதல் என்ற உத்தியாகும். மேலும், புறம் 16, 23, 213, 392 பாடலிலும் இவ்வுத்தி வெளிப்படுகிறது.

- மனிதனின் இயல்பான பண்புகளுள் ஒன்று இரக்க உணர்வாகும். இதைப் புலவர்களிடமும் காண முடிகிறது. வளமிக்க படைகள் அழிந்தன. மறவர் வீழ்ந்தனர். இருபெரு வேந்தர்களும் மாய்ந்தனர். இனி நாடு என்னாகுமோ எனப் புறம் - 63 பாடலில் பரணர் கவலை கொள்வதிலிருந்து சமூகத்தின் மீது உள்ள இரக்கத்தைக் காணமுடிகிறது. இதைப்போன்று புறம் 139, 248, பதிற்றுப்பத்து 22, 25, 26, மதுரைக்காஞ்சி 175 - 177 வரிகளிலும் இரக்க உணர்வு வெளிப்படுகிறது.

- இயல்புக்கு ஒவ்வாத நடத்தை வெளிப்பாட்டைக் குறிப்பது பிறழ்நிலை உளவியலாகும். புறம் 277 பாடலில் பூங்கண் உத்திரையால் போர்க்களத்தில் தன் மகன் களிறெறிந்து பட்டான் எனக் கேட்டதால் கண்ணீர் சிந்தாமல் மகிழ்ச்சி கொள்கிறார். இது பிறழ்நிலை உளவியல் பாற்படும். இதைப்போன்று புறம் 86, 278, 279 பாடலிலும் நெறிபிறழ் நடத்தை வெளிப்படுவதை அறியமுடிகின்றது.

மேற்கண்ட ஆய்வு முடிவுகளின்வழி சங்ககாலப் போர் நெறி முறைகளையும் அது நிகழ்வதற்குக் காரணமான உளவியல் பண்புகளையும் இந்த ஆய்வேடு வெளிப்படுத்தியுள்ளது. இதன்வழி ஆய்வுலகம் பல ஆய்வுப் பயன்களைப் பெறமுடியும்.

ஆய்வுப் போக்கில் பல தகவல்களை ஆய்வுக் குறித்துப் பார்க்கும்போது அத்தகவலின்வழி தமிழ் ஆய்வுக் களத்தில் இன்னும் பல ஆய்வுகளை மேற்கொள்ளலாம் என்பது தெரியவருகின்றது. அவ்வகையில் ஆய்வு என்பது முற்றுப்பெறாத ஒன்று. இந்த ஆய்வுத்

தலைப்பினையொட்டியும் பல்வேறு ஆய்வுக் களங்களை மேற்கொள்ளலாம். சங்க இலக்கியப் பாடல்களில் உள்ள துறைகளை எடுத்துக்கொண்டும் ஆய்வினை மேற்கொள்ளலாம். மேலும்,

சங்க இலக்கியத்தில் இயற்கை பற்றிய உளவியல்,
சங்க இலக்கியத்தில் தலைவி உளவியல்,
சங்க இலக்கியத்தில் கூற்று உளவியல்,
சங்க இலக்கியத்தின் படைப்பு உளவியல்

ஆகியவற்றை மேலாய்வுக்களங்களாக இந்த ஆய்வேடு பரிந்துரைக்கின்றது.